# பதஞ்சலி யோகம்

## ஒரு விஞ்ஞான விளக்கம்

### பாகம் - 1

ஓஷோ

தமிழில் :
சிங்கராயர்

Since 1976

**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை – 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

**PATHANJALIYOGAM : ORU VIGYANA VILAKKAM - 1 (Tamil)**
**By OSHO**

Originally published in English under the title:
**Yoga : The Alpha and the Omega, Volume - 1**


Reprint : (Actual year of reprint)



| | | |
|---|---|---|
| Translated by | : | **Singarayar** |
| Coordination by | : | **Swami Amano Manish** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | September, 1999 |
| Second Edition | : | September, 2003 |
| Third Edition | : | August, 2008 |
| Fourth Edition | : | May, 2013 |
| Fifth Edition | : | November, 2019 |
| Pages | : | **368** |
| Price | : | **Rs. 350/-** |
| ISBN | : | 978-81-8345-247-2 |
| Printed at | : | Sree Durga Printers, Chennai |

Published by :
**KAVITHA PUBLICATION**

8, Masilamani Street, Pandy Bazaar,
T. Nagar, Chennai - 600 017
Ph: 044-4216 1657 What'sapp : +91-7402222787
e-mail: kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

# பொருளடக்கம்

1. இப்போது யோக ஒழுங்குமுறை
2. மனதில் நிறுத்தமே யோகம்
3. அப்போது சாட்சித் தன்மை அதனிலேயே நிலைபெறுகிறது
4. மற்ற நிலைகளில் மனிதன் மாறுபாடுகளுடன் தன்னை அடையாளணப்படுத்திக் கொள்கிறது.

ஒரு ஆழமான மாயைக்குள் நாம் வாழ்ந்து வருகிறோம் - அதுதான் நம்பிக்கை, நாளை, வருங்காலம் என்னும் மாயை. மனிதர் இன்று இருக்கிற நிலையில் தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்ளாமல் உயிர்வாழ அவரால் முடிவதில்லை. உண்மையுடன் ஒன்றி வாழ மனிதரால் முடிவதில்லை என ஓரிடத்தில் கூறியுள்ளார் நீட்சே. மனிதர் உயிர்வாழ வேண்டுமானால் அவருக்குக் கனவுகள் தேவைப்படுகின்றன, மாயைகள் தேவைப்படுகின்றன, பொய்கள் தேவைப்படுகின்றன. நீட்சே கூறுவது சரிதான். இன்று மனிதர் இருக்கிற நிலையில், உண்மையுடன் வாழ அவரால் முடிவதில்லை. இதை மிகவும் ஆழமாகப் புரிந்துகொள்ள வேண்டி இருக்கிறது. ஏனென்றால் இதைப் புரிந்துகொள்ளாவிட்டால் யோகத்தைப்பற்றிய விசாரணைக்குள் நுழைய வழி ஏதும் இல்லை.

மனதுக்கு பொய்கள் தேவைப்படுகிறது. பிரம்மைகள் தேவைப் படுகிறது. கனவுகள் தேவைப்படுகிறது. மெய்யுடன் சகவாழ்வு நடத்த மனதால் முடிவதில்லை. இப்படிப்பட்ட இந்த மனத்தை ஆழமாகப் புரிந்துகொள்ள வேண்டி இருக்கிறது. இரவுகளில் மட்டும்தானா நீங்கள் கனவு கண்டு கொண்டிருக்கிறீர்கள்? விழித்திருக்கும் போதும் கூட தொடர்ச்சியாக நீங்கள் கனவு கண்டுகொண்டேதான் இருக்கிறீர்கள். நீங்கள் என்னைப் பார்த்துக் கொண்டிருக்கலாம். நான் பேசுவதை நீங்கள் கேட்டுக்கொண்டு இருக்கலாம். ஆனால் உங்களுக்குள்ளே ஒரு கனவு நீரோடை ஓடிக் கொண்டே இருக்கிறது. கனவுகளையும் கற்பனை வடிவங் களையும் மாயத் தோற்றங்களையும் மனமானது தொடர்ச்சியாக உருவாக்கிக் கொண்டே போகிறது.

தூக்கமில்லாமல் மனிதரால் வாழ முடியும், ஆனால் கனவுகள் இல்லாமல் அவரால் வாழ முடியாது என்று விஞ்ஞானிகள் இப்போது கூறுகிறார்கள். தூக்கம் ஒரு அடிப்படைத் தேவை என்று முற்காலத்தில்

எடுத்துக் கொண்டார்கள். ஆனால் இன்றைக்கோ நவீன ஆய்வானது தூக்கம் ஒரு அடிப்படைத் தேவை கிடையாது என்று கூறுகிறது. நீங்கள் கனவு காண முடிவதற்காக மட்டுமே தூக்கம் உங்களுக்குத் தேவைப்படுகிறது. கனவே அடிப்படைத் தேவையாக இருக்கிறது. நீங்கள் கனவுகள் காண்பதற்கு உங்களை அனுமதிக்காமல் தூங்குவதற்கு மட்டும் உங்களை அனுமதித்தால் காலையில் நீங்கள் புத்துணர்ச்சியாக சுறுசுறுப்பாக உணர மாட்டீர்கள். அறவே தூங்க முடியாமல் போய்விட்டது போலவே உணர்வீர்கள்.

ஆழ்ந்து உறங்கும் கட்டம், கனவு காணும் கட்டம் என இரண்டு கட்டங்கள் தூக்கத்தில் வருகின்றன. பகலும் இரவும் மாறி மாறி வருவது போலவே ஒருவித ஒழுங்குக்கு உட்பட்டு இக்கட்டங்கள் மாறிமாறி வருகின்றன. முதலில் சுமார் 40 - 45 நிமிடங்கள் வரை ஆழ்ந்த தூக்கத்தில் வீழ்கிறீர்கள். பின் கனவுக் கட்டம் வருகிறது. இக்கட்டத்தில் நீங்கள் கனவு காண்கிறீர்கள். பின் மீண்டும் கனவற்ற உறக்கம். பின் மீண்டும் கனவுடன் கூடிய உறக்கம். இரவு முழுவதும் இது தொடர்கிறது. கனவில்லாமல் ஆழ்ந்து உறங்கும் சமயத்தில் உங்கள் உறக்கம் கலைக்கப்பட்டால் காலையில் எழுந்ததும் எதையோ பறிகொடுத்ததுபோல நீங்கள் உணர மாட்டீர்கள். ஆனால் நீங்கள் கனவு கண்டு கொண்டிருக்கும்போது உங்களின் தூக்கம் கலைக்கப்பட்டால் பின் காலையில் நீங்கள் முற்றிலும் களைப்பாகவும் முற்றிலும் ஓய்ந்து போனது போலவுமே உணர்வீர்கள்.

வெளியில் இருந்து இதைக் கண்டறிய முடியும். ஒருவர் தூங்கிக் கொண்டிருக்கும்போது அவர் கனவுகண்டு கொண்டிருக்கிறாரா அல்லது ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருக்கிறாரா என்பதை உங்களால் தீர்மானிக்க முடியும். அவர் கனவு கண்டு கொண்டிருந்தால் அவரது கண்கள் தொடர்ச்சியாக அசைந்துகொண்டிருக்கும். மூடிய கண்களுடன் அவர் ஒன்றை கவனித்துக் கொண்டிருந்தால் வெளிப் பார்வைக்கு எப்படிக் காணப்படுமோ அப்படிக் காணப்படும். அவர் ஆழ்ந்து உறங்கும்போது அவருடைய கண்கள் அசையாமல் நிலைத்திருக்கும். எனவே உங்களுடைய கண்கள் அசைந்து கொண்டிருக்கும் போது உங்களின் தூக்கம் கெடுக்கப்பட்டால் காலையில் நீங்கள் அசதியாக உணர்வீர்கள். உங்களின் கண்கள் அசையாதிருக்கும்போது உங்களின் தூக்கம் கலைக்கப்பட்டால் எதையோ இழந்ததுபோல் காலையில் நீங்கள் உணரமாட்டீர்கள்.

கனவுகளை உட்கொண்டே மனிதமனம் உயிர்வாழ்கிறது. எனவே கனவு ஒரு அத்தியாவசியம் ஆகும் என்பதை பல ஆராய்ச்சியாளர்கள்

நிரூபித்திருக்கிறார்கள். கனவு என்பது முழுமையான தன் - ஏய்ப்பாகும். மேலும் இரவில் மட்டும்தான் இது நடக்கிறது என்பதில்லை. விழித்திருக்கும் போதுகூட அதே பாணி தொடர்கிறது: பகலிலும் நீங்கள் கவனிக்க முடியும் - சில நேரங்களில் மனத்தில் கனவு மிதந்து கொண்டிருக்கும்; சில நேரங்களில் எந்த கனவும் இராது.

கனவு காணும்போது ஏதோ ஒன்றில் நீங்கள் ஈடுபட்டிருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் அங்கு இருப்பதில்லை. உள்ளுக்குள் ஆக்ரமித்துக் கொண்டு இருக்கிறீர்கள். எடுத்துக்காட்டாக நீங்கள் இங்கு இருக்கிறீர்கள். ஆனால் உங்களின் மனம் இப்போது ஒரு கனவுக்கட்டத்தினூடே கடந்துசென்று கொண்டிருந்தால் நான் சொல்வது உங்கள் காதில் விழுந்து கொண்டிருக்கும்; ஆனால் அதை உங்களின் மனத்தில் உள்வாங்கிக் கொண்டிருக்க மாட்டீர்கள். ஏனெனில் உங்கள் மனத்தை வேறெதுவோ ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது. இந்நிலையில் நான் சொல்வதை நீங்கள் கேட்டும் கேட்பதில்லை. ஏனென்றால் உங்கள் மனம் உள்ளுக்குள்ளே வேறொன்றால் நிரம்பி இருக்கிறது. கனவு காணும் தன்மையில் நீங்கள் இல்லாதிருக்கும்போது மட்டும்தான் நான் சொல்வதை உண்மையாகவே கவனிக்க உங்களால் முடியும்.

கனவற்ற நிலையில் இருந்து கனவுக்கும், பின் மீண்டும் கனவுநிலையில் இருந்து கனவற்ற நிலைக்கும் மனம் இரவுபகலாக ஊசலாடிக்கொண்டே போகிறது. இது ஒரு மனோலயம். கனவில் மட்டுமல்ல, நிச வாழ்க்கையிலும் நாம் நம் நம்பிக்கைகளை வருங்காலத்தின்மீது ஏற்றிப் பார்க்கிறோம்.

நிகழ்காலமானது ஏறக்குறைய எப்போதும் ஒரு நரகமாகவே இருக்கிறது. வருங்காலத்தை நல்ல காலமாகக் கற்பனை செய்து அதனால் ஏற்படும் நம்பிக்கையினால் மட்டுமே நிகழ்காலத்தை நீங்கள் சகித்துக் கொண்டுபோக முடிகிறது. நாளை என்பது இருப்பதால்தான் இன்றைக்கு நீங்கள் வாழ முடிகிறது. நாளைக்கு ஏதாவது ஒன்று நடக்கப்போகிறது - சொர்க்கத்தின் சில கதவுகள் திறக்கப் போகிறது என்று நீங்கள் நம்பிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் அப்போதும் உங்கள் மனம் மறுபடியும் அதற்கப்பால் போய்விட்டிருக்கிறது. உங்களை நீங்களே முந்திக்கொண்டு சென்றபடியே இருக்கிறீர்கள். இதுதான் கனவு காணுதல் என்பதாகும். நிசமானதுடன், அருகாமையில் இருக்கிறதுடன் , இங்கேயே இப்போதே யதார்த்தத்துடன் ஒன்றி இருப்பதில்லை நீங்கள்; வேறெங்கோ இருக்கிறீர்கள் - முந்திப் போய்க்கொண்டு, தாண்டிப் போய்க் கொண்டு இருக்கிறீர்கள்.

மேலும் அந்த 'நாளை' என்பதற்கு - அந்த எதிர்காலத்துக்கு என்னென்னவோ விதமான பெயர்களை எல்லாம் நீங்கள் சூட்டி இருக்கிறீர்கள். அதை மக்கள் சொர்க்கம் என்கிறார்கள். சிலர் அதை மோட்சம் என்கிறார்கள். ஆனால் எப்போதும் அது வருங்காலத்தில் தான் இருக்கிறது. ஒருவர் செல்வத்தை அளவுகோலாகக் கொண்டு அதைப் பார்க்கிறார். ஆனால் அந்தச் செல்வம் வருங்காலத்தில்தான் இருக்கப் போகிறது. இன்னும் ஒருவர் பரலோகம் என்னும் ரீதியில் அதைக் குறித்து சிந்தித்துக் கொண்டிருக்கிறார் - ஆயின் அந்த சிவலோகம் நீங்கள் செத்த பிறகே - வருங்காலத்தில் மிகத் தொலைவிலேயே இருந்து கொண்டிருக்கிறது. இல்லாத ஒன்றுக்காக உங்களின் நிகழ்காலத்தை நீங்கள் வீணடிக்கிறீர்கள். இதுதான் கனவு காணுதல் என்பது: இங்கே இப்போது உங்களால் இருக்க முடிவதில்லை. அப்படி இந்தக் கணத்தில் வெறுமனே இருத்தல் என்பது மிகவும் கடினமானதாகவே தோன்றுகிறது.

இறந்த காலத்திலும் உங்களால் உலவ முடியும். ஏனெனில் அதுவும் கனவு காண்பதே. நினைவுகள், இப்போது இல்லாமல் போய்விட்டதைப் பற்றிய ஞாபகங்கள், அல்லது இனி இருக்கப்போகின்றவற்றைப் பற்றிய கற்பனைகள் யாவுமே கனவு காண்பதுதான். இந்த வருங்கால கற்பனைகள் எல்லாம் இறந்த காலத்திலிருந்து உருவி எடுக்கப்பட்டு உருவாக்கப்பட்டதாகவே இருக்கிறது. இறந்த காலத்தை மறுபடியும் - கூடுதல் வண்ணங்களுடன், கூடுதல் அழகுகளுடன், கூடுதல் இனிமைகளுடன் கற்பனைசெய்து உருவாக்குவதே வருங்காலம்: புதுமையான முறையில் பார்க்கப்படும் இறந்தகாலமாகவே அது இருக்கிறது.

இறந்த காலத்தைத் தவிர வேறெதையும் உங்களால் சிந்திக்க - யோசிக்க முடியாது. இறந்த காலத்தை மறுபடியும் நீட்டிப்பது வருங் காலமே தவிர வேறில்லை. உண்மையில் இரண்டுமே இல்லாதவை தான். நிகழ்காலம் மட்டுமே உள்ளது. ஆனால் நிகழ்காலத்தில் நீங்கள் ஒருபோதும் இருப்பதில்லை. இதைத்தான் கனவு காணுதல் என்பது. ஆகவே 'உண்மையுடன் மனிதரால் ஒத்துவாழ முடியாது' என நீட்சே கூறுவது சரிதான். மனிதனுக்கு பொய்கள் தேவை. பொய்களின் மூலமாகவே அவன் உயிர் பிழைக்கிறான். உண்மையையே நாங்கள் விரும்புகிறோம் என தொடர்ந்து சொல்லிக்கொண்டே போகிறோம் நாம். ஆனால் உண்மையில் யாரும் அதை விரும்புவதில்லை என்கிறார் நீட்சே. நாம் கூறும் உண்மைகள் என்பவை அழகான பொய்களே தவிர

வேறில்லை. அப்பட்டமான யதார்த்தத்தைப் பார்க்க யாரும் ஆயத்தமாயில்லை.

[யோகம் என்னும் பாதையில் நுழைய மனதால் முடியாது. ஏனெனில் யோகம் என்றாலே உண்மையை வெளிப்படுத்தும் ஒரு முறையியல் என்றே பொருள்படும். கனவு காணாத ஒரு மனநிலைக்கு வருவதற்கான ஒரு முறையே யோகம் ஆகும். இங்கேயே இப்போதே இருப்பதற்கான அறிவியலாக இருக்கிறது யோகம்.] யோகம் என்றால், இப்போது நீங்கள் வருங்காலத்துக்குள் தாவிக் குதிக்கத் தயாராக இல்லை என்று அர்த்தம். யோகம் என்றால் இப்போது நீங்கள் நம்பாமலிருக்க ஆயத்தமாக இருக்கிறீர்கள், உங்களின் இருப்புக்கு அப்பால் எம்பிக் குதிக்காதிருக்க சித்தமாக இருக்கிறீர்கள் என்று அர்த்தம். யோகம் என்றால், யதார்த்தத்தை / உண்மையில் அது இருக்கிறபடியே எதிர்கொள்ளுதல் என்று அர்த்தம்.

எனவே ஒருவர் தன் சொந்த மனம் இப்போது இருக்கிற விதத்தைக் குறித்து முழுமையான விரக்தி கொண்டுவிட்ட சூழ்நிலையில் மட்டுமே அவர் யோகத்தில் - யோக மார்க்கத்தில் நுழைய முடியும். உங்கள் மனத்தின் மூலமாக ஏதோ ஒன்றை அடைய முடியும் என இன்னமும் நீங்கள் நம்பிக்கொண்டிருந்தால், யோகம் உங்களுக்கான பாதை அல்ல. ஒரு முழுமையான விரக்திநிலை தேவைப்படுகிறது. கற்பனையை நீட்டிக்கும் இந்த மனம் வீணானது, இல்லாததை நம்பிக் கொண்டிருக்கும் இந்த மனம் அபத்தமானது, இது எங்கும் இட்டுச் செல்வதில்லை என்பதை தெள்ளத் தெளிவாக உணர்வது தேவைப்படுகிறது. கற்பனையும் நம்பிக்கையும் கனவும் உங்கள் கண்களை மறைத்து விடுகின்றன- அவ்வளவே, அவை உங்களை மயக்கம் கொள்ளச் செய்கின்றன. உண்மையானது உங்களுக்கு வெளிப்பட ஒருபோதும் அவை அனுமதிப்பதில்லை. உண்மையில் இருந்து உங்களை அவை தடுத்துவிடுகின்றன.

உங்கள் மனம் ஒரு போதைப் பொருளாகும். இருக்கிறதற்கு எதிரானது அது. எனவே உங்களின் மனத்துடன், உங்களின் இருத்தல் முறையுடன் இதுவரைக்கும் நீங்கள் இருந்து வந்திருக்கிற முறையுடன் முற்றிலுமாக உங்களுக்கு நிராசை ஏற்பட்டால்தான் - நிபந்தனையற்ற முறையில் அதை நீங்கள் கைவிட்டால்தான் - பாதையில் நீங்கள் பிரவேசிக்க முடியும்.

எத்தனையோ பேர் ஆர்வம் கொள்கிறார்கள். ஆனால் வெகு சிலர்தான் உள்ளே நுழைகிறார்கள். ஏனெனில் உங்களுக்கு ஆர்வம் எழக் காரணமே உங்கள் மனமாக இருக்கக்கூடும். இப்போது யோகத்தின் மூலமாக ஒன்றை ஆதாயமாக்கலாம் என நீங்கள் நம்பிக்கொண்டிருக்க லாம். ஆனால் ஆதாய நோக்கம், அடையும் நோக்கம் அப்படியே இருக்கிறது. யோகம் மூலம் நீங்கள் செம்மை அடையலாம், செம்மையான பிறவி என்னும் ஆனந்தமயமான நிலையை நீங்கள் அடையலாம், பிரம்மத்துடன் நீங்கள் ஒன்றாகலாம், சச்சிதானந்தத்தை நீங்கள் சாதிக்கலாம் - இதுவே யோகத்தில் உங்களுக்கு ஆர்வம் ஏற்பட காரணமாக இருக்கக்கூடும். அப்படி என்றால் பின் உங்களுக்கும் யோகம் எனப்படும் பாதைக்கும் இடையில் எவ்வித சந்திப்பும் ஏற்பட முடியாது. அப்போது நீங்கள் முற்றிலும் அதற்கு எதிராக இருக்கிறீர்கள்; முற்றிலும் நேர் எதிரான பரிமாணத்துக்குள் போய்க்கொண்டிருக்கிறீர்கள்.

யோகம் என்றால், இப்போது எந்த நம்பிக்கையும் மீதம் இல்லை என்று பொருள்; இப்போது எந்த வருங்காலமும் கிடையாது என்று பொருள்; இப்போது எந்த ஆசையும் இல்லை என்று பொருள். உள்ளதை உள்ளபடி அறிய ஒருவர் தயாராக இருக்கிறார். இருக்கக் கூடியதை, இருக்க வேண்டியதைக் குறித்து அவருக்கு அக்கறை இல்லை. அதில் அவருக்கு நாட்டமே இல்லை! இருக்கிறதைக் குறித்து மட்டுமே அவருக்கு அக்கறை. ஏனெனில் உண்மையானது மட்டுமே உங்களை விடுவிக்க முடியும். உண்மை / யதார்த்தம் மட்டுமே விடுதலை /விமோசனம் ஆக முடியும்.

முழுமையான நிராசை தேவைப்படுகிறது. அத்தகைய நிராசையையே புத்தர் 'துக்கம்' என்று அழைக்கிறார். மேலும் உண்மையாவே நீங்கள் அவலத்தில் இருந்தால் நம்பிக்கை வைக்காதீர்கள் - எதிர்பார்க்காதீர்கள். ஏனெனில் உங்களின் நம்பிக்கை / எதிர்பார்ப்பானது உங்களின் அவலத்தை நீட்டிக்க மட்டுமே செய்யும். உங்களின் நம்பிக்கை ஒரு போதைப் பொருளாகும். நீங்கள் மரணத்தை அடையவே அது உதவ முடியும், வேறெதற்கும் உதவாது. உங்களின் நம்பிக்கைகள் யாவும் உங்களை சாவுக்கு மட்டுமே இட்டுச் செல்ல முடியும்; இட்டுச் சென்று கொண்டேதான் இருக்கின்றன.

முற்றிலும் நம்பிக்கை அற்றவராகுங்கள் - எதிர்காலம் அற்றவராக, நம்பிக்கை அற்றவராக ஆகுங்கள். கடினம்தான். நிசத்தை எதிர்கொள்ள துணிவு தேவைப்படுகிறது. ஆனால் ஏதாவது ஒரு கட்டத்தில் அத்தகைய ஒரு தருணம் ஒவ்வொருவருக்கும் வாய்க்கவே செய்கிறது. தான் செய்து

கொண்டிருப்பது எதுவாயினும் அது பயனற்றது என்பதை; தான் போய்க் கொண்டிருப்பது எங்காயினும் இறுதியில் அது எங்கும் போய் சேர்வதில்லை என்பதை; வாழ்க்கை முழுவதுமே அர்த்தமற்றது என்பதை உணர்ந்தவராகும்போது திடீரென நம்பிக்கைகள் உதிர்கின்றன. வருங்காலம் உதிர்கிறது. அப்போது முதன்முதலாக நீங்கள் நிகழ்காலத்துடன் இசைந்திருக்கிறீர்கள். உண்மையை முதன்முதலாக நேருக்கு நேர் எதிர்கொள்கிறீர்கள்.

அந்தக் கணம் உங்களுக்கு வரும் வரை... நீங்கள் ஆசனங்களை செய்துகொண்டே போக முடியும்: ஆனால் அது யோகம் ஆகாது. யோகம் என்பது ஒரு உள்நோக்கிய திருப்பம்; நேர் எதிர்த்திசையிலான திரும்புதல். எதிர்காலத்துக்குள் நீங்கள் இயங்கிக் கொண்டிருக்காத போது, அதை நோக்கி நீங்கள் போய்க் கொண்டிருக்காத போது உங்களுக்குள் போகத் தொடங்குகிறீர்கள் - ஏனெனில் உங்களின் இருத்தலானது / சீவனானது இங்கேயே இப்போதே இருக்கிறது. அது வருங்காலத்தில் இல்லை. இங்கேயே இப்போதே நீங்கள் பிரசன்னமாய் இருக்கிறீர்கள். இந்த உண்மைக்குள் நீங்கள் பிரவேசிக்க முடியும். ஆனால் அதற்கு மனம் இப்போது இங்கு இருக்க வேண்டி இருக்கிறது.

இந்தக் கணத்தையே பதஞ்சலியின் முதல் சூத்திரம் குறிப்பிடுகிறது. முதல் சூத்திரம் பற்றி நாம் பேசத் தொடங்கும் முன்பாக மேலும் ஒரு சில விசயங்களைப் புரிந்து கொள்ள வேண்டி இருக்கிறது. முதலாவதாக, யோகம் ஒரு மதம் அல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள். யோகம் இந்துமதமும் அல்ல முகமதியமும் அல்ல. கணிதம், இயற்பியல் அல்லது வேதியியலைப் போல் யோகமும் சுத்தமான ஒரு அறிவியலே. இயற்பியலில் கிறித்தவ இயற்பியல், புத்த இயற்பியல் என்று இல்லை. இயற்பியல் விதிகளை கண்டுபிடித்தது கிறித்தவர்கள்தான் என்றாலும்கூட இயற்பியல் கிறித்தவம் அல்ல. இயற்பியல் விதிகளை கிறித்தவர்கள் கண்டுபிடிக்கும்படி ஏற்பட்டது ஒரு தற்செயல் மட்டுமே. ஆனாலும் இயற்பியல் ஒரு அறிவியலாகவே இருக்கிறது. யோகமும் ஒரு அறிவியல்தான் - இந்துக்கள் அதைக் கண்டுபிடித்தது ஒரு தற்செயல் மட்டுமே. அது இந்துமதம் அல்ல. உள் இருத்தலை/ சீவனைக் குறித்த சுத்தமான கணிதமே அது. எனவே ஒரு முகமதியரும் ஒரு யோகியாக இருக்க முடியும். ஒரு கிறித்தவரும் யோகியாக இருக்க முடியும். சமணர், பவுத்தர் எவரும் யோகியாக இருக்க முடியும்.

[யோகம் ஒரு தூய அறிவியல் ஆகும். யோக உலகைப் பொறுத்த வரைக்கும் பதஞ்சலி என்பது மிகப்பெரிய பெயராக இருக்கிறது.

இத்தகைய மனிதர் அபூர்வமானவர். பதஞ்சலியின் பெயருக்கு இணையான பெயர் வேறு இல்லை. மனிதகுல வரலாற்றிலேயே முதல் முறையாக இந்த மனிதர்தான் சமயத்தை அறிவியலின் தரத்துக்குக் கொண்டுவந்தார். சமயத்தை ஒரு அறிவியலாக - வெறும் விதிகளாக ஆக்கினார். நம்பிக்கை எதுவும் தேவையில்லை.]

மதங்கள் எனப்படுவனவற்றுக்கோ நம்பிக்கைகள் தேவைப்படுகின்றன. நம்பிக்கைகளைத் தவிர ஒரு மதத்துக்கும் இன்னொரு மதத்துக்கும், இடையில் வேறெந்த வேறுபாடும் இல்லை. நம்பிக்கையில் மட்டுமே வேறுபாடு. முகமதியருக்கு குறிப்பிட்ட சில நம்பிக்கைகள் உள்ளன. இந்துவுக்கு குறிப்பிட்ட வேறு நம்பிக்கைகள் உள்ளன கிறித்தவருக்கு வேறுசில நம்பிக்கைகள் உள்ளன. வேறுபாடு நம்பிக்கைகளில் மட்டுமே. யோகத்துக்கோ நம்பிக்கைகளைப்பற்றிக் கவலையில்லை. எதையும் நம்புமாறு கூறுவதில்லை யோகம். அனுபவியுங்கள் என்றே யோகம் கூறுகிறது. ஆராயுங்கள் என்று அறிவியல் கூறுவதைப் போலவே அனுபவியுங்கள் என்று யோகம் கூறுகிறது. ஆய்வு - அனுபவம் ( *experiment & experience*) இரண்டும் ஒன்றே. அவற்றின் திசைகளே வெவ்வேறாக உள்ளன. பரிசோதனை என்பது வெளிப்புறத்தில் நீங்கள் செய்யக்கூடிய ஒன்று. அனுபவம் என்பது உட்புறத்தில் நீங்கள் செய்யக்கூடிய ஒன்று. அனுபவம் என்பது அகப் பரிசோதனை.

நம்பாதீர் என்கிறது அறிவியல். உங்களால் முடிந்த அளவுக்கு சந்தேகப்படுங்கள் என்கிறது அறிவியல். ஆனால் அதேவேளை நம்பிக்கை இல்லாமலும் இராதீர். ஏனெனில் அவநம்பிக்கையும் ஒருவித நம்பிக்கைதான். கடவுள் இருக்கிறார் என்னும் கருத்தை நீங்கள் நம்பமுடியும். கடவுள் இல்லை என்னும் கருத்தையும் நீங்கள் நம்பமுடியும். கடவுள் இருக்கிறார் என ஒரு வெறித்தன்மையுடன் நீங்கள் கூறமுடியும். நேர்மாறான கருத்தையும் - கடவுள் இல்லை என்பதையும் - அதே வெறித்தனத்துடன் நீங்கள் கூற முடியும். நாத்திகர், ஆத்திகர் யாவரும் நம்பிக்கை வாதிகளே - ஆயின் நம்பிக்கைகளோ அறிவியலின் பிரதேசத்துக்கு உட்பட்டவை அல்ல. அறிவியல் என்றால் இருக்கிறதைப்பற்றிய அனுபவம்: எவ்வித நம்பிக்கையும் இதற்குத் தேவையில்லை. எனவே நினைவில் நிறுத்த வேண்டிய இரண்டாவது விசயம்: ''யோகம் இருத்தலியலானது, அனுபவ ரீதியானது, ஆராயச்சிபூர்வமானது; எவ்விதமான நம்பிக்கைகளும் அதற்கு அவசியமில்லை, அனுபவப்படுவதற்கான துணிச்சலே தேவை''

என்பதாகும். ஆகவே அதுதான் பற்றாக்குறையாக உள்ளது. ஒன்றை நம்புவது என்பது உங்களுக்கு எளிதானதாக இருக்கிறது. இதற்குக் காரணம் ஒன்றை நம்புவதன் மூலம் நீங்கள் அடிப்படை மாற்றம் பெற வேண்டிவருவதில்லை நம்பிக்கை என்பது உங்களிடம் கூடுதலாக சேர்க்கப்படுவது; மிகவும் மேலோட்டமானது. அதனால் உங்களின் இருத்தல் மாறுவதில்லை; எந்தப் பண்புமாற்றத்தின் ஊடாகவும் நீங்கள் கடந்து செல்வதில்லை. நீங்கள் ஒரு இந்துவாக இருக்கலாம். மறுநாளே நீங்கள் ஒரு கிறித்தவராக மாற முடியும். வெறுமனே மாற்றிக் கொள்கிறீர்கள்: கீதைக்குப்பதில் பைபிளை தூக்கிக் கொள்கிறீர்கள். அதை ஒரு குரானுக்கும் நீங்கள் மாற்றிக் கொள்ள முடியும். ஆனால் முன்பு கீதையை சுமந்து கொண்டிருந்த மனிதன், அதற்குப் பதிலாக இப்போது பைபிளை சுமந்து கொண்டிருக்கிற மனிதன், தான் மட்டும் மாறாமலே இருக்கிறான்; தன் நம்பிக்கைகளையே அவன் மாற்றி இருக்கிறான்.

நம்பிக்கைகள் ஆடைகளைப் போன்றவை. சாரமான எதுவும் அவற்றில் நிலைமாற்றம் பெறுவதில்லை. பழைய ஆளாகவே நீங்கள் தங்கி இருக்கிறீர்கள். ஒரு இந்துவைப் பகுத்துப் பார்த்தால், ஒரு முஸ்லீமைப் பகுத்துப் பார்த்தால், உள்ளுக்குள் அவர்கள் இருவரும் ஒரேவிதமாகவே இருக்கிறார்கள். இந்து கோயிலுக்குப் போகிறான், முகமதியன் கோயிலை வெறுக்கிறான். முகமதியன் மசூதிக்கு போகிறான், இந்துவோ மசூதியை வெறுக்கிறான். ஆனால் உள்ளுக்குள் அவர்கள் ஒரேவிதமான மனிதப் பிறவிகளாகவே தொடர்ந்து இருக்கிறார்கள்.

நம்பிக்கை என்பது எளிதானது, மலிவானது. ஏனெனில் நீங்கள் உண்மையில் எதையும் செய்யத் தேவையில்லை - மேலோட்டமான ஒரு ஆடையே, அலங்காரமே போதும். நீங்கள் விரும்பும் எந்தக் கணத்திலும் அதை நீங்கள் கழட்டி எறிந்துவிட முடியும். யோகமோ அத்தகைய ஒரு நம்பிக்கை அல்ல. எனவேதான் அது கடினமானதாக, சிரமமானதாக, சிலசமயம் அசாத்தியமானதாகக்கூட இருக்கிறது. அது ஒரு இருத்தலியல் அணுகுமுறை. உண்மையை நீங்கள் வந்தடைவீர்கள் - ஆனால் அது நம்பிக்கைமூலமாக அல்ல, உங்களின் சொந்த அனுபவம் மூலமாக. உங்களின் சொந்த அறிதலின் மூலமாக. இதன் பொருள், நீங்களே முழுமையாக மாறவேண்டி இருக்கும் என்பதே. உங்களின் கண்ணோட்டங்கள், உங்களின் வாழ்க்கை முறை, உங்களுடைய மனம், உங்கள் உள்ளம் எல்லாவற்றிலும் இப்போது இருக்கிற நிலை முற்றிலுமாக தகர்க்கப்பட வேண்டி இருக்கிறது. புதிய ஒன்று உருவாக்கப்பட வேண்டி இருக்கிறது. அந்த புதியதோடு மட்டும்தான் நீங்கள் 'உண்மை நிலையுடன்' தொடர்புகொள்ளப் போகிறீர்கள்.

எனவே யோகம் என்பது ஒரே சமயத்தில் ஒரு சாவாகவும் ஒரு புது வாழ்வாகவும் இருக்கிறது. நீங்கள் இப்போது இருக்கிற நிலைக்கு நீங்கள் இறக்கவே வேண்டி இருக்கும். இப்போதிருக்கும் நீங்கள் இறக்காவிட்டால் புதிய நீங்கள் பிறக்க முடியாது. புதியது உங்களுக்குள் மறைந்திருக்கிறது. அதற்கொரு விதையாக மட்டுமே நீங்கள் இருக்கிறீர்கள். அந்த விதையானது கீழே விழுந்தாக வேண்டும். மண்ணில் மறைந்தாக வேண்டும். மடிந்தாக வேண்டும். அதன் பிறகு மட்டுமே உங்களுக்குள் புதியது எழும். உங்களின் சாவேதான் உங்களின் புதிய வாழ்வாக ஆகும். யோகமானது ஏககாலத்தில் ஒரு சாவாகவும் புது வாழ்வாகவும் இருக்கிறது. சாவதற்கு நீங்கள் தயார் இல்லை என்றால் உங்களால் மறுபடியும் பிறக்க முடியாது. எனவே நம்பிக்கைகளை வெறுமனே மாற்றிக்கொள்ளும் விவகாரம் அல்ல இது.

யோகம் ஒரு தத்துவம் அல்ல. அது ஒரு மதம் அல்ல என்று முதலில் சொன்னேன். அது ஒரு தத்துவம் அல்ல என்றும் நான் சொல்கிறேன். நீங்கள் சிந்தனைசெய்ய முடிவதற்கான ஒரு விசயம் அல்ல இது. நீங்கள் இருந்தாக வேண்டிய ஒரு விசயமாகும் அது. எண்ணுவது உதாவது / போதாது / பொருந்தாது, எண்ணும் செயல் உங்களின் தலைக்குள் நடந்த வண்ணமே இருக்கிறது. உண்மையில் உங்களின் இருத்தலின் /சீவனின் ஆழம் வரை அதுவேர் பிடிக்கவில்லை. அதுவே உங்களின் முழுமை எனச்சொல்லமுடியாது. அது ஒரு பகுதி மட்டுமே. ஒரு செயல்படும் பகுதி மட்டுமே. அதைப் பயிற்று விக்க முடியும். மேலும் தர்க்கரீதியாக உங்களால் வாதிட முடியும். பகுத்தறிவு ரீதியில் உங்களால் சிந்திக்க முடியும். ஆனால் உங்களின் இதயமோ அதே விதமாகவே இருக்கும். உங்களின் இதயமே உங்களின் மிக ஆழ்ந்தமையம். உங்கள் தலையோ ஒரு கிளைமட்டுமே. தலை இல்லாமல் நீங்கள் இருக்கமுடியும். ஆனால் இதயம் இல்லாமல் உங்களால் இருக்க முடியாது. தலை உங்களுக்கு அடிப்படையானது அல்ல.

யோகம் உங்களின் முழு இருத்தலுடனும் சம்பந்தப்பட்டது. உங்களின் வேர்களுடன் உறவுடையது. அது தத்துவமானது அல்ல. எனவே பதஞ்சலியில் நாம் சிந்திக்க - ஊகிக்கப் போவதில்லை. பதஞ்சலியில் நாம் இருத்தலின் அறுதி விதிகளை அறிய முயன்று கொண்டிருப்போம் அதன் முழுமையான (தன்மை) மாற்றத்துக்கான விதிகளை, இறந்து மீண்டும் பிறப்பதற்கான விதிகளை, புதிய இருத்தல்/ சீவித முறையின் விதிகளை நாம் அறிந்து கொண்டிருப்போம். எனவே தான் அதை ஒரு அறிவியல் என்கிறேன் நான்.

பதஞ்சலி ஒரு அரிய மனிதர். புத்தரைப் போலவே, கிருஷ்ணரைப் போலவே, கிறிஸ்துவைப் போலவே; மகாவீரர், முகமது (மற்றும்) ஜராதுஷ்டிரரைப் போலவே அவரும் ஒரு ஞானமடைந்த மனிதர். ஆனால் ஒருவிதத்தில் அவர் வேறுவிதமாக இருக்கிறார். புத்தர், கிருஷ்ணர், மகாவீரர், ஜராதுஷ்டிரர், முகமது ஆகிய எவரிடமும் ஒரு அறிவியல் அணுகுமுறை இருக்கவில்லை. அவர்கள் மாபெரும் மதங்களை நிறுவினார்கள். மனித மனத்தின் மற்றும் அதன் கட்டமைப்பின் மொத்த வடிவமைப்பையும் அவர்கள் மாற்றி இருக்கிறார்கள். ஆயினும் அவர்களின் அணுகுமுறை அறிவியல் ரீதியானது அல்ல.

புத்தர்களின் மத்தியில் ஒரு ஐன்ஸ்டீனைப் போல விளங்குகிறார் பதஞ்சலி. அவர் ஒரு விசேச நிகழ்வுதான். ஒரு ஐன்ஸ்டீன், போர், மாக்ஸ் பிளாங்க் அல்லது ஐசன்பர்க்கைப் போல் அவரும் எளிதில் நோபல் பரிசு பெற்றிருக்க முடியும். ஒரு கறாரான அறிவியல் ரீதியிலான மனத்துக்குரிய அதே கண்ணோட்டத்தை, அதே அணுகுமுறையை அவர் பெற்றிருக்கிறார். கிருஷ்ணன் ஒரு கவிஞன். பதஞ்சலியோ கவிஞரல்லர். மகாவீரர் ஒரு ஒழுக்கவாதி. பதஞ்சலியோ ஒழுக்கவாதி அல்லர் அடிப்படையில் அவர் ஒரு அறிவியலாளர். விதிகளின் அடிப்படையில் சிந்திக்கிறவர். மேலும் மனித இருத்தலின் அறுதி விதிகளை, மனித மனமும் உண்மை நிலையும் இயங்கும் அறுதியான செயல்பாட்டு அமைப்பை வகுத்தெடுக்க வருகிறார் அவர்.

மேலும் பதஞ்சலியை நீங்கள் பின்பற்றினால் எந்த ஒரு கணித வாய்ப்பாட்டையும் போலவே அவரும் துல்லியமானவர் என்பதை நீங்கள் அறிய வருவீர்கள். அவர் சொல்வதை துளியும் பிசகாமல் பின்பற்றுங்கள், பலன் கிடைக்கும். பலன் கிடைத்தே ஆக வேண்டும். இரண்டும் இரண்டும் நான்கு என்பதைப் போன்றதே இது. தண்ணீரை நூறு டிகிரி வரை சூடேற்றினால் அது ஆவியாவதைப் போன்றதே இது. எவ்வித நம்பிக்கையும் தேவையில்லை. நீங்கள் உள்ளே சென்று பார்த்தாலே போதும் அறிந்து கொள்கிறீர்கள். உள்ளே சென்று பார்த்து அறிந்து கொள்ள வேண்டிய ஒன்று இது. எனவேதான் இதற்கு ஈடு இணை இல்லை என்கிறேன். இந்தப் புவியில் பதஞ்சலிக்கு இணையான ஒரு மனிதர் ஒருபோதும் இருந்ததில்லை.

புத்தரின் வசனங்களில் நீங்கள் கவிதையைக் காணமுடியும். அவ்வை கவிதையாகவே இருக்க முடியும். பல சமயங்களில் புத்தர் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும்போது அவர்தானே கவிதையாக ஆகிவிடுகிறார். அது பரவசத்தின் பிரதேசம். இறுதியை அறியும்

பிரதேசம் அவ்வளவு அழகானது. கவிஞர் ஆவதற்கான தூண்டுதல் மிக அதிகம். அந்த அழகு அத்தகையது. அந்த அருள் அத்தகையது. அந்த ஆனந்தம் அத்தகையது. எத்தகைய தெனில் ஒருவர் கவிதை மொழியில் பேச ஆரம்பித்து விடுகிறார்.

ஆனால் பதஞ்சலி அந்தச் சோதனைக்கு உட்படுவதில்லை. இது மிகவும் கடினம்தான். வேறு ஒருவராலும் தாக்குப்பிடித்து நிற்க முடிந்ததில்லை. யேசு, கிருஷ்ணன், புத்தர் யாவரும் கவிஞர்கள் ஆகிறார்கள். அந்த மகத்துவம், அந்த அழகு உங்களுக்குள் வெடிக்கை யில் நீங்கள் ஆடத் தொடங்குகிறீர்கள், பாடத் தொடங்குகிறீர்கள். அந்த நிலையில் மொத்த பிரபஞ்சத்துடனும் காதல் கொண்டிருக்கும் ஒரு காதலராகவே நீங்கள் இருக்கிறீர்கள்.

பதஞ்சலி இதற்கு வசப்படாது மீறி நிற்கிறார். அவர் கவிதை மொழியைப் பயன்படுத்துவதில்லை. ஒரே ஒரு கவிதைக்கும் அவருக்கும் எவ்வித ஒட்டும் உறவும் இல்லை. அழகின் மொழியில் அவர் பேசமாட்டார். கணித மொழியிலேயே அவர் பேசுவார். அவர் கறாரானவர். அவர் உங்களுக்கு உண்மைகளை மட்டுமே தருவார். அந்த மூதுரைகள், என்ன செய்ய வேண்டும் என்பதற்கான கட்டுரைகள் மட்டுமே. பரவசத்தால் அவர் பொங்கிப் பெருக மாட்டார். (வார்த்தை களால்) சொல்ல முடியாத விசயங்களை அவர் சொல்ல மாட்டார். முடியாதவற்றை அவர் முயற்சிக்க மாட்டார். அடிப்படையை அவர் வகுத்தளித்து விடுவார், அவ்வளவே. அந்த அடிப்படையை நீங்கள் பின்பற்றினால் 'அப்பாலின்' சிகரத்தை நீங்கள் அடைவீர்கள். அவர் ஒரு துல்லியமான கணித இயலாளர். இதை நினைவில் கொள்ளுங்கள்.

### முதல் சூத்திரம்:

## இப்போது யோக ஒழுங்குமுறை

### அத யோகானுசாஸனம்

இப்போது யோக ஒழுங்குமுறை. ஒவ்வொரு ஒற்றைச் சொல்லையும் விட்டு விடாமல் புரிந்து கொள்ள வேண்டி இருக்கிறது. ஏனெனில் ஒரே ஒரு சொல்லைக்கூட அனாவசியமாகப் பயன்படுத்துவதில்லை பதஞ்சலி.

இப்போது யோக ஒழுங்குமுறை.

முதலில் 'இப்போது' என்னும் சொல்லை புரிந்து கொள்ள முயலுங்கள். இதுவரை உங்களிடம் நான் கூறிக் கொண்டிருந்த மன நிலையை இந்த 'இப்போது' என்னும் சொல் குறித்துக் காட்டுகிறது.

பிரமைகளில் இருந்து நீங்கள் விடுபட்டிருந்தால், நம்பிக்கைகளை முற்றிலுமாக இழந்திருந்தால், எல்லாவிதமான ஆசைகளின் வீணான தன்மையையும் முழுமையாக நீங்கள் புரிந்திருந்தால், உங்கள் வாழ்வின் அர்த்தமற்ற தனத்தை நீங்கள் அறிந்திருந்தால், இதுவரைக்கும் நீங்கள் செய்து வந்திருக்கிறது எவையானாலும் அவையாவும் அப்படி அப்படியே செத்து விழுந்து விடுகின்றன . வருங்காலத்துக்கென ஒன்றும் மிஞ்சுவதில்லை - நீங்கள் முழுமையான நிராசையில் இருக்கிறீர்கள் - இதையே கீர்க்கேகார்டு கடும்துயர்/வேதனை என்றழைக்கிறார். தாங்க முடியாத வேதனையில் நீங்கள் இருக்கும்போது, வாடும்போது, என்ன செய்வது என அறியாதிருக்கும்போது, எங்கே போவது என தெரியாதிருக்கும்போது, யாரைப் போய்ப் பார்ப்பது என புரியாதிருக்கும்போது, பைத்தியம் பிடிக்கும் நிலையிலோ அல்லது

தற்கொலை செய்து கொள்ளும் மனநிலையிலோ அல்லது சாவின் விளிம்பிலோ நீங்கள் நிற்கும்போது, உங்கள் வாழ்வின் முழு உருவமைப்பும் திடீரென முழுமையாக வீணாகி விடுகிறது. இப்படிப் பட்ட நிமிஷத்தில் தான், இப்போது யோக ஒழுங்குமுறை என்கிறார் பதஞ்சலி. இப்போது மட்டுமே யோகம் என்னும் அறிவியலை, யோகம் என்னும் ஒழுங்கினை உங்களால் புரிந்து கொள்ள முடியும்.

அப்படிப்பட்ட நிமிஷம் வந்திருக்கவில்லை என்றாலும் நீங்கள் யோகத்தைப் பயின்று கொண்டே போக முடியும். நீங்கள் பெரிய பண்டிதர் ஆக முடியும். ஆனால் நீங்கள் ஒரு யோகியாக ஆக மாட்டீர்கள். நீங்கள் அதன்மீது ஆய்வுரைகள் எழுத முடியும். அதன்மீது பேருரைகள் ஆற்ற முடியும். ஆனாலும் நீங்கள் ஒரு யோகி ஆவ தில்லை. உங்களுக்கான அந்த நிமிஷம் இன்னும் வரவில்லை. அறிவுரீதியாக நீங்கள் ஆர்வம் கொண்டவராக ஆக முடியும். உங்களுடைய மனத்தின் மூலமாக நீங்கள் யோகத்துடன் தொடர்பு கொண்டிருக்க முடியும். ஆனால் ஒரு ஒழுங்குமுறையாக- நடை முறையாக இல்லை எனில் யோகம் என்பது ஒன்றுமில்லை. யோகம் என்பது ஒரு சாத்திரம் அல்ல. அது ஒரு வேதம் அல்ல. அது ஒரு ஒழுங்குமுறை. நீங்கள் செய்ய வேண்டிய ஒன்று. அது ஒரு பொழுதுபோக்கு ஆர்வம் அல்ல. அது ஒரு தத்துவ ஊகமுடிவு அல்ல. அதைவிடவும் ஆழமானது அது. வாழ்வா சாவா என்னும் பிரச்சனை அது.

எல்லா வழிகளும் குழப்பமாக ஆகி உள்ளன, எல்லாப் பாதை களும் மறைந்து விட்டன என்று நீங்கள் உணரும் தருணம் வந்திருக் கிற போது; எதிர்காலம் இருளாகத் தோன்றுகிறபோது; ஒவ்வொரு ஆசையும் கசப்பாக மாறி விட்டிருக்கிறபோது; ஒவ்வொரு ஆசையின் மூலமும் நீங்கள் ஏமாற்றத்தை மட்டுமே சந்தித்திருக்கிறபோது அனைத்து விதமான கனவுகளும் நம்பிக்கைகளும் இற்று விழுகின்றன.

## இப்போது யோக ஒழுங்குமுறை

இந்த 'இப்போது' இன்னும் உங்களுக்கு வராமல் இருக்கலாம். அந்நிலையில் நான் யோகம்பற்றி பேசிக்கொண்டே போகலாம். ஆனால் நீங்கள் கவனிக்க மாட்டீர்கள். அந்த 'நிமிஷம்' உங்களுக்கு வந்திருந்தால் மட்டுமே நீங்கள் கவனிக்கமுடியும்.

உண்மையாகவே நீங்கள் அதிருப்தி அடைந்திருக்கிறீர்களா? ஒவ்வொருவரும் 'ஆம்' என்றே கூறுவர். ஆனால் அந்த அதிருப்தி

உண்மையாயிராது. உங்களுக்கு ஒன்றின் மேல் அதிருப்தி இருக்கிறது அல்லது உங்களுக்கு வேறொன்றின்மேல் அதிருப்தி இருக்கிறது. ஆனால் எல்லாவற்றின் மேலும் மொத்தமாக நீங்கள் அதிருப்தி அடையவில்லை. இன்னும் உங்களுக்குள் நம்பிக்கை எஞ்சி இருக்கிறது. உங்கள் கடந்தகால நம்பிக்கைகளைப் பொறுத்த மட்டில் நீங்கள் அதிருப்தியாக இருக்கிறீர்கள். ஆனால் வருங்காலத்தைப் பொறுத்தமட்டில் இன்னும் நீங்கள் நம்பி / எதிர்பார்த்துக் கொண்டுதான் இருக்கிறீர்கள். அப்படியானால் உங்களின் அதிருப்தி மெய்யானதல்ல. எங்கோ ஓரிடத்தில் ஏதோ ஒரு நிறைவுக்காக - எங்கோ ஓரிடத்தில் ஏதோ ஒரு நுகர்வுக்காக இன்னமும் நீங்கள் ஏங்கிக் கொண்டே இருக்கிறீர்கள்.

சில நேரங்களில் நீங்கள் நம்பிக்கையின்மையை உணர்கிறீர்கள். ஆனால் அந்த நம்பிக்கையின்மை நிசமானதல்ல. சில நம்பிக்கைகள் காரியத்தில் கைகூடவில்லை, சில நம்பிக்கைகள் பொய்த்துப் போய்விட்டன என்பதாலேயே நீங்கள் நம்பிக்கையற்றுப் போயிருக்கிறீர்கள். ஆனால் நம்புவது என்பது இன்னமும் உங்களுக்குள் இருக்கிறது. நம்புவது என்பது அடியோடு வீழ்ந்து விடவில்லை. இனியும் நீங்கள் நம்புவீர்கள். ஒன்று அல்லது வேறொரு நம்பிக்கையில் உங்களுக்கு நிறைவு ஏற்படாமல் இருக்கலாம். ஆனால் நீங்கள் நம்பிக்கை என்பதன்மீதே நம்பிக்கை இழந்து போகவில்லை நம்புதல் என்பதன் மீதே மொத்தமாக உங்களுக்கு ஏமாற்றம் ஏற்படும்போது, நேரம் வந்துவிட்டது - அப்போது நீங்கள் யோகத்தில் நுழைய முடியும். மேலும் அப்போது இந்த நுழைவு ஒரு மனோ நிகழ்வாக - யூக நிகழ்வாக இருக்காது. இந்த நுழைவு ஒரு ஒழுங்குமுறைக்குள் நுழைவதாக இருக்கும்.

ஒழுங்கு (முறை) என்றால் என்ன? ஒழுங்கு முறை என்பது உங்களுக்குள் ஒரு ஒழுங்கை உருவாக்குவது ஆகும். இப்போது நீங்கள் இருக்கிற விதத்தில் நீங்கள் ஒரு குழப்பமாகவே இருக்கிறீர்கள். இப்போது நீங்கள் இருக்கிற விதத்தில் நீங்கள் முற்றிலும் ஒழுங்கீனமாகவே இருக்கிறீர்கள். குருட்ஜிப் பின்வருமாறு கூறுவது வழக்கம்: குருட்ஜீப்பும் பலவழிகளிலும் பதஞ்சலியைப் போன்றவர்தான். அவரும் சமயத்தின் சாரத்தை ஒரு அறிவியலாக ஆக்க முயன்று கொண்டிருந்தவர்தான் அந்த குருட்ஜிப் கூறுகிறார்: நீ ஒரு தனி ஆள் அல்ல. நீ ஒரு கும்பல். நான் என்று நீ கூறும்போது கூட அங்கு ஒரு நான் இல்லை. பல நான்கள் (உனக்குள்) இருக்கிறார்கள். பல அகங்கள் இருக்கின்றன. காலையில் ஒரு நான். மதியத்தில் இன்னொரு நான். மாலையில் மூன்றாவது ஒரு நான். ஆனால் இந்தக் குழப்பத்தை ஒருபோதும் நீங்கள் உணர்ந்து

கொள்வதில்லை. ஏனெனில் யார் அதை உணர்ந்து கொள்வது? அதை உணர முடியும்படியான ஒரு மையம் அங்கு இருப்பதில்லை.

''யோகம் ஒரு ஒழுங்குமுறை'' என்பதன் பொருள்: உங்களுக்குள் ஒரு திடமான தீர்க்கமான மையத்தை உருவாக்க யோகம் விரும்புகிறது என்பதாகும். இப்போது நீங்கள் இருக்கிற விதத்தில் நீங்கள் ஒரு கும்பலாகவே இருக்கிறீர்கள். ஒரு கும்பலுக்கு பல தன்மைகள் இருக்கின்றன. அவற்றில் ஒன்று, கும்பலை உங்களால் நம்ப முடியாது. மனிதனால் வாக்குறுதி தர முடியாது என குருட்ஜிப் கூறுவது வழக்கம். வாக்குறுதி தருவது யார்? நீங்கள் அங்கு இருப்பதில்லை. நீங்கள் வாக்குறுதி தந்தால் அதை நிறைவேற்றப்போவது யார்? வாக்குறுதி அளித்த ஆள் மறுநாள் காலையில் இருப்பதில்லையே!

மக்கள் என்னிடம் வந்து கூறுகிறார்கள், ''இப்போது நான் உறுதிமொழி எடுத்துக் கொள்கிறேன். இன்னதைச் செய்வேன் என உறுதி தருகிறேன்.'' அதற்கு அவர்களிடம் நான் கூறுகிறேன், ''எதையாவது உறுதிசொல்லும் முன் ஒருமுறைக்கு இருமுறை யோசியுங்கள். உறுதி அளித்த நபர் மறுகணம் இங்கு இருப்பார் என்பதில் உங்களுக்கு உறுதி இருக்கிறதா? நாளை முதல் அதிகாலை நான்கு மணிக்கே எழுந்து விடுவதாக நீங்கள் தீர்மானிக்கிறீர்கள். ஆனால் நான்கு மணிக்கு உங்களுக்குள் இருக்கும் ஒருவர் கூறுகிறார், ''அலட்டிக் கொள்ளாதே. வெளியில் ரொம்பக் குளிராய் இருக்குது. ஏன் இவ்வளவு அவசரப்படறே? நாளைக்குட் பாத்துக்கலாம்.'' உடனே மறுபடியும் தூக்கத்தில் விழுகிறீர்கள்.

பிறகு எழுந்ததும் மனம் வருந்துகிறீர்கள். ''இதுசரியில்லை, அதை நான் செஞ்சிருக்கணும்'' என்று நினைக்கிறீர்கள். மறுடியும் ''நாளைக்கு நான் கண்டிப்பாகச் செய்வேன்'' என சபதம் எடுக்கிறீர்கள். ஆனால் நாளைக்கும் அதேதான் நிகழப் போகிறது. ஏனெனில் சபதம் எடுத்துக்கொண்ட ஆள் மறுநாள் காலை நான்கு மணிக்கு அங்கு இருப்பதில்லை. வேறு யாரோதான் நாற்காலியில் அமர்ந்திருக்கிறார். இவ்வகையில் நீங்கள் ஒரு சுழல் கழகமாக (ரோட்டரி கிளப்பாக) இருக்கிறீர்கள்: தலைவர் மாறிக் கொண்டே போகிறார். ஒவ்வொரு உறுப்பினரும் சுழற்சி முறையில் தலைவராக ஆகிறார். அங்கு ஒரு சுழற்சி முறை இருக்கிறது. ஒவ்வொரு கட்டத்திலும் யாராவது ஒருவர் தலைவராக இருக்கிறார்.

குருட்ஜீப் பின்வருமாறு கூறுவது வழக்கம்: ''மனிதனால் வாக்குறுதி தர முடியாது. இதுதான் மனிதனின் முக்கியமான குணாதிசயமாக

இருக்கிறது.'' நீங்கள் வாக்களித்ததை உங்களால் நிறைவேற்ற முடியாது. நீங்கள் வாக்குறுதி தந்துகொண்டே போவீர்கள். அதேபோது அவற்றை உங்களால் நிறைவேற்ற முடியாது என்பதையும் நன்கு அறிந்தே இருக்கிறீர்கள். ஏனெனில் நீங்கள் ஒரு தனி ஆள் அல்ல. நீங்கள் ஒரு குழப்பமாக ஒழுங்கீனமாக இருக்கிறீர்கள். எனவேதான் இப்போது யோக ஒழுங்குமுறை என்கிறார் பதஞ்சலி. உங்களின் வாழ்க்கை ஒரு முழுமையான அவலமாக ஆகி இருக்கிறது என்றால், நீங்கள் எதைச் செய்தாலும் அது நரகத்தையே உருவாக்குகிறது என்பதை நீங்கள் உணரும்போது, அந்தச் சரியான தருணம் தான் வந்துவிட்டது. இந்த தருணம் உங்களின் பரிமாணத்தை, உங்களின் இருத்தலின் திசை வழியை மாற்ற முடியும்.

இதுவரை நீங்கள் ஒரு குழப்பமான கும்பலாக வாழ்ந்திருக்கி நீர்கள். நீங்கள் ஒரு இணக்கமாது ஆக வேண்டி இருக்கிறது. நீங்கள் ஒரு ஒருமையாக ஆகவேண்டி இருக்கிறது - இதுவே யோகம் என்பதன் பொருள். ஒரு திடப்படுதல் தேவைப்படுகிறது; ஒரு மையம் கொள்ளுதல் தேவைப்படுகிறது. ஒரு மையத்தை நீங்கள் பெறாதவரை நீங்கள் செய்யும் யாவும் பயனற்றதே. அது வாழ்வையும் காலத்தையும் வீணாக்குவதாகும். மையமே முதல் தேவை. மேலும் தனக்கென ஒரு மையத்தைப் பெற்றிருக்கிற மனிதரால் மட்டுமே ஆனந்த மயமாக விளங்க முடியும். ஒவ்வொருவருமே அதைத்தான் கேட்கிறார். ஆனால் அதை நீங்கள் கேட்டுப் பயனில்லை. அதை நீங்கள் சம்பாதித்தாக வேண்டி இருக்கிறது! சீவனின் ஆனந்தமயமான நிலையையே ஒவ்வொருவரும் வேண்டுகிறார். ஆனால் ஒரு மையத்தால் மட்டுமே ஆனந்தமயமாக இருக்க முடியும். ஒரு கும்பலால் ஆனந்தமாக இருக்க முடியாது. கும்பலுக்கு ஒரு சுயம் /தன்னிலை கிடையாது; அதற்கு ஆன்மா கிடையாது. அப்படியானால் ஆனந்தமாக இருக்கப்போகிறவர் யார்?

ஆனந்தம் என்றால் முழுமையான அமைதி என்று அர்த்தம். இணக்கம் இருக்கும்போது மட்டுமே; ஒன்றுக்கொன்று முரண்பட்டிருக் கும் பின்னங்கள் அனைத்தும் சேர்ந்து ஒன்றாகி இருக்கிற போது மட்டுமே; கும்பலாக இல்லாமல் தனிநபராக இருக்கும் போதுமட்டுமே அமைதி சாத்தியம். வீட்டில் நீங்கள் ஏகாந்தமாக இருந்து, மற்ற யாரும் அங்கு இராத போது நீங்கள் ஆனந்தமாக இருப்பீர்கள். இப்போதோ உங்களுக்குரிய வீட்டில் மற்ற எல்லோரும் இருக்கிறார்கள், நீங்கள் மட்டும் காணப்படுவதில்லை. விருந்தாளிகள் மட்டும் இருக்கிறார்கள், வீட்டுக்குரியவரோ ஒருபோதும் இருப்பதில்லை. ஆனால் ஒரு வீட்டில் அதன் எசமானர் மட்டுமே ஆனந்தமாக இருக்க முடியும்.

இந்த மையம் கொள்தலையே பதஞ்சலி ஒழுங்கு முறை (அனுசாஸனம்) என்கிறார். ஒழுங்கு (டிசிப்ளின்)) என்னும் சொல் அழகானது. சீடர்/ஒழுகுபவர் (டிசைப்பிள்) என்னும் சொல் பிறந்த அதே வேர்ச் சொல்லில் இருந்தே அது வருகிறது. ஒழுங்குமுறை என்றால் கற்றுக் கொள்வதற்கான திறன், அறிந்து கொள்வதற்கான திறன் என்பதாகும். ஆனால் இருத்தலுக்கான திறனை நீங்கள் பெறாத வரை உங்களால் அறிந்துகொள்ள முடியாது, உங்களால் கற்றுக்கொள்ள முடியாது.

ஒருமுறை ஒரு மனிதர் புத்தரிடம் வந்தார். அவர் ஒரு சமூக சீர்திருத்தவாதியாக, புரட்சிக்காரராக இருந்திருக்கவேண்டும். அவர் புத்தரிடம் ''உலகம் துன்பமயமானதுதான். உங்களின் அந்தக் கூற்றை நான் ஏற்கிறேன்.'' என்று சொன்னார். ஆனால் புத்தர் ஒருபோதும் உலகம் துன்பமயம் என்று சொன்னதில்லை. ''நீங்களே துன்பமயம்- உலகம் அல்ல'' வாழ்க்கை துன்பமயம் - உலகம் அல்ல,'' மனிதர் துன்பமயம் - உலகம் அல்ல'', மனமே துன்பம் - உலகம் அல்ல'' என்றே புத்தர் சொன்னார். ஆனால் அந்தப் புரட்சிக்காரரோ ''உலகம் துன்பமயம் என்ற உங்களின் பிரகடனத்தை நான் ஏற்கிறேன். இப்போது சொல்லுங்கள். நான் என்ன செய்ய வேண்டும்? என்னிடம் மிகுந்த இரக்க உணர்ச்சி இருக்கிறது. மனித சமுதாயத்துக்கு நான் சேவை செய்ய விரும்புகிறேன்'' என்றார்.

சேவை செய்வதே அவரது குறிக்கோளாக இருந்திருக்க வேண்டும். புத்தர் அவரைப் பார்த்தார். பார்த்துவிட்டு பேசாமல் இருந்தார். புத்தரின் சீடர் ஆனந்தர் சொன்னார், ''இந்த மனிதர் நேர்மையானவராகக் காணப்படுகிறார். அவருக்கு வழிகாட்டுங்கள். ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்?.'' அதன்பின் புத்தர் அந்தப் புரட்சிக்காரரிடம் சொன்னார், ''நீர் உலகுக்கு தொண்டு செய்ய விரும்புகிறீர். ஆனால் முதலில் நீர் எங்கே இருக்கிறீர்? உள்ளே எவரையும் நான் காணவில்லை. உமக்குள் நான் பார்க்கிறேன், அங்கே யாருமில்லை.

''உமக்குள்ளே ஒரு மையம் இல்லை. ஆனால் நீர் மையம் கொள்ளாத வரை நீர் என்னென்ன செய்தாலும் அது மேலும் அதிக சிக்கலையே உருவாக்கும்.'' உங்களின் சமூக சீர்திருத்தவாதிகள், உங்களின் புரட்சிக்காரர்கள், உங்களின் தலைவர்கள் அனைவரும், மாபெரும் தீய சக்திகளை - தீமைகளை - உருவாக்கிப் பரப்புபவர் களாகவே இருக்கிறார்கள். தலைவர்கள் என்று எவரும் இல்லாமல் இருந்தால் இந்த உலகம் இன்னும் நன்றாக இருக்கும். ஆனால் அவர்களால் சும்மா இருக்க முடியாது. அவர்கள் ஏதாவது செய்தாக வேண்டும். ஏனெனில் உலகம் துன்பத்தில் இருக்கிறது. ஆனால் அவர்கள்

மையம் கொள்ளவில்லை. ஆகவே அவர்கள் என்னென்ன செய்தாலும். அதன்மூலமாக மேலதிக அவலத்தையே அவர்கள் உருவாக்குகிறார்கள். வெறும் இரக்கம் உதவாது. வெறும் தொண்டு உதவாது. மையம் கொண்ட ஒருவரிடமிருந்து பிறக்கும் கருணை முற்றிலும் வேறுபட்ட ஒன்றாகும். கும்பலிடமிருந்து வரும் பரிவு கெடுதலானதே; அந்த பரிவு நஞ்சானதே ஆகும்.

## இப்போது யோக ஒழுங்கு முறை

ஒழுங்கு என்றால் இருப்பதற்கானதிறன்; அறிவதற்கான திறன்; கற்றுக்கொள்வதற்கான திறன். இந்த மூன்று விசயங்களையும் நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

இருப்பதற்கான திறன். யோக ஆசனங்கள் அனைத்தும் உண்மையில் உடம்பு சம்பந்தமானவை அல்ல. இருப்பதற்கான திறன் சம்பந்தமானவை. சில மணி நேரங்கள் உங்களின் உடலை அசைக்காமல் அமைதியாக அமர்ந்திருக்க உங்களால் முடிந்தால், இருப்பதற்கான திறனில் நீங்கள் வளர்ந்து கொண்டிருக்கிறீர்கள் என்கிறார் பதஞ்சலி. ஏன் நீங்கள் அசைகிறீர்கள்? ஒரு சில நொடிகளுக்குக்கூட அசையாமல் உட்கார்ந்திருக்க உங்களால் முடிவதில்லை. உங்களுக்கு அரிப்பெடுக்கிறது. கால்கள் மரத்துப் போகின்றன. இப்படிப் பலகாரியங்கள் நிகழத் தொடங்குகின்றன. இவையெல்லாம் நீங்கள் அசைவதற்கான சாக்குப்போக்குகள் மட்டுமே.

நீங்கள் ஒரு எசமானராக இல்லை. உங்கள் உடம்பிடம் ''இன்னும் ஒரு மணி நேரத்துக்கு நான் அசையப்போவதில்லை'' என்று சொல்ல உங்களால் முடிவதில்லை உடனடியாக உடமபானது கிளர்ச்சி செய்யும். உடனடியாக அசையும்படி, ஏதாவது செய்யும்படி அது உங்களை நெருக்கும். அதற்கான காரணங்களையும் கொடுக்கும்: ''நீ நகரவே வேண்டும். ஏனெனில் பூச்சி கடிக்கிறது.'' அங்கே பார்த்தால் எந்தப் பூச்சியையும் உங்களால் கண்டுபிடிக்க முடியாமல் போகலாம். நீங்கள் ஒரு இருத்தலாக இல்லை, நீங்கள் ஒரு பறத்தலாக் இருக்கிறீர்கள்; ஓயாத - தலைதெறித்த நடவடிக்கையாக இருக்கிறீர்கள். பதஞ்சலியின் ஆசனங்கள் உண்மையில் எவ்விதமான உடல் பயிற்சியுடனும் தொடர்புடையவை அல்ல. மாறாக சீவனின் அகப் பயிற்சியுடன் தொடர்புடையவையே. எதையும் செய்யாமல், எந்த அசைவும் இல்லாமல், எந்த நடவடிக்கையும் இல்லாமல் வெறுமனே இருத்தல் தொடர்புடையவை. அப்படி சும்மா இருப்பதானது, மையம் கொள்வதற்கு உதவும்.

ஒரு ஆசனத்தில் தொடர்ந்து அசையாமல் இருக்க உங்களால் முடியுமானால் உடல் ஒரு அடிமையாக ஆகும்; உங்களை அது பின்பற்றும். உடல் உங்களை எந்த அளவுக்கு அதிகமாய்ப் பின் தொடர்கிறதோ அந்த அளவுக்கு உங்களுக்குள் ஒரு பெரிதான சீவனை அதிக வலுவான ஒரு சீவனைப் பெற்றிருப்பீர்கள். மேலும் உடல் அசையாதிருக்கும்போது உங்கள் மனத்தால் அசைய முடியாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஏனெனில் மனமும் உடலும் இரண்டு பொருள்கள் அல்ல. ஒரே நிகழ்வின் இரு துருவங்கள் அவை. உடலும் மனமுமாக நீங்கள் இல்லை, உடல்மனமாக இருக்கிறீர்கள். உடல்மன சேர்க்கையாக இருக்கிறது உங்கள் ஆளுமை. உடம்பின் மிகவும் நுண்மையான பகுதியே மனம் ஆகும். அல்லது இதை நீங்கள் இப்படியும் சொல்லமுடியும். அதாவது மனத்தின் கொழுத்த, பெரிய பகுதியே உடல் ஆகும்.

எனவே உடம்பில் நிகழ்வது எதுவாயினும் அது மனத்திலும் நிகழ்கிறது. அவ்வாறே இதற்கு மறுதலையானதும் நிகழ்கிறது: மனதில் நிகழ்வது எதுவாயினும் அது உடலிலும் நிகழ்கிறது. உடல் அசையாதிருக்கும்போது குறிப்பிட்ட ஆசனத்தை உங்களால் எளிதில் போட முடிகிறது. ''அமைதியாக இரு'' என உடலிடம் உங்களால் சொல்லமுடிந்தால் மனமும் அமைதியாக இருக்கிறது. உண்மையில் மனமானது அசையத் தொடங்குகிறது. உடலை அசைக்க முயல்கிறது. ஏனெனில் உடல் அசைந்தால்தான் மனம் அசைய முடியும். அசையாத உடலில் இருக்கும் மனத்தால் அசைய முடியாது: அதற்கு ஒரு அசைந்து கொண்டிருக்கும் உடல் தேவைப்படுகிறது.

உடல் அசையாமல் இருக்கும்போது மனமும் அசையாமல் இருக்கிறது. நீங்கள் மையம் கொள்கிறீர்கள். இந்த அசையாத ஆசனம் ஒரு உடல்பயிற்சிக்காக மட்டுமல்ல; மையம் கொள்ளுதல் நிகழ முடிவதற்கான ஒரு சூழலை - நீங்கள் ஒழுங்குபட்டவராக ஆக முடிவதற்கான ஒரு சூழலை - உருவாக்குவதற்காக வந்த ஆசனம். நீங்கள் இருக்கிறபோது, நீங்கள் மையம் கொண்டவராக ஆகி இருக்கிறபோது, இருத்தல் என்பதன் பொருளை நீங்கள் அறிகிற போது, நீங்கள் பணிவடக்கம் உடையவராக இருப்பீர்கள். பின் உங்களால் சரணடைய் முடியும். அப்போது எந்த பொய்யான அகங்காரமும் உங்களிடம் தொற்றி இருக்காது. ஏனெனில் ஒரு தடவை நீங்கள் மையம் கொண்டு விட்டாலே, எல்லா அகங்காரங் களும் பொய்யானவையே என்பதை நீங்கள் அறிகிறீர்கள். அதன்பின் நீங்கள் பணிந்துவணங்க முடியும். அப்போதுதான் ஒரு சீடர் பிறக்கிறார்.

ஒரு சீடரின் பிறப்பு என்பது ஒரு மாபெரும் சாதனையாகும். ஒழுங்கின் (டிசிப்ளின்) மூலமாக மட்டுமே நீங்கள் ஒரு சீடர் (டிசைப்பிள்) ஆகிறீர்கள். மையம் கொண்டிருப்பதன் மூலமாக மட்டுமே நீங்கள் பணிவடக்கம் உடையவராக, ஏற்புத்தன்மை உடையவராக, ஒரு வெட்ட வெளியாக ஆவீர்கள். அப்போதுதான் ஒரு குரு உங்களுக்குள், உங்களின் வெற்றிடத்துக்குள், உங்களின் பேரமைதிக்குள் தன்னை ஊற்ற, பொழிய முடியும். அவர் வந்து உங்களை எட்ட முடியும். அப்போது தான் செய்திப் பரிமாற்றம் சாத்தியமாகிறது.

சீடர் என்றால் மையம் கொண்டிருக்கிறவர், அடக்கமானவர், ஏற்புத்தன்மை உள்ளவர், திறந்திருப்பவர், ஆயத்தமாய் இருப்பவர், உன்னிப்பாய் இருப்பவர், காத்திருப்பவர், பிரார்த்தனை மயமா யிருப்பவர் என்று பொருள். யோகத்தில் குரு மிகமிக முக்கியமானவர். முற்றிலும் முக்கியமானவர். ஏனெனில் மையம் கொண்டிருக்கிற ஒரு சீவனின் மிக அருகாமையில் நீங்கள் இருக்கிற போதுமட்டுமே உங்களின் மையம் கொள்ளுதலானது நிகழும்.

அதுவே சத்சங்கம் என்பதன் பொருளாகும். சத்சங்கம் என்னும் சொல்லை நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். அது முற்றிலும் தவறான பொருளிலேயே புழங்கி வருகிறது. சத்சங்கம் என்றால் சத்தியத்துக்கு மிக சமீபத்தில் இருத்தல் என்று பொருள். உண்மையின் பக்கத்தில் என்பது அதன் பொருள். உண்மையோடு ஒன்றி இருக்கிற ஒரு குருவின் அருகாமை என்பது அதன் பொருள் - அவருக்கு அருகாமையில் திறந்த தன்மையோடு ஏற்புத் தன்மையோடு, காத்திருத்தல் என்பது பொருள். உங்களின் காத்திருப்பானது ஆழமும் தீவிரமும் ஆகி இருக்கும்போது ஒரு ஆழ்ந்த கலப்பு நிகழும்.

குரு எதையும் செய்யப் போவதில்லை. அவர் வெறுமனே அங்கு இருக்கிறார் - எளிதில் கிடைப்பவராக இருக்கிறார். நீங்கள் திறந்திருந்தால் அவர் உங்களுக்குள் பாய்ந்தோடுவார். இந்தப் பாய்ச்சலே சத்சங்கம் எனப்படுகிறது. ஒரு குருவிடம் நீங்கள் வேறெதையும் பயிலத் தேவையில்லை. சத்சங்கத்தை மட்டும் உங்களால் கற்றுக்கொள்ள முடிந்தால் அதுவே போதுமானது - எதையும் வேண்டாமல் எண்ணாமல் வாதம் பண்ணாமல் அவர் அருகில் வெறுமனே உங்களால் இருக்க முடிந்தால் அதுவே போதுமானது - வெறுமனே உங்களால் இருக்க முடிந்தால் அதுவே போதுமானது - வெறுமனே அங்கு இருந்தால் , எளிதில் இடம் கொடுக்கிறவராக இணங்கி வருபவராக இருந்தால் அதுவே போதுமானது - குருவின் சீவன் உங்களுக்குள் பாய முடியும்.

ஆம், சீவனால் பாய்ந்தோட முடியும். ஏற்கனவே அது பாய்ந்து ஓடிக்கொண்டு தான் இருக்கிறது. ஒரு மனிதர் முழுமையைச் சாதிக்கிற போதெல்லாம் அவரது சீவன் ஆற்றலின் கதிர் வீச்சாக ஆகிறது. அவர் கதிர்வீசிக் கொண்டிருக்கிறார். அதைப் பெற்றுக்கொள்ள நீங்கள் அங்கு இருந்தாலும் இல்லாவிட்டாலும் அதனால் எந்த வேறுபாடும் நிகழ்வதில்லை. அவர் ஒரு ஆறுபோல் பாய்கிறார். நீங்கள் ஒரு பாத்திரம்போல் உள்ளீடற்று இருந்தால், ஆயத்தமாக - திறந்த தன்மையோடு இருந்தால் உங்களுக்குள் அவர் பாய்வார்.

பெற்றுக்கொள்ளத் தயாராயிருக்கிறவர் என்பதே சீடர் என்பதன் பொருள் ஆகும். சீடராகி இருக்கிறார் என்றால் கருப்பை ஆகியிருக்கிறார் என்று பொருள். அவருள் குரு ஊடுருவ முடியும். இதுவே சத்சங்கம் என்னும் சொல்லின் பொருள். அடிப்படையில் அது ஒரு பேருரையாக இருக்க வேண்டியதில்லை. சத்சங்கம் என்றால் பிரசங்கம் அல்ல. பேருரையும் அதில் இருக்கலாம். ஆனால் பேருரை என்பது ஒரு சாக்குப்போக்கு மட்டுமே. நீங்கள் இங்கு இருக்கிறீர்கள். பதஞ்சலி சூத்திரங்களைப்பற்றி நான் பேசுவது ஒரு சாக்கு மட்டுமே. நீங்கள் உண்மையாகவே இங்கு இருந்தால் பின் பேருரை என்பது, பேச்சுஎன்பது, நீங்கள் இங்கு இருப்பதற்கான ஒரு சாக்காக மட்டுமே ஆகிறது. மேலும் உண்மையாகவே நீங்கள் இங்கு இருந்தால் சத்சங்கம் தொடங்குகிறது. நான் பொழிய முடியும். அந்தப் பொழிவானது எந்தச் சொற் பொழிவையும்விட ஆழமானது மொழியின் மூலமான எந்தத் தொடர்பையும்விட ஆழமானது, உங்களுடனான அறிவுரீதியான எந்த ஒரு சந்திப்பையும்விட அது ஆழமானது.

உங்களின் மனம் ஒன்றில் ஈடுபட்டிருக்கும் போது நீங்கள் ஒரு சீடராக இருந்தால், நீங்கள் ஓர் ஒழுங்குபட்ட பிறவி என்றால், நான் பேசுவதைக் கவனிப்பதிலேயே உங்களின் மனம் ஈடுபட்டுக்கொண் டிருந்தால், உங்களின் சீவன் சத்சங்கத்தில் இருக்கிறது என்றாகும். அந்நிலையில் உங்கள் தலை ஒன்றில் ஈடுபட்டிருக்க, உங்கள் இதயமோ திறந்திருக்கிறது. அப்போது ஒரு ஆழமான நிலையில் ஒரு சந்திப்பு நிகழ்கிறது. அந்தச் சந்திப்பே சத்சங்கம். மற்ற யாவும் வெறும் சாக்குப் போக்கு மட்டுமே; குருவின் அருகாமையில் இருப்பதற்கான வழிகளைக் கண்டுகொள்வது மட்டுமே.

அருகாமையே முழு விசயமும். ஆனால் ஒரு சீடரால் மட்டுமே அருகாமையில் இருக்க இயலும். யார் எவரானாலும் அருகாமையில் இருந்துவிட முடியாது. சமீபமாயிருத்தல் என்பது அன்போடு கூடிய முழு நம்பிக்கை ஆகும். ஏன் நாம் அருகாமையில் இருப்பதில்லை. ஏனென்னில்

அச்சம் இருக்கிறது. மிகவும் அருகில் இருப்பது ஆபத்தாக ஆகலாம். மிகவும் திறந்திருப்பது ஆபத்தாக ஆகலாம். ஏனெனில் எளிதில் தாக்கப்படக் கூடியவர்களாக நீங்கள் ஆகிறீர்கள். அந்நிலையில் தற்காத்துக்கொள்ளுதல் கடினமாகும். எனவே ஒரு பாதுகாப்பு நடவடிக்கையாகவே நாம் ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட தூரத்தக்குமேல் எவரையும் நம் அருகில்வர ஒருபோதும் அனுமதிப்பதில்லை.

ஒவ்வொருவருக்கும் அவரைச் சுற்றிலும் ஒரு ஆட்சிப் பரப்பு இருக்கிறது. யாராவது ஒருவர் உங்களின் ஆட்சிப் பரப்புக்குள் பிரவேசிக்கும் போதெல்லாம் நீங்கள் பயந்து விடுகிறீர்கள். ஒவ்வொருவருக்கும் அவர் காத்துக்கொள்வதற்கென ஒரு பிரதேசம் இருக்கிறது. உங்களின் அறையில் நீங்கள் தனியாக உட்கார்ந்து இருக்கிறீர்கள். அறைக்குள் ஒரு அந்நியர் நுழைகிறார். உண்மையிலேயே நீங்கள் பீதி அடையும் தருணம் எதுவென சும்மா கவனித்துப் பாருங்கள். ஒரு எல்லை இருக்கிறது. அந்த எல்லையை மீறி அவர் நுழைந்தால், அந்த எல்லையைக் கடந்து அவர் நெருங்கி வந்தால் நீங்கள் பீதி அடைவீர்கள். நீங்கள் அஞ்சி நடுங்குவீர்கள். ஒரு திடீர் நடுக்கத்தை உணர்வீர்கள். ஒரு குறிப்பிட்ட பரப்புக்கு அப்பாலும் அவர் நெருங்கிவர முடியும்.

அருகாமையில் இருத்தல் எனில் இப்போது உங்களின் சொந்த ஆட்சிப்பகுதி எதுவும் இல்லை என்பது பொருள். அருகாமையில் இருத்தல் என்றால் தாக்கப்படத்தக்க நிலையில் - பாதுகாப்பற்ற நிலையில் இருத்தல் என்பது பொருள். அருகாமையில் இருத்தல் என்றால், உங்களுக்கு என்ன நிகழ்ந்தாலும் பாதுகாப்புப்பற்றிய நினைப்பு உங்களுக்கு இல்லை என்பது பொருள்.

இரண்டு காரணங்களுக்காக ஒரு சீடர் (குருவின்) அருகாமையில் இருக்க முடியும். ஒன்று, அவர் மையம் கொண்டவராக இருக்கிறார்; (அல்லது) மையம் கொண்டவராக இருக்க முயன்று கொண்டிருக்கிறார். மையம் கொண்டவராக இருக்க முயன்று கொண்டிருப்பவரும்கூட அச்சமற்றவராக ஆகிறார். அவர் பயமற்றுப் போகிறார். கொல்லப்பட முடியாத ஒன்றை அவர் பெற்றிருக்கிறார். உங்களிடம் அப்படி எதுவும் இல்லை. எனவேதான் பயம். நீங்கள் ஒரு கும்பல். ஒரு கும்பலானது எந்த கணத்திலும் கலைந்து சிதறிவிட முடியும். என்ன நேர்ந்தாலும் இருந்த இடத்திலேயே இருக்கக்கூடிய ஒரு பாறையைப் போன்ற ஒன்று உங்களிடம் இல்லை. பாறையாக இல்லாமல் பலமான அடித்தளம்

இல்லாமல் நீங்கள் பிழைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அடித்தளமற்ற வீடு எப்போதும் அச்சத்திலேயேதான் இருக்கும். எந்த ஒரு புயல் அல்லது லேசான காற்றுகூட உங்களை அசைத்து அழித்துவிட முடியும். எனவேதான் உங்களை நீங்களே காத்துக்கொள்ள வேண்டி இருக்கிறது.

இந்த ஓயாத தற்காப்பின் காரணமாகத்தான் உங்களால் அன்பு செய்ய முடிவதில்லை. முழுமையாக உங்களால் நம்ப முடிவதில்லை. நட்பாக இருக்க உங்களால் முடிவதில்லை. உங்களுக்கு நண்பர்கள் பலர் இருக்கலாம். ஆனால் நட்பு இருப்பதில்லை. ஏனெனில் நட்புக்கு அருகாமை தேவை. உங்களுக்கு மனைவிகள், கணவர்கள், பெயரள விலான காதலர் காதலிகள் இருக்கலாம். ஆனால் அவர்கள்மீது காதல் இருப்பதில்லை. ஏனெனில் காதலுக்கு முழுமையான விசுவாசம் தேவை. உங்களுக்கு குரு / ஆசான்கள் இருக்கலாம். ஆனால் உங்களிடம் சீடத்துவம் இருப்பதில்லை. ஏனெனில் ஒருவரின் சீவனுக்கு, அவரது சீவனின் சமீபத்துக்கு, அவரது சீவனின் சந்நிதானத்துக்கு உங்களையே முழுமையாக அர்ப்பணிக்க உங்களால் முடிவதில்லை. ஆனால் அப்படி அர்ப்பணித்தால்தான் அவர் உங்களை ஆட்கொள்ள முடியும். உங்களுக்குள் தன்னை வெள்ளமாய்ப் பொழிய முடியும்.

சீடர் என்றால் ஒரு சாதகர், தேடுபவர். ஒரு கும்பலாக இராதவர். மையம் கொள்ளவும் திடப்படவும் முயன்று கொண்டிருப்பவர். குறைந்த பட்சம் தன் இருப்பை உணரவும் தனக்குத்தானே குருவாக மாறவும் நேர்மையான முயற்சிகள் செய்துகொண்டிருப்பவர். யோக ஒழுங்குகள் அனைத்தும் உங்களையே உங்களின் அதிகாரியாக ஆக்கும்பொருட்டான ஒரு முயற்சிதான். நீங்கள் இப்போது இருக்கிற நிலையில் பலப்பல ஆசைகளின் வெறும் ஒரு அடிமையாக மட்டுமே நீங்கள் இருக்கிறீர்கள். உங்களுக்குப் பலப்பல எஜமான்கள் இருக்கிறார்கள். நீங்களோ அவர்களின் ஒரு சாதாரண அடிமையாக இருக்கிறீர்கள். பலப்பல திசைகளிலும் இழுபடுகிறீர்கள்.

## இப்போது யோக ஒழுங்குமுறை

யோகம் ஒரு ஒழுங்குமுறை. நீங்கள் நீங்களாகவே மாறிக்கொள்வதற்கான ஒரு முயற்சி. இதனுடன் இன்னும் சில விசயங்களையும் புரிந்து கொள்ள வேண்டி உள்ளது. யோகம் ஒரு சிகிச்சை முறை அல்ல. மேற்கில் பல உளவியல் சிகிச்சைகள் இப்போது கொடிகட்டிப் பறக்கின்றன. மேலும், பல மேலை உளவியலாளர்கள் யோகமும் ஒரு சிகிச்சை முறையே என்று கருதுகிறார்கள். அப்படி அல்ல!

அது ஒரு ஒழுங்குமுறை. இரண்டுக்கும் என்ன வேறுபாடு? இதுதான் வேறுபாடு: நீங்கள் நலமின்றி இருந்தால்தான் உங்களுக்கு சிகிச்சைமுறை தேவை. நீங்கள் நோய் அறிகுறிகளுடன் இருந்தால்தான் ஒரு சிகிச்சைமுறை உங்களுக்குத் தேவை.

ஆனால் நீங்கள் நலமாக இருக்கும்போதுகூட உங்களுக்கு ஒரு ஒழுங்குமுறை தேவை. உண்மையை சொன்னால் நீங்கள் நலமாக இருக்கும்போது உங்களுக்கு உதவ ஒரு ஒழுங்குமுறையால் மட்டுமே முடியும்.

அது நோய்க்குறிகளைக் கொண்ட மனிதர்களுக்கானது அல்ல. மருத்துவ விஞ்ஞானத்தின் பார்வையில் முற்றிலும் நலமாக, இயல்பாக இருக்கிறவர்களுக்கானதே யோகம். அவர்கள் ஆளுமைப் பிளவுடையவர்கள் அல்லர். அவர்கள் பித்தர்கள் அல்லர். அவர்கள் நரம்புக் கோளாறு உடையவர்கள் அல்லர். அவர்கள் இயல்பான மக்கள். எந்தக் குறிப்பிடத்தக்க நோய்க்குறிகளும் அற்ற ஆரோக்கியமான மனிதர்கள். இருந்தாலும் இயல்பு நிலை என அழைக்கப்படும் நிலவரம் அனைத்தும் விணாய்ப் போவதை அவர்கள் உணர வருகிறார்கள். நலமானதென அழைக்கப்படுவது எதுவும் பயனுடையதாக இல்லை. அதைவிடவும் கூடுதலான ஒன்று தேவைப்படுகிறது, அதைவிடவும் மேலான ஒன்று தேவைப்படுகிறது, அதைவிடவும் முழுமையாக ஒன்று தேவைப்படுகிறது.

சிகிச்சைகள் என்பவை நோய்வாய்ப்பட்ட மக்களுக்கானவை. யோகத்துக்கு வந்து சேர சிகிச்சைகள் உங்களுக்கு உதவ முடியும். ஆனால் யோகம் ஒரு சிகிச்சை முறை அல்ல. யோகம் என்பது ஒரு உயர்நிலை ஆரோக்கியம். ஒரு வித்தியாசமான ஆரோக்கிய நிலை. ஒரு வித்தியாசமான இருத்தல் நிலைக்கும், முழுமைத் தன்மைக்கும் ஆனது. சிகிச்சை என்பது அதிகபட்சம், சரிப்படுத்துதல். அதற்கு அதிகமாக நாம் எதுவும் செய்ய முடியாது என்கிறார் பிராய்டு. சமுதாயத்தின் இயல்பான ஒரு உறுப்பினராக உங்களை எங்களால் ஆக்க முடியும். ஆனால் அந்த சமுதாயமே நோய்க்கூறாக இருந்தால் அப்போது? சமுதாயம் அப்படித்தான் இருக்கிறது. முழு சமுதாயமுமே நோய் பீடித்ததாய் இருக்கிறது. சிகிச்சை உங்களை இயல்பானவராக ஆக்கும் என்பது எந்தப் பொருளில் என்றால் சமுதாயத்துடன் அனுசரித்துச் செல்கிறவ ராக அது உங்களை ஆக்குகிறது - ஆனால் சமுதாயமே நோய்பிடித்த சமுதாயமாக இருக்கிறது!

எனவே ஒரு நோய்பிடித்த சமுதாயத்தில் ஒரு நலமான மனிதர் நோய்பிடித்தவராக எண்ணப்படுவது சிலநேரங்களில் நிகழ்கிறது. ஒரு யேசு நோய் பீடித்தவராக கருதப்படுகிறார். அவரை சமுதாயத்துடன் அனுசரித்துப் போகச் செய்ய ஒழுகச் செய்ய எல்லா முயற்சிகளும் செய்யப்படுகின்றன. அவரை ''திருத்தவே'' முடியாது என தெரிந்ததும் அவர் சிலுவையில் அறையப்படுகிறார். எதுவுமே செய்ய முடியாது, இந்த மனிதரைக் குணப்படுத்தவே முடியாது என்று கண்டதும் அவரைச் சிலுவையில் அறைந்து விடுகிறார்கள். சமுதாயமே நோய் பிடித்ததாக இருக்கிறது. ஏனெனில் சமுதாயம் என்பது உங்களின் ஒட்டுமொத்தமே அன்றி வேறல்ல. உறுப்பினர்கள் யாவரும் நோய் பிடித்தவர்களாக இருந்தால் அந்தச் சமுதாயமும் நோய் பிடித்ததாக இருக்கிறது. பின் ஒவ்வொரு உறுப்பினரும் அந்த சமுதாயத்துக்குத் தகுந்தவாறு தன்னை ''சரி'' செய்து கொள்ள வேண்டி இருக்கிறது.

யோகம் ஒரு சிகிச்சை முறை அல்ல. யோகமானது எந்த வழியிலும் சமுதாயத்துடன் உங்களை அனுசரித்துச் செல்வதற்கு முயன்று கொண்டிருக்கவில்லை. அனுசரித்தல் என்னும் விதத்திலேயே யோகத்தை நீங்கள் வரையறுக்க விரும்பினால் அப்போதும்கூட அது சமுதாயத்துடன் அனுசரித்து செல்தல் அல்ல, மாறாக இயற்கையுடன் அனுசரித்துச் செல்தலே ஆகும்; இறைமையுடன் அனுசரித்து செல்தலே ஆகும்!

எனவே ஒரு செம்மையான யோகி உங்களின் பார்வையில் பைத்தியமாகத் தோன்றலாம். அவர் சித்தம் பிறழ்ந்தவராக, பித்துப் பிடித்தவராகத் தோன்றலாம். ஏனெனில் இப்போது அவர் மேலும் பெரிய உயர்நிலைமனதுடன் தொடர்பு கொண்டிருக்கிறார். மேலான காரியங் களுடன் தொடர்பு கொண்டிருக்கிறார். பிரபஞ்ச மனத்துடன் அவர் தொடர்பு கொண்டிருக்கிறார். எப்போதும் இது இப்படித்தான் நிகழ்ந்திருக்கிறது: ஒரு புத்தரோ ஒரு யேசுவோ ஒரு கிருஷ்ணரோ, அவர்கள் எப்போதுமே ஒருவித தனிப்போக்கு உடையவர்களாகவே காணப்படுகிறார்கள். அவர்கள் அந்நியர்களாகவே தோன்றுகிறார்கள்.

எனவேதான் அவர்களை நாம் அவதாரங்கள் அதாவது அந்நியர்கள் என அழைக்கிறோம். வேறொரு கிரகத்தில் இருந்து வந்தவர்களைப் போல் அவர்கள் காணப்படுகிறார்கள். அவர்கள் நம்மைச் சார்ந்தவர்கள் இல்லை. அவர்கள் நம்மைவிட உயர்ந்தவர்களாக இருக்கலாம், நல்லவர்களாக இருக்கலாம், தெய்வீகமானவர்களாக இருக்கலாம். ஆனாலும் அவர்கள் நம்மைச் சேர்ந்தவர்கள் இல்லை. வேறெங்கோ இருந்து அவர்கள் வருகிறார்கள். மனித குலமாகிய நமது

இருப்பின் பிரிக்கமுடியாத பகுதியாக அவர்கள் இல்லை. அவர்கள் வெளியார் என்னும் உணர்வே தலைதூக்கி நின்று நிலவுகிறது. ஆனால் அப்படி அல்ல. அவர்களே உண்மையான உடனிருப்பவர் ஆவர். ஏனெனில் இயற்கையின் மிகவும் உள்ளார்ந்த மையத்தை அவர்களே தொட்டிருக்கிறார்கள். ஆனால் நமக்கு வேறுமாதிரித் தெரிகிறார்கள்.

## இப்போது யோக ஒழுங்குமுறை

இதுவரை நீங்கள் செய்து வந்திருப்பது எதுவாயினும் அது முற்றிலும் அர்த்தமற்றது. மிக மோசமாகச் சொன்னால் அது ஒரு தீக்கனவு; மிக உயர்வாகச் சொன்னால் அது ஒரு அழகிய கனவுதான் என்பதை உங்களின் மனம் உணரும்போது ஒழுங்குமுறையின் பாதை உங்கள் முன் திறக்கிறது. அது என்ன பாதை?

அடிப்படை வரையறை இதுதான்:

மனதின் நிறுத்தமே யோகம்
சித்தவிருத்திநிரோத.

பதஞ்சலி ரொம்பவும் கணக்காக நடந்துகொள்பவர் என்று உங்களிடம் சொன்னேன். 'இப்போது யோக ஒழுங்குமுறை' என்னும் ஒற்றை வாக்கியத்தோடு உங்களுடனான நேரடித் தொடர்பை அவர் முடித்துக்கொண்டு விட்டார். தனிப்பட உங்களுக்காக என்று அவர் பயன்படுத்தி இருக்கும் வாக்கியம் இது ஒன்றுதான். இத்தோடு உங்களுக்கு யோகத்தில் அக்கறை இருக்கிறது என அவர் எடுத்துக்கொள்கிறார். ஒரு நம்பிக்கை /எதிர்பார்ப்பு என்னும் முறையில் அல்ல, ஒரு ஒழுங்கு (முறை) என்னும் முறையில்; இங்கேயே இப்போதே பரிபூரண மாற்றம் என்னும் வகையில் அதன்மீது உங்களுக்கு அக்கறை ஏற்பட்டிருப்பதாக அவர் எடுத்துக் கொள்கிறார். அடுத்த வரையறைக்கு செல்கிறார்:

மனதின் நிறுத்தமே யோகம்.

இதுவே யோகத்தின் ஆகச்சிறந்த இலக்கணம். யோகமானது பல வழிகளிலும் வரையறுக்கப்பட்டிருக்கிறது. பலவித வரையறைகள் உள்ளன. மனமும் தெய்வீகத் தன்மையும் சந்திப்பதே யோகம் எனச் சிலர் கூறுகிறார்கள்: எனவேதான் அது யோகம் என்று பெயர் பெறுகிறது - யோகம் என்றாலே சந்திப்பு, கலப்பு என்றே பொருள் கொள்கிறார்கள். அகங்காரத்தை விடுவதே யோகம் எனச் சிலர் பொருள் கூறுகிறார்கள்.

அகங்காரமே தடை. அகங்காரத்தை நீங்கள் கைவிட்ட அக்கணமே தெய்வத் தன்மையுடன் நீங்கள் இணைகிறீர்கள். ஏற்கனவே நீங்கள் சேர்ந்தே இருக்கிறீர்கள். அகங்காரத்தின் விளைவாகத்தான் நீங்கள் பிரிந்திருப்பதுபோல தோன்றுகிறது என்கிறார்கள். மேலும் இன்னும் பல வரையறைகள் உள்ளன. ஆனால் பதஞ்சலியினுடையது மிகவும் அறிவியல் ரீதியானது. அவர் கூறுகிறார்:

மனதின் நிறுத்தமே யோகம்.

மனமற்ற நிலையே யோகம். மனம் என்னும் சொல்லானது உங்களின் அகங்காரங்கள், உங்களின் ஆசைகள், உங்களின் நம்பிக்கைகள், உங்களின் தத்துவங்கள், உங்களின் மதங்கள், உங்களின் சாத்திரங்கள் அனைத்தையுமே உள்ளடக்குகிறது. 'மனம்' அனைத்தை யும் தன்னுள் கொண்டுள்ளது. நீங்கள் எண்ண முடிவது எல்லாமே மனம்தான். அறியப்பட்டிருக்கிற அனைத்துமே, அறிய முடியும் அனைத்துமே, அறியத்தக்கன அனைத்துமே மனத்துக்குள்தான் உள்ளன. மனத்தின் நிறுத்தம் என்றால் அறியப்பட்டிருக்கிறவை அனைத்தும் நிறுத்தம், அறியப்படாதவற்றுக்குள் குதிப்பது ஆகும். எப்போது மனம் இல்லையோ அப்போதே நீங்கள் அறியப்படாதறக்குள் இருக்கிறீர்கள். அறியப்படாததற்க்குள் குதித்து விடுதலே யோகம். 'அறியப்படாதது' என்று கூறுவதுகூட சரியாக இராது. அதைவிட 'அறிய முடியாதது', என்பது சரியாக இருக்கும்.

மனம் என்றால் என்ன? அது அங்கே என்ன செய்து கொண்டிருக்கிறது? மனம் என்பது நமக்குள் இருக்கும் ஜடப்பொருளான ஒன்று என்பதாகவே சாதாரணமாக நாம் நினைக்கிறோம். பதஞ்சலி இதை ஏற்பதில்லை. அவர் மட்டுமல்ல, மனதின் உட்புறங்களை எப்போதாவது அறியவரும் எவரும் அதை நம்பமாட்டார். நவீன அறிவியலும் அதை ஏற்பதில்லை. ஒருவருக்குள் திடரூபமாக இருக்கும் ஒன்று அல்ல மனம். மனம் என்பது ஒரு இயக்கம் மட்டுமே; ஒரு செயல்பாடு மட்டுமே.

நீங்கள் நடக்கிறீர்கள். உடனே நான் நீங்கள் நடந்துகொண்டு இருக்கிறீர்கள் என்கிறேன். நடந்து கொண்டு இருத்தல் என்றால் என்ன? நீங்கள் நின்றுவிட்டால் நடந்து கொண்டிருத்தல் எங்கே இருக்கிறது? நீங்கள் உட்கார்ந்தால் நடந்து கொண்டிருப்பது எங்கே போயிருக்கிறது? நடத்தல் என்பது ஜடமான ஒன்றல்ல. அது ஒரு செயல்பாடு. எனவேதான் நீங்கள் உட்கார்ந்து கொண்டு இருக்கிற போது யாரும் உங்களிடம்

''உங்கள் நடையை நீங்கள் எங்கே வைத்திருக்கிறீர்கள்? இப்போதுதானே நீங்கள் நடந்து கொண்டிருந்தீர்கள்? ஆயின் அந்த நடை இப்போது எங்கே போய்விட்டது?'' என்று கேட்க முடியாது. அப்படிக் கேட்டால் நீங்கள் சிரிப்பீர்கள். ''நடத்தல்/நடை என்பது பொருண்மையான ஒன்றல்ல. அது ஒரு செயல்பாடுதான். என்னால் நடக்கவும் முடியும். பின் அதை நிறுத்தவும் முடியும். மறுபடியும் நான் நடக்கத் தொடங்கவும் முடியும். அது ஒரு செயல்பாடு'' என்று நீங்கள் சொல்வீர்கள்.

மனமும் ஒரு செயல்பாடுதான். ஆனால் ''மனம்'' என்னும் சொல்லின் காரணமாக ஜடமான ஏதோ ஒன்று அங்கு இருப்பதுபோல் தோன்றுகிறது. 'நடத்தல்' என்று சொல்வது போலவே 'நினைத்தல்' (மைன்டிங்) என அதை அழைப்பது அதிக சரியாக இருக்கும். மனம் என்றாலே நினைத்தல்தான். மனம் என்றாலே எண்ணுதல்தான். அது ஒரு செயல்பாடுதான்.

மீண்டும் மீண்டும் போதிதர் நான் மேற்கோள்காட்டி வந்திருக்கிறேன்.

அவர் சீனாவுக்குப் போனார். சீனச் சக்கரவர்த்தி அவரைப் பார்க்கச் சென்றான். சக்கரவர்த்தி சொன்னான், ''என் மனம் மிகவும் அமைதியின்றி, மிகவும் கலங்கி குழம்பிக் காணப்படுகிறது. நீங்கள் ஒரு மகான். உங்களின் வருகைக்காகத் தான் நான் காத்திருந்தேன். என் மனதை அமைதிப்படுத்த நான் என்ன செய்ய வேண்டும் என்பதை எனக்குத் தெரிவியுங்கள்.''

போதிதர்ம சொன்னார், ''நீ ஒன்றும் செய்ய வேண்டாம். முதலில் உன் மனத்தை என்னிடம் கொண்டு வா.'' சக்கரவர்த்திக்கு ஒன்றும் விளங்கவில்லை. அவன் கேட்டான், ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' அவர் சொன்னார், ''காலையில் நான்கு மணிக்கு யாரும் இல்லாத போது வா. மேலும், வரும்போது மறவாமல் உன் மனத்தை எடுத்து வாரும்.''

இரவு முழுவதும் சக்கரவர்த்தியால் தூங்க முடியவில்லை. பல தடவைகள் அவன் அந்த யோசனையைக் கைவிட்டான். ''இந்த ஆள் ஒரு கிறுக்கன் போலத் தோன்றுகிறது.'' 'உன் மனத்தை எடுத்துவர மறந்துவிடாதே' என்று அவர் கூறியதன் உள்ளர்த்தம் என்ன? அந்த ஆள் மிகவும் வசீகரமும் கவர்ச்சிகரமான ஆளுமையும் உள்ளவராகத் தெரிந்தார். எனவே அவனால் அந்த சந்திப்பைக் கைவிட முடியவில்லை. ஒரு காந்தத்தால் ஈர்க்கப்பட்டதைப் போல காலை நான்கு மணிக்கு படுக்கையில் இருந்து துள்ளி எழுந்தான். ''என்ன ஆனாலும் ஆகட்டும்.

நான் போகவே வேண்டும். இந்த மனிதரிடம் ஏதாவது விசயம் இருக்கலாம். அவரிடம் ஏதோ இருப்பதாகவே அவரது கண்கள் சொல்கின்றன. கொஞ்சம் கிறுக்கு போல தெரிகிறார் - இருந்தாலும் பரவாயில்லை. என்னதான் நடக்கக்கூடும் என்பதைப் பார்ப்பதற்காக வாவது நான் போயே தீர வேண்டும்.''

எனவே அவன் போனான். போதிதர்மா தன் பெரிய கைத்தடியுடன் உட்கார்ந்து இருந்தார். அவர் கேட்டார் ''வந்து விட்டீரா? வாரும். எங்கே உம் மனம்? அதைக் கொண்டு வந்திருக்கிறீரா இல்லையா?''

சக்கரவர்த்தி சொன்னான், ''நீங்கள் சொல்வது அபத்தமாக இருக்கிறது. நானே இங்கு இருக்கும்போது என் மனமும் இங்கேதானே இருக்கும்? வேறெங்காவது வைத்துவிட்டு வர முடியக்கூடிய ஒரு பொருள் அல்லவே அது. எனக்குள்ளே தான் அது இருக்கிறது.'' உடனே போதிதர்மா சொன்னார், ''அப்படியானால் சரி. ஆக ஒரு விசயம் உறுதியாகிவிட்டது - அதாவது மனம் என்பது உமக்குள்தான் இருக்கிறது.'' சக்கரவர்த்தி சொன்னான், ''ஆமாம், மனம் எனக்குள்ளே தான் இருக்கிறது.'' போதிதர்மர் சொன்னார், ''நல்லது, இப்போது உம் கண்களைமூடி அது எங்கே இருக்கிறது என்பதைக் கண்டுபிடியும். அது இருக்கும் இடத்தை உம்மால் கண்டுபிடிக்க முடிந்தால் உடனடியாக அதை எனக்குச் சுட்டிக்காட்டும்; அதை நான் அமைதிப்படுத்தி வைக்கிறேன்.''

அப்படியே சக்கரவர்த்தியும் தன் கண்களை மூடினான். உள்ளுக்குள் எல்லா இடத்திலும் நோக்கினான். தேடுதேடு எனத் தேடினான். எவ்வளவு அதிகமாய் அவன் தேடினானோ அவ்வளவு அதிகமாய் அங்கே மனத்தைக் காணவில்லை என்பதை அறிந்து கொண்டவனாக ஆனான். மனம் என்பது ஒரு இயக்கம் /செயல்பாடு. இன்ன இடத்தில் இருக்கிறது என நீங்கள் சுட்டிக் காட்ட முடியும் வகையில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருக்கும் பொருள் அல்ல அது. ஆகவே அது ஒரு பொருள் அல்ல என்பதை அவன் உணர்ந்து கொண்ட உடனே அவனுடைய தேடலின் அபத்தம் அவனுக்கே வெட்ட வெளிச்சம் ஆகியது. அது ஒரு பொருள் அல்ல என்றால் அதைக் குறித்து நீங்கள் ஒன்றும் செய்ய முடியாது. அது ஒரு செயல் என்றால் பின் அச் செயலை செய்யாதிரு - அவ்வளவுதான். நடப்பதைப் போன்ற ஒன்றே அது என்றால், நடக்காதே.

அவன் தன் கண்களைத் திறந்தான். போதிதர்மரைப் பார்த்துச் சொன்னான், ''மனம் என்று எதையும் எங்கும் என்னால் காணமுடியவில்லை.'' ''அப்படியானால் அதை நான் அமைதிப்படுத்தி விட்டிருக்கிறேன் என்று ஆகும்'' என்றார் போதிதர்மர். ''ஆகவே நீர்

அமைதி குறைந்து இருப்பதாக உணரும் போதெல்லாம் பேசாமல் உள்ளுக்குள் பாரும். அந்த அமைதியின்மை எங்கே இருக்கிறது என்று கண்டுபிடியும்.'' அப்படிக் காண்பதுவே மனத்தக்கு எதிரானது. ஏனெனில் பார்ப்பது என்பது எண்ணுவது ஆகாது. மேலும் கூர்மையாக நீங்கள் பார்க்கிறபோது உங்களின் ஆற்றல் முழுவதும் ஒரு பார்வையாகவே ஆகிவிடுகிறது. அதே ஆற்றலே சலனமாகவும் எண்ணமாகவும் ஆகிறது.

மனதின் நிறுத்தமே யோகம்.

இது பதஞ்சலியின் வரையறை. மனம் இல்லாத போது நீங்கள் யோகத்தில் இருக்கிறீர்கள். மனம் இருக்கும்போது நீங்கள் யோகத்தில் இல்லை. எனவே எல்லா வித ஆசனங்களையும் நீங்கள் போடலாம். ஆனால் மனம் செயல்பட்டுக்கொண்டே இருந்தால், எதையாவது நீங்கள் எண்ணிக்கொண்டே இருந்தால் நீங்கள் யோகத்தில் இல்லை. யோகம் என்பது மனமற்ற நிலை. மனம் அற்ற நிலையில் உங்களால் இருக்க முடியுமானால், ஆசனம் எதையும் செய்யாவிட்டாலும் நீங்கள் ஒரு சிறந்த யோகியாகவே ஆகி இருக்கிறீர்கள். ஆசனம் எதுவும் போடாமலேயே பலருக்கும் அது நிகழ்ந்திருக்கிறது. வேறு பலருக்கோ பல பிறவிகளாக ஆசனங்களை செய்து வந்திருந்தும் ஒன்றுமே நிகழவில்லை.

எனவே புரிந்து கொள்ள வேண்டிய அடிப்படை விசயம், சிந்தனை என்னும் செயல்பாடு இல்லாதபோது நீங்கள் அங்கு இருக்கிறீர்கள். மனத்தின் செயல்பாடு நிற்கிற போது, எண்ணங்கள் மறைந்திருக்கிறபோது, மேகங்களைப் போன்று இருக்கிற அவை மறைந்துவிட்டிருக்கிற போது, வானத்தைப் போன்றிருக்கிற உங்களின் சீவன் வெளிப்பட்டு நிற்கிறது. அது எப்போதும் அங்கேதான் இருக்கிறது. மேகங்கள்தான் - எண்ணங்கள்தான் - அதை மறைத்திருக்கின்றன.

மனதின் நிறுத்தமே யோகம்.

இன்றைக்கு மேற்கில் ஸென்னுக்கு மிகுந்த மதிப்பு ஏற்பட்டிருக்கிறது. ஸென் என்பது ஜப்பானிய யோக முறை. தியானம் என்னும் சொல்லில் இருந்தே ஸென் என்பது வருகிறது. தியானம் என்னும் சொல்லை சீனாவுக்கு அறிமுகப்படுத்தியவர் போதிதர்மர். தியான் என்னும் சொல் சீனாவில் ஜான் என மாறியது. பின் ச்சான் ஆனது. அந்த சொல் ஜப்பானுக்குப் பயணம் செய்து ஸென் ஆகியது.

மூலச் சொல் தியானமே. தியானம் என்றால் மனம் கடந்த மனமற்ற நிலை. எனவே ஜப்பானில் தரப்படும் ஸென் பயிற்சி முழுவதும் நினைப்பதை நிறுத்துவது எப்படி, மனமற்ற நிலையில் இருப்பது எப்படி,

எதையும் எண்ணாமல் சும்மா இருப்பது எப்படி என்பதற்கான பயிற்சியே தவிர வேறு ஒன்றுமில்லை. முயன்று பாருங்கள்! முயலுங்கள் என நான் கூறும்போது அது முரண்பாடாகத் தோன்றும். ஆனால் அதை சொல்வதற்கு வேறு வழி இல்லை. ஏனெனில் நீங்கள் முயற்சி செய்தால் அந்த முயற்சியே, செய்கையே மனதில் இருந்துதான் வருகிறது. ஒரு ஆசனத்தில் உங்களால் அமர முடியும். ஏதாவது ஒரு செபத்தை, மந்திரத்தை உச்சரிக்க நீங்கள் முயற்சி செய்ய முடியும் - அல்லது எதையும் எண்ணாமல் அமைதியாக அமர்ந்திருக்கவும் நீங்கள் முயலமுடியும். ஆனால் அப்போது எண்ணாதிருப்பது என்பதே ஒரு எண்ணுதலாக ஆகிறது. பின் நீங்கள் ''நான் எண்ணக் கூடாது: எண்ணாதே எண்ணுவதை நிறுத்து'' என்று சொல்லிக்கொண்டே போவீர்கள். ஆனால் இதுவும் எண்ணுதலே.

புரிந்துகொள்ள முயலுங்கள். மனத்தை நிறுத்துதல், மனமற்ற நிலை என பதஞ்சலி கூறும்போது முழுமையான நிறுத்தத்தையே அவர் அர்த்தப்படுத்துகிறார். ராமா - ராமா - ராமா என நீங்கள் ஜபம் செய்ய அவர் விட மாட்டார். இது நிறுத்துவதே அல்ல என்பார் அவர். மனத்தை நீங்கள் பயன்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். ''அப்படியே நிறுத்து!'' என்பார் அவர். ஆனால்,''எப்படி? அப்படியே நிறுத்து என்றால் எப்படி நிறுத்துவது?'' என்று நீங்கள் கேட்பீர்கள். மனம் தொடர்கிறது. நீங்கள் அமர்ந்திருந்தாலும் மனம் தொடர்கிறது. நீங்கள் செயல்படாதிருந்தாலும் அது செயல்பட்டுக்கொண்டே போகிறது.

வெறுமனே பார் என்கிறார் பதஞ்சலி. மனத்தைப் போக விடுங்கள். அது எதைச் செய்துகொண்டிருந்தாலும் அதை அப்படியே விட்டுவிடுங்கள். நீங்கள் வெறுமனே பாருங்கள். குறுக்கிடாதீர்கள். ஒரு சாட்சியாக மாத்திரம் இருங்கள். சம்பந்தப்படாத பார்வையாளராக மட்டுமே இருங்கள். மனம் உங்களுடையது அல்ல என்பதுபோல் இருங்கள். அது உங்களின் விவகாரம் அல்ல, உங்களின் பிரச்சனை அல்ல என்பது போல் இருங்கள்! கண்டு கொள்ளாதீர்கள்! சும்மா பாருங்கள். மனத்தை அதன் போக்கில் ஓடவிடுங்கள். அதன் கடந்தகாலத்து மிச்ச சொச்ச உந்து சக்தியாலேயே தொடர்ந்து அது ஓடிக் கொண்டிருக்கிறது. ஏனெனில் எப்போதும் அது ஓடிக் கொண்டிருப்பதற்கே நீங்கள் உதவி இருக்கிறீர்கள். செயல்பாடானது தன் சொந்த உந்துவிசையைக் கொண்டிருக்கிறது. அதனால் அது ஓடிக் கொண்டிருக்கிறது. நீங்கள் ஒத்துழைக்காமல் இருந்தாலே போதும். மனத்தை அதன் போக்கில் ஓடும்படி விட்டுவிட்டு நீங்கள் வெறுமனே பாருங்கள்.

பலப்பல பிறவிகளாக - கோடிக்கணக்கான பிறவிகளாகக்கூட இருக்கலாம் - நீங்கள் அதனுடன் ஒத்துழைத்திருக்கிறீர்கள். நீங்கள் அதற்கு உதவி இருக்கிறீர்கள். உங்களின் ஆற்றலை அதற்கு நீங்கள் வழங்கி இருக்கிறீர்கள். எனவே கொஞ்ச காலத்துக்கு அது ஓடும். நீங்கள் ஒத்துழைக்காமல் இருந்தாலே போதும், கருத்தின்றி பார்த்துக் கொண்டு இருந்தாலே போதும் (இதற்கு புத்தர் பயன்படுத்தும் சொல் அலட்சியம், **உபேக்சா:** என்பது), எவ்வித அக்கறையும் இன்றி கவனித்துக் கொண்டிருந்தாலே போதும், சும்மா பார்த்துக்கொண்டிருந்தாலே போதும், எவ்வகையிலும் எதையும் செய்யாதிருந்தாலே போதும்; மனமானது கொஞ்ச காலத்துக்கு ஓடி தன் பழைய விசை தீர்ந்ததும் தானே நின்றுவிடும். ஆற்றல் வழிந்தோடியதும் மனம் நின்றுவிடும். மனம் நின்றதுமே நீங்கள் யோகத்தில் இருக்கிறீர்கள். ஒழுங்கை நீங்கள் அடைந்து விடுகிறீர்கள். இதுவே இலக்கணம்: மனத்தின் ஒடுக்கமே யோகம்.

**அந்நிலையில் சாட்சி தன்னில் நிலைபெறுகிறது.**

மனம் நின்றதும் /ஒடுங்கியதும் உங்களின் சாட்சித் தன்மையில் நீங்கள் நிலைபெறுகிறீர்கள். அப்போது நீங்கள் ஒரு சாட்சியாக, ஒரு பார்ப்பவராக (திரஷ்டராக) ஆகியிருக்கிறீர்கள். அப்போது நீங்கள் ஒரு செய்பவராக இருப்பதில்லை. அப்போது நீங்கள் ஒரு சிந்திப்பவராக இருப்பதில்லை. அப்போது நீங்கள் வெறும் இருத்தலாக, சுத்த சீவனாக, பரிசுத்த சீவனாக இருக்கிறீர்கள். அப்போது சாட்சியானது தன்னில்தான் நிலைபெறுகிறது.

**மற்ற நிலைகளில் மனத்தின் மாறுபாடுகளுடன் தன்னை அடையாளப்படுத்திக் கொள்கிறது.**

சாட்சியிருக்கும் நிலை தவிர மற்ற அனைத்து நிலைகளிலும் நீங்கள் உங்களை மனதுடன் அடையாளப்படுத்தி இருக்கிறீர்கள். எண்ணங்களின் போக்குடன் ஒன்றியவராக நீங்கள் ஆகிறீர்கள். மேகங்களுடன் உங்களை ஒன்றுபடுத்திக் கொள்கிறீர்கள்: சில நேரங்களில் வெண்மேகத்துடனும் சில நேரங்களில் கருமேகத்துடனும் உங்களை ஒருமைப்படுத்திக் கொள்கிறீர்கள். சில நேரங்களில் மழை மேகத்துடனும் சில நேரங்களில் வெறும் மேகத்துடனும் உங்களை ஒருமைப்படுத்திக் காண்கிறீர்கள். ஆனால் எப்படியும் எண்ணத்துடன் நீங்கள் ஒன்றாக ஆகிறீர்கள்; மேகத்துடன் நீங்கள் ஒன்றாக ஆகிறீர்கள். இதனால் உங்களின் வானத் தூய்மையை - உங்களின் வெட்டவெளித் தூய்மையை நீங்கள்

தவறவிடுகிறீர்கள்; மேகமூட்டம் உள்ளவர்களாக ஆகிறீர்கள். இந்த மூட்டமானது, அதனுடன் உங்களை நீங்கள் அடையாளப்படுத்திக் கொள்வதால், அதனுடன் நீங்கள் ஒன்றுபடுவதால் நிகழ்கிறது.

ஒரு எண்ணம் வருகிறது. நீங்கள் பசியாக இருக்கிறீர்கள். அந்த எண்ணம் மனதில் பளிச்சிடுகிறது. பசியாக இருக்கிறது, வயிறு பசியை உணர்கிறது என்னும் எண்ணம் மட்டுமே இருக்கிறது. உடனடியாக அதனுடன் உங்களை ஒருமைப்படுத்திக் கொள்கிறீர்கள். ''எனக்குப் பசிக்கிறது'' என்கிறீர்கள். பசி என்னும் ஒரே எண்ணமே மனம் முழுவதிலும் நிரம்பி இருக்கிறது. அதனுடன் உங்களை ஒருமைப்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். எனவே ''நான் பசியாக இருக்கிறேன்'' என்கிறீர்கள். இதுதான் அடையாளப்படுத்திக் கொள்ளுதல் என்பது.

புத்தரும் பசியை உணர்கிறார். பதஞ்சலிக்கும் பசி உணர்வு ஏற்படுகிறது. ஆனால் பதஞ்சலி ஒருபோதும் ''நான் பசியாக இருக்கிறேன் எனக்குப் பசிக்கிறது'' என்று சொல்ல மாட்டார். ''உடம்புக்குப் பசிக்கிறது'' என்றே சொல்வார். ''என் வயிறு பசியை உணர்கிறது'' என்பார். ''பசி அங்கே இருக்கிறது. நான் ஒரு சாட்சியாக இருக்கிறேன். அந்த எண்ணத்துக்கு நான் சாட்சியாக இருக்கிறேன். 'எனக்குப் பசிக்கிறது' என்னும் எண்ணத்தை வயிறானது மூளையில் பளிச்சிட வைத்திருக்கிறது.'' வயிற்றுக்குப் பசிக்கிறது. பதஞ்சலியோ அதற்கு ஒரு சாட்சியாக இருக்கிறார். நீங்களோ அதனுடன் உங்களை அடையாளப் படுத்திக் கொள்கிறீர்கள்; அந்த எண்ணத்துடன் ஒன்றுபட்டவராகிறீர்கள்.

**அந்நிலையில் சாட்சி தன்னில் நிலைபெறுகிறது.**

**மற்ற நிலைகளில் மனத்தின் மாறுபாடுகளுடன் தன்னை அடையாளப்படுத்திக் கொள்கிறது.**

இதுவே வரையறை:

**மனதின் நிறுத்தமே யோகம்.**

மனம் நின்றதும் சாட்சியாய் இருக்கும் உங்களின் சுயத்தில் நீங்கள் நிலைபெறுகிறீர்கள். இதைத் தவிர மற்ற நிலைகளில் எல்லாம் அடையாளப்படுத்திக்கொள்ளுதல் சேர்ந்தே சம்சாரா ஆக - உலகமாக அமைகின்றன. அடையாளப்படுத்தல்களுடன் நீங்கள் இருந்தால் நீங்கள் உலகத்தில் இருக்கிறீர்கள்; அவலத்தில் இருக்கிறீர்கள். அடையாளப் படுத்தல்களை நீங்கள் கடந்துவிட்டால் நீங்கள் விடுதலை பெற்றவராக இருக்கிறீர்கள்; ஒரு சித்தராக ஆகி இருக்கிறீர்கள்; நிர்வாணாவில்

இருக்கிறீர்கள். இந்த அவல உலகைக்கடந்து ஆனந்த உலகில் பிரவேசித்திருக்கிறீர்கள்.

ஆதலால் அந்த உலகமும் இங்கேயே இப்போதே இருக்கிறது. நிகழ்காலத்திலேயே நிலவுகிறது! ஒரேஒரு கணம்கூட நீங்கள் தாமதிக்க - காத்திருக்க தேவையில்லை. மனத்தின் ஒரு சாட்சியாக மட்டும் ஆகிவிட்டால் நீங்கள் பிரவேசித்து விடுகிறீர்கள். மனத்துடன் உங்களை நீங்கள் ஒன்றுபடுத்திக் கொண்டாலோ இழந்து விடுகிறீர்கள். இதுவே அடிப்படையான வரையறை ஆகும்.

இதுவரை சொல்லப்பட்ட ஒவ்வொன்றையும் நினைவில் கொள்ளுங்கள். ஏனெனில் இனிவரும் பிற சூத்திரங்களில், என்ன செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும் போன்ற விவரங்களுக்குள் நாம் புக இருக்கிறோம்; ஆனால் இதுவே அடித்தளம் என்பதை எப்போதும் மனத்தில் இருத்துங்கள்.

மனமற்ற நிலையை அடைந்தாக வேண்டும்: அதுவே இலக்கு.

*முதல் கேள்வி:*

***முழுமையான விரக்தி, நிராசை மற்றும் நம்பிக்கை மனநிலையை யோகத்தின் முதல் படி என்று நேற்று இரவு நீங்கள் சொன்னீர்கள். இது யோகத்துக்கு ஒரு அவ நம்பிக்கைவாதத் தோற்றத்தைத் தருகிறது. யோகப் பாதையில் பயணம் தொடங்குவதற்கு இந்த அவநம்பிக்கை வாத மனோநிலை உண்மையிலேயே அவசியமானது தானா? ஒரு நம்பிக்கைவாதியாலும் யோகப்பாதையில் பயணம் தொடங்க முடியாதா?***

இரண்டும் அல்ல. யோகம் அவநம்பிக்கைவாத மனோநிலை கொண்டதும் அல்ல, நம்பிக்கைவாத மனோநிலை கொண்டதும் அல்ல. ஏனெனில் அவநம்பிக்கைவாதம், நம்பிக்கைவாதம் இரண்டுமே ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள்தான். அவநம்பிக்கைவாதி என்பவன் கடந்த காலத்தில் நம்பிக்கைவாதியாக இருந்தவன்தான். நம்பிக்கைவாதி என்பவன் இனி வரும்காலத்தில் அவநம்பிக்கைவாதியாக ஆகப்போகிறவன்தான். எல்லா நம்பிக்கைவாதமும் அவநம்பிக்கை வாதத்துக்கே இட்டுச் செல்கிறது. ஏனென்றால் ஒவ்வொரு நம்பிக்கையும் நம்பிக்கையற்ற நிலைக்கே இட்டுச் செல்கிறது.

இன்னமும் நீங்கள் நம்பிக்கைகொண்டு இருந்தால் யோகம் உங்களுக்குக்கிட்டாது. நம்பிக்கையில் ஆசை இருக்கிறது. எதிர்பார்ப்பு இருக்கிறது. சம்சாரம் இருக்கிறது. உலகம் இருக்கிறது. ஆசையே உங்களின் உலகம். எதிர்பார்ப்பே உங்களின் அடிமைத்தனம். ஏனெனில் நம்பிக்கை என்பது நீங்கள் நிகழ்காலத்தில் இருக்க உங்களை அனுமதிக்காது. எதிர்காலத்தை நோக்கி உங்களை அது உந்திக்கொண்டே இருக்கும். நீங்கள் மையம் கொண்டிருக்க உங்களை அது விடாது. அது உங்களை இங்கும் அங்கும் அலைக்கழிக்கும். ஒரு ஓய்வான கணத்தில் - ஒரு நிலைப்புத் தன்மையில் நீங்கள் தங்கி இருக்க அது உங்களை அனுமதிக்காது.

எனவே முற்றிலுமாக நம்பிக்கை அற்றுவிட்ட நிலை என்று நான் சொல்லும்போது, நம்பியது அனைத்தும் பொய்த்துப்போய் விட்டது என்பது மட்டுமல்ல, நம்பிக்கை இன்மையும் என்னும் நிலைபாடும் பயனற்றுப் போய்விட்டது என்பதையும் சேர்த்தே நான் பொருள் படுத்துகிறேன். அப்போதுதான் அது முற்றிலுமாக நம்பிக்கையற்றுப் போய்விட்டிருக்கிற நிலை ஆக இருக்கிறது. முற்றிலும் நம்பிக்கை அற்றுவிட்ட நிலை என்றால் நம்பிக்கையற்ற மனநிலை என்பதும்கூட அதில் இருக்காது. ஏனெனில் நம்பிக்கையின்மையை நீங்கள் உணரும்

போது அதனடியில் நுட்பமான ஒரு நம்பிக்கை /எதிர்பார்ப்பு இருக்கிறது. இல்லாவிட்டால் ஏன் நீங்கள் நம்பிக்கை இல்லாதவராக உணர வேண்டும்? நம்பிக்கை இருக்கவே செய்கிறது. இன்னும் அதை நீங்கள் தொற்றிக்கொண்டே இருக்கிறீர்கள். எனவேதான் நம்பிக்கையின்மை என்பதும் இருக்கிறது.

முற்றிலுமாக நம்பிக்கை அற்றுவிட்ட நிலை என்றால் இனி உங்களிடம் எந்த நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் மிச்சம் கிடையாது. ஆகவே நம்பிக்கை என்பது இல்லாத போது நம்பிக்கையின்மை என்பதும் இருக்க முடியாது. மொத்த விவகாரத்தையும் அப்படியே மொத்தமாகக் கைவிட்டு விட்டிருக்கிறீர்கள். இரண்டு அம்சங்களையும் தூர எறிந்து விட்டு இருக்கிறீர்கள். நாணயத்தை முழுமையாக துறந்துவிட்டிருக்கி றீர்கள். இந்த மனநிலையில்தான் நீங்கள் யோக மார்க்கத்தில் நுழைய முடியும்; அதற்கு முன் ஒருபோதும் இல்லை. அதுவரை அதற்குச் சாத்தியமே இல்லை. நம்புவது என்பது யோகத்துக்கு எதிரானது.

யோகம் அவநம்பிக்கைத்தனமானது அல்ல. நீங்கள் வேண்டு மானால் நம்பிக்கைத் தனமாகவோ அவநம்பிக்கைத்தனமாகவோ இருக்கலாம். யோகமோ இரண்டு தன்மையதும் அல்ல. நீங்கள் அவ நம்பிக்கைத் தனமாக இருந்தால் யோகம் என்னும் பாதையில் உங்களால் பிரவேசிக்க முடியாது. ஏனென்றால் ஒரு அவநம்பிக்கை வாதியானவன் தன் அவலங்களையே பிடித்துக்கொண்டு தொங்குகிறான். தன் அவ லங்கள் மறைய அவன் அனுமதிக்க மாட்டான். நம்பிக்கை வாதியோ தன் நம்பிக்கைகளை - ஆசைகளைப் பற்றிக்கொண்டிருக்கிறான். அவநம் பிக்கைவாதியோ தன் துன்பங்களை, தன் நம்பிக்கையின் மையைத் தொற்றிக் கொண்டிருக்கிறான். அந்த நம்பிக்கையின்மையே அவனை விட்டுப் பிரியாத துணையாக ஆகி இருக்கிறது. இந்த இரண்டு வித மாகவும் இராதவருக்கே யோகம் ஏற்றது. நம்பிக்கையின்றிப் பார்ப்ப தும்கூட பயன்படவில்லை - தேவையில்லை என்னும் அளவுக்கு முற்றிலு மாக நம்பிக்கை அற்றுப் போயிருக்கிறவருக்கே யோகம் உரியது.

உடன்பாடானதுடன் உங்களின் அடியாழத்துக்குள் எங்கோ ஓரிடத்தில் தொடர்ந்தும் நீங்கள் தொற்றிக் கொண்டிருந்தால்தான் அதற்கு முரண்பாடானதையும் உங்களால் உணரமுடியும். நம்பிக்கையை நீங்கள் தொற்றிக்கொண்டு இருந்தால் நம்பிக்கை இன்மையையும் நீங்கள் உணர முடியும். எதிர்பார்ப்பை நீங்கள் தொற்றிக்கொண்டிருந்தால் ஏமாற்றத்தை யும் நீங்கள் உணர முடியும். எதையும் எதிர்பார்ப்பதற்கு எந்த வாய்ப்பும் இல்லை என்பதை நீங்கள் உள்ளபடி உணர வருவீர்களானால் பின் நிராசை எங்கிருந்து வரும்? எதையும் எதிர்பார்க்க எந்த ஒரு சாத்தியமும் இல்லை, எதையும் நம்ப எந்த ஒரு சாத்தியமும் இல்லை என்னும்

இவ்வியல்பே இயற்கையின் இயல்பாக இருக்கிறது. இதுவே ஒரு நிச்சய உணர்வாக ஆகிறபோது பின் எவ்வாறு நீங்கள் நம்பிக்கை யின்மையை உணரமுடியும்? அப்போது இரண்டுமே மறைந்து விடுகின்றன.

இப்போது யோக ஒழுங்குமுறை என்கிறார் பதஞ்சலி. இரண்டு தன்மையிலும் நீங்கள் இராத போது மட்டும் அந்த ''இப்போது'' என்பது நிகழும். அவநம்பிக்கைவாத மனோபாவங்கள், நம்பிக்கைவாத மனோபாவங்கள் ஆகிய இரண்டுமே நோய் வாய்ப்பட்டவையே. ஆனால் நம்பிக்கைவாதத்தின் சார்பில் பேசிக்கொண்டே போகும் போதகர்கள் இருக்கிறார்கள். குறிப்பாக அமெரிக்க கிறித்தவ மதபோதகர்கள். இவர்கள் எதிர்பார்ப்பு, நன்னம்பிக்கை, வருங்காலம், விண்ணுலகம் என்கிற ரீதியில் பேசிக்கொண்டே போகிறார்கள். பதஞ்சலியின் பார்வையில் இது முற்றிலும் சிறுபிள்ளைத்தனமானது, முதிர்ச்சியற்றது. ஏனெனில் ஒரு புது நோயையே நீங்கள் தந்து கொண்டிருக்கிறீர்கள். பழைய நோயின் இடத்தில் ஒரு புதிய நோயை நீங்கள் பிரதியிட்டுக்கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் மகிழ்ச்சியின்றி இருக்கிறீர்கள். எப்படியாவது மகிழ்ச்சியைப் பெற வேண்டும் எனத் தேடிக் கொண்டிருக்கிறீர்கள். எனவே இதுதான் உங்களை மகிழ்ச்சிக்கு இட்டுச் செல்லும் பாதை என்று உங்களுக்கு உறுதி வழங்குவது யாராக இருந்தாலும் அந்தப் பாதையை நீங்கள் பின்பற்றுகிறீர்கள். அவர் உங்களுக்கு நம்பிக்கை வழங்குகிறார். ஆனால் நீங்கள் இந்தளவுக்கு அவலமாக உணர்வதற்குக் காரணமே உங்களின் கடந்தகால நம்பிக்கைகள்தானே. அவரோ மறுபடியும் ஒரு நம்பிக்கையை உங்களுக்கு வழங்குவதன்மூலம் வருங்காலத்திலும் உங்களுக்கு ஒரு நரகத்தையே உருவாக்கிக் கொண்டிருக்கிறார்.

மிகவும் வளர்ச்சிபெற்ற மனிதர்களாக, அதிக முதிர்ச்சி அடைந்த மக்களாக நீங்கள் இருக்க வேண்டும் என யோகம் விரும்புகிறது. வருங்காலத்திடமிருந்து எதையும் எதிர்பார்க்க எந்த வாய்ப்பும் இல்லை, வருங்காலத்திலாவது ஏதாவது நிறைவைப் பெறமுடியும் என்பதற்கு எந்த வாய்ப்பும் இல்லை என்று யோகம் கூறுகிறது. வருங்காலத்தில் உங்களுக்குக் கிடைப்பதற்காக காத்துக்கொண்டிருக்கும் விண்ணுலகம் எதுவும் இல்லை. அப்படியே, கிறிஸ்துமஸ் பரிசுகளுடன் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்க கடவுள் யாரும் இல்லை. உங்களுக்காக யாரும் காத்துக் கொண்டிருக்கவில்லை. எனவே எதிர்காலத்தின்மீது பேராசை - பெரிய நம்பிக்கை வைத்துக்கொண்டிருக்காதீர்கள்.

மேலும் வருங்காலத்தில் ஏதோ ஒரு கட்டத்தில் நிகழப் போவது என்று எதுவும் இல்லை என்பதை நீங்கள் தெளிவாக உணர்ந்து கொள்ளும்போது, நீங்கள் போவதற்கு வேறு இடம் ஏதும் இல்லை. அந்நிலையில் நீங்கள் இங்கேயே இப்போதே விழிப்பாக ஆவீர்கள். அதன்பின் நடுநடுங்குவதற்கு எந்தக் காரணமும் இல்லை. அதன்பின் ஒரு நிலைப்புத் தன்மை உங்களில் ஏற்படுகிறது. திடீரென நீங்கள் ஒரு ஆழமான ஓய்வில் இருக்கிறீர்கள். நீங்கள் எங்கும் போக முடியாது. நீங்கள் வீட்டில் இருக்கிறீர்கள். சலனம் நின்றுவிடுகிறது: ஓய்வின்மை மறைகிறது. இதுவே யோகத்தில் நுழைவதற்கான நேரம்.

பதஞ்சலி உங்களுக்கு எந்த நம்பிக்கையையும் வழங்கமாட்டார். உங்களை நீங்கள் மதிப்பதைவிடவும் அதிகமாக உங்களை அவர் மதிக்கிறார். நீங்கள் வளர்ந்துவிட்டீர்கள். எனவே இனி பொம்மை உங்களுக்கு உதவாது என்று அவர் நினைக்கிறார். உண்மை நிலவரத்தைக் குறித்து விழிப்பாயிருப்பது மேலானது. ஆனால் ''முற்றாக நம்பிக்கை இழந்து விட்ட நிலை''என்று நான் சொன்ன உடனேயே'' இது அவநம்பிக்கைத் தனமாக தோன்றுகிறது'' என்று உங்களின் மனம் சொல்லும். ஏனெனில் நம்பிக்கையின் வாயிலாகவே உங்கள் மனம் உயிர் பிழைக்கிறது. ஆசைகளையும் எதிர்பார்ப்பு களையுமே உங்கள் மனம் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறது.

நிகழ்காலத்தில் - இந்த நிமிசத்தில் எவ்வளவு அவலமான நிலைமையில் நீங்கள் இருக்கிறீர்கள் என்றால்; நம்பிக்கை கொள்ள எதுவும் இல்லை என்றால் நீங்கள் தற்கொலைதான் செய்துகொள்வீர்கள். பதஞ்சலி கூறுவது உண்மையிலேயே சரிதான் என்றால் உங்களுக்கு என்ன நேரிடும்? நம்பிக்கை இல்லை எனில், வருங்காலம் இல்லை எனில் உங்களின் நிகழ் காலத்துக்கே திரும்பவும் நீங்கள் தள்ளிவிடப்படுவீர்கள். அப்படியானால் நீங்கள் தற்கொலைதான் செய்துகொள்வீர்கள். ஏனெனில் அப்போது வாழ்வதற்கு எதுவும் இருப்பதில்லை. என்றோ எங்கோ நிகழக்கூடிய ஒன்றுக்காக நீங்கள் உயிர்பிழைத்திருக்கிறீர்கள். அதுவோ நிகழப் போவதில்லை. ஆனால் அது நிகழலாம் என்னும் நினைப்பு, நீங்கள் உயிரோடிருக்க உங்களுக்கு உதவுகிறது.

எனவேதான் நான் சொல்கிறேன்: தற்கொலையும் அர்த்தமுள்ள ஒரு செய்கையாக ஆகி இருக்கிற ஒரு கட்டத்துக்கு நீங்கள் வந்துவிட்டிருக்கிற போது, வாழ்க்கை அதன் அர்த்தம் அனைத்தையும் இழந்திருக்கிற ஒரு கட்டத்துக்கு நீங்கள் வந்துவிட்டிருக்கிற போது, உங்களை நீங்களே கொன்று கொள்ள முடியக்கூடிய ஒரு கட்டத்துக்கு நீங்கள்

வந்துவிட்டிருக்கிற போது; அந்தக் கட்டத்தில்தான் யோகம் சாத்தியமானதாக ஆகிறது. ஏனெனில் வாழ்க்கை என்பது முற்றிலும் வீணானது - அறவே பயனற்றது என்பதுபற்றிய மிகவும் உக்கிரமான அனுபவம் உங்களுக்கு ஏற்படாதவரை நீங்கள் தயாராக மாட்டீர்கள். தற்கொலையா யோக அனுசரிப்பா என்னும் இரண்டில், தற்கொலை செய்துகொள்வதா உங்களின் சீவனை மிக முழுமையாக மாற்றிக் கொள்வதா என்னும் இரண்டில் ஒன்றைத்தவிர வேறு வழி இல்லை என்பதை நீங்களே உணரும்போது மட்டுமே உங்களை நீங்களே அடியோடு மாற்றிக்கொள்ள ஆயத்தமாயிருப்பீர்கள். இரண்டு மாற்றுகள் மட்டுமே மிச்சமாகும்போது மட்டுமே யோகம் தேர்ந்துகொள்ளப் படுகிறது; ஒருபோதும் அதற்கு முன் அல்ல. ஆனால் யோகம் அவநம்பிக்கைத்தனமானது அல்ல. நீங்கள் நம்பிக்கைத்தனமாக இருந்தால் யோகம் உங்கள் பார்வைக்கு அவநம்பிக்கைத்தனமாகவே தோன்றும். அப்படித் தோன்றுவது உங்களால்தான்.

வாழ்க்கை துன்பமயம், துயரமயம் என்கிறார் புத்தர். இதனால் மேற்கில் புத்தரை அவநம்பிக்கைத்தனத்தின் சிகரம் என எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். எனவே மேலைத் தத்துவ வாதிகள் புத்தரைப்பற்றி அவர் ஒரு அவநம்பிக்கைவாதி என்றே விமர்சனம் செய்திருக்கிறார்கள். ஓரளவு விசயமறிந்தவர் என நாம் எதிர்பார்க்க முடிகிறவர்களில் ஒருவரான ஆல்பர்ட் சுவைட்சர் கூட இவ்விசயத்தில் குழப்பத்திலேயே இருக்கிறார். கிழக்கு முழுவதுமே அவநம்பிக்கைத்தன மானது என அவர் நினைக்கிறார். அவரைப் பொறுத்தவரை இது மிகப்பெரிய ஒரு விமர்சனம் ஆகும். கிழக்கு முழுவதுமே - புத்தர், பதஞ்சலி, மகாவீரர், லாவோ - சு யாவருமே அவரைப் பொறுத்தவரை அவநம்பிக்கை வாதிகளே. அவருக்கு அப்படித் தோன்றுகிறார்கள்! உங்களின் வாழ்க்கை அர்த்தமற்றது என்று அவர்கள் சொன்னதால் அப்படித் தெரிகிறார்கள். வாழ்க்கை அர்த்தமற்றது என அவர்கள் சொல்லவில்லை - வாழ்க்கை என்பதாக நீங்கள் அறிந்திருப்பது அர்த்தமற்றது என்றே அவர்கள் சொல்கிறார்கள். இந்த வாழ்க்கை. முற்றிலும் அதை நீங்கள் கடந்து செல்ல முடியாது. அதையே நீங்கள் தொற்றிக் கொண்டிருப்பீர்கள்.

மேலும் இந்த வாழ்க்கையை - இந்த வாழ்வு முறையைக் கடந்து நீங்கள் செல்லாத வரை ஆனந்தம் என்றால் என்ன என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள். ஆனால் புத்தரோ பதஞ்சலியோ ஆனந்தத்தைப் பற்றி அதிகமாக ஒன்றும் பேசுவதில்லை. உங்கள்மேல் அவர்கள் கொண்டுள்ள ஆழமான கருணைதான் அதற்குக் காரணம். ஆனந்தத்தைக் குறித்து

அவர்கள் பேச ஆரம்பித்தால், நீங்கள் மறுபடியும் ஒரு நம்பிக்கையை உருவாக்குகிறீர்கள். குணப்படுத்தவே முடியாதவர்களாய் நீங்கள் இருக்கிறீர்கள். மறுபடியும் ஒரு நம்பிக்கையை நீங்கள் உருவாக்கி விடுகிறீர்கள். ''அப்படியானால் நல்லது! இனி இந்த வாழ்க்கை முறையை நாம் விட்டுவிட முடியும். இதைவிடவும் அதிக அமோகமான ஒரு வாழ்க்கை, அதிகச் செழிப்பான ஒரு வாழ்க்கை சாத்தியம் என்றால் நம் ஆசைகளை நாம் விட்டுவிட முடியும். உலக ஆசைகளைத் துறப்பதன்மூலம், இன்னும் ஆழமான ஆசையாகிய அறுதி இன்பத்தை, ஆனந்த சிகரத்தை அடையும் பேராசை சாத்யமாகுமெனில் இந்த சாதாரண ஆசைகளை நாம் விட்டுவிடலாம். ஆனால் ஒரு பெரிய ஆசைக்காக மட்டுமே இவற்றை நாம் விடமுடியும்'' என்று நீங்கள் சொல்கிறீர்கள்.

அப்படியானால் நீங்கள் எங்கே விட்டிருக்கிறீர்கள்? நீங்கள் விட்டிருக்கவே இல்லை. பழைய ஆசைகளுக்குப் பதிலாக ஒரு புதிய ஆசையை மாற்று ஏற்பாடு மட்டுமே செய்கிறீர்கள். ஆயின் பழைய ஆசையை புதிய ஆசை அதிக ஆபத்தானதாகவே இருக்கும். ஏனெனில் பழைய ஆசையில் ஏற்கனவே நீங்கள் சலிப்பு அடைந்து விட்டிருக் கிறீர்கள். புதியதன்மீது சலிப்பு தட்ட இன்னும் சில பிறவிகளாவது உங்களுக்கு ஆகலாம்: கடவுள் என்பது வீண் - பயனற்றது என்று நீங்கள் சொல்ல முடிகிறது; சுவர்க்கம் என்பது மடத்தனமானது என்று நீங்கள் சொல்ல முடிகிற; வருங்காலம் அனைத்துமே அபத்தமானது என்று நீங்கள் சொல்ல முடிகிற ஒரு கட்டத்தை நீங்கள் எட்டுவதற்கு சில பிறவிகளாவது உங்களுக்கு ஆகலாம்.

உலகியல் ஆசைகளைப் பற்றிய பிரச்சனை அல்ல இது. ஆசை என்ற முழுமையையும் பற்றிய விசாரணை இது. ஆசைப்படுவது என்பதே மறைந்தாக வேண்டும். அதன்பிறகுமட்டுமே நீங்கள் தயாராக ஆகிறீர்கள். அதன் பிறகு மட்டுமே கதவு திறக்கிறது. அதன்பிறகே நீங்களும் அறியாததற்குள் பிரவேசிக்க முடியும். எனவேதான் பதஞ்சலியின் முதல் சூத்திரம் ''இப்போது யோக ஒழுங்குமுறை'' என்கிறது.

**இரண்டாவது கேள்வி:**

**யோகம் ஒரு நாத்திகக் கோட்பாடு என்று சொல்கிறார்கள். இதை நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களா?**

மறுபடியும், யோகம் இரண்டுமல்ல. அது கலப்பற்ற ஒரு அறிவியலே. அது ஆத்திகமானதோ நாத்திகமானதோ அல்ல. பதஞ்சலி

உண்மையிலேயே உன்னதமானவராக இருக்கிறார். மனிதருள் அவர் ஒரு அற்புதம். ஒருபோதும் அவர் கடவுளைப்பற்றி பேசுவதில்லை. ஒருதடவை மட்டும் கடவுளைப்பற்றி அவர் குறிப்பிட்டுள்ளார். அப்போதும் அறுதி நிலையை அடைவதற்கான பல முறைகளில் ஒருமுறையாக மட்டுமே அதை அவர் குறிப்பிடுகிறார். கடவுள் நம்பிக்கை என்பது அறுதி நிலையை அடைவதற்குரிய ஒரு வழி மட்டுமே. கடவுள் இல்லை. கடவுள் என்பதை நம்புவது ஒரு உபாயம் மட்டும்தான். ஏனெனில் கடவுள் என்பதை நம்புவதன்மூலமாக பிரார்த்தனை சாத்தியமாகிறது. கடவுள் என்பதில் நம்பிக்கை வைப்பதன் வாயிலாக சரணாகதி சாத்தியமாகிறது. சரணாகதி மற்றும் பிரார்த்தனை மன நிலைக்கே அது முக்கியத்துவம்; கடவுளுக்கு அல்ல.

பதஞ்சலி உண்மையாகவே நம்பமுடியாதவராக இருக்கிறார்! கடவுள் என்பது - கடவுள் நம்பிக்கை என்பது, கடவுள் தத்துவம் என்பது - உண்மையை அடைவத்தற்கான பல வழி முறைகளில் ஒரு வழி முறை என்றார் அவர். ஈஸ்வர ப்ரணிதான் அதாவது கடவுள் நம்பிக்கை /பக்தி என்பது ஒரு வழி மட்டுமே. ஆனால் அது அத்தியாவசியமானதல்ல. வேறு ஏதாவது ஒரு வழியைக்கூட நீங்கள் தேர்ந்துகொள்ள முடியும். கடவுளில் நம்பிக்கை வைக்காமலேதான் அந்த அறுதி உண்மையை புத்தர் அடைகிறார். கடவுள் தேவைப்படாத ஒரு வித்தியாசமான பாதையை அவர் தேர்ந்தெடுத்தார்.

நீங்கள் என் வீட்டுக்கு வந்திருக்கிறீர்கள். ஒரு குறிப்பிட்ட வீதிவழியாக நீங்கள் கடந்து வந்திருக்கிறீர்கள். அந்த வீதி அல்ல இலக்கு. அது ஒரு சாதனம் மட்டுமே. வேறொரு வீதி வழியாகவும் அதே வீட்டை நீங்கள் அடைந்திருக்க முடியும். வேறு மக்கள் வேறு வீதிகளின் வழியாகச் சென்று சேர்ந்திருக்கிறார்கள். நீங்கள் செல்லும் பாதையில் பசுமையான மரங்கள், பெரிய மரங்கள் இருக்கலாம். மற்ற பாதைகளில் அவை இல்லாதிருக்கலாம். எனவே கடவுள் என்பது ஒரு பாதை மட்டுமே. இந்தப் பாகுபாட்டை நினைவில் கொள்ளுங்கள். கடவுள் ஒரு இலக்கு அல்ல. இலக்கை அடையும் பல பாதைகளில் ஒரு பாதையே கடவுள்.

பதஞ்சலி எதையும் மறுப்பதில்லை; எதையும் கற்பித்துக் கொள்வதில்லை. முற்றிலும் அறிவியல் ரீதியானவராக இருக்கிறார். புத்தர் ஒருபோதும் கடவுளை நம்பியதில்லை. அப்படி இருக்க அறுதி உண்மையை புத்தர் அடைய முடிந்தது என்பதை யோசித்துப் பார்ப்பதே கிறித்தவர்களுக்கு கடினமானதாய் உள்ளது. மகாவீரர் ஒருபோதும்

கடவுளை நம்பியதில்லை. எனவே மகாவீரர் நிர்வாணத்தை அடைய முடிந்தது என்பதை நம்புவது இந்துக்களுக்கு கடினமானதாக உள்ளது.

கீழை மதங்களைப்பற்றி மேலை சிந்தனையாளர்களுக்குத் தெரிய வருவதற்கு முன்பு, மதம் என்றால் கடவுளை மையப்படுத்துவது என்றே எப்போதும் அவர்கள் வரையறுத்து வந்தார்கள். கீழை சிந்தனா முறையை அவர்கள் எதிர்கொண்ட போது; உண்மையை அடைவதற்கான கடவுளற்ற பாதையும் மரபாக இங்கு இருந்து வந்திருக்கிறது என்பதை அவர்கள் அறிந்து கொண்டபோது அவர்கள் அதிர்ச்சி அடைந்தார்கள்: 'ஏனெனில் அது இயலாத ஒன்றாயிற்றே'.

'கடவுளை மிகவும் மறுத்தவர் - இருந்தாலும் மிகுந்த கடவுள் தன்மை உடையவர்' என்று புத்தரைப் பற்றி குறிப்பிட்டு இருக்கிறார் எச்.ஜி. வெல்ஸ். புத்தர் ஒருபோதும் கடவுளை நம்பவில்லை. அத்துடன் எந்தக் கடவுளையாவது நம்புமாறு எவரிடமும் அவர் ஒருபோதும் சொன்னதுமில்லை. ஆனால் தெய்வீக இருத்தல் எனும் சம்பத்தின் மிக உச்ச நிகழ்வாக அவரே இருக்கிறார். அவ்வாறே மகாவீரரும் கடவுள் தேவைப்படாத ஒரு பாதையிலேயே பயணம் செய்கிறார்.

பதஞ்சலி முற்றிலும் அறிவியல் ரீதியானவர். வழிமுறைகளுடன் நாம் சம்பந்தப்படவில்லை என்கிறார் அவர். ஆயிரத்து ஒரு வழிமுறைகள் இருக்கின்றன. ஆனால் உண்மையே இலக்கு. சிலர் அதைக் கடவுள் மூலமாக அடைந்திருக்கிறார்கள். அப்படியானால் அது நல்லதே - அதாவது கடவுளில் நம்பிக்கை வைத்து இலக்கை அடைந்தால் அது சரியே. ஏனெனில் இலக்கு அடையப் பெற்றதுமே உங்கள் நம்பிக்கையை நீங்கள் வீசியெறிந்து விடுகிறீர்கள். எனவே நம்பிக்கை என்பது கருவி அளவிலானது மட்டுமே. நீங்கள் நம்பாமல் இருந்தால் அதுவும் நல்லதே. நம்பாதீர்கள் - நம்பிக்கையின்மை என்னும் பாதையில் பயணம் செய்யுங்கள், இலக்கை அடையுங்கள்.

பதஞ்சலி ஆத்திகரும் அல்லர், நாத்திகரும் அல்லர். அவர் ஒரு மதத்தை உருவாக்கிக்கொண்டிருக்கவில்லை. உங்களின் அடிப்படை மாற்றத்துக்கு சாத்தியமான எல்லாப் பாதைகளையும் அதற்கு உதவக் கூடிய எல்லாவிதிகளையும் அவர் உங்களுக்குக் காட்டிக் கொண்டிருக்கிறார், அவ்வளவே. அந்தப் பாதைகளில் கடவுளும் ஒன்று. அது ஒரு கட்டாயம் இல்லை. நீங்கள் கடவுளை நம்பாதவராக இருந்தால் அதற்காக நீங்கள் சமயத்தன்மை அற்றவராக இருக்க எந்த அவசியமும் இல்லை.

கடவுள் இல்லாமலும் நீங்கள் அடைய முடியும் என்கிறார் பதஞ்சலி. கடவுளைப்பற்றிக் கவலைப்படாதீர்கள். இவைதான் விதிகள். இவைதான் செய்ய வேண்டிய பயிற்சிகள். இதுதான் தியானம் - இதன் வழியாக செல்லுங்கள்.

எந்தக் கருத்தையும் அவர் வலியுறுத்துவதில்லை. இது மிகவும் கடினமாகவே இருந்தது. எனவேதான் பதஞ்சலியின் யோக சூத்திரங்கள் அரிதானவையாக, தனிச்சிறப்பானவையாக உள்ளன. இத்தகைய ஒரு நூல் இதற்குமுன் ஒருபோதும் ஏற்பட்டதில்லை. இனியும் ஏற்பட சாத்தியம் இல்லை. ஏனெனில் யோகத்தைப் பற்றி என்னவெல்லாம் எழுதமுடியுமோ அதைஎல்லாம் அவரே எழுதிவிட்டார். எதையும் பாக்கி வைக்கவில்லை. எவரும் அதனுடன் எதையும் சேர்க்கத் தேவை இல்லை. பதஞ்சலியின் யோக சூத்திரங்களைப் போன்ற இன்னொரு படைப்பை வருங்காலத்திலும் எவராவது இயற்றுவதற்கான எவ்விதமான சாத்தியமும் அறவே இல்லை. வேலையை கனகச்சிதமாக முடித்து விட்டிருக்கிறார் அவர். இதை அவர் இவ்வளவு முழுமையாகச் செய்ய முடிந்ததற்குக் காரணம் அவர் பகுதியானவர் அல்ல. அவர் ஒரு பகுதியானவராக இருந்திருந்தால் அவரால் இதை இவ்வளவு முழுமையாக முடித்திருக்க முடியாது.

புத்தர் ஒரு பகுதியானவர். மகாவீரர் ஒரு பகுதியானவர். யேசு ஒரு பகுதியானவர். முகமது ஒரு பகுதியானவர். இவர்களுக்கெல்லாம், அவரவருக்கென ஒரு தனிப்பட்ட பாணி - பாதை இருக்கிறது. மேலும் அவர்கள் மேற்கொண்ட இந்த பகுதித்தன்மை என்பது உங்களுக்காக மேற்கொள்ளப்பட்டதாய், இருக்கலாம் - உங்கள்மீது அவர்கள் கொண்ட ஒரு ஆழமான கருத்தினால், உங்கள்மீது அவர்கள் கொண்ட ஒரு ஆழமான கருணையினால் மேற்கொள்ளப்பட்ட தாய் இருக்கலாம். அவர்கள் ஒரு குறிப்பிட்ட பாதையையே வலியுறுத்துகிறார்கள். தம் வாழ்நாள் முழுவதும் அதை அவர்கள் வலியுறுத்திக் கொண்டே போகிறார்கள். ''மற்ற யாவுமே தவறு. இது மட்டுமே சரியான மார்க்கம்'' என்று அவர்கள் சொல்கிறார்கள். இது உங்களின் விசுவாசத்தை உருவாக்குவதற்கே. ஏனெனில் அந்த அளவுக்கு நீங்கள் விசுவாசம் அற்றவர்களாக இருக்கிறீர்கள். அந்த அளவுக்கு சந்தேகம் நிரம்பியவராக இருக்கிறீர்கள். எனவே இந்தப் பாதை இட்டுச் செல்கிறது. மற்றவர்களின் பாதைகளும் அதே இடத்துக்குத்தான் போகின்றன என்று அவர்கள் சொன்னால், பின் எந்தப் பாதையையும் நீங்கள் பின்பற்ற மாட்டீர்கள். (எனவே) ''இந்த'' ப் பாதைமட்டுமே இட்டுச் செல்கிறது என்று அவர்கள் வலியுறுத்துகிறார்கள்.

இது உண்மை அல்ல. இது உங்களுக்காக மேற்கொள்ளப்படும் ஒரு யுத்தி மட்டுமே. ஏனெனில் அவற்றில் ஏதாவது நிச்சயமற்ற தன்மையை நீங்கள் உணர்ந்தால்; ''இதுவும் இட்டுச் செல்லும், அதுவும் இட்டுச் செல்லும். இதுவும் உண்மைதான், அதுவும் உண்மைதான்'' என்று அவர்கள் சொன்னால் நீங்கள் நிச்சயமற்றவராக ஆவீர்கள். ஏற்கனவே நீங்கள் நிச்சயமற்றவராகவே இருக்கிறீர்கள். எனவே முழுமையான நிச்சயத்தன்மை கொண்ட ஒருவர் உங்களுக்குத் தேவைப்படுகிறார். முழு நிச்சயத்தன்மை கொண்டவராக உங்களின் பார்வைக்குத் தோன்றுவதற் காகத்தான் அவர்கள் தம்மை பகுதியானவர்களாக ஒரு சார்பானவர்களாக காட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் நீங்கள் பகுதியானவராக இருந்தால் முழு பரப்பையும் உங்களால் நிரப்ப முடியாது. பதஞ்சலி ஒருபகுதியானவர் அல்லர். உங்களைப்பற்றி அவர் அதிகம் கவலைப்படமாட்டார். இந்தப் பாதையின் கடந்தகால ஏற்பாடுகள்பற்றியே அவர் அதிக கரிசனம் கொண்டவராக இருக்கிறார். பொய்யை அவர் பயன்படுத்தமாட்டார். எவ்வித சூழ்ச்சியையும் அவர் கையாள மாட்டார். உங்களுடன் அவர் சமரசம் செய்து கொள்ள மாட்டார். சமரசம் கொள்வது என்பது எந்த விஞ்ஞானிக்கும் முடியாத ஒன்று.

புத்தரால் சமரசம் செய்துகொள்ள முடியும். உங்கள்மீது அவர் மிகுந்த கருணை கொண்டவராக இருக்கிறார். அவர் உங்களை அறிவியல் ரீதியில் நடத்துவதில்லை. மிக ஆழமான ஒரு மனிதநேய உணர்வு அவருக்கு இருக்கிறது. எனவே உங்களுக்கு உதவுவதற்காகவென்றே ஒரு பொய்யை சொல்லவும் அவரால் முடியும். உண்மையைச் சொன்னாலும் நீங்கள் புரிந்துகொள்ள முடிவதில்லை. எனவே அவர் உங்களுடன் சமரசம் செய்துகொள்கிறார். பதஞ்சலியோ உங்களுடன் சமரசம் செய்துகொள்ள மாட்டார். உண்மைநிலவரம் எதுவாயினும் அதை அப்படியே உங்களிடம் தெரிவிப்பார் அவர். உங்களை சந்திப்பதற்காக ஒரு படிகூட இறங்கிவர மாட்டார். முற்றிலும் சமரசமற்றவராக இருக்கிறார் அவர். அறிவியல் அப்படித்தான் இருந்தாக வேண்டி இருக்கிறது. அறிவியலால் சமரசம் செய்துகொள்ள முடியாது. அப்படிச் செய்தால் அதுவும் ஒரு மதம் ஆகிவிடும்.

அவர் ஆத்திகரும் அல்லர், நாத்திகரும் அல்லர். அவர் ஒரு இந்துவோ முகமதியரோ கிறித்தவரோ சமணரோ பவுத்தரோ அல்லர். அவர் முற்றிலும் அறிவியல் ரீதியில் உண்மையைத் தேடுபவராக இருக்கிறார். உண்மைநிலை எதுவாயினும் அதை அப்படியே

வெளிப்படுத்துகிறார் - எவ்வித உப கதையையும் கலக்காமல் வெளிப்படுத்துகிறார். ஒரே ஒரு உவமானத்தைக்கூட அவர் பயன்படுத்த மாட்டார். யேசு உவமைக் கதைகளிலேயே பேசிக்கொண்டு போவார். ஏனெனில் நீங்கள் குழந்தைகளாக இருக்கிறீர்கள். கதைகளை மட்டுமே உங்களால் புரிந்துகொள்ள முடிகிறது. அவர் உவமானங்களைக் கொண்டு உங்களுடன் பேசுவார். புத்தரும் ஏராளமான கதைகளைப் பயன்படுத்துகிறார் - ஒரு மங்கலான/கணநேர காட்சியையாகிலும் நீங்கள் பெறுவதற்கு உங்களுக்கு உதவும் பொருட்டே அக்கதைகளை அவர் பயன்படுத்துகிறார்.

ஒரு ஹசீதைப்பற்றி, பால் ஷெம் என்ற ஒரு யூத குருவைப்பற்றி நான் வாசித்துக் கொண்டிருந்தேன். ஒரு சிற்றூரில் அவர் ராபியாக (=யூத மத போதகராக) இருந்தார். கிராமத்தில் ஏதாவது தொல்லையோ, நோயோ, பேரிடரோ நேரிடும் போதெல்லாம் அவர் காட்டுக்கு ள் போய்விடுவார். ஒரு குறிப்பிட்ட மரத்தின் அடியிலிருக்கும் ஒரு குறிப்பிட்ட இடத்துக்குப் போவார். அங்கே ஏதோ ஒரு சடங்கைச் செய்து விட்டு பின் கடவுளிடம் வேண்டுவார். உடனே அந்தப் பெருந்துன்பம் அந்த ஊரைவிட்டு அகன்று போய்விடும். அந்த ஊரிலிருந்து அந்த நோய் மறைந்து போய்விடும், தொல்லை தொலைந்து போகும். இது எப்போதும் வாடிக்கையாக நடந்துவந்தது.

ஒருநாள் பால் ஷெம் இறந்துவிட்டார். பின் அவருக்கு அடுத்தவர் அப்பணிக்கு வந்தார்... மீண்டும் ஒரு பிரச்சனை வந்தது. கிராமம் அல்லலுக்கு உள்ளாகியது. ஏதோ ஒரு துன்பம் ஏற்பட்டது. உடனே அடுத்த வாரிசான புது ராபியை காட்டுக்குள் போய் கடவுளிடம் வேண்டுமாறு ஊர்மக்கள் வேண்டினார்கள். புது ராபிக்கு மிகுந்த கலக்கம் உண்டாயிற்று. ஏனெனில் அந்த சரியான மரம், அந்த சரியான இடம் அவருக்குத் தெரியாது. அவர் அதற்கு பரிச்சயமாகி இருக்கவில்லை. இருந்தாலும் அவர் போனார் - ஏதோ ஒரு மரத்தின் அடியில் நின்றுகொண்டார். நெருப்பை மூட்டினார். சடங்கைச் செய்து வேண்டினார். கடவுளிடம் பின்வருமாறு சொன்னார், ''இதோ பாரும், என் குரு வழக்கமாக வந்துகொண்டிருந்த சரியான இடம் எனக்கு தெரியாது. ஆனால் உமக்கு தெரியும். எல்லாம் அறிந்தவர் நீர். எங்கும் நிறைந்தவர் நீர். எனவே உமக்குத் தெரியும். எனவே சரியான இடத்தை தேட வேண்டிய அவசியம் எனக்கு இல்லை. என் ஊர் இன்ன துன்பத்தில் உள்ளது. எனவே பார்த்து ஏதாவது செய்யும்.'' என்றார் அந்தத் துன்பம் போய்விட்டது!

பின் இந்த ராபியும் இறந்தார். அவருக்கு அடுத்த வாரிசு வந்தார். மறுபடியும் ஒரு பிரச்சனை வந்தது. கிராமத்துக்கு ஒரு குறிப்பிட்ட நெருக்கடி ஏற்பட்டது. உடனே ஊரார் வந்தார்கள். ராபி நிம்மதி இழந்தார். ஏனெனில் அந்த வேண்டுதலும் அவருக்கு மறந்துவிட்டிருந்தது. எனவே அவர் காட்டுக்குள் போனார். ஓரிடத்தை தேர்ந்தெடுத்துக் கொண்டார். சடங்குத் தீயை எப்படி மூட்டுவது என்பதும் அவருக்கு தெரியவில்லை. ஆனால் எப்படியோ நெருப்பு மூட்டி கடவுளிடம் சொன்னார், ''இதோபாரும் சடங்குத் தீயை மூட்டும்முறை எனக்கு தெரியாது. சரியான இடம் எனக்குத் தெரியாது. பிரார்த்தனையும் எனக்கு மறந்துவிட்டது. ஆனால் நீர் அனைத்தும் அறிந்தவர். எனவே உமக்கு ஏற்கனவே அவை தெரியும். எனவே எந்த அவசியமுமில்லை. எனவே தேவையானதைச் செய்யும்.'' என்றார். பின் அவர் திரும்பிவந்தபோது கிராமம் அந்த நெருக்கடியில் இருந்து மீண்டிருந்தது.

பின் அவரும் இறந்தார். அவரது வாரிசு... அப்பவும் கிராமம் ஒரு துன்பத்தில் சிக்கியது. உடனே ஊர்மக்கள் வந்தார்கள். அவர் தன் கைநாற்காலியில் உட்கார்ந்துகொண்டு இருந்தார். அவர் சொன்னார், ''நான் எங்கும் போக விரும்பவில்லை. கடவுளே நீங்கள் எல்லா இடத்திலும் இருக்கிறீர். எனக்கு எந்த வேண்டுதலும் தெரியாது. எந்தச் சடங்கும் தெரியாது. ஆனால் அதனால் என்ன? எனக்கு தெரிந்திருக்கிறதா என்பது ஒரு பொருட்டே அல்ல. உமக்கு எல்லாமே தெரியும். வேண்டுதலால் என்ன பயன்? சடங்குகளால் என்ன பயன்? குறிப்பிட்ட ஒரு புண்ணிய இடத்தால் என்ன பயன்? என் பரம்பரையினரின் கதைமட்டுமே எனக்கு தெரியும். அந்தக் கதையை உமக்கு நான் சொல்லுவேன்: பால் ஷெமின் காலத்தில் இது நடந்தது. பின் அவரது வாரிசு வந்தார். பின் அவரது வாரிசு வந்தார்: இதுதான் கதை. இனி நீர் செய்ய வேண்டியதைச் செய்யும், அதுவே போதும்.'' உடனே பேரிடர் நீங்கியது. மேலும், இந்தக் கதையைத் தான் கடவுள் மிகவும் ரசித்தார் என்றும் சொல்லப்படுகிறது.

மக்கள் கதைகளை நேசிக்கிறார்கள்; மக்களின் கடவுளும் அவற்றை நேசிக்கிறார்கள். கதைகளின்மூலம் குறிப்பிட்ட தரிசனக் கீற்றுகளை நீங்கள் பெற முடியும் தான். ஆனால் பதஞ்சலி ஒரே ஒரு உவமைக் கதையைக்கூட உபயோகிக்கமாட்டார். ஐன்ஸ்டீனும் புத்தரும் கலந்த மிக அபூர்வக் கலப்பு அவர் என்று நான் உங்களுக்குச் சொன்னேன். புத்தரின் அக சாட்சி பாவத்தையும் ஐன்ஸ்டீனின் மனம் இயங்கும் முறையையும் ஒருசேர அவர் பெற்றிருக்கிறார்.

அவரிடம் இரண்டுகதையும் கிடையாது. ஆத்திகம் என்பது ஒரு கதை. நாத்திகம் என்பது எதிர் - கதை. அவை இரண்டுமே வெறும் புனைவுகளே. மனிதர்கள் உருவாக்கிய உவமைகளே. அவற்றில் ஒன்று சிலருக்கு ஏற்கிறது. மற்றது வேறு சிலருக்கு ஏற்கிறது. கதைகளில் பதஞ்சலிக்கு அக்கறை இல்லை. புனைவுகளில் அவருக்கு ஆர்வம் இல்லை. நிர்வாணமான உண்மையின்மீதே அவர் ஆர்வம் கொண்டிருக்கிறார். அதற்கு அவர் ஆடைகூட அணிவிக்க மாட்டார். அதற்கு அவர் எந்த மெருகும் ஏற்றமாட்டார். அதை அவர் அலங்கரிக்க மாட்டார். அவருடைய பாணி அது அல்ல இதை நினைவில் கொள்ளுங்கள்.

மிகவும் வறட்சியான ஒரு நிலத்தினூடாக, பாலைவனம் போன்ற ஒரு பிரதேசத்தின் வழியாக நாம் போகப் போகிறோம். ஆனால் பாலைவனமும் அதற்கே உரிய அழகை பெற்றிருக்கிறது. அதில் மரங்கள் இல்லை. அங்கே ஆறுகள் இல்லை. ஆனால் தனக்கே உரிய ஒரு அகண்ட தன்மையை அது பெற்றிருக்கிறது. அதனுடன் எந்தக் காட்டையும் ஒப்பிட முடியாது. காடுகள் தமக்கே சொந்தமான அழகுகளைப் பெற்றுள்ளன. மலைகள் தமக்கே சொந்தமான அழகுகளுடன் விளங்குகின்றன. ஆறுகள் அவற்றுக்கே சொந்தமான அழகுகளுடன் மிளிர்கின்றன. பாலைவனமும் தனக்கே சொந்தமான மிகப் பரந்த எல்லையற்ற தன்மையைப் பெற்றிருக்கிறது.

அத்தகைய பாலைவன நிலத்தின் வழியாக நாம் போய்க் கொண்டிருப்போம். இதற்குத் துணிவு தேவைப்படுகிறது. தங்கி இளைப்பாற வசதியாக ஒரே ஒரு மரத்தையும் கூட உங்களுக்கு அவர் வழங்கமாட்டார். ஒரு கதைகூட உங்களுக்கு அவர் சொல்ல மாட்டார். கலப்பற்ற வெறும் உண்மைகளை மட்டுமே தருவார். தேவைக்கதிகமாக ஒரே ஒரு சொல்லைக்கூட அவர் பயன்படுத்த மாட்டார். எனவேதான் 'சூத்திரங்கள்' என்ற பெயர். சூத்திரங்கள் என்றாலே 'அத்தியாவசிய மாகத் தேவைப்படுகிற குறைந்தபட்சம்' என்பதே பொருள்.

சூத்திரம் என்பது ஒரு முழுமையான வாக்கியம்கூட அல்ல; சாரமானவற்றை மட்டுமே கொண்டது அது. நீங்கள் கொடுக்கும் தந்தியைப் போன்றதே அது. தந்திவாசகத்தில் தேவையற்ற வார்த்தைகளை நீங்கள் நீக்கிக்கொண்டே போகிறீர்கள். அந்நிலையில் அது ஒரு சூத்திரம் ஆகிறது. ஏனெனில் வெறுமனே பத்து அல்லது ஒன்பது சொற்களே அதில் சேர்க்கமுடியும். நீங்கள் ஒரு கடிதம் எழுதப்போவதாக இருந்தால் பத்துப் பக்கங்களை நிரப்புவீர்கள். ஆனால்

அந்தப் பத்துப் பக்கங்களிலும்கூட சொல்ல வந்த சேதி நிறைவாகச் சொல்லப்படாமல் போகலாம். ஆனால் ஒரு தந்தியில் பத்தே சொற்களில் அது நிறைவாகச் சொல்லப்பட்டு விடுவது மட்டுமல்ல, அதற்கும் மேலாகவே சொல்லப்பட்டு விடுகிறது. அது இதயத்தை குறிவைத்துத் தாக்குகிறது. மிகவும் சாரமானது மட்டுமே ஆக அது இருக்கிறது.

பதஞ்சலியின் சூத்திரங்கள் தந்தி வாசகங்களைப் போன்றவை. அவர் ஒரு சிக்கனக்காரர். அனாவசியமான ஒரே ஒரு சொல்லைக்கூட அவர் பயன்படுத்த மாட்டார். அப்படி இருக்க எப்படி அவர் கதைகதையாய் சொல்லுவார்? அவரால் முடியாது. அவரிடம் அதை எதிர்பார்க்காதீர்கள். என அவர் ஆத்திகரா அல்லது நாத்திகரா என்றெல்லாம் கேட்காதீர்கள். ஏனென்றால் இவையெல்லாம் வெறும் கட்டுக்கதைகளே.

தத்துவ வாதிகள் பலப்பல கதைகளை ஜோடித்திருக்கிறார்கள். அது ஒரு விளையாட்டு. நாத்திகம் என்னும் விளையாட்டை நீங்கள் விளையாட விரும்பினால் நாத்திகராக இருங்கள். ஆத்திகம் என்னும் விளையாட்டை நீங்கள் விரும்பினால் ஆத்திகராக இருங்கள். ஆனால் இரண்டும் விளையாட்டுகளே; அது 'உண்மை அல்ல. உண்மை என்பது வேறு. உண்மை என்பது உங்களின்மீதே கரிசனம் கொள்கிறது; நீங்கள் எதை நம்புகிறீர்கள் என்பதில் அல்ல. நீங்களே உண்மை; நீங்கள் நம்புகிறவை அல்ல உண்மைமனதுக்கும் பின்னால் / அப்பால் இருப்பதே உண்மை. மனதின் உள்ளடக்கமாக இருப்பவை உண்மை அல்ல. ஆத்திகம் என்பது மனதின் ஒரு உள்ளடக்கம். நாத்திகம் என்பதும் மனதின் ஒரு உள்ளடக்கம். மனதிலிருக்கும் ஒன்றே அது. இந்துமதம் என்பது மனதில் இருக்கும் விசயமே. கிறித்தவம் என்பதும் மன விவகாரமே.

விசயங்களின் மீதல்ல, அவற்றுக்கும் அப்பாலின்மீதே பதஞ்சலியின் ஆர்வம்: ''இந்த மனம் மொத்தத்தையும் தூர எறிந்துவிடு. அதற்குள் இருப்பது எப்பேர்ப்பட்டதானாலும் அதெல்லாம் பயனற்றதே'' என்கிறார் அவர். அழகான தத்துவங்களை நீங்கள் சுமந்து கொண்டிருக்கலாம். ''அவற்றை எறிந்துவிடு. அவை எல்லாம் குப்பை''என்பார் பதஞ்சலி. ஆனால் இது கடினமானதே. ''உங்கள் பைபிள் ஒரு குப்பை. உங்கள் கீதை ஒரு குப்பை. உங்கள் சாத்திரங்கள் அனைத்தும் குப்பை; மடமை. அவற்றைத் தூக்கி எறியுங்கள்'' என்று யாராவது சொன்னால் நீங்கள் அதிர்ச்சி அடைவீர்கள். ஆனால் இதுதான் நிகழப் போகிறது. பதஞ்சலி உங்களுடன் எந்தச் சமரசமும் செய்து

கொள்ளப் போவதில்லை. சமரசத்துக்கு இடம் தராதவர் அவர். அதுவே அவருடைய அழகு. அதுவே அவரது தனிச்சிறப்பு.

**மூன்றாவது கேள்வி:**

**யோகப்பாதையில் சீடத்துவத்தின் முக்கியத்தைப்பற்றி நீங்கள் சொன்னீர்கள். ஆனால் ஒரு நாத்திகனால் எப்படி ஒரு சீடராக இருக்க முடியும்?**

ஆத்திகர், நாத்திகர் இருவருமே சீடர்களாக விளங்கமுடியாது. அவர்கள் ஏற்கனவே ஒரு நிலைபாடு எடுத்துவிட்டார்கள். ஏற்கனவே அவர்கள் முடிவுசெய்து விட்டார்கள். எனவே அவர்கள் ஒரு சீடராக இருப்பதில் என்ன பொருள் இருக்க முடியும்? ஏற்கனவே உங்களுக்குத் தெரிந்திருந்தால் எப்படி நீங்கள் ஒரு சீடராக இருக்க முடியும்? ''எனக்குத் தெரியாது'' என்பதை உணர்ந்திருத்தலே சீடராக இருப்பது அல்லது சீடத்துவம் என்பதன் பொருள். நாத்திகர்கள், ஆத்திகர்கள் இருவருமே சீடர்களாக இருக்க முடியாது.

மேலும் ஒன்றில் நீங்கள் நம்பிக்கைவைத்தால் சீடத்துவத்தின் அழகை நீங்கள் இழந்துவிடுவீர்கள். ஏற்கனவே நீங்கள் ஓரளவு அறிந்திருந்தால் அந்த அறிவு உங்களுக்கு அகங்காரத்தைக்கொடுக்கும். அது உங்களை தாழ்ச்சி உள்ளவராக ஆக்காது. எனவேதான் புலவர்களும் அறிவாளிகளும் தவறவிடுகிறார்கள். சில வேளைகளில் பாவிகள் கூட அடைந்திருக்கிறார்கள்; ஆனால் பண்டிதர்கள் ஒருபோதும் அடைந்ததில்லை. அவர்களுக்கு தேவைக்கும் அதிகமாகத் தெரிந்திருக் கிறது. அவர்கள் மிகவும் விவரமானவர்களாக இருக்கிறார்கள். அவர்களது விவரமே அவர்களைப் பீடித்து இருக்கும் நோய். அதுவே அவர்களின் தற்கொலையாகிறது. அவர்கள் கவனிக்கமாட்டார்கள். ஏனெனில் கற்றுக்கொள்வதற்கு அவர்கள் ஆயத்தமாயிருக்க மாட்டார்கள்.

சீடத்துவம் என்றாலே கற்றுக்கொள்ளும் மனப்பான்மை என்றே பொருள். ''எனக்கு ஒன்றும் தெரியாது'' என்பதைத் தெரிந்து இருக்கும் இந்தத் தன்மை, ''நான் அறியாமையில் இருக்கிறேன்.'' என்பதை அறிந்திருக்கும் இந்தத் தன்மை, ஒரு திறந்திருக்கும் தன்மையை உங்களுக்கு தருகிறது. அதன்பின் நீங்கள் அடைக்கப்பட்டிருப்பதில்லை. ''எனக்கு தெரியும்'' என நீங்கள் சொல்லும் கணத்திலேயே நீங்கள் ஒரு மூட்டப்பட்ட வட்டமாக இருக்கிறீர்கள். அதன்பின் கதவு திறந்திருப்ப தில்லை. ஆனால் ''எனக்குத் தெரியாது'' என்று நீங்கள் சொல்லும்போது

அதன் பொருள், கற்றுக்கொள்ள நீங்கள் சித்தமாக இருக்கிறீர்கள் என்பதாகும். கதவு திறந்திருக்கிறது என்பதே அதன் அர்த்தமாகும்.

ஏற்கனவே நீங்கள் அடைந்திருந்தால், முடிவுகட்டி இருந்தால், உங்களால் ஒரு சீடராக விளங்க முடியாது. உள்வாங்கிக் கொள்ளும் மனநிலையிலேயே நாம் இருக்க வேண்டி இருக்கிறது. உண்மை அறிந்துகொள்ள இயலாதது என்று தொடர்ந்து இருக்கவேண்டி இருக்கிறது. 'நான் அறிந்திருப்பது எதுவாயினும் அது அற்பமானதே, வெறும் குப்பையே' என்னும் உணர்வு நம்மிடம் இடைவிடாமல் இருக்க வேண்டி இருக்கிறது. உங்களுக்கு என்ன தெரியும்? நிறைய தகவல்களை நீங்கள் திரட்டி இருக்கலாம். ஆனால் அது அறிவு அல்ல. பல்கலைக் கழகங்களில் இருந்து ஏராளமான குப்பையை நீங்கள் சேகரித்திருக் கிறீர்கள். ஆனால் அவை அறிவு அல்ல, புத்தரைப்பற்றி உங்களுக்குத் தெரிந்திருக்கலாம், யேசுவைப்பற்றி நீங்கள் அறிந்திருக்கலாம். ஆனால் அதுவல்ல அறிவு. நீங்களே ஒரு புத்தராக ஆகாதவரை உங்களுக்கு அறிவு இல்லை. நீங்களே யேசுவாக இருக்காத வரை நீங்கள் அறிவுள்ளவர் ஆவதில்லை.

இருத்தலின்/சீவனின் மூலமாகவே அறிவு வருகிறது, நினைவுத் திறனின் மூலமாக அல்ல. பயிற்றுவிக்கப்பட்ட நினைவுத்திறனை நீங்கள் பெற்றிருக்க முடியும். நினைவு என்பது ஒரு தொழில் நுட்பம் /உத்தி மட்டுமே. அது உங்களுக்கு அதிக வளமான ஒரு சீவனை வழங்காது. அது உங்களுக்கு கோரமான தீக்கனவுகளைத் தரலாம். ஆனால் ஒரு அதிக வளமான சீவனை உங்களுக்கு அது தராது. கூடுதல் குப்பை நிரம்பியவராய், மற்றபடி முதலில் நீங்கள் இருந்த அதேவிதமான ஆளாகவே இருப்பீர்கள். அறிவு, அதிலும் குறிப்பாக அறிவின் மூலமாக வருகிற அகங்காரம் ''எனக்குத் தெரியும்'' என்னும் எண்ணம், உங்களை மூடி விடுகிறது. இனி உங்களால் ஒரு சீடராக இருக்க முடியாது. மேலும் ஒரு சீடராக ஆக முடியாதவரை யோக ஒழுங்குமுறைக்குள் உங்களால் நுழைய முடியாது. எனவே யோகத்தின் வாயிலுக்கு அறியா நிலையில் வாருங்கள் - உங்கள் அறியாமையைப் பற்றிய இடையறா விழிப்புடன் வாருங்கள். மேலும், நான் உங்களுக்கு கூறுகிறேன்: ''நான் அறிய வில்லை'' என்னும் இந்த அறிவே உங்களுக்கு உதவப் போகும் ஒரே அறிவு ஆகும்.

இது உங்களை பணிவானவர்களாக ஆக்கும். ஒரு நுட்பமான கீழ்ப் படிதல் உணர்வு உங்களுக்கு வரும். படிப்படியாக அகங்காரம் மறையும், உங்களுக்கு தெரியாது என்பதை நீங்கள் தெரிந்திருக்கும்போது எப்படி

ஆணவமாக உங்களால் இருக்க முடியும்? அறிவே அக்ங்காரத்தின் மிகவும் நுண்மையான தீவிரியாக இருக்கிறது: நீங்களும் ஏதோ ஒன்றாக உணர்கிறீர்கள். நீங்களும் ஒரு குறிப்பிடத்தக்க ஆளாக ஆகி இருக்கிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியும்.

இரண்டு நாட்களுக்கு முன்புதான் ஒரு மேல்நாட்டுப் பெண்ணுக்கு சந்நியாசத்தில் தீட்சை கொடுத்தேன். அவளுக்கு ''யோக சம்போதி'' என்ற ஒரு பெயர் கொடுத்தேன். ''இதை உச்சரிப்பது உனக்கு எளிதாக இருக்கிறதா?'' என்று அவளிடம் கேட்டேன். ''ஆம். ஆங்கில சொல்லாகிய சம்படி (*some body*) என்பது போலவே இது இருக்கிறது'' என்றாள் அவள். உண்மையில் அதற்கு நேர் எதிரானதுதான் சம்போதி. நீங்கள் ஒரு ஆளாக இல்லாமல் இருக்கும் போதுதான், ஒரு நோபடி (*nobody*) ஆக இருக்கும் போதுதான் சம்போதி சம்பவிக்கிறது. சம்போதி என்றால் ஞானநிலை பேறு. குறிப்பிடத்தகுந்த ஒருவராக (சம்படி ஆக) நீங்கள் இருக்கும்போது சம்போதி ஒருக்காலும் சம்பவிக்காது. அந்த 'குறிப்பிடத்தக்க' 'தகுதியே' தடையாக இருக்கிறது.

நீங்கள் உங்களை ஒன்றுமில்லையாக உணரும்போது உங்களை ஒரு வெறுமையாக - சூனியமாக நீங்கள் உணரும்போது, திடீரென உங்களுக்கு நிகழும் பல அதிசயமான நிகழ்வுகளுக்கும் எளிதில் கிடைக்கக்கூடியவராக நீங்கள் இருக்கிறீர்கள். உங்கள் கதவுகள் திறந்திருக்கின்றன. சூரியன் உதிக்க முடியும். சூரியக் கதிர்கள் உங்களுக்குள் ஊடுருவ முடியும். உங்களின் சோர்வு, உங்களின் இருட்டு மறையும். ஆனால் நீங்கள் மூடப்பட்டு இருக்கிறீர்கள். சூரியன் உங்களின் கதவைத் தட்டிக்கொண்டு இருக்கலாம். ஆனால் உங்களில் திறப்பு என்பது இருப்பதில்லை. ஒரு சன்னல்கூட திறந்திருக்கவில்லை.

நாத்திகரோ ஆத்திகரோ; இந்துக்களோ முகமதியரோ கிறித்தவரோ பவுத்தர்களோ; இவர்கள் யாரும் இந்தப் பாதையில் நுழைய முடியாது. (ஏனெனில்) அவர்கள் நம்புகிறார்கள். எங்கும் சென்று அடையாமலேயே ஏற்கனவே அவர்கள் அடைந்து விட்டிருக்கிறார்கள். எதையும் உணராமலேயே அவர்கள் முடிவுசெய்து விட்டிருக்கிறார்கள். கருத்தாக்கங்கள், கோட்பாடுகள், சாத்திரங்கள் என்னும் - வார்த்தைகளே அவர்கள் மனங்களில் நிரம்பி வழிகின்றன. ஆகவே எந்த அளவுக்கு அதிகமோ அந்த அளவுக்கு சுமை அதிகமாய் அவர்கள் சவங்களாகவே இருக்கிறார்கள்.

நான்காவது கேள்வி:

**எந்த விதமான விசுவாசத்தையும் யோகம் வேண்டுவதில்லை என்று நீங்கள் சொன்னீர்கள். ஆனால் குருவிடம் சீடர் விசுவாசம் வைப்பதும் சரணம் அடைவதும் அடைக்கலம் புகுவதும் ஒரு அடிப்படையான நிபந்தனை என்ற வகையில் தேவை என்றால் பின் முதல் வாசகம் எப்படிச் சரியானதாகும்?**

யோகத்துக்கு விசுவாசம் தேவையில்லை என ஒருபோதும் நான் சொன்னதில்லை. எவ்விதமான நம்பிக்கையும் யோகத்துக்கு தேவையில்லை என்றே நான் சொல்வேன். விசுவாசம் என்பது முற்றிலும் வேறானது. அடைக்கலம் என்பது முற்றிலும் வேறானது. நம்பிக்கை என்பது ஒரு அறிவுசார்ந்த விசுவாசம். ஆனால் விசுவாசம் என்பது கூடுதல் உறுதியுள்ள அந்நியோன்னியம் ஆகும். அது அறிவுசார்ந்த விசயம் அல்ல. ஒரு குருவை நீங்கள் நேசிக்கிறீர்கள். அப்போது நீங்கள் அடைக்கலம் ஆகிறீர்கள். அங்கு விசுவாசம் இருக்கிறது. ஆயின் இந்த விசுவாசம். எந்தக் கருத்தாக்கத்தின் மீதானதும் இல்லை, எந்தக் கருத்தாக்கத்தின் அடிப்படையிலானதும் இல்லை. அது அந்த மனிதரின் மீதே ஏற்பட்டிருக்கக்கூடிய விசுவாசம். மேலும் இது ஒரு நிபந்தனையும் அல்ல; அது தேவைப்படுவதில்லை - இந்தப் பாகுபாட்டை நினைவில் கொள்ளுங்கள். குருவிடம் உங்களுக்கு விசுவாசம் இருந்தாக வேண்டும் என்பதெல்லாம் தேவையில்லை - அது ஒரு முன்னிபந்தனை அல்ல. சொல்லப்பட்டதெல்லாம் இதுதான்: உங்களுக்கும் குருவுக்கும் இடையில் அடைக்கலம் நிகழ்ந்தால்தான் சத்சங்கம் சாத்தியம் ஆகும்: அது ஒரு சூழ்நிலை மட்டுமே, நிபந்தனை அல்ல. எதுவுமே தேவைப்படுவதில்லை.

காதலைப் போலவே... காதல் நிகழ்ந்த பின் திருமணம் தொடர முடியும். ஆனால் காதலை ஒரு நிபந்தனையாக ஆக்க முடியாது: முதலில் நீங்கள் காதலித்தாக வேண்டும், பிறகுதான் கலியாணம் தொடரும் என நிபந்தனை விதிக்க முடியாது. அப்படி விதித்தால் நீங்கள் கேட்பீர்கள்: அதெப்படி ஒருவர் கட்டாயத்தின் பேரில் காதலிக்க முடியும்? என்று.

காதல் என்பது தானே நிகழ்வது. நிகழ்ந்தால் நிகழ்கிறது. நிகழவில்லை எனில் நிகழவில்லை. நீங்களாக எதையும் செய்ய முடியாது. எனவே அடைக்கலத்தை வற்புறுத்திப் புகுத்த முடியாது.

பண்டை நாட்களில் உண்மைதேடுவோர் உலகம் முழுவதிலும் சுற்றித் திரிவார்கள். ஒரு ஆசானிடம் இருந்து இன்னொரு ஆசானிடமாக அலைந்துகொண்டு இருப்பார்கள். நிகழ்வு நேரிடுவதை எதிர்பார்த்து காத்துக் கொண்டு மட்டுமே இருப்பார்கள். அதை நீங்கள் வலிந்து உண்டாக்க முடியாது. பல குருக்களையும் நீங்கள் கடந்து செல்வீர்கள். ஏதாவது ஓரிடத்தில் ஏதோ ஒன்று சம்பவிக்கும் வரை துழாவிக் கொண்டிருக்கலாம். அப்போது அந்த விசேசம் நிகழ்ந்திருக்கிறது. அது ஒரு நிபந்தனை அல்ல. ஒரு குருவிடம் நீங்கள் போய் அவரிடம் அடைக்கலம் புக முயற்சித்துக் கொண்டிருக்க முடியாது. எப்படி நீங்கள் அடைக்கலத்தை முயலமுடியும்? அந்த முயற்சியே, அந்தப் பிரயாசையே உங்களில் அடைக்கலம் இல்லை என்பதைக் காட்டுகிறது. ஒருவரை நேசிக்க நான் முயல்கிறேன் என்று எப்படி நீங்கள் சொல்ல முடியும்? அல்லது அது சாத்தியமா? நீங்கள் முயற்சிசெய்வது என்றாலே மொத்த விவகாரமும் பொய்யாகிப் போய்விடுகிறதே. அது ஒரு நிகழ்வு, அவ்வளவுதான்.

ஆனால் அது நிகழாத வரை சத்சங்கம் சாத்தியம் ஆகாது. அதுவரை குரு தன் அருளை உங்களுக்கு வழங்க முடியாது. அவர் வழங்காமல் தன்னைத் தானே தடுத்து நிறுத்திக் கொள்வார் என்பதல்ல. நீங்கள் கிடைக்கிறவர்களாய் இருப்பதில்லை. அந்நிலையில் அவராலும் ஒன்றும் செய்ய முடியாது. நீங்கள் திறந்து இல்லை.

சன்னலின் அருகில் சூரியன் காத்துக்கொண்டு இருக்கலாம். ஆனால் சன்னல்மூடி இருக்கிறதே; சூரியனால் என்ன செய்ய முடியும்? கதிர்கள் திரும்பிப்போய் விடும். அவை வரும்; கதவைத்தட்டும்; திரும்பிவிடும் நீங்கள் கதவைத் திறந்தால் சூரியன் உதித்துவிட வேண்டும் என்று கட்டாயம் இல்லை; அது ஒரு நிபந்தனை இல்லை! சூரியன் அங்கு இல்லாதிருக்கலாம். அது இரவு நேரமாயிருக்கலாம். உங்கள் கதவை திறப்பதாலேயே சூரியனை நீங்கள் உருவாக்கிவிட முடியாது. கதவை நீங்கள் திறந்து வைத்திருப்பதானது நீங்கள் கிடைக்கக் கூடியவராக இருக்கிறீர்கள் என்பதை மட்டுமே குறிக்கிறது. சூரியன் அங்கு இருந்தால் அது உள்ளே நுழைய முடியும்.

எனவே உண்மையைத் தேடுவோர் இடம்பெயர்ந்து கொண்டே இருப்பார்கள்; இடம்மாறிக் கொண்டே இருக்க வேண்டி இருக்கும். நினைவில் கொள்ள வேண்டிய ஒரே விசயம், திறந்த தன்மையிலேயே

தொடர்ந்து அவர்கள் இருக்க வேண்டும். மற்றும் தீர்ப்புச் சொல்லக்கூடாது என்பதாகும். ஒரு குருவின் அருகில் நீங்கள் வந்தால், அவருடன் இருந்து எந்த நிலை மாற்றத்தையும் நீங்கள் உணரவில்லை என்றால் போய்விடுங்கள், ஆனால் தீர்ப்பிடாதீர்கள். ஏனெனில் உங்கள் தீர்ப்பு தவறாக இருக்கும். நீங்கள் ஒருபோதும் அவருடன் தொடர்பு கொண்டிருக்கவில்லை. நீங்கள் நேசிக்காத வரை, நீங்கள் அறிவதில்லை. எனவே தீர்ப்பிடாதீர்கள். ''இந்த குரு எனக்கேற்றவர் அல்ல. நான் இந்த குருவுக் கேற்றவன் அல்ல. நிகழ வேண்டியது நிகழவில்லை'' என்று மாத்திரம் சொல்லுங்கள். அப்படியே போய்விடுங்கள்.

நீங்கள் தீர்ப்பு வாசிக்கத் தொடங்கினால் மற்ற குருமார்களுக்கு உங்களை நீங்கள் மூடிக்கொண்டு விடுகிறீர்கள். பலப்பல சூழ்நிலைகளின் வழியாக நீங்கள் கடந்துசெல்லவேண்டி இருக்கலாம். ஆனால் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள்: அதாவது தீர்ப்பிடாதீர்கள். ஒரு குருவிடம் ஏதோ சரியில்லை என நீங்கள் உணரும் போதெல்லாம். நகர்ந்து விடுங்கள். நீங்கள் அடைக்கலமாக முடியாது என்பதே அதன் பொருள். ஏதோ தவறுதல் நடந்திருக்கிறது. உங்களால் அடைக்கலம் புக முடியவில்லை. ஆனால் அதற்காக குருவே தவறானவர் என்று சொல்லாதீர்கள். உங்களுக்குத் தெரியாது. பேசாமல் இடம் பெயருங்கள். அதுவே போதுமானது. வேறொரு இடத்தில் போய் தேடுங்கள்.

தீர்ப்புச் சொல்லவும் கண்டனம் செய்யவும் முடிவுகட்டவும் தொடங்குவீர்கள் என்றால் பின் நீங்கள் அடைபட்டுப் போவீர்கள். தீர்ப்புச் சொல்லும் இந்த கண்கள் பின் ஒருபோதும் அடைக்கலமாக இயலாமல் போகும். தீர்ப்புச் சொல்லும் பழக்கத்துக்கு ஒரு தரம் நீங்கள் அடிமையாகி விட்டிருந்தாலே அதன்பின் ஒருபோதும் உங்களால் அடைக்கலமாக முடியாது போகும்; ஏனென்றால் நீங்கள் அடைக்கல மாகாமல் இருப்பதற்கே அது உதவும் - உங்களுக்கு ஒரு மூடுண்ட நிலையை கொடுக்கும் - ஏதாவது ஒன்றை எப்போதும் நீங்கள் கண்டுபிடித்துக் கொள்வீர்கள்

இத்தகைய நிலையில் அடைக்கலம் புகவும் வேண்டாம், தீர்ப்பிட வும் வேண்டாம், இடத்தைவிட்டு அகலுங்கள். நீங்கள் போய்க்கொண்டே இருந்தால், நிகழவேண்டியது ஒருநாள் நிகழ்ந்தே தீரும்: ஒருநாள், ஓரிடத்தில், ஒரு குறிப்பிட்ட கணத்தில் அது நிகழ்ந்தே தீரும். ஏனெனில் அத்தகைய கணங்கள் இருக்கின்றன - நீங்கள் எளிதில் தாக்கப்படக்கூடிய தன்மையில் இருக்கையில், குருவானவர் பாய்ந்து கொண்டிருக்கும்

போது, அத்தகைய கணங்களைக் குறித்து உங்கள் பங்குக்கு ஒன்றுமே செய்ய முடியாது. நீங்கள் எளிதில் பாதிப்படையக்கூடியவராக இருக்கிறீர்கள்; குறிப்பிட்ட ஒரு நேரத்திலும் இடத்திலும் நீங்கள் சந்திக்கிறீர்கள் - சந்திப்பு நிகழ்கிறது. பின் சத்சங்கம் சாத்தியம் ஆகிறது.

சத்சங்கம் என்றால் ஒரு குருவுடன் - அறிந்திருக்கிற ஒரு மனிதருடன் - மிக அருகாமையில் இருத்தல் என்று பொருள். ஏனெனில் அப்போதுதான் அவர் பாய முடியும். ஏற்கனவே அவர் பாய்ந்து கொண்டுதான் இருக்கிறார். இதுவே போதும் என்கிறார்கள் சூபிகள். ஒரு குருவின் அருகாமையில் இருப்பதுமட்டுமே போதும், அவர் அருகில் இருப்பதுவே போதும், அவருடன்கூட நடப்பதுவே போதும், அவரது அறைக்கு வெளியில் உட்கார்ந்திருப் பதுவே போதும், தொடர்ந்து சுயநினைவுடன் இருந்துகொண்டிருந்தாலே போதும்.

ஆனால் அதற்கு ஆண்டுகள் பிடிக்கின்றன. அத்தனை ஆண்டுகள் காத்துக்கொண்டு இருக்க வேண்டும். அப்பவும் அவர் உங்களை நல்லபடி நடத்தமாட்டார். எல்லாவிதமான தடைகளையும் உருவாக்குவார் என்பதை நினைவில் கொள்ளுங்கள். தீர்ப்பிடுவதற்கு உங்களுக்குப் பல வாய்ப்புகளை அவர் ஏற்படுத்துவார். அவர் தவறானவர் என நீங்கள் நினைக்க முடியும்படியாக தன்னைப்பற்றிய வதந்திகளை அவர் பரப்பிவிடுவார். தப்பி ஓடுவதற்கு ஒவ்வொரு வழியிலும் அவர் உங்களுக்கு உதவுவார். இந்தத் தடைகளை எல்லாம் நீங்கள் கடக்காவிட்டால்...மேலும் இவை அவசியமே. ஏனெனில் ஒரு மலிவான அடைக்கலத்தால் பயனில்லை. பருவமடைந்த அடைக்கலம், நீண்ட காலம் காத்திருந்து வளர்ந்த அடைக்கலம், வலுவான பாறையாக ஆகியிருக்கும் அடைக்கலம்... அப்போது மட்டுமே மிக ஆழமான அடுக்குகள் ஊடுருவப்படமுடியும்.

நீங்கள் நம்ப வேண்டும் என்பதற்காக பதஞ்சலி கூறுவதில்லை. நம்பிக்கை என்பது ஒரு கருத்தை அறிவாக நம்புவது. இந்து மதத்தை நீங்கள் நம்புகிறீர்கள். அது உங்களின் அடைக்கலமாக இல்லை. ஒரு இந்துக் குடும்பத்தில் நீங்கள் வந்து பிறந்தது ஒரு தற்செயல் தான். மேலும் அக்கருத்தையே நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். குழந்தைப் பருவத்தில் இருந்தே அதனால் நீங்கள் செறிவேற்றப்பட்டு வந்திருக்கிறீர்கள். கோட்பாடுகள், கருத்தாக்கங்கள், தத்துவங்கள், விதிமுறைகள் எல்லாம் உங்களுள் ஆழமாகப் பதிந்து விட்டிருக்கிறது. அவை உங்களின் ரத்தத்தில் ஊறி அதன் பகுதியாகி விட்டிருக்கிறது.

அவை உங்களின் உணர்வற்ற மனத்துக்குள்ளேயே போய் இறங்கிவிட்டிருக்கிறது. அவற்றை நீங்கள் நம்புகிறீர்கள். ஆனால் அந்த நம்பிக்கையால் பயனில்லை. ஏனெனில் அது உங்களின் தன்மையை அடிப்படையில் மாற்றி இருக்கவில்லை. அது ஒரு செத்த பொருள்; பிறரிடமிருந்து பெறப்பட்டது.

அடைக்கலம் புகுவது ஒருபோதும் ஒரு செத்தபொருளாக இருப்பதில்லை. உங்கள் குடும்பத்திடமிருந்து அடைக்கலத்தை உங்களால் இரவலாகப் பெற முடியாது. அது உங்களின் சொந்த விவகாரம். அதற்கு நீங்களாகவே வந்து சேர வேண்டி இருக்கிறது. இந்துமதம் சம்பிரதாய ரீதியானது/மரபுரீதியானது. முகமதிய மதம் மரபுரீதியானது.

முகமதுவைச் சூழ்ந்து இருந்த முதல் குழு - அவர்களே மெய்யான முஸ்லீம்கள். ஏனெனில் அது அவர்களுக்கு அடைக்கலம் என்பதாக இருந்தது. அவர்கள் தம் குருவிடம் தாமே சுயமாக நேரடியாக வந்திருந்தார்கள். குருவின் மிக அருகாமையில் அவர்கள் வாழ்ந்திருந்தார்கள். அவர்கள் சத்சங்கத்தில் இருந்தார்கள். முகமதுவை அவர்கள் நம்பினார்கள். ஆகவே எளிதாக அடைக்கலமாகி விடுவதற் கேற்ற ஒரு மனிதர் அல்ல முகமது. கடினம். முகமதுவுடன் நீங்கள் இருந்தால் தப்பிஓடி விடுவீர்கள். அவருக்கு ஒன்பது மனைவிகள் இருந்தார்கள். அத்தகைய மனிதரை நம்புவது அசாத்தியம். அவர் கையில் ஒரு வாள் வைத்திருந்தார். அந்த வாளில் ''சமாதானமே குறிக்கோள்'' என பொறிக்கப்பட்டிருந்தது: ''இசுலாம்'' என்னும் சொல்லுக்கே'' சமாதானம்'' என்பதே பொருள். எனவே இந்த மனிதரைஎப்படி உங்களால் நம்ப முடியும்?

''அகிம்சை'' என்று மகாவீரர் சொல்லும்போது அதை உங்களால் நம்ப முடிகிறது: அவரே அகிம்சையானவர். எனவே நீங்கள் மகாவீரரை நம்ப முடியும் என்பது வெளிப்படையானது. ஆனால் வாளேந்தி இருக்கும் முகமதுவை எப்படி உங்களால் நம்பமுடியும்? ஏனெனில் ''அன்பே செய்தி, சமதானமே லட்சியம்'' என்கிறார் அவர். இவரை உங்களால் நம்ப முடியாது. இந்த மனிதர் தடைகளை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்.

அவர் ஒரு சூஃபி. அவர் ஒரு குரு. எல்லா விதமான சிக்கலையும் அவர் உண்டாக்குவார். எனவே உங்கள் மனம் இன்னும் செயல்பட்டுக் கொண்டிருந்தால், நீங்கள் சந்தேகித்தால், நீங்கள் அவநம்பிக்கையுடன் இருந்தால் நீங்கள் தப்பித்து விடுகிறீர்கள். ஆனால் நீங்கள் தொடர்ந்தும் தங்கி இருந்தால், காத்திருந்தால், உங்களுக்குப் பொறுமை இருந்தால் -

அளவுகடந்த பொறுமை அவசியப்படும் - ஒருநாள் நீங்கள் முகமதுவை அறிய வருவீர்கள். அப்போதுதான் நீங்கள் ஒரு முஸ்லீமாக ஆவீர்கள். அவரை அறிந்து கொள்வதாலேயே நீங்கள் ஒரு முஸ்லீமாக ஆவீர்கள்.

சீடர்களின் முதல் குழு முற்றிலும் வித்தியசமான ஒன்று. புத்தரின் முதல் சீடர்களுடைய குழாம் முற்றிலும் வித்தியாசமான ஒன்றாகவே இருந்தது. இன்றையை பவுத்தர்களோ செத்துப்போய் இருக்கிறார்கள். இன்றைய முகமதியர்கள் செத்துப்போய் இருக்கிறார்கள். இவர்கள் சம்பிரதாய முகமதியர்கள்.

சத்தியத்தை சொத்துடைமைபோல கைமாற்ற முடியாது. உண்மையை உங்களுக்கு உங்கள் பெற்றோர் வழங்கிடவிட முடியாது. அவர்கள் உங்களுக்கு சொத்தைத் தரமுடியும். ஏனெனில் சொத்து என்பது உலகத்துக்குச் சொந்தமானது. உண்மையோ உலகத்தை சேர்ந்தது அல்ல. அவர்களால் அதை உங்களுக்கு வழங்க முடியாது. அவர்கள் அதை பொக்கிஷமாகப் பாவிக்க முடியாது. அதை வங்கியில் போட்டுவைக்க முடியாது. போட்டுவைத்து உங்களுக்கு கைமாற்றித் தரமுடியாது. நீங்களாகவேதான் அதைத் தேட வேண்டி இருக்கும். அதற்காக நீங்கள் பாடுபடவேண்டி இருக்கும். ஒரு சீடராக ஆக வேண்டி இருக்கும். கடுமையான ஒழுங்குமுறையின் ஊடாக கடந்துசெல்ல வேண்டி இருக்கும். அது ஒரு தனிநபரின் நிகழ்வாக இருக்கும். உண்மை என்பது எப்பொழுதும் தனிநபர் சார்ந்ததாகவே இருக்கிறது. ஒரு தனிநபருக்கே அது நிகழ்கிறது. அடைக்கலம் புகுவது வித்தியாசமானது. விசுவாசம் வேறு விதமானது. விசுவாசம் என்பது பிறரால் வழங்கப்படுவது. அடைக்கலமோ தானே அடைந்துகொள்வது.

பதஞ்சலிக்கு எந்த நம்பிக்கையும் தேவை இல்லை. ஆனால் அர்ப்பணிப்பு இல்லா விட்டால் எதுவும் செய்வதற்கு இல்லை. அடைக்கலம் இல்லா விட்டால் எதற்குமே வாய்ப்பில்லை. ஆனால் அதை நீங்கள் வலிந்து கொண்டுவர முடியாது - இதை நினைவில் கொள்ளுங்கள். அர்ப்பணிப்பை உங்களால் வலிந்து உருவாக்க முடியாது. அதை வலிந்து கொண்டுவர அது உங்களின் கைகளில் இல்லை. அப்படி வலிந்து அதை நீங்கள் கொண்டுவந்தால் அது போலியான தாகவே இருக்கும். ஆகவே போலி அர்ப்பணிப்பைக் காட்டிலும் அர்ப்பணிப்பு இன்மை மேலானது. ஏனெனில் உங்களை நீங்கள் வீணாக்கிக்கொண்டிருக்கிறீர்கள். அதைவிட வேறு இடத்திற்கு இடம் பெயர்ந்தால் அங்கு உண்மை நிகழ முடியும்.

தீர்ப்புச் சொல்லாதீர்கள் - போய்க் கொண்டே இருங்கள். ஒருநாள் ஓரிடத்தில் உங்களின் குரு காத்துக்கொண்டு இருக்கிறார். மேலும் குருவை உங்களுக்கு காட்ட முடியாது - ''இங்கே போ, இவரே உன் குருவாக இருப்பார்'' என்று சொல்ல முடியாது. நீங்கள் தேட வேண்டி இருக்கும். நீங்கள் துன்புறவேண்டி இருக்கும். ஏனெனில் துன்புறுதலின் மூலமும் தேடுதலின் மூலமுமே அவரை உங்களால் கண்டறிய முடியும். உங்கள் கண்கள் தெளிவானதாக ஆகும். கண்ணீர்கள் மறையும். உங்கள் கண்களில் படிந்துள்ள புகை மூட்டம் விலகும். இவரே குரு என்பதை நீங்கள் உணர்ந்து கொள்வீர்கள்.

பின்வருமாறு சொல்லப்பட்டுள்ளது: சூஃபிகளில் ஒருவரான ஜுனாயிது வயதான ஒரு பக்கிரியிடம் வந்தார். ''நீங்கள் ஒரு ஞானி எனக் கேள்விப்பட்டிருக்கிறேன். எனக்குப் பாதை காட்டுங்கள்.'' என்று சொன்னார். ''நான் ஒரு ஞானி என்று நீ கேள்விதான் பட்டிருக்கிறாய். உனக்காகவே தெரியவில்லை. என்னைப் பார், தெரிந்துகொள்.'' என்று அந்த பெரியவர் சொன்னார். ''என்னால் எதையும் தெரிந்துகொள்ள முடிய வில்லை. ஒரு உதவி செய்யுங்கள். என் குருவை எங்கு நான் கண்டுபிடிக்க முடியும் என்பதற்கு வழிகாட்டுங்கள் என்று ஜுனாயுது கேட்டார்.'' அதற்கு பெரியவர் சொன்னார், ''முதலில் நீ மெக்காவுக்குப் போ. திரு யாத்திரை மேற்கொள். இன்னின்ன அடையாளமுடைய ஒரு மனிதரைத் தேடு. அவர் ஒரு மரத்தடியில் உட்கார்ந்திருப்பார். அவர் கண்கள் இன்ன தன்மையில் இருக்கும். அவை ஒளிவீசிக் கொண்டிருக்கும். அவரைச் சுற்றிலும் கஸ்தூரிமணம் போன்ற ஒரு மணத்தை நீ உணர்வாய். போய்த்தேடு. என்றார்''

உடனே ஜுனாயிது பயணம் மேற்கொண்டார் - இருபது ஆண்டுகளாகப் பயணம் செய்தார். எங்கெல்லாம் ஒரு ஆசான் இருக்கிறார் எனக் கேள்விப்பட்டாரோ அங்கெல்லாம் போவார். ஆனால் அங்கு மரமும் இராது, மணமும் இராது. அல்லது பெரியவர் வருணித்த விதமான கண்களும் காணப்படவில்லை. அந்த ஆளுமையே அங்கு இல்லை. மேலும் அவரிடம் ஒரு தயாரான வாய்பாடு இருந்தது என்பதால் உடனடியாக முடிவு செய்ய முடிந்தது: ''இவர் என்குரு அல்ல.'' என்று. உடனே அவர் தொடர்ந்து செல்வார். இருபது ஆண்டுகளுக்குப் பின் அவர் ஒரு மரத்தடியை அடைந்தார். குரு அங்கே இருந்தார். அந்த மனிதரைச் சுற்றிலும் கஸ்தூரி மணம் காற்றில் மிதந்து கொண்டிருந்தது. ஒரு கொலிப்பு போல். அவர் கண்கள் பிரகாசமாக இருந்தன. அவற்றில் ஒரு செவ்வொளி படர்ந்திருந்தது. இந்த மனிதர்தான். அவர் என பாதத்தில் வீழ்ந்து ''குரு உங்களை நான் இருபது ஆண்டுகளாகத் தேடிக் கொண்டிருக்கிறேன் என்று சொன்னார்.

''நானும் இருபது ஆண்டுகளாக உனக்காகத்தான் காத்துக்கொண்டு இருக்கிறேன். மறுபடியும் பார்.'' என்று குரு சொன்னார். அவர் பார்த்தார். இருபது ஆண்டுகளுக்கு முன்பு தன் குருவைக் கண்டுபிடிக்கும் வழியை தனக்கு காட்டித் தந்த அதே மனிதர்தான் இவர் . ஜுன்னாயிது தேம்பி அழத் தொடங்கினார். அவர் சொன்னார், ''என்ன இது? என்னிடம் விளையாடி விட்டீர்களே? இருபது ஆண்டுகள் வீணாகிப் போய்விட்டனவே. நீங்கள்தான் என் ஆசான் என ஏன் அன்றைக்கே உங்களால் சொல்ல முடியவில்லை?'' என்றார்.

கிழவர் சொன்னார்,''அது உதவியிருக்காது. அது பெரிதாக பயன்பட்டிருக்காது. ஏனென்றால் நீ கண்களைப் பெற்றிராத வரை...என்னை நீ கண்டுகொள்ள இந்த இருபது ஆண்டுகள் உனக்கு உதவி இருக்கின்றன; நான் அப்படியேதான் இருக்கிறேன். ஆனால் இருபது ஆண்டுகளுக்குமுன்'' ''எனக்கு எதுவும் தெரியவில்லை என்று நீ என்னிடம் சொல்லி இருந்தாய். நான் அதே நிலையில்தான் இருக்கிறேன். ஆனால் கண்டு கொள்ளுமளவுக்கு இப்போது நீ பக்குவப்பட்டிருக்கிறாய். நீ மாறி இருக்கிறாய். இந்த இருபது ஆண்டுகள் உன்னைக் கடுமையாக இழைத்துச் சீவியிருக்கிறது. எல்லாக் குப்பையும் உதிர்ந்துவிட்டிருக்கிறது. இப்போது உன் மனம் தெளிவாக உள்ளது. இந்தக் கஸ்தூரி வாசனை அன்றைக்கும் இருந்தது. ஆனால் அதை நுகர்ந்தறியும் திறனுள்ளவனாக அன்று நீ இருக்கவில்லை. உன் மூக்கு அடைபட்டிருந்தது. உன் கண்கள் செயல்பட்டிருக்கவில்லை. உன் இதயம் உண்மையில் துடித்துக்கொண்டிருக்கவில்லை. எனவே தொடர்பு சாத்தியப்படவில்லை.''

உங்களுக்குத் தெரியாது. எங்கே அடைக்கலம் நிகழும் என்பதை யாராலும் சொல்ல முடியாது. குருவை அடைக்கலமடையுங்கள் என நான் சொல்லவில்லை. யார் அருகில் அடைக்கலம் நிகழ்கிறதோ அவரை தேடிக் கண்டு பிடியுங்கள் என்று மட்டுமே சொல்கிறேன் - அவரே உங்கள் ஆசான் இந்த விசயத்தில் நீங்கள் எதுவுமே செய்யமுடியாது. நீங்கள் அலைந்து திரிய வேண்டி இருக்கும். நிகழ வேண்டியது நிகழும் என்பது நிச்சயமானது. தேடுவது தேவையை. ஏனெனில் தேடல் உங்களை பக்குவப்படுத்துகிறது. தேடுவது உங்களை ஆசானிடத்துக்கு இட்டுச் செல்வது இல்லை. தேடுவதானது நீங்கள் கண்டுகொள்ள உங்களைப் பக்குவப்படுத்துகிறது. உண்மையில் உங்களை அடுத்தே அவர் இருக்கலாம்.

**ஐந்தாவது கேள்வி:**

**நேற்று இரவு நீங்கள் சத்சங்கத்தைப் பற்றியும் குருவை சீடர்கள் அண்டி இருப்பதன் முக்கியம் பற்றியும் பேசினீர்கள். இதன் பொருள் உடல்ரீதியான அருகாமை என்பதா? பௌதிக ரீதியாக குருவிடமிருந்து நெடுந்தொலை வில் வசிக்கும் சீடர் வாய்ப்புக் குறைவான நிலையில் இருக்கிறாரா?**

ஆம்தான், இல்லையும்தான்! ஆம் என்பது ஏனென்றால், தொடக்கத்தில் ஒரு பௌதிக ரீதியான அருகாமை அவசியமே. ஏனெனில் இப்போது நீங்கள் இருக்கிற நிலையில் எதையும் உங்களால் புரிந்துகொள்ள முடியாது. உடலை உங்களால் புரிந்துகொள்ள முடிவதில்லை. உடலின் மொழியை உங்களால் புரிந்துகொள்ள முடிவதில்லை. உடல் ரீதியில்/பௌதிக ரீதியில்தான் நீங்கள் பிழைத்திருக்கிறீர்கள் - எனவே ஆம், பௌதிக ரீதியான அருகாமை அவசியமே - தொடக்கத்தில்.

இல்லை என்றும் நான் சொன்னேன். அது ஏனென்றால் நீங்கள் வளர வளர, பௌதிக ரீதி அல்லாத ஒரு வித்தியாசமான மொழியை நீங்கள் கற்கத் தொடங்கும்போது, பௌதிக ரீதியான அருகாமை தேவையில்லை. அந்நிலையில் நீங்கள் எங்கும் போகமுடியும். அந்நிலையில் இடைவெளி என்பதனால் எந்த வேறுபாடும் ஏற்படுவதில்லை. நீங்கள் எப்போதும் தொடர்புகொண்ட நிலையிலேயே இருக்கிறீர்கள். இடத்தால் மட்டுமல்ல, காலத்தாலும் எந்த மாறுபாடும் ஏற்படுவதில்லை. ஒரு குரு இறந்துவிடலாம். இருந்தாலும் அவருடன் நீங்கள் தொடர்பு கொண்டிருக்க முடியும். அவரது பூத உடலை அவர் கழட்டிவிட்டுப் போயிருக்கலாம். இருந்தாலும் அவருடன் நீங்கள் தொடர்பு கொண்டிருக்க முடியும். அர்ப்பணிப்பு என்பது நிகழ்ந்தால் பின் காலம் - இடம் இரண்டும் கடக்கப்பட்டு விடுகின்றன.

அர்ப்பணிப்பதே அற்புதம். அர்ப்பணிப்புத்தன்மை இருந்தால் முகமதுவுக்கு அல்லது யேசுவுக்கு அல்லது புத்தருக்கு அருகாமையில் இப்பவும் நீங்கள் இருக்கமுடியும். ஆனால் அது கடினம்! ஏன் அது கடினம் என்றால், எப்படி என்பது உங்களுக்குத் தெரியாது. உயிருள்ள மனிதரிடமே உங்களை அர்ப்பணிக்க முடிவதில்லையே, பின் இறந்து போனவரிடம் எப்படி உங்களை அர்ப்பணிக்க முடியும்? அற்பணிப்பு நிகழ்ந்தால் பின் இப்போதே நீங்கள் புத்தருக்கு அருகாமையில்

இருக்கிறீர்கள். மேலும் விசுவாசம் இருக்கிறவருக்கு புத்தர் உயிரோடுதான் இருக்கிறார். அர்ப்பணிக்க முடிகிறவர்களைப் பொறுத்தவரை எந்தக் குருவும் ஒருபோதும் சாவதில்லை. அவர் உதவிக்கொண்டே போகிறார். அவர் எப்போதும் அங்கேயே இருக்கிறார். ஆனால் உங்களைப் பொறுத்தவரை புத்தர் உங்கள்முன் உயிரோடு இருந்தாலும் கூட, உங்களுக்குப் பின்னாலோ முன்னாலோ உயிரோடு நின்று கொண்டிருந்தாலும்கூட, உங்களின் அருகில் உட்கார்ந்து கொண்டு இருந்தாலும்கூட, நீங்கள் அவருக்கு அருகாமையில் இருப்பதில்லை. உங்களுக்கும் அவருக்கும் இடையில் மிகப்பெரிய இடைவெளி இருக்கக்கூடும். அன்பு, அர்ப்பணிப்பு, விசுவாசம் என்பவை இடவெளியையும் காலத்தையும் அழிக்கின்றன.

தொடக்கத்தில் வேறெந்த மொழிகளையும் நீங்கள் புரிந்துகொள்ள முடிவதில்லை. உடம்பின் மொழியை மட்டுமே உங்களால் புரிந்து கொள்ள முடிகிறது. எனவே உடலின் அருகாமை தேவைப்படுகிறது. ஆனால் தொடக்கத்தில் மட்டுமே ஒரு கட்டம் வருகிறது. அப்போது குரு உங்களை அனுப்பி வைத்து விடுவார். போய்விடுமாறு உங்களை அவர் தூண்டுவார். ஏனெனில் அதுவும் தேவைப்படுவதாகிறது. ஏனெனில் உடலின் மொழியையே நீங்கள் தொற்றிக் கொண்டிருக்கத் தொடங்க லாம்.

தன் வாழ்நாள் முழுவதும் ஏறக்குறைய எப்போதுமே குருட்ஜீப் தன் சீடர்களைத் துரத்திவிட்டு விடுவார். அவர்களுக்கு மிகப்பெரிய அவல நிலையை உருவாக்குவார். அதனால் அவர்கள் போய்விட வேண்டி இருக்கும். அவருடன் வாழ்வது அசாத்தியமாகும். ஒரு குறிப்பிட்ட நிலைக்குப் பின் அவர்கள் போய்விடுவதற்கு அவர் உதவுவார். அவர்கள் போய்விடுமாறு உண்மையில் நிர்பந்தமே கொடுப்பார் அவர். ஏனெனில் உடல் ரீதியானதுடன் அளவுக்கு அதிகமாக சார்ந்து நிற்பவர்களாக நீங்கள் ஆகிவிடக்கூடாது. அதைவிட உயர்ந்த மற்ற மொழி வளர வேண்டும். நீங்கள் எங்கிருந்தாலும் அவருக்கு அருகாமையில் இருப்பது போன்ற உணர்வு உங்களில் வளரத் தொடங்க வேண்டும். ஏனெனில் உடம்பானது கடக்கப்பட வேண்டும். உங்கள் உடம்பு மட்டுமல்ல, குருவின் உடம்பும் கடந்து செல்லப்பட்டாக வேண்டும்.

ஆனால் ஆரம்பத்தில் உடலின் அருகாமை ஒரு பெரிய உதவியாகவே இருக்கிறது. விதைகள் ஒருதடவை விதைக்கப்பட்டதுமே - ஒருதடவை அவை வேர்பிடித்ததுமே - நீங்கள் போதிய பலமுள்ளவர்களான இருக்கிறீர்கள்..பின் நீங்கள் போய்விட முடியும்.

அதன் பின் நீங்கள் உணரமுடியும். போய்விடுவதாலேயே தொடர்பை இழந்துபோனால், பின் அந்தத் தொடர்பு பெரிய முக்கியத்துவம் உடையதல்ல. தள்ளி நீங்கள் செல்லச்செல்ல அர்ப்பணிப்புத் தன்மை அதிகம்தான் ஆகும். அர்ப்பணிப்பு உணர்வு அதிகமாய் வளரும். ஏனெனில் இப்புவியில் நீங்கள் எங்கிருந்தாலும் குருவின் பிரசன்னத்தை இடைவிடாமல் உணர்ந்து கொண்டிருப்பீர்கள். அர்ப்பணிப்பு வளரும். இப்போது மறைமுகமான கரங்களின் வழியாக, கண்ணுக்குப் புலப்படாத கரங்களின் வாயிலாக அவர் உங்களுக்கு உதவிக்கொண்டிருப்பார். உங்களின் கனவுகளின் மூலமாக அவர் உங்களுக்குள் செயலாற்றிக் கொண்டிருப்பார். நீங்களும், அவர் ஒரு நிழலைப் போல உங்களைப் பின்தொடர்ந்து வருவதாக இடைவிடாமல் உணர்கிறீர்கள்.

ஆனால் அது மிகவும் வளர்ச்சிபெற்ற ஒரு மொழி. எடுத்த எடுப்பிலேயே அதனை முயற்சிக்காதீர்கள். ஏனெனில் அப்போது நீங்கள் ஏமாந்துவிட முடியும். எனவே படிப்படியாக முன்னேறுங்கள் என்று கூறுவேன். அர்ப்பணிப்பு நேரும் போதெல்லாம் கண்களை மூடுங்கள். கண்களை மூடிக்கொண்டு அதைப் பின்பற்றுங்கள். உண்மையில் அர்ப்பணம் நிகழும் கணமெல்லாம் நீங்கள் உங்கள் கண்களை மூடியே இருந்திருப்பீர்கள். அப்போது எண்ணுவதால், வாதிடுவதால் என்ன பயன்? அர்ப்பணம் நிகழ்ந்திருக்கிறது. இனி அது வேறு எதையும் கவனிக்காது

அப்போது அதைப் பின்தொடருங்கள். குருவே உங்களை அனுப்பிவிடும்வரை அருகாமையில் தங்கி இருங்கள். அவர் உங்களை அனுப்பும்போது (அவரை) தொற்றிக் கொள்ளாதீர்கள். அப்போது அதையும் பின்பற்றுங்கள். அவரது உத்தரவைப் பின்பற்றிப் போய்விடுங்கள். ஏனெனில் அவருக்கு மிக நன்றாக தெரியும். எது உதவிகரமானது என்பதை அவரே அறிந்திருக்கிறார்.

சில நேரங்களில், குருவின் அருகாமையிலேயே இருக்கும்வரை நீங்கள் வளர்வது கடினமாக ஆகலாம் - ஒரு பெரிய மரத்தின் அடியில் இருக்கும் ஒரு புது விதை வளர்வதற்குப் பல சிரமங்கள் இருக்கும் என்பதைப் போன்றதே இது. பெரிய மரத்தின் அடியில் இருக்கும் புதிய மரம் வளர்ச்சி குன்றிப் போகும். மரங்கள்கூட தம் விதையை மிகத் தூரமாக தூக்கி எறிவதில் கவனம் செலுத்துகின்றன. ஏனெனில் அப்போதுதான் விதைகள் முளைவிட முடியும். விதையை தொலைவில் அனுப்ப மரங்கள் பல உபயாங்களைக் கையாளுகின்றன. இல்லா விட்டால் அவை இறந்துவிடும். பெரிய மரத்தின் அடியிலேயே அவை

விழுந்துவிடும். அங்கு மிகுந்த நிழல் இருக்கும். சூரியனால் அவ்விடத்தை அடைய முடியாது. அவ்விடத்தை சூரியக்கதிர்கள் எட்ட முடியாது.

எனவே குரு என்பவர் கூடுதலாக அறிந்திருக்கிறார். நீங்கள் போயாக வேண்டும் என அவர் உணர்ந்தால் அதை எதிர்த்து நிற்காதீர்கள். அதை அப்படியே ஏற்றுக்கொண்டு போய்விடுங்கள். இப்படிப் போய்விடுவதே அவருக்கு இன்னும் அருகில் வருவதாகும். நீங்கள் பின்பற்றினால்; எவ்வித, எதிர்ப்பும் இல்லாமல் மவுனமாகப் பின்பற்ற உங்களால் முடிந்தால்; இப்படித் தொலைவில் போவதே அதிகமாய் நெருங்கி வருவதாகும். ஒரு புதுவிதமான அருகாமையை நீங்கள் அடைவீர்கள்.

ஆறாவது கேள்வி:

**ஒன்றைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுமாறு எங்களை நீங்கள் கேட்டுக்கொள்கிற போது, யாரை நோக்கி அவ்வாறு கேட்கிறீர்கள்? மனம் மறைந்தாக வேண்டியதே. எனவே மனம் ஒன்றைப் புரிந்துகொள்ளுமாறு செய்துகொண்டிருப்பது பயனற்றது. அப்படியானால் புரிந்துகொள்ள வேண்டியது யார்?**

ஆம் மனம் மறைந்தாக வேண்டியதே. ஆனால் இன்னும் அது மறையவில்லையே. எனவே அந்த மனதின்மீது செயல்பட வேண்டி இருக்கிறது. மனதில் ஒரு புரிதலை உருவாக்க வேண்டி இருக்கிறது. அந்தப் புரிதலின் வழியாகவே இந்த மனம் சாகும். அந்தப் புரிதல் என்பது ஒரு நஞ்சைப் போன்றது. விசத்தை நீங்கள் உட்கொள்கிறீர்கள். நீங்களே விசத்தை எடுத்துக் கொள்கிறீர்கள், நீங்களே அதனால் கொல்லப்படுகிறீர்கள். மனம் புரிந்து கொள்கிறது. இந்தப் புரிதலே மனத்துக்கு விசமாக இருக்கிறது. எனவேதான் மனம் இந்த அளவுக்கு முரண்டு பிடிக்கிறது. புரியாமல் இருப்பதற்கே ஓயாமல் அது முயல்கிறது. அது சந்தேகத்தைக் கிளப்புகிறது. தன்னைக் காப்பாற்றிக் கொள்ள ஒவ்வொரு வகையிலும் அது போராடுகிறது. ஏனெனில் புரிதலே மனத்துக்கு விசமாக இருக்கிறது. உங்களுக்கு அது அமுதம்; ஆனால் மனத்துக்கோ அது விசம்.

எனவே, 'தெளிவாகப் புரிந்துகொள்' என்று நான் கூறும்போது உங்கள் மனதிடமே கூறுகிறேன், உங்களிடம் அல்ல. ஏனெனில் உங்களுக்கு எந்த புரிந்தகொள்ளுதலும் தேவை இல்லை. ஏற்கனவே நீங்கள் புரிதலாகவே இருக்கிறீர்கள். நீங்களே ஞானமாக பிரக்ஞையாக இருக்கிறீர்கள்.

உங்களுக்கு என்னிடமிருந்தோ வேறு யாரிடமும் இருந்தோ எந்த உதவியும் தேவை இல்லை. உங்களின் மனம்தான் மாற்றப்படவேண்டி இருக்கிறது. புரிந்துகொள்ளுதல் நிகழ்ந்தால் மனம் இறக்கும். மனதின் மறைவுடன் புரிந்துகொண்டதும் மறைந்துவிடும். பின் நீங்கள் உங்களின் தூய நிலையில் இருப்பீர்கள். பின் உங்கள் சீவன் ஒரு கண்ணாடி போன்ற தூய்மையை வெளிப்படுத்தும். அதில் எந்த உள்ளடக்கமும் இருக்காது. அந்த அக இருத்தலுக்கு எந்தப் புரிந்துகொள்ளுதலும் தேவை இல்லை. ஏற்கனவேயே அது புரிதலின் சாரமாகவே தான் உள்ளது. அதற்கு எவ்வித புரிந்துகொள்ளுதலும் தேவையில்லை; மனமாகிய மேகங்களைத் தான் கலைக்க வேண்டி இருக்கிறது.

ஆக உண்மையில், புரிந்துகொள்தல் என்றால் என்ன? மனதை மறையச் செய்வதற்கான ஒரு அறிவுறுத்தல் மட்டுமே புரிதல். மல்லுக் கட்டுங்கள் என நான் கூறவில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். இணங்கச் செய்யுங்கள் என்றே கூறுகிறேன். நீங்கள் போராடுவதால் மனம் ஒருபோதும் நீங்காது. ஏனெனில் போராட்டத்தின் மூலம் உங்கள் பயத்தையே நீங்கள் வெளிப்படுத்துகிறீர்கள். மனதுடன் நீங்கள் போரிட்டால், மனதைக் கண்டு நீங்கள் அஞ்சுகிறீர்கள் என்பதை நீங்களே காட்டிக் கொள்கிறீர்கள். வெறுமனே இசையப்பண்ணுங்கள். இந்த போதனைகள் எல்லாம், இந்தத் தியானங்கள் எல்லாம் மனம் ஒரு இடத்துக்கு வந்து சேருவதற்கான ஆழமான அறிவுறுத்தல்- இசைவித்தல் மட்டுமே: அந்த இடத்தில் அது தற்கொலை செய்துகொள்ள முடியும், அங்கு அது வெறுமனே கழண்டு விழ முடியும்; அந்த இடத்தில், நீங்கள் தொடர்ந்து தூக்கி சுமந்து கொண்டிருக்க முடியாத அளவுக்கு மனம் தானே ஒரு பெரும் அபத்தமாக ஆகிறது-எனவே அதை அப்படியே நீங்கள் கைவிடுகிறீர்கள். அதைவிட, மனம் தானே கழண்டு விழுகிறது என்பது அதிக சரியாக இருக்கிறது.

எனவே ஒரு தெளிந்த புரிதலுக்காக நான் பேசும்போது உங்கள் மனதை குறித்தே பேசுகிறேன். மேலும் வேறு வழியும் இல்லை. உங்கள் மனதை மட்டுமே அணுக முடியும். ஏனெனில் நீங்கள், அணுக - கிடைக்க முடியாதவராக இருக்கிறீர்கள். உள்ளுக்குள் மிகவும் ஆழத்தில் நீங்கள் மறைந்திருக்கிறீர்கள். மனம் கதவின் அருகில் நிற்கிறது. கதவை விட்டு நீங்குமாறும், கதவை திறந்து விட்டுச் செல்லு மாறும் மனத்தை இணங்கச் செய்ய வேண்டி இருக்கிறது. அதன் பிறகே நீங்கள் கிடைக்கக் கூடியவராக ஆவீர்கள்.

மனதை நோக்கியே நான் பேசுகிறேன் - உங்கள் மனதிடம் பேசுகிறேன், உங்களிடம் அல்ல. மனம் கழண்டுவிட்டால் பேசுவதற்கே தேவையில்லை. நான் அமைதியில் அமர முடியும். நீங்களும் புரிந்து கொள்வீர்கள். பேசுவதற்குத் தேவையே இல்லை. மனதுக்கே சொற்கள் தேவை. மனதுக்கு எண்ணங்கள் தேவை. மனதுக்கு மனரீதியான ஒன்று தேவை - அதுதான் அதற்கு அறிவுறுத்த முடியும். புத்தரோ பதஞ்சலியோ கிருஷ்ணரோ உங்களிடம் பேசும்போது, உங்கள் மனதை முன்னிறுத்தியே அவர்கள் பேசுகிறார்கள்.

மொத்த அபத்தத்தையும் மனம் ஒரேயடியாக உணர்ந்து கொள்கிற ஒரு கட்டம் வருகிறது. இதை இப்படிச் சொல்லலாம்: உங்கள் செருப்பின் வார்களை / உங்கள் பாதணியின் கயிறுகளைப் பிடித்துத் தூக்குவதன்மூலம் உங்களை நீங்களே மேலே தூக்க நீங்கள் முயன்று கொண்டிருக்கிறீர்கள். அதை நான் பார்த்துவிட்டு உங்களிடம் சொல்கிறேன், ''என்ன மடத்தனமான வேலையைச் செய்துகொண்டிருக்கிறீர்கள், இது சாத்தியமில்லாத காரியம்'' என்கிறேன். உங்கள் பாதணியின் கயிறுகளைப் பிடித்து மேலே இழுப்பதன்மூலமே உங்களை நீங்கள் மேலே தூக்கிவிட முடியாது. இது நடக்கக்கூடியதே அல்ல. இது நிகழவே முடியாது. எனவே மொத்த விவகாரத்தையும்பற்றி நன்றாக சிந்திக்குமாறு உங்களை நான் தூண்டுகிறேன். ''இது அபத்தம். என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் நீங்கள்?'' என்கிறேன். மேலும் நீங்கள் கவலை கொள்கிறீர்கள். ஏனெனில் அது நிகழ்வதில்லை. எனவே நான் உங்களிடம் சொல்லிக்கொண்டே போகிறேன்; உங்களிடம் வலியுறுத்திக் கொண்டும், அடித்துச் செலுத்திக்கொண்டும் இருக்கிறேன். ஒருநாள் நீங்கள் உணர்வுள்ளவராக ஆகலாம் - ''ஆம், இது அபத்தமே. நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன்?''

மனதைப் பொறுத்தவரை உங்களின் மொத்த முயற்சியும், செருப்பு வாரைப் பிடித்து உங்களையே தூக்க முயல்வதைப் போன்றே இருக்கிறது. நீங்கள் எதைச் செய்து கொண்டிருந்தாலும் அது அபத்தமாகவே இருக்கிறது. அது நரகத்தைத் தவிர - அவலத்தைத் தவிர வேறெதற்கும் ஒருபோதும் உங்களை இட்டுச் செல்வதில்லை. எப்போதும் அது உங்களை அவலத்துக்கே இட்டுச் சென்றிருக்கிறது. நீங்கள் இன்னும் விழிப்படையவில்லை. என்னிடம் இருந்துவரும் இந்தச் செய்தித் தொடர்பு அனைத்தும்; உங்கள் மனம் விழிப்புறச் செய்வதற்கே ஆகும். மொத்த முயற்சியும் அபத்தம் என்பதை நீங்கள் உணர வந்ததுமே முயற்சி மறைகிறது. இதன் பொருள், உங்களின் மிதியடி வார்களை நீங்கள்

விட்டுவிட வேண்டி இருக்கும், வேறு முயற்சியை மேற்கொள்ள வேண்டி இருக்கும், அது இன்னும் அதிகக் கடினமானதாக இருக்கும் என்பதல்ல. (மாறாக) உண்மையை நீங்கள் காண்பீர்கள், அப்போதே நீங்கள்விட்டுவிடுவீர்கள், நீங்கள் சிரிப்பீர்கள்; உங்கள் பாதணிகளின் கயிறுகளை நீங்கள் விட்டுவிட்டால் நீங்கள் ஞானநிலைபேறு பெற்றவராகி இருப்பீர்கள், அப்படியே நிமிர்ந்து நின்று வெறுமனே சிரிப்பீர்கள். இதுதான் நடக்கும்.

புரிந்துகொள்தல் மூலம் மனம் விழுகிறது. உங்களின் அவலத்துக்கு வேறு யாரும் பொறுப்பல்ல, நீங்கள்தான் இடைவிடாமல் அதை உருவாக்கிக் கொண்டிருந்தீர்கள், ஒவ்வொரு கணமும் நீங்கள்தான் அதற்கு காரண கர்த்தாவாக இருந்தீர்கள் என்பதை திடுமென உணர்ந்தவ ராக ஆகிறீர்கள். மேலும் நீங்களே அவலத்தை உருவாக்கிக்கொண்டு இருந்துவிட்டு, பின் அதைக் கடந்து அப்பால் செல்வது எப்படி என்றும், நீங்களே கேட்டுக்கொண்டு இருக்கிறீர்கள்; அவலமற்று இருப்பது எப்படி என்றும் ஆனந்தத்தை அடைவது எப்படி என்றும் சமாதியைச் சாதிப்பது எப்படி என்றும் கேட்டுக் கொண்டு இருக்கிறீர்கள். அப்படிக் கேட்டுக் கொண்டு இருக்கும்போது நீங்கள் உருவாக்கிக்கொண்டு இருப்பீர்கள். 'சமாதியை சாதிப்பது எப்படி' என்று கேட்பதுவே அவலத்தை உரு வாக்கிக் கொண்டிருக்கிறது. ஏனெனில் அப்போது நீங்கள், ''எவ்வளவு பெரிய சிரமத்தை நான் மேற்கொண்டு வந்திருக்கிறேன். இருந்தும் இன்னும் சமாதி கிடைக்கவில்லை. செய்யமுடியக்கூடிய ஒவ்வொன்றை யும் நான் செய்து கொண்டிருக்கிறேன். ஆனால் சமாதி இன்னும் அடையவில்லை. எப்போதுதான் நான் ஞானநிலைபேறு பெற்றவன் ஆவேன்?'' என்று கூறுகிறீர்கள்.

இப்போது நீங்கள் ஒரு புதிய அவலத்தை உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள்: ஞானநிலைபேற்றையும் உங்களுடைய ஆசையின் ஒரு இலக்காக ஆக்கி இருக்கிறீர்கள். இதுவே அவலம். எந்த ஆசையும் ஒருபோதும் நிறைவை உணராது. இதை நீங்கள் உணர்ந்து கொண்டதுமே ஆசை விட்டுவிடுகிறது. நீங்கள் விழிப்புணர்வாகிறீர்கள். ஆசையின்மை யால் நீங்கள் ஞானநிலைபேற்றில் இருக்கிறீர்கள். ஆசைகள் இருக்கும் வரை நீங்கள் அவலத்தையே சுற்றிசுற்றி வந்துகொண்டிருப்பீர்கள்.

**கடைசிக் கேள்வி:**

**யோகம் ஒரு அறிவியல், அகவிழிப்பு பெறுவதற்கான ஒரு முறையியல் என்று நீங்கள் சொன்னீர்கள். ஆனால்**

**இருத்தலுக்கான முயற்சி என்பதே, மனமற்ற நிலையை நோக்கிச் செல்வதற்கான முயற்சி என்பதே, நோக்கத்தை - நம்பிக்கையை மறைமுகமாகக் குறித்துக் காட்டுவதுதானே. அக நிலைமாற்ற நிகழ்முறையினூடாக செல்வதும் கூட நோக்கத்தை குறிப்பாக சுட்டிக் காட்டவே செய்கிறது. அப்படியானால், நம்பிக்கை மற்றும் செயல் நோக்கத்துடன் எப்படி ஒருவர் யோக மார்க்கத்தில் முன்செல்ல முடியும்? காத்திருப்பதுமே கூட மறைமுகமாக உள்நோக்கம் கொண்டிருப்பது ஆகாதா?**

சரிதான். நோக்கத்துடன், ஆசையுடன், நம்பிக்கையுடன் யோகப் பாதையில் இயங்க முடியாதுதான். உண்மையில் யோகப் பாதையில் இயக்கமே இராது. ஆசை அனைத்தும் அபத்தமானது, ஆசை அனைத்தும் அவலமானது என்னும் புரிதலுக்கு நீங்கள் வருகிறபோது செய்வதற்கு ஒன்றுமில்லை. ஏனெனில் ஒவ்வொரு செய்கையும் ஒரு புதிய ஆசையாகும். ஒன்றும் செய்வதற்கில்லை! எதையுமே நீங்கள் செய்துவிடுவது என்பது முடியாது - ஏனெனில் எதை நீங்கள் செய்தாலும் அது ஒரு புதிய துன்பத்துக்கே உங்களை இட்டுச் செல்லும். அப்போது நீங்கள் செய்யமாட்டீர்கள். ஆசைகள் வீழ்ந்திருக்கின்றன. மனம் மறைந்திருக்கிறது. இதுவே யோகம். நீங்கள் பிரவேசித்திருக்கிறீர்கள். இது ஒரு இயக்கப்போக்கு அல்ல, இது ஒரு நிலைப்புத் தன்மை. மொழியின் காரணமாகவே சிக்கல்கள் எழுகின்றன. நீங்கள் உள் நுழைந்திருக்கிறீர்கள் என நான் கூறும்போது, நீங்கள் நுழைந்து போயிருக்கிறீர்கள் என்று தோன்றுகிறது. உண்மையில் ஆசை நிற்கும்போது எல்லாப் போக்குகளும் நிற்கின்றன. நீங்கள் யோகத்தில் இருக்கிறீர்கள். இப்போதே யோக ஒழுங்குமுறை.

யோகம் என்னும் பெயரால் காரிய நோக்கம் இருக்கும் போது மறுபடியும் புதிய அவலங்களை நீங்கள் உருவாக்குவீர்கள். ஒவ்வொரு நாளும் மனிதர்களில் இதை நான் காண்கிறேன். அவர்கள் வந்து கூறுகிறார்கள்: ''கடந்த முப்பது ஆண்டுகளாக நான் யோகத்தைப் பயிற்சி செய்து வந்திருக்கிறேன். ஆனால் எதுவுமே நிகழ்ந்திருக்கவில்லை. என்று'' ஆனால் ஏதோ ஒன்று நிகழப் போகிறது என்று உங்களிடம் யார் சொன்னார்கள்? ஏதோ ஒன்று நிகழப் போகிறது என அவர்கள் எதிர் பார்த்து காத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். எனவேதான் எதுவுமே நிகழ்ந்திருக்கவில்லை. வருங்காலத்துக்காகக் காத்திராதே என்கிறது யோகம். நீங்கள் தியானிக்கிறீர்கள்; ஆனால் தியானத்தின் மூலமாக

எங்கோ சென்று சேர்வீர்கள், ஏதோ இலக்கை அடைவீர்கள் என்னும் உள்நோக்கத்துடன்தான் தியானிக்கிறீர்கள். அப்படியானால் நீங்கள் சாரமான விசயத்தை இழந்து கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் தியானித்தால் அதில் ஆனந்தம் கொள்ளுங்கள் (வேறு) எந்த இலக்கும் இல்லை, எந்த எதிர்காலமும் இல்லை, எந்த தொலைதூரமும் இல்லை. தியானத்தில் ஆழ்ந்துவிடுங்கள்; எந்தக் காரிய நோக்கமும் இன்றி களிகூறுங்கள்.

அப்போது திடீரென அங்கு குறிக்கோள் இருக்கிறது. திடீரென மேகங்கள் மறைகின்றன. ஏனெனில் உங்களின் ஆசைகளால்தான் அவை உருவாக்கப்பட்டு இருக்கின்றன. உங்களின் செயல்நோக்கமே புகை. அதுவே மேகங்களாக உருக்கொண்டுள்ளன. அவை மறைந்து விட்டுள்ளன. எனவே தியானத்துடன் விளையாட்டுத் தன்மையில் இருங்கள். அதை ஆனந்தியுங்கள். அதை ஒரு சாதனமாக ஆக்காதீர்கள். அதுவே இலக்கு. இதுவே புரிந்து கொள்ள வேண்டிய முழு விசயமும் ஆகும்.

புதுப்புது ஆசைகளை உருவாக்காதீர்கள். ஆசைகளின் இயற்கையான தன்மையே அவலம்தான் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். ஆசையின் இயல்பைப் புரிந்துகொள்ள மட்டும் முயலுங்கள், அது அவலமே என்பதை அறிய வருவீர்கள். அப்படியானால் செய்ய வேண்டியது என்ன? செய்ய வேண்டியது ஒன்றுமே இல்லை! ஆசையே அவலம் என்பதில் விழிப்பாக இருந்துகொண்டிருங்கள் - அவ்வளவே. ஆசை கழண்டு விழுகிறது. இப்போதே யோக ஒழுங்குமுறை. பாதையில் நீங்கள் பிரவேசித்து விட்டிருக்கிறீர்கள்.

மேலும் இது உங்களின் தீவிரத்தைப் பொறுத்தது: ஆசையே துயரம் என்னும் உணர்வு உங்களில் மிகவும் ஆழமாக, முழுமையாக இருக்குமானால், நீங்கள் யோகத்தில் நுழைந்திருப்பது மட்டுமல்ல, நீங்கள் ஒரு சித்தராகவும் ஆகிஇருக்கிறீர்கள்; நீங்கள் சித்தி அடைந்திருக்கிறீர்கள்.

உங்களின் தீவிரத்தைப் பொறுத்தே இது இருக்கும். தீவிரம் முழுமையாக இருந்தால் இலக்கை நீங்கள் அடைந்திருக்கிறீர்கள். உங்களின் தீவிரம் முழுமை பெறவில்லை எனில் பாதையில் நீங்கள் பிரவேசித்திருக்கிறீர்கள்.

*5. மனதின் மாறுபாடுகள் ஐந்து. துயரநிலைக்கோ அல்லது துயரமற்ற நிலைக்கோ அவை தோற்றுவாயாக இருக்கமுடியும்.*

*6. அவை: சரியான அறிவு, தவறான அறிவு, கற்பனை, உறக்கம்; ஞாபகம் என்பன.*

அடிமைத்தனத்தின் அல்லது சுதந்திரத்தின் பிறப்பிடமாக மனம் இருக்க முடியும். மனமானது, இந்த உலகத்துக்குள் நாம் நுழைவதற்கான வாயிலாக ஆகிறது. இந்த உலகத்தை விட்டு வெளியேறுவதற்கான வாயிலாகவும் அது ஆகமுடியும். மனம் உங்களை நரகத்துக்கு இட்டுச் செல்கிறது. மனம் உங்களை மோட்சத்துக்கும் இட்டுச் செல்ல முடியும். இது, மனம் எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்பதையே பொறுத் திருக்கிறது. மனதை சரியாகப் பயன்படுத்தினால் தியானம் ஆகிறது. மனதைத் தவறாகப் பயன்படுத்தினால் பைத்தியம் ஆகிறது.

எல்லாருக்குள்ளும் மனம் உள்ளது. இருட்டு, வெளிச்சம் இரண்டுக்கான சாத்தியமும் அதில் உட்பொதிந்துள்ளது. மனம் தன்னளவில் ஒரு எதிரியோ நாண்பனோ அல்ல. நீங்களே அதை ஒரு நண்பனாக ஆக்க முடியும். நீங்களே அதை ஒரு எதிரியாவும் ஆக்க முடியும். அது உங்களையே பொறுத்திருக்கிறது - மனதுக்குப் பின்னால் மறைந்திருக்கிற உங்களையே அது பொறுத்திருக்கிறது. மனதை உங்களின் கருவியாக, உங்களின் பணியாளாக நீங்கள் பயன்படுத்த முடியும். மனமானது முடிவான பேரின்ப நிலையை அடைவதற்கென நீங்கள் கடந்துசெல்லும் வாயிலாக ஆகிறது. நீங்கள் ஒரு அடிமையாக ஆனால் மனம் ஒரு ஆண்டையாக இருக்க அனுமதிக்கப்படுகிறது: அப்போது மனம் எசமானாக ஆகிவிடும்; முடிவான பெருந்துன்ப நிலைக்கும் கார் இருளுக்கும் உங்களை அது இட்டுச் செல்லும்.

யோகத்தின் எல்லா உத்திகளும் எல்லா முறைகளும் எல்லாப் பாதைகளும், உண்மையில் ஒரே ஒரு பிரச்சனையுடனேயே ஆழமாக தொடர்பு கொண்டுள்ளன: அது, மனதைப் பயன்படுத்துவது எவ்வாறு என்பதாகும். சரியாகப் பயன்படுத்தப்பட்டால் மனம் ஒரு நிலையில் - மனம் மறைந்து போகிறது. தவறாகப் பயன்படுத்தப்பட்டால் மனம் ஒரு நிலையில் பெருங்குழப்பமாகவே ஆகிறது - அந்நிலையில் அது ஒன்றுக்கொன்று முரணான, எதிரான, குழப்பமான, பைத்தியக்காரத் தனமான பல குரல்களின் மொத்தமாக ஆகி இருக்கிறது.

மனநல மருத்தவமனையில் இருக்கும் பித்தனும் போதிமரத் தடியில் இருக்கும் புத்தரும் - இருவருமே மனதைப் பயன்படுத்தி இருக்கிறார்கள். இருவரும் மனதின் வழியாகவே கடந்து சென்றிருக்கிறார்கள். ஆகவே மனம் மறைந்து போகிற இடத்தை வந்தடைந்திருக்கிறார் புத்தர்: சரியாகப் பயன்படுத்தப்பட்டால் அது மறைந்து கொண்டே போகிறது; ஒரு கட்டம் வரும்போது அது அறவே இருப்பதில்லை. பித்தனும் மனதை பயன்படுத்தி இருக்கிறான்: தவறாகப் பயன்படுத்தப்பட்டால் மனமானது பிளவுப்பட்டதாக ஆகிறது. தவறாகப் பயன்படுத்தப்பட்டால் மனம் பலவாக ஆகிறது. தவறாகப் பயன்படுத்தப்பட்டால் மனம் ஒரு பெரும் சந்தடியாக ஆகிறது. கடைசியாக, மனம் பைத்தியமாக இருக்கிற போது அங்கு நீங்கள் சுத்தமாக இருப்பதில்லை.

புத்தரின் மனம் முற்றிலுமாக மறைந்துவிட்டிருக்கிறது; புத்தர் தன் முழுமையில் அங்கு பிரசன்னமாக இருக்கிறார். ஒரு பித்தனின் மனம் முழுமையாக அங்கு இருக்கிறது; அவன் தான் முற்றிலுமாக மறைந்து விட்டிருக்கிறான். இவை இரண்டும் இரண்டு துருவங்களாகும். நீங்களும் உங்கள் மனமும் இரண்டு துருவங்கள். அவை இரண்டும் சேர்ந்து இருந்தால் பின் நீங்கள் அவலத்தில்தான் இருப்பீர்கள். ஒன்று நீங்கள் மறைந்துபோக வேண்டி இருக்கும், அல்லது மனம் மறைந்துபோக வேண்டி இருக்கும். மனம் மறைந்தால் நீங்கள் உண்மை நிலையை அடைகிறீர்கள். நீங்கள் மறைந்தால் நீங்கள் பைத்திய நிலையை அடைகிறீர்கள். இவற்றுக்கு இடையில்தான் போராட்டம். மறையப் போவது யார்? நீங்களா? மனமா? இதுதான் சண்டையே. எல்லாப் போராட்டங்களுக்கும் ஆணிவேர் இதுவே.

பதஞ்சலியின் இந்தச் சூத்திரங்கள் மனதைப் பற்றிய புரிதலுக்கு படிப்படியாக உங்களை இட்டுச் செல்லும்: மனம் என்றால் என்ன, என்னென்ன வகையான முறைகளை அது மேற்கொள்கிறது, என்ன வகையான மாறுபாடுகள் (மாடிஃபிக்கேஷன்ஸ்) அதற்குள் வருகின்றன, அதை எவ்வாறு பயன்படுத்தினால் அதைக் கடந்து அப்பால் செல்ல முடியும் ஆகியவைபற்றிய புரிதலுக்கு உங்களை இட்டுச் செல்லும். மேலும் தற்சமயம் உங்களிடம் மனம் மட்டுமே உள்ளது, மனதைத்தவிர வேறு ஒன்றும் உங்களிடம் இல்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். (எனவே) நீங்களும் அதையே பயன்படுத்த வேண்டி இருக்கிறது.

தவறாகக் கையாண்டால் மென்மேலும் கூடுதலான அவலத்துக்குள் நீங்கள் விழுந்து கொண்டே போவீர்கள். அவலத்திலேயே நீங்கள் இருக்கிறீர்கள். பல பிறவிகளாகவே உங்கள் மனதை நீங்கள் தவறாகப் பயன்படுத்தி வந்திருப்பதே இதற்கு காரணம். இதனால் மனமே

எஜமானாக ஆகி இருக்கிறது; நீங்கள் வெறும் அடிமையாகவே இருக்கிறீர்கள். மனதைப் பின்தொடரும் வெறும் ஒரு நிழல்போலவே நீங்கள் இருக்கிறீர்கள். 'நில்' என மனதிடம் உங்களால் சொல்ல முடிவதில்லை. உங்கள் சொந்த மனதிற்கே உங்களால் உத்தரவுபோட முடிவதில்லை. மனம் உங்களுக்கு உத்தரவு போட்டுக்கொண்டு போகிறது - நீங்கள் அதைப் பின்பற்றியாகவேண்டி இருக்கிறது. உங்களின் சீவன் ஒரு நிழலும், அடிமையும், வெறும் கருவியும் ஆக ஆகிவிட்டிருக்கிறது.

மனம் என்பது ஒரு செயல்படு கருவியே தவிர வேறல்ல. உங்களின் கைகளையோ கால்களையோ போன்றதே அது. உங்கள் கால்களுக்கு நீங்கள் கட்டளையிடுகிறீர்கள் - உடனே அவை நடக்கின்றன. நீங்கள் 'நில்' என்றதுமே அவை நின்றுவிடுகின்றன. நீங்களே அதிகாரியாக இருக்கிறீர்கள். என் கையை நான் இயக்க விரும்பினால் அதை நான் இயக்குகிறேன். அதை நான் இயக்க விரும்பவில்லை என்றால் இயக்குவதில்லை. ''என்னை இப்போது நகர்த்து'' என்று கை என்னிடம் கூறமுடியாது. நீ என்ன செய்தாலும் சரியே, இப்போது நான் அசையத்தான் செய்வேன். நீ சொல்வதை நான் கேட்கப் போவதில்லை'' என்று என்னிடம் கை சொல்ல முடியாது. என்னை மீறி என் கை இயங்கத் தொடங்கினால் பின் அது உடலின் பெரும் குழப்பமாகவே ஆகும். இதுதான் மனதின் விசயத்தில் நிகழ்ந்திருக்கிறது.

நீங்கள் நினைக்க விரும்புவதில்லை. மனமோ நினைத்துக் கொண்டே போகிறது. நீங்கள் தூங்க விரும்புகிறீர்கள். உங்கள் படுக்கைமேல் படுத்துக்கொண்டு இருக்கிறீர்கள், புரண்டுகொண்டு இருக்கிறீர்கள். நீங்கள் தூங்க விரும்புகிறீர்கள். ஆனால் மனம் தொடர்கிறது. ''முடியாது, நான் ஒன்றைப் பற்றிச் சிந்திக்கப் போகிறேன்'' என்று மனம் கூறுகிறது. ''நில்'' என நீங்கள் சொல்லிக்கொண்டே போகிறீர்கள். அதுவோ ஒருபோதும் உங்கள் பேச்சைக் கேட்பதில்லை. மேலும் இதுகுறித்து உங்களால் எதுவும் செய்யவும் முடிவதில்லை. மனமும் ஒரு செயல்படு கருவிதான். ஆனால் அதற்கு நீங்கள் அளவுக்கு அதிகமான இடம் தந்திருக்கிறீர்கள். அது சர்வாதிகாரியாக மாறி விட்டிருக்கிறது. அதற்குரிய இடத்தில் அதை இருக்க வைக்க நீங்கள் முயன்றால் அது கடுமையாக எதிர்த்துப் போராடும்.

புத்தரும் மனதைப் பயன்படுத்துகிறார். அவரது மனம் உங்களின் கைகால்களைப் போலவே பயன்படுகிறது. என்னிடம் வரும் மக்கள் கேட்டபடியே இருக்கும் ஒரு கேள்வி. ''விழிப்படைந்த ஞானியின் மனதுக்கு என்ன ஆகிறது? அது அப்படியே மறைந்து விடுகிறதா? அவரால் அதைப் பயன்படுத்த முடியுமா?''

ஒரு அதிகாரி என்னும் முறையில் அது மறைந்துவிடுகிறது. ஒரு பணியாள் என்னும் முறையில் அது தொடர்ந்து நிலவுகிறது. கீழ்ப்படிந்து நடக்கிற ஒரு கருவியாக தொடர்ந்து அது இருக்கிறது. ஒரு புத்தர் அதைப் பயன்படுத்த விரும்பினால் அவரால் அதைப் பயன்படுத்த முடியும். உங்களுடன் புத்தர் பேசும்போது அவர் அதைப் பயன்படுத்த முடியும். உங்களுடன் புத்தர் பேசும்போது அவர் அதைப் பயன்படுத்தவே வேண்டி இருக்கும். ஏனெனில் மனம் செயல்படாவிட்டால் பேசுவதற்கு இயலாது போகும். மனதை உபயோகித்தே ஆகவேண்டி உள்ளது. புத்தரிடம் நீங்கள் போகிறீர்கள். இதற்கு முன்பும் நீங்கள் அவரிடம் வந்திருக்கிறீர்கள் என்று உங்களை அவர் அடையாளம் கண்டு கொள்கிறார் என்றால், அதற்கு மனதை அவர் பயன்படுத்த வேண்டியே இருக்கிறது. மனம் இல்லாவிட்டால் அடையாளம் காண்பது என்பது முடியாது. மனம் இல்லாவிட்டால் நினைவு என்பது இராது. ஆனால், அவர் மனதை பயன்படுத்துகிறார்; உங்களையோ மனம் பயன்படுத்திக் கொண்டிருக் கிறது என்னும் இந்தப் பாகுபாட்டை நினைவில் கொள்ளுங்கள். பயன்படுத்த விரும்பும் போதெல்லாம் அதை அவர் பயன்படுத்துகிறார். பயன்படுத்த விரும்பாத போதெல்லாம் அதை அவர் பயன்படுத்துவ தில்லை. அது அவருக்கு அடங்கிய கருவியாக இருக்கிறது. அவர்மீது அது ஆதிக்கம் செலுத்த முடிவதில்லை.

எனவே புத்தர் ஒரு கண்ணாடியைப் போன்று இருக்கிறார். கண்ணாடி முன் நீங்கள் வந்தால் அது உங்களை எதிரொளிக்கிறது. ஏனெனில் கண்ணாடி வெறுமையாக - தூய்மையாக உள்ளது. நீங்களோ கண்ணாடியைப் போல இல்லை. ஒருவரை நீங்கள் பார்க்கிறீர்கள். அவர் போய்விட்ட பின்பும் சிந்தித்தல் தொடர்கிறது, எதிரொளிப்பு தொடர்கிறது. அவரைப்பற்றி நீங்கள் எண்ணிக் கொண்டே போகிறீர்கள். மேலும் நீங்கள் நிறுத்த விரும்பினாலும் மனம் அதைக் கண்டுகொள்வ தில்லை.

மனதின்மீது தேர்ச்சி பெறுவதே யோகம். ''மனத்தின் மரணம்'' என்று பதஞ்சலி கூறும்போது அதற்குப் பொருள் இதுதான்: ஒரு எஜமான் என்னும் முறையில் அது மறைந்துவிடுகிறது. மனம் ஒரு எஜமானாக இல்லாமல் போகிறது. அதன்பின் அது ஆதிக்கம் செலுத்த முடியாது. அதன்பின் சொன்னபடி கேட்கும் ஒரு கருவியாகவே அது இருக்கிறது. நீங்கள் ஆணையிட்டால் அது செயல்படுகிறது. நீங்கள் ஆணையிடாவிட்டால் அது பேசாமல் இருக்கிறது. உங்களின் ஏவலை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டு இருக்கிறது. தன்னைத் தானே நிலைநாட்டிக் கொள்ள அதனால் முடியாது. அதன் முனைப்பெல்லாம்

அடங்கிப் போயிருக்கிறது. அதன் முரட்டுத்தனம் எல்லாம் தொலைந்து போயிருக்கிறது. உங்களைக் கட்டுப்படுத்த அது முயல்வதில்லை.

இப்போதிருப்பதோ நேர்மாறான நிலவரம். ஆயின் தலைவர் ஆவது எவ்வாறு? நீங்கள் விரும்பினால் மனதைப் பயன்படுத்தியும், விரும்பவில்லை என்றால் அதை அதனிடத்தில் ஒதுக்கி வைத்துவிட்டும் மவுனமாக இருக்கமுடிவது எவ்வாறு? இதற்கு மனதின் முழு செயல்பாட்டு முறையையும் நாம் புரிந்துகொள்ள வேண்டி இருக்கும். இப்போது சூத்திரத்துக்குள் நுழைவோம்.

**முதலாவது:**

**மனதின் மாறுபாடுகள் ஐந்து. துயர நிலைக்கோ அல்லது துயரமற்ற நிலைக்கோ அவை தோற்றுவாயாக இருக்க முடியும்.**

புரிந்துகொள்ள வேண்டிய முதல் விசயம்: மனமானது உடம்பிலிருந்து வேறுபட்ட ஒன்று அல்ல. மனம் என்பது உடலின் ஒரு பாகமே என்பதை நினைவில் கொள்ளுங்கள். அது உடல்தான், ஆனால் ஆழமான நுட்பமுடையது. அது ஒரு உடல்நிலை, ஆனால் மிகவும் நுண்மையானது; மிகவும் நுணுக்கமானது. அதை உங்களால் பற்றிப் பிடிக்க முடியாது. ஆனால் உடலின் மூலமாக அதன்மீது தாக்கம் ஏற்படுத்த உங்களால் முடியும். ஒரு போதைப் பொருளை நீங்கள் உட்கொண்டால், எல்எஸ்டி.யையோ மரிஜுவானாவையோ இவை போன்ற ஒன்றையோ அல்லது ஆல்கஹாலையோ நீங்கள் உட்கொண்டால், திடீரென மனம் பாதிக்கப்படுகிறது. ஆல்கஹால் போவது உடலுக்குள்தான், மனத்துக்குள் அல்ல. ஆனால் மனம் பாதிக்கப் படுகிறது. உடலின் மிகவும் நுண்மையான பகுதியே மனம்.

இதற்கு எதிர்மறையாக இருப்பதும் உண்மையே: மனதில் தாக்கம் ஏற்படுத்தினால் உடல் பாதிக்கப்படுகிறது. வசியத்தில் இது நடக்கிறது. நடக்க முடியாத ஒரு மனிதன், பக்கவாதம் கண்டிருக்கிற ஒரு மனிதன், வசிய நிலையின்கீழ் நடக்க முடிகிறது. உங்களுக்குப் பக்கவாதம் இல்லாதிருக்கலாம். ஆனால் மனோவசிய நிலைக்கு ஆட்பட்ட நிலையில் ''இப்போது உன் உடல் பக்கவாதத்தால் பீடிக்கப்பட்டுள்ளது. இனி உன்னால் நடக்க முடியாது'' என உங்களுக்குச் சொல்லப்படுமானால் உங்களால் நடக்க முடியாது. பக்கவாதத்தால் பாதிக்கப்பட்டுள்ள மனிதன் வசிய நிலைக்கு ஆட்பட்ட நிலையில் நடக்கமுடிகிறது. இதில் என்ன நடக்கிறது? வசியம் மனதுக்குள் செல்கிறது. வசியக் கருத்து மனத்துக்குள் செல்கிறது. பின் அதை உடல் பின்பற்றுகிறது.

புரிந்துகொள்ள வேண்டிய முதல் விசயம்: மனமும் உடலும் இரண்டல்ல என்பதாகும். பதஞ்சலியின் மிக ஆழமான கண்டுபிடிப்புகளில் இது ஒன்று. இப்போது நவீன அறிவியல் இதை அங்கீகரிக்கிறது: மேற்கைப் பொறுத்தவரை இது மிகவும் சமீபத்திய கண்டுபிடிப்பே. உடலும் மனமும் என்று இருமையில் பேசுவது சரியல்ல என்று இப்போது அவர்கள் கூறுகிறார்கள். இப்போது அதை 'மனஉடல்' (சைக்கோசோமா) என்று அவர்கள் கூறுகிறார்கள். இந்த இரண்டு பதங்களும் ஒரே நிகழ்வின் இரண்டு செயல்பாடுகளே தவிர வேறில்லை. ஒரு துருவம் மனம். மற்ற துருவம் உடல். எனவே எந்தத் துருவத்தில் இருந்தும் நீங்கள் செயல்பட்டு மற்ற துருவத்தில் மாற்றத்தை ஏற்படுத்த முடியும்.

உடம்பில் ஐந்து செயல் உறுப்புகள் (இந்திரியங்கள்) உள்ளன. ஐந்து தொழில் கருவிகள் உள்ளன. மனதுக்கும் ஐந்து வகையான வெளிப்பாட்டு நிலைகள், ஐந்து விதமான செயல்பாட்டு முறைகள் உள்ளன. மனமும் உடலும் ஒன்றே. உடல் ஐந்து செயல்பாடுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மனமும் ஐந்து செயல்பாடுகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. ஒவ்வொரு செயல்பாட்டையும் இனி நாம் விரிவாகப் பார்ப்போம்.

இந்த சூத்திரத்தின் இரண்டாவது பகுதி:

**துயர நிலைக்கோ அல்லது துயரமற்ற நிலைக்கோ அவை தோற்றுவாயாக ஆக முடியும்.**

மனத்தின் இந்த ஐவகை மாறுபாடுகள் - அவற்றின் மொத்தமாகிய இந்த மனம் - ஆழமான துயரத்துக்குள், துக்கத்துக்குள், அவலத்துக்குள் உங்களை இட்டுச்செல்ல முடியும். அல்லது இந்த மனதை - அதன் செயல்பாட்டைச் சரியாக நீங்கள் பயன்படுத்தினால் அது உங்களை அவலமற்ற நிலைக்கும் இட்டுச் செல்ல முடியும். அது உங்களை அதிகபட்ச அவலமற்ற நிலைக்கு இட்டுச்செல்ல முடியும்.

''அவலமற்ற நிலை'' என்னும் சொல் மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். ஆனந்தத்துக்குள் மனம் உங்களை இட்டுச் செல்லும் என்று பதஞ்சலி கூறுவதில்லை. மனதை தவறாகப் பயன்படுத்தினால், அதன் அடிமையாக நீங்கள் இருந்தால், அது உங்களை அவலத்துக்குள் இட்டுச் செல்ல முடியும்; நீங்கள் தலைவர் ஆகிவிட்டால் மனம் உங்களை அவலமற்ற நிலைக்கு இட்டுச் செல்லமுடியும் - ஆனந்த நிலைக்குள் அல்ல. ஏனெனில் ஆனந்தம் என்பது உங்களின் சுய நிலை. அதனுள் உங்களை இட்டுச்செல்ல மனதால் முடியாது. ஆனால்

அவலமற்ற நிலைக்குள் நீங்கள் இருந்தால் அக ஆனந்தம் பாய்ந்துபரவத் தொடங்குகிறது.

ஆனந்தம் எப்போதும் உள்ளுக்குள் இருக்கிறது. அது உங்களின் உள்ளார்ந்த இயல்பாகும். சாதித்து சம்பாதித்துப் பெறவேண்டியதல்ல அது; சென்று சேரவேண்டிய ஒரு தொலைவிடம் அல்ல அது. அதிலேயே நீங்கள் பிறந்திருக்கிறீர்கள். ஏற்கனவே அதை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். ஏற்கனவே அது இருக்கிறது. எனவேதான் மனம் உங்களை அவலத்துக்கும் இட்டுச் செல்ல முடியும், ஆனந்தத்துக்கும் இட்டுச்செல்ல முடியும் என்று பதஞ்சலி கூறுவதில்லை. அவர் மிகவும் அறிவியல் ரீதியானவர். மிகவும் துல்லியமானவர். உண்மையில்லாத எந்தத் தகவலையும் உங்களுக்கு தருகிற ஒரே ஒரு சொல்லைக்கூட அவர் பயன் படுத்தமாட்டார். அவலம் அல்லது அவலமின்மை என்று மட்டுமே அவர் கூறுகிறார்.

உண்மையைத் தேடுவோர் தன்னிடம் வரும்போதெல்லாம் புத்தரும் பலதடவைகள் கூறுகிறார். தேடுவோர் ஆனந்தத்தையே தேடுகிறார்கள். எனவே அவர்கள் புத்தரிடம், ''ஆனந்தத்தை - அறுதியான பேரின்பத்தை நாங்கள் அடைவது எப்படி?'' என்று கேட்பார்கள். அதற்கு அவர், ''எனக்குத் தெரியாது. ஆனால் அவலமற்ற நிலைக்கு, அவலம் இல்லாத ஒரு நிலைக்கு உங்களை இட்டுச்செல்லும் பாதையை நான் காட்ட முடியும். ஆனந்தத்தைப்பற்றி நேரடியாக நான் எதுவும் கூறுவதற்கில்லை. மறைமுகமாகவே குறிப்பிட முடியும். அவலமற்ற உலகுக்குள் பிரவேசிப்பது எப்படி என்பத்தை உங்களுக்கு நான் காட்ட முடியும்.'' என்பார்.

எல்லா முறைகளும் இதைத்தான் செய்ய முடியும். அவலமற்ற நிலையில் ஒருதடவை நீங்கள் இருக்கும்போதே அக ஆனந்தம் பெருக்கெடுத்து ஓடத் தொடங்குகிறது. ஆனால் அது மனதில் இருந்து வருவதில்லை. உள்ளிருக்கும் சீவனில் இருந்தே வருகிறது. அதை மனதால் உருவாக்க முடியாது. மனம் அவலத்தில் இருந்தால் அந்நிலையில் மனம் ஒரு தடுப்பாகிறது. மனம் அவலமற்ற நிலையில் இருந்தால் அந்நிலையில் மனம் ஒரு திறப்பாகிறது. ஆனால் தானாக எதையும் அது உருவாக்குவதில்லை. தானாக எதையும் அது செய்வதில்லை.

சன்னல்களை நீங்கள் திறக்கிறீர்கள், உடனே சூரியனின் கதிர்கள் உள்ளே நுழைகின்றன. சன்னல்களை திறப்பதன்மூலம் சூரியனை நீங்கள் உண்டாக்குவதில்லை. சூரியன் ஏற்கனவே அங்கே இருக்கிறது. அங்கு

அது இல்லை என்றால் சன்னல்களை திறப்பதனாலேயே கதிர்கள் பிரவேசித்து விடாது. உங்கள் சன்னல் மூடி இருந்தால் அது ஒரு தடையாக ஆகமுடியும். சூரியக் கதிர்கள் வெளியே இருக்கலாம். சன்னல் அதற்கு தடைசெய்யவும் முடியும் அல்லது அதற்கு வழிவிடவும் முடியும், ஒரு வாயிலாக ஆகவும் முடியும். ஆனால் அதுவாக எதையும் உருவாக்கிவிட முடியாது. கதிர்களை அதனால் உண்டாக்க முடியாது. கதிர்கள் ஏற்கனவே அங்கு இருக்கின்றன.

துன்ப நிலையில் இருக்கும்போது உங்கள் மனம் மூடிக்கொள்கிறது. துன்ப நிலையின் பண்புகளில் ஒன்று மூடிக் கொள்ளும் தன்மை என்பதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் அவலத்தில் இருக்கும் போதெல்லாம் நீங்கள் அடைபட்டுவிடுகிறீர்கள். கவனித்துப் பாருங்கள் - ஏதாவது துயரத்தை நீங்கள் உணரும் போதெல்லாம் உலகத்துக்கு உங்களை மூடிக் கொண்டிருக்கிறீர்கள். உங்களின் மிகவும் அந்தரங்க நண்பனுக்கும் கூட கதவை சாத்திவிட்டிருக்கிறீர்கள். துன்பத்தில் இருக்கும் போது உங்கள் மனைவிக்கும் உங்கள் குழந்தைக்கும் உங்கள் காதலிக்கும் கூட நீங்கள் வெளிப்படுத்தாமல் இருக்கிறீர்கள். ஏனெனில் அவலம் என்பது உங்களின் உள்புறத்தில் சுருக்கத்தை ஏற்படுத்துகிறது. நீங்கள் சுருங்குகிறீர்கள். எல்லாப் புறங்களிலும் உங்கள் கதவுகளை நீங்கள் அடைத்துவிட்டிருக்கிறீர்கள்.

எனவேதான் துன்புறும் மனிதர்கள் தற்கொலையைப்பற்றி யோசிக்கத் தலைப்படுகிறார்கள். தற்கொலை என்றால் முழு அடைப்பு - எந்த விதமான செய்திப் போக்குவரத்துக்கும் சாத்தியமில்லை. எந்த ஒரு கதவுக்கும் வாய்ப்பில்லை. மூடிய நிலையில் ஒரு கதவு இருப்பதுகூட ஆபத்தானதே. யாராவது அதைத் திறந்துவிட்டுவிட முடியுமே; எனவே கதவே இல்லாமல் செய்துவிடுகிறார்கள். எல்லா வாய்ப்புக்களையும் நாசமாக்கி விடுகிறார்கள். ''எந்த ஒரு திறப்புக்குமான எல்லாவிதமான சாத்தியத்தையும் இப்போது நான் அழித்துக் கொள்ளப் போகிறேன்; இப்போது என்னை முற்றிலுமாக நான் அடைத்துக்கொண்டுவிட்டேன்'' என்பதுவே தற்கொலை என்பதற்கு அர்த்தம்.

அவலமாக நீங்கள் உணரும் போதெல்லாம் தற்கொலை செய்துகொள்வதைப்பற்றி நீங்கள் யோசிக்கத் தலைப்படுகிறீர்கள். நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும் தருணங்களில் எல்லாம் தற்கொலைபற்றி உங்களால் நினைத்துக்கூடப் பார்க்க முடிவதில்லை. உங்களால் கற்பனை செய்துகூட பார்க்க முடியாது. ''மக்கள் ஏன் தற்கொலை செய்து கொள்கிறார்கள்? வாழ்க்கை எவ்வளவு சந்தோசமானது! வாழ்க்கை எவ்வளவு இனிமையான இசை போல இருக்கிறது! அப்படி இருக்க ஏன்

மக்கள் தம் வாழ்வை / உயிரை அழித்துக் கொள்கிறார்கள்?'' இதை யோசிப்பதற்குகூட அந்த நேரத்தில் உங்களுக்குத் தோன்றுவதில்லை. அது அசாத்தியமானதாக தோன்றுகிறது.

நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும்போது ஏன் அது அசாத்தியமானதாக தோன்றுகிறது? ஏனென்றால் நீங்கள் திறந்திருக்கிறீர்கள். வாழ்வு உங்களுக்குள் பாய்ந்து கொண்டிருக்கிறது. நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிற போது நீங்கள் ஒரு பரந்த - விரிந்த ஆன்மாவைப் பெற்றிருக்கிறீர்கள். வருத்தமாக இருக்கிற போதோ சுருங்கிய - சிறிய ஆன்மாவைப் பெற்றிருக்கிறீர்கள்.

ஒருவர் மகிழ்ச்சி அற்று இருக்கிற போது அவரைத் தொட்டுப்பாருங்கள். அவர் கைகளை உங்கள் கைகளில் எடுத்துப் பாருங்கள். அவர்கை செத்ததுபோல் இருப்பதை உணர்வீர்கள். அதில் எந்த உயிரோட்டமும் இருக்காது. அன்பு, இதம் எதுவும் இருக்காது. விரைத்துப் போய் காணப்படும். ஒரு சவத்தின் கைபோல் இருக்கும். ஒருவர் மகிழ்ச்சியாக இருக்கும்போது அவர் கையைத் தொட்டுப் பாருங்கள். அதில் செய்திப் பரிமாற்றம் இருக்கும். ஆற்றல் பாய்ந்து ஓடிக் கொண்டு இருக்கும். அவரது கை உயிரற்றதாக இராது. அவரது கை ஒரு பாலமாக ஆகி இருக்கிறது. அவரது கரத்தின் வழியாக ஏதோ ஒன்று உங்களிடம் வந்துசேர்கிறது, உங்களுடன் தொடர்பு கொள்கிறது, உறவாடுகிறது. ஒரு இதம் பரவுகிறது. அவர் உங்களை அடைகிறார். உங்களுக்குள் பாய்ந்தோட ஒவ்வொரு முயற்சியும் செய்கிறார். நீங்களும் அவருக்குள் பாய்ந்தோடுவதற்கு அவர் உங்களை அனுமதிக்கிறார்.

இரண்டு மனிதர்கள் மகிழ்ச்சியாக இருக்கும்போது அவர்கள் ஒரே மனிதராக ஆகிறார்கள். எனவேதான் காதலில் ஒருமை நிகழ்கிறது. தாங்கள் இருவர் அல்லர் என்பதை காதலர்கள் உணரத் தொடங்கு கிறார்கள். அவர்கள் இருவர்தான். ஆனால் தாம் இருவர் அல்ல என அவர்கள் உணரத் தொடங்குகிறார்கள். ஏனெனில் அன்பில் அவர்கள் எந்த அளவுக்கு மகிழ்ச்சியாய் இருக்கிறார்கள் என்றால் ஒரு கரைதல் நிகழ்கிறது. அவர்கள் ஒருவருக்குள் ஒருவர் உருகுகிறார்கள். ஒருவருக்குள் ஒருவர் பாய்ந்தோடுகிறார்கள். எல்லைக் கோடுகள் கரைகின்றன, வரையறைகள் மங்கிமறைகின்றன. தம்மையே அவர்கள் மறந்து இருக்கிறார்கள். அந்தக் கணத்தில் அவர்கள் ஒருயிராக ஆகிறார்கள்.

நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும்போது மற்றவர்களுக்குள் நீங்கள் பாய்ந்தோட முடியும். மற்றவர்கள் உங்களுக்குள் பரவ அவர்களை

நீங்கள் அனுமதிக்க முடியும். ஒவ்வொருவரும் உங்களுக்குள் பரவ நீங்கள் இடம் தரும்போது, ஒவ்வொருவருக்குள்ளும் நீங்கள் பாய்ந்து ஓடும்போது நீங்கள் வாழ்வைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறீர்கள். அந்தக் கொண்டாட்டமே மாபெரும் வழிபாடாகும்; தியானத்தின் மிக உயர்ந்த சிகரமாகும்.

துன்பத்தில் இருக்கும்போது நீங்கள் தற்கொலைசெய்து கொள்ளலாமென எண்ண ஆரம்பிக்கிறீர்கள். துன்பத்தில் இருக்கும்போது அழிவைப்பற்றி நீங்கள் நினைக்க ஆரம்பிக்கிறீர்கள். துன்பத்தில் இருக்கும் போது கொண்டாட்டத்துக்கு நேர் எதிர்நிலையில் நீங்கள் இருக்கிறீர்கள். நீங்கள் பழி சுமத்துகிறீர்கள். உங்களால் கொண்டாட முடிவதில்லை. எல்லாவற்றின் மீதும் உங்களுக்கு வன்மம் - மனத்தாங்கல் இருக்கிறது. உங்களால் பாய்ந்தோட முடியாது. உங்களால் உறவாட முடியாது. எவரும் உங்களுக்குள் பரவவும் உங்களால் அனுமதிக்க முடியாது. நீங்கள் ஒரு தீவாக ஆகி இருக்கிறீர்கள். முற்றிலுமாக மூடப்பட்டு இருக்கிறீர்கள். இது ஒரு சவத்தின் நிலைக்கு ஒப்பானதாகும். நீங்கள் திறந்து கொண்டும் பாய்ந்து ஓடிக்கொண்டும் இருக்கும்போது மட்டுமே உயிர் இருக்கிறது. நீங்கள் பயமற்று அச்சமற்று அடைப்பற்று பாதுகாப்பற்று, கொண்டாட்டமாக இருக்கும் போது மட்டுமே உயிர் இருக்கிறது.

மனதால் இரண்டு காரியங்களைச் செய்ய முடியும் என்கிறார் பதஞ்சலி. அது அவலத்தை உருவாக்க முடியும். நீங்கள் அவலத்தில் உழல முடியும் வகையில் மனதை உங்களால் பயன்படுத்த முடியும். அதை அப்படிப் பயன்படுத்தியிருக்கிறது நீங்கள்தான். இந்த வேலையில் நீங்கள் தேர்ந்த திறமைசாலிகளாக இருக்கிறீர்கள். இதைப்பற்றி அதிகமாகச் சொல்லத் தேவையில்லை. ஏனெனில் ஏற்கனவே அதை நீங்கள் நன்கு அறிந்திருக்கிறீர்கள். அவலத்தை உருவாக்குவது எப்படி என்னும் கலை உங்களுக்கு கைவந்த கலையாக இருக்கிறது. இதை நீங்கள் உணராமல் இருக்கலாம். ஆனால் அதைத்தான் தொடர்ச்சியாக நீங்கள் செய்து கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் தொடுவதெல்லாம் துயரத்தின் தோற்றுவாய் ஆகிறது. எதைத் தொட்டாலும் அப்படியே என்கிறேன்!

ஏழைகளை நான் பார்த்திருக்கிறேன். அவர்கள் வெளிப்படை யாகவே, அவலத்தில் இருக்கிறார்கள். அவர்கள் ஏழைகள். வாழ்வின் அடிப்படையான தேவைகளே அவர்களுக்கு நிறைவேறவில்லை. பின் நான் பணக்காரர்களைப் பார்க்கிறேன், அவர்களும் பரிதாபமானவர் களாகவே இருக்கிறார்கள். பணத்தால் எந்தப் பயனுமில்லை என்று இந்த பணக்கார மனிதர்கள் நினைக்கிறார்கள். அது சரியல்ல. செல்வம்

கொண்டாட்டத்துக்கு இட்டுச் செல்ல முடியும். ஆனால் கொண்டாடும் மனநிலை உங்களிடம் இல்லை. எனவே நீங்கள் ஏழையாக இருந்தால் அவலத்தில் இருக்கிறீர்கள். செல்வந்தராக ஆகிவிட்டாலும் நீங்கள் அதிகமான அவலத்திலேயே இருக்கிறீர்கள். செல்வங்களை நீங்கள் உங்களின் உடைமையாக்கிய உடனேயே அவை மதிப்பற்றவையாக - பயனற்றவையாக ஆகிவிடுகின்றன.

மைதாஸ் என்ற கிரேக்க மன்னனின் கதையை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். அவன் தொட்டதெல்லாம் பொன்னாக மாறியதாம். நீங்கள் பொன்னையே தொட்டாலும் உடனடியாக அது மண்ணாக மாறிவிடுகிறது. குப்பையாக மாறிவிடுகிறது. உடனே இந்த உலகில் ஒன்றுமே இல்லை, செல்வங்கள்கூட பயனற்றவை என நீங்கள் நினைக்கிறீர்கள். அப்படி அல்ல. மாறாக உங்கள் மனதால் கொண்டாட முடிவதில்லை. அவலமற்ற நிலை எதிலும் உங்கள் மனத்தால் பங்கேற்க முடியாது. சொர்க்கத்துக்கே நீங்கள் அழைக்கப்பட்டாலும் அங்கு நீங்கள் சொர்க்கத்தைக் காண மாட்டீர்கள்; அங்கு ஒரு நரகத்தையே உருவாக்குவீர்கள். நீங்கள் இப்போது இருக்கிற நிலையில் நீங்கள் எங்கெங்கு போனாலும் உங்களுக்குள் இருக்கும் நரகத்தையும் கூட எடுத்துக்கொண்டே போவீர்கள்.

நரகமும் மோட்சமும் புவியியல் பிரதேசங்கள் அல்ல, மனநிலைகளே என்று ஒரு அராபியப் பழமொழி கூறுகிறது. மேலும் எவரும் மோட்சத்துக்குள்ளேயோ நரகத்துக்குள்ளேயோ நுழைவதில்லை. தங்களுக்குள் இருக்கும் மோட்சத்துடனோ அல்லது நரகத்துடனோ தான் ஒவ்வொருவரும் நுழைகிறார்கள். நீங்கள் எவ்விடத்துக்குப் போனாலும் அவ்விடத்தை நரகமாக அல்லது மோட்சமாக ஆக்கும் உங்கள் திறனையும் உடன்கொண்டே செல்கிறீர்கள். உங்களுக்குள் ஒரு படம்காட்டும் கருவி இருக்கிறது: உங்களுக்குள் இருக்கும் பார்வையை உடனடியாக நீங்கள் புறத்தின்மீது படிவித்துப் பார்க்கிறீர்கள்.

ஆனால் பதஞ்சலி எச்சரிக்கையாக இருக்கிறார். அவலம் அல்லது அவலமின்மை என்றே அவர் கூறுகிறார். அதாவது நேரடி அவலம், எதிர்மறை அவலம் என்கிற ரீதியிலேயே பேசுகிறார் - ஆனந்தம் என்று கூறுவதில்லை. மனத்தால் உங்களுக்கு ஆனந்தத்தை வழங்க முடியாது. யாருமே வழங்க முடியாது. அது உங்களுக்குள் மறைந்துள்ளது. அவலமற்ற ஒரு நிலையில் மனம் இருக்கையில் ஆனந்தமானது பொங்கிப் பெருக ஆரம்பிக்கிறது. அது மனதில் இருந்து வந்துகொண்டிருக்க வில்லை, அதற்கும் அப்பால் இருந்து வந்துகொண்டிருக்கிறது. எனவேதான் அவை துயர நிலைக்கோ அல்லது துயரமற்ற நிலைக்கோ

பிறப்பிடமாக இருக்க முடியும் என்கிறார் அவர். மனதின் மாறுபட்ட தோற்றங்கள் ஐந்து ஆகும்.

**இரண்டாவது சூத்திரம்:**

**அவை: சரியான அறிவு, தவறான அறிவு, கற்பனை, உறக்கம், ஞாபகம் என்பனவாம்.**

முதலாவது: **பிரமாணம், அதாவது சரியான அறிவு.** வடமொழிச் சொல்லான பிரமாண் என்பது மிகவும் அழகானது. உண்மையாகவே அதை மொழிபெயர்த்தல் முடியாது. 'சரியான அறிவு' என்பது ஒரு நிழலான மொழிபெயர்ப்புத்தான்; துல்லியமான பொருளைத் தருவது அல்ல. ஏனெனில் பிரமானம் என்பதை மொழிபெயர்க்க முடிவதற்கான சொல் இல்லை. பிரமாண் என்பது பிரமான என்னும் வேர்ச்சொல்லில் இருந்து வருகிறது. இதைக் குறித்து புரிந்துகொள்ள வேண்டிய விசயங்கள் பல உள்ளன:

மனதுக்கு ஒரு திறன் இருக்கிறது என பதஞ்சலி கூறுகிறார். அந்தத் திறனா்னது சரியாக நெறிப்படுத்தப்பட்டால், சரியாகச் செலுத்தப்பட்டால் அப்போது அறியக்கூடியது எதுவாயினும் அது உண்மையானது ஆகும். அது, தானே விளங்கும் உண்மை ஆகும். இதுபற்றி நமக்குத் தெரிந்திருப்பதில்லை. ஏனெனில் இதனை ஒருபோதும் நாம் பயன்படுத்தியதில்லை. அந்தத் திறன்கொண்ட பகுதி இன்னும் பயன்படுத்தப்படாமலே இருந்து வருகிறது. அது எப்படி என்றால்.... அறை இருட்டாக இருக்கிறது. அதனுள் நீங்கள் நுழைகிறீர்கள். உங்களிடம் ஒரு கை விளக்கு (டார்ச்) இருக்கிறது. ஆனால் அதை நீங்கள் பயன்படுத்திக்கொண்டில்லை. எனவே அறை இருட்டாகவே இருக்கிறது. நீங்கள் இங்கொரு மேசையின்மீதும் அங்கொரு நாற்காலியின்மீதுமாக இடறிக்கொண்டே போகிறீர்கள். இத்தனைக்கும் உங்களிடம் ஒரு கை விளக்கு இருக்கிறது. ஆனால் அதைப் பொருத்த வேண்டும். விளக்கைப் பொருத்தியதுமே உடனடியாக இருட்டு மறைகிறது. அதன்பின் எங்கெல்லாம் வெளிச்சம் காட்டப்படுகிறதோ - பாய்ச்சப் படுகிறதோ அவ்விடத்தையெல்லாம் நீங்கள் அறிகிறீர்கள். குறைந்த பட்சம் அந்தப் பகுதி துலக்கமாக ஆகிறது. தானே தெளிவாக விளங்குவதாகிறது.

பிரமாணம் அதாவது சரியான அறிவு அல்லது ஞானம் என்னும் திறன் மனதுக்கு இருக்கிறது. அந்த விளக்கை ஏற்றுவது எப்படி என்பதை ஒருமுறை நீங்கள் அறிந்ததுமே, பின் எங்கெல்லாம் அந்த ஒளியை நீங்கள் திருப்புவீர்களோ அங்கெல்லாம் சரியான அறிவு மட்டுமே பிரகாசிக்கிறது. அதை அறியாதவரை, நீங்கள் அறிந்திருப்பவை எவையானாலும் அவை யாவும் தவறானவையாகவே இருக்கும்.

தவறான அறிவுத் திறனும் - தவறாக அறியும் திறனும் - மனதுக்கு இருக்கிறது. இந்த 'தவறான அறிவு' என்பது வடமொழியில் 'விபர்யய' அதாவது மாயையானது, மித்யை எனப்படுகிறது. இந்தத் திறனும் உங்களுக்கு இருக்கிறது. நீங்கள் மதுவை உட்கொள்கிறீர்கள். என்ன நிகழ்கிறது? உலகம் முழுவதுமே ஒரு 'விபர்யய' ஆக ஆகிறது; முழு உலகமும் மாயமானதாக மாறுகிறது. அங்கே இல்லாதவற்றை எல்லாம் இருப்பவையாகக் காண ஆரம்பிக்கிறீர்கள்.

என்ன நேர்ந்திருக்கிறது? எந்தப் பொருளையும் புதிதாக உண்டாக்க மதுவால் முடியாது. உங்களின் உடலிலும் மூளையிலும் மது ஏதோ வேலை செய்கிறது. விபர்யய என பதஞ்சலி அழைக்கும் மையத்தில் மது வேலை செய்ய ஆரம்பிக்கிறது. எதையும் உருமாற்றம் செய்யும் ஒரு மையம் மனத்தில் இருக்கிறது. அந்த மையம் வேலைசெய்யத் தொடங்கியதுமே எல்லாமே கோணலாகிறது.

ஒரு கதை என் நினைவில் இருந்து வருகிறது.... ஒரு தடவை முல்லா நசுருதீனும் அவரது நண்பரும் ஒரு மதுக்கடையில் குடித்துக் கொண்டிருந்தார்கள். மூக்குமுட்டக் குடித்துவிட்டு இருவரும் வெளியில் வந்தார்கள். நசுருதீன் குடியில் நீண்டகாலம் அனுபவம் பெற்ற குடிகாரர். மற்றவர் புதுசு. எனவே அவருக்குப் போதை அதிகமாக ஏறிவிட்டது. அந்த மற்றவர் சொன்னார், ''இப்ப எனக்கு கண்ணும் தெரிய மாட்டேங்குது, காதும் கேட்க மாட்டேங்குது. என்னால ஒழுங்கா எட்டு எடுத்துவைக்கக்கூட முடிய மாட்டேங்குது. எப்படி நான் எங்க வீட்டுக்குப் போய்ச் சேரப் போறேன்? குருவே, நீங்கதான் எனக்கு வழிகாட்டணும்.'' என்றார்.

''முதல்ல நடக்க ஆரம்பி. கொஞ்ச தூரம் நடந்ததும் இரண்டு பாதைகள் தெரியக்கூடிய ஒரு இடத்துக்கு வருவாய். ஒன்று வலது பக்கமா போகும். மற்றது இடதுபக்கமா போகும். நீ இடதுபக்கமே போ. ஏன்னா வலது பக்கமா போற பாதை உண்மையில் அங்கு இல்லாத பாதை. பல தடவை நான் அந்த வலது பாதையிலேயும் போயிருக்கிறேன். ஆனா இப்ப நான் ஒரு அனுபவசாலி ஆயிட்டேன். ரெண்டு பாதைகளை நீ பார்ப்பாய். அதில் இடது பாதையைத் தேர்ந்தெடு. வலதைத் தேர்ந்தெடுக்காதே. அந்த வலதுபாதைங்கிறது அங்க இல்ல. நானும் பல தடவைகள் அதுல போயி பாத்திருக்கிறேன். அந்த பாதையில போனா நீ போய்ச்சேரவே மாட்டே. உன் வீட்டுக்கு என்னைக்கும் போய்ச் சேர மாட்டே.'' என்று நசருதீன் சொன்னார்.

ஒருதடவை நசுருதீன் தன் மகனுக்கு மது அருந்துவதின் அரிச்சுவடியை கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார். அதன்படி அவர் அவனிடம் சொன்னார்.... மகன் கேள்வி கேட்டுக் கொண்டிருந்தான்.

அவனுக்கு ஆர்வம் மிகுதியாக இருந்தது. ''எப்போது நிறுத்தி விடுவது?'' என்று கேட்டான். நசுருதீன் சொன்னார், ''அந்த மேசையைப் பார். அங்கே நாலு பேர் உக்கார்ந்து இருக்காங்க இல்லையா? உன் கண்ணுக்கு அவங்க எட்டுப் பேரா தெரியத் தொடங்கற போது குடிப்பதை நிறுத்திவிடு!'' பையன் கேட்டான், ''ஆனால் அப்பா, அங்கு இரண்டே இரண்டு பேர்தானே உட்கார்ந்து கொண்டு இருக்கிறார்கள்?!''

மனதுக்கு ஒரு தனித் திறன் இருக்கிறது. ஏதாவது ஒரு போதைப் பொருளின் பாதிப்புக்கு நீங்கள் உட்பட்டிருக்கையில் அந்த திறன் செயல்படுகிறது. அந்த திறனை விபர்யய = தவறான அறிவு, வக்கிர மையம் என்கிறார் பதஞ்சலி.

அதற்கு நேர் எதிராக நீங்கள் அறிந்திராத ஒரு மையம் இருக்கிறது. சரியாக நேர் எதிரில் அந்த மையம் இருக்கிறது. நீங்கள் ஆழமாக, அமைதியாக தியானித்தால் அந்தக் குறிப்பிட்ட மையம் செயல்படத் தொடங்கும். அந்த மையமே பிரமாணம் அதாவது சரியான அறிவு. அந்த மையத்தின் செயல்பாட்டின் வழியாக அறிய வருவது எதுவாயினும் அது சரியானதாகவே இருக்கிறது. நீங்கள் எதை அறிகிறீர்கள் என்பதல்ல கேள்வி. எங்கிருந்து அதை நீங்கள் அறிகிறீர்கள் என்பதே கேள்வி.

எனவேதான் எல்லா மதங்களும் மதுவுக்கு எதிராக இருக்கின்றன. இது எந்த ஒழுக்கவியல் அடிப்படையிலும் அல்ல. அல்லவே அல்ல! மதுவானது வக்கிர மையத்தை செயல்பட வைப்பதுதான் காரணம். ஒவ்வொரு மதமும் தியானத்தை வலியுறுத்துவதே காரணம். ஏனெனில் அதிகமான நிலைப்புத் தன்மையை உருவாக்குவதே தியானம். அதிகமான அமைதியாக ஆவதற்கே தியானம்.

மதுவோ நேர் எதிரான காரியத்தையே செய்துகொண்டு போகிறது. அது உங்களை அதிகமதிகம் கிளர்ச்சியும் கொந்தளிப்பும் அலைக்கழிப்பும் உள்ளவராக ஆக்குகிறது. உங்களுக்குள் ஒரு நடுக்கம் குடிபுகுகிறது. தடுமாறாமல் சாதாரணமாக நடப்பதற்குக்கூட ஒரு குடிகாரனால் முடிவதில்லை. அவனது சமநிலை இழக்கப்பட்டு விடுகிறது. உடலின் சமநிலை மட்டுமல்ல, உள்ளச் சமநிலையும் குலைக்கப்பட்டிருக்கிறது.

தியானம் என்றால் உள்ளச் சமநிலையைப் பெற்றிருப்பதே ஆகும். உள்சம நிலையை நீங்கள் பெற்றிருக்கும்போது, நடுக்கம் இல்லா திருக்கும் போது, உடல் - மனம் முழுமையும் நிலைப்புள்ளதாக ஆகி இருக்கிறது. அதன்பிறகு சரியான அறிவு என்னும் மையம் செயலாற்றத் தொடங்குகிறது. அந்த மையத்தின்மூலம் அறிய வருவது எதுவோ அதுவே மெய்யானது.

எந்த நிலையில் நீங்கள் இருக்கிறீர்கள்? நீங்கள் குடிகாரர்கள் அல்லர். ஆனால் நீங்கள் தியானிகளும் அல்லர். இரண்டுக்கும் இடையில் ஏதோ ஒரு இடத்தில் நீங்கள் இருக்கிறீர்கள். எந்த மையத்திலும் நீங்கள் இல்லை. தவறான அறிவு, சரியான அறிவு என்னும் இந்த இரண்டு மையங்களுக்கு இடையில்தான் நீங்கள் இருக்கிறீர்கள். எனவேதான் நீங்கள் குழம்பி இருக்கிறீர்கள்.

சில நேரங்களில் உங்களுக்குக் கணநேர காட்சிகள் கிட்டுகின்றன. சரியான அறிவு மையத்தை நோக்கி சிறிதளவு சாய்கிறீர்கள். அப்போது சில தரிசனக் கீற்றுகள் உங்களுக்குப் புலனாகின்றன. வக்கிரம் என்னும் மையத்தை நோக்கி நீங்கள் சாய்கிறீர்கள். அப்போது உங்களுக்குள் கோணல் புத்தி/பார்வை குடிபுகுகிறது. அப்போது எல்லாமே குழம்பிவிடுகிறது. நீங்கள் குழப்பத்தில் இருக்கிறீர்கள். எனவேதான் என்று நீங்கள் தியானிகளாக ஆகவேண்டி இருக்கும்; இல்லாவிட்டால் குடிகாரர்களாக ஆக வேண்டி இருக்கும். ஏனெனில் தலைக்குமேல் இந்நிலையில் இந்த இரண்டு வழிகளே உள்ளன:

ஒன்று நீங்கள் போதையில் உங்களை இழக்கிறீர்கள். அப்போது நீங்கள் ஆசுவாசமாக உணர்கிறீர்கள். குறைந்த பட்சம் ஒரு மையத்தை நீங்கள் அடைந்துகொண்டிருக்கிறீர்கள் - அது தவறான அறிவின் மையமாக இருக்கலாம் என்பது வேறு. ஆனாலும் நீங்கள் மையம் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் தவறானவர் என்றே அகில உலகமும் கூறலாம். ஆனால் நீங்கள் அப்படி நினைப்பதில்லை. அகில உலகமும் தவறானது என்றே நீங்கள் நினைக்கிறீர்கள். குறைந்தபட்சம் அந்த உணர்வற்ற கணங்களிலாவது நீங்கள் நிலைபெற்று இருக்கிறீர்கள்; தவறான மையத்தில்தான் என்றாலும் நிலைகொண்டிருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் மகிழ்ச்சியாக காணப்படுகிறீர்கள். ஏனென்றால் தவறான மையம் கொள்தலும்கூட ஒரு குறிப்பிட்ட மகிழ்ச்சியையே தருகிறது. அதை நீங்கள் நுகர்ந்து மகிழ்கிறீர்கள். எனவேதான் மதுவுக்கு இந்த அளவுக்கு பெரியதேவை இருக்கிறது.

நூற்றாண்டுகளாகவே அரசாங்கங்கள் போராடி வந்திருக்கின்றன. சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. மதுவிலக்கு முதலியவை கொண்டு வரப்பட்டுள்ளன. ஆனால் எதுவும் உதவுவதில்லை; மனித குலம் தியானத்தன்மை உள்ளதாக ஆகாதவரை எதுவுமே உதவமுடியாது. மக்கள் இப்படியேதான் போய்க் கொண்டிருப்பார்கள். போதை ஏற்றிக் கொள்வதற்கு புதிய புதிய வழிகளையும் உபாயங்களையும் அவர்கள் கண்டுபிடிப்பார்கள். அவற்றை / அவர்களை தடுத்துவிட முடியாது. மேலும் எவ்வளவு அதிகமாய் அவற்றைத் தடுக்க முயல்வீர்களோ,

எவ்வளவு அதிகமாய் தடைச்சட்டங்களைக் கொண்டு வருவீர்களோ அவ்வளவுக்கு மதுவுக்கான ஆதரவும் அதிகமாய் இருக்கும்.

அமெரிக்கா அதைத்தான் செய்துவிட்டு பின்வாங்க வேண்டியதாயிற்று. அவர்களும் தம்மால் ஆனமட்டுக்கும் முயன்றார்கள். ஆனால் மது விலக்கு சட்டம் அமுலில் இருந்த காலத்தில்தான் அதிக அளவு மது அருந்தப்பட்டது. அவர்கள் முயன்றார்கள், ஆனால் தோற்றுப் போனார்கள். சுதந்திரத்துக்குப் பின் இந்தியா முயன்று வந்திருக்கிறது. அதுவும் தோற்று விட்டிருக்கிறது. பல மாநிலங்கள் மறுபடியும் தொடங்கி விட்டுள்ளன. அதனால் பயன்விளையாது என்றே தோன்றுகிறது.

உள்ளுக்குள் மனிதர் மாறாதவரை எந்த மனிதரிடமும் எதைக் கைவிடுமாறும் நீங்கள் வற்புறுத்தி மாற்றிவிட முடியாது. அது அசாத்தியம். ஏனென்றால் அப்போது மனிதர் பைத்தியமாகி விடுவார். மனநலத்தை தக்கவைத்துக் கொள்வதற்கே இதை அவர் ஒரு சாதனமாக கொண்டிருக்கிறார். சிலமணி நேரத்துக்கு அவர் போதையேறி இருக்கிறார். போதையில்தான் அவர் நன்றாக உணர்கிறார். அப்போது எந்தத் துன்பமும் இல்லை. அந்நிலையில் எந்த துயரமும் இல்லை. துன்பம் திரும்ப வரும், துயரம் திரும்ப வரும். ஆனால் குறைந்த பட்சம் அப்போதைக்கு அது ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது. நாளைக் காலையும் அங்கு அவலம் இருக்கும். துயரம் இருக்கும். அவற்றை அவர் எதிர்கொள்ள வேண்டியும் இருக்கும். ஆனால் மறுபடியும் மாலையில் அவர் எதிர்பார்க்க முடியும் - குடித்துவிட்டு இயல்பாக உணர அவரால் முடியும்.

இந்த இரண்டு மாற்றுகளே உள்ளன. நீங்கள் தியானத் தன்மையில் இல்லாவிட்டால் முந்தியோ பிந்தியோ ஏதாவது ஒரு போதைப் பொருளை நீங்கள் நாடவே வேண்டி இருக்கும். இன்னும் நுட்பமான போதைகளும் உள்ளன. ஆல்கஹால் அவ்வளவு நுட்பமானது அல்ல. அது மிகவும் கடினமானது. நுட்பமான போதைகள் உள்ளன. காமம் உங்களுக்கு ஒரு போதையாக மாறலாம். காமத்தின்மூலம் உங்கள் பிரக்ஞையை நீங்கள் மறந்து இருக்கலாம். உணர்வை இழப்பதற்கு நீங்கள் பயன்படுத்த முடிகிற எதுவும் போதைதான் - எதையும் அந்த வகையில் நீங்கள் பயன்படுத்த முடியும். இதிலிருந்து விடுபட தியானம் மட்டுமே உதவுகிறது. ஏன்? ஏனெனில் பிரமாணம் என பதஞ்சலி அழைக்கிற மையத்தில் மையம் கொள்ள தியானமே உங்களுக்கு உதவுகிறது.

ஒவ்வொரு மதமும் ஏன் தியானத்துக்கு இவ்வளவு முக்கியத்துவம் தருகிறது? தியானம் ஏதோ ஒரு அக அற்புதத்தைச் செய்து கொண்டிருக்க

வேண்டும். அந்த அற்புதம் இதுதான்: சரியான அறிவு என்னும் ஒளி ஏற்ற தியானம் உங்களுக்கு உதவுகிறது. பின் நீங்கள் எங்கெங்கு போனாலும், பின் உங்கள் கவனம் எங்கெங்கு குவிந்தாலும், அங்கு அறியப்படுவது எதுவாயினும் அது உண்மையானதாக இருக்கிறது.

ஆயிரமாயிரம் கேள்விகளை புத்தரிடம் கேட்டிருக்கிறார்கள். ஒரு நாள் யாரோ ஒருவர் அவரிடம் கேட்டார், ''புதுப்புது கேள்விகளுடன் நாங்கள் வருகிறோம். அந்தக் கேள்விகளை உங்கள் முன் வைத்த உடனேயே நீங்கள் பதிலளிக்கத் தொடங்கி விடுகிறீர்கள். அதைப்பற்றி ஒரு கணமும் நீங்கள் சிந்திப்பதுகூட இல்லையே, இது எப்படி நிகழ்கிறது?''

இதற்கு புத்தர் கூறுகிறார், ''இது சிந்திப்பது என்னும் பிரச்சனையே அல்ல. கேள்வியை நீங்கள் என்முன் வைக்கிறீர்கள். அதை நான் வெறுமனே பார்க்கிறேன். அந்நிலையில் உண்மை எதுவோ அது தானே வெளிப்படுகிறது. சிந்திப்பது, அதைக் குறித்து யோசிப்பது என்னும் கேள்விக்கே இங்கு இடமில்லை. பதிலானது தர்க்க ரீதியான முடிவு போன்ற ஒன்றாக வருவதில்லை. சரியான மையத்தில் குவிதலாக மட்டுமே அது வருகிறது.''

புத்தர் ஒரு கைவிளக்கைப் போன்றவர். எனவே அவ்விளக்கைக் கொண்டுபோகும். இடத்தை எல்லாம் அது வெளிச்சமாக்குகிறது. கேள்வி எதுவானாலும் அதுவல்ல கேள்வி. புத்தரிடம் விளக்கு இருக்கிறது. ஆகவே அந்த விளக்கு எந்தக் கேள்வி மீதாயினும் கொண்டுவரப்படும் போதெல்லாம் பதில் வெளிப்படும். அந்த வெளிச்சத்தில் இருந்து பதில் வரும். இந்த வெளிப்பாடு என்பது ஒரு பெரிய நிகழ்வே.

உங்களிடம் யாராவது ஒன்றைக் கேட்டால் அதுகுறித்து நீங்கள் சிந்திக்க வேண்டி இருக்கிறது. ஆனால் உங்களுக்கே தெரியாது என்னும்போது எப்படி - எதை உங்களால் சிந்திக்க முடியும்? முன்பே உங்களுக்குத் தெரியுமானால் சிந்திக்கத் தேவையில்லை. உங்களுக்கே தெரியாது என்றால் நீங்கள் என்ன செய்வீர்கள்? நினைவுக்குள் தேடுவீர்கள். அங்கு பல உதவிக் குறிப்புகளைக் காண்பீர்கள். அவற்றைக் கொண்டு ஒரு சாக்குப்போக்கு உருவாக்குவீர்கள். உண்மையில் உங்களுக்குத் தெரியாது. தெரிந்திருந்தால்தான் பதில் மிக உடனடியாக வந்திருக்கும்.

ஒரு ஆசிரியைபற்றி ஒரு கதை கேள்விப்பட்டிருக்கிறேன். ஒரு தொடக்கப்பள்ளியில் அவள் ஆசிரியை ஆக இருந்தாள். ''யாருக்காவது ஏதாவது கேள்வி - சந்தேகம் இருக்கிறதா?'' என்று குழந்தைகளிடம் அவள் கேட்டாள். ஒரு சிறுவன் எழுந்து சொன்னான், ''எனக்கு ஒரு

சந்தேகம். நீங்கள் இப்படிக் கேட்கும்போது கேட்கவேண்டும் என்றே காத்துக்கொண்டு இருந்தேன்: பூமியின் மொத்த எடை எவ்வளவு?''

அவள் திகைத்தாள். ஏனெனில் இதைப்பற்றி ஒருபோதும் அவள் யோசித்ததில்லை. பூமியின் மொத்த எடை எவ்வளவு என்பது பற்றி இதுவரை அவள் வாசித்ததில்லை. எனவே பொதுவாக ஆசிரியர்கள் எப்போதும் கையாள்கிற ஒரு உத்தியை அவளும் கையாண்டாள். அவர்கள் பல தந்திரங்களைக் கையாளவே வேண்டி இருக்கிறது. அவள் சொன்னாள், ''ஆம், இந்தக் கேள்வி முக்கியமான கேள்விதான். நாளைக்கு ஒவ்வொருவரும் இதற்கான பதிலை கண்டுபிடித்து வந்தாக வேண்டும்.'' அவளுக்கு அவகாசம் தேவைப்பட்டது. ''எனவே நாளை நான் கேள்வி கேட்பேன். சரியான விடையைத் தெரிந்து வருபவருக்கு ஒரு பரிசு கிடைக்கும்.''

எல்லாக் குழந்தைகளும் தம்மால் ஆனவரை முயன்று பார்த்தார்கள். ஆனால் அவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆசிரியையும் நேரே நூலகத்துக்கு ஓடினாள். இரவு முழுவதும் தேடினாள். காலையில்தான் பூமியின் எடையை அவளால் கண்டுபிடிக்க முடிந்தது. அவள் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தாள். பள்ளிக்கு வந்தாள். குழந்தைகளும் வந்தார்கள். அவர்கள் ஓய்ந்து போயிருந்தார்கள். தங்களால் கண்டுபிடிக்க முடியவில்லை என்று அவர்கள் கூறினார்கள். ''அம்மாவைக் கேட்டுப் பார்த்தோம், அப்பாவைக் கேட்டுப்பார்த்தோம். எல்லாரிடமும் கேட்டுப் பார்த்தோம். ஆனால் யாருக்கும் தெரியவில்லை. இந்தக் கேள்வி கஷ்டமான கேள்வி.''

ஆசிரியை சிரித்துவிட்டுச் சொன்னாள், ''இதில் எந்தக் கஷ்டமும் இல்லை. எனக்கு ஏற்கனவே பதில் தெரியும். ஆனால் உங்களுக்கெல்லாம் கண்டுபிடிக்க முடிகிறதா இல்லையா என்பதைத் தெரிந்து கொள்ளவே இந்தச் சோதனையை வைத்தேன். பூமியின் எடை இதுதான்.... என்றாள்'' ஏற்கனவே கைதூக்கிய சிறுவன் மறுபடியும் எழுந்து நின்றான். '' மனிதர்களோடா மனிதர்கள் இல்லாமலா?'' என்றான். மீண்டும் அதே நிலைமை!

இப்படிப்பட்ட நிலவரத்துக்குள் புத்தரை நீங்கள் இருத்த முடியாது. வேறு எங்கோ கண்டுபிடிக்க வேண்டிய பிரச்சனை அல்ல இது. உண்மையில் உங்களுக்குப் பதிலளிக்க வேண்டிய ஒரு கேள்வியே அல்ல இது. உங்கள் கேள்விகள் என்பது ஒரு சாக்குதான். நீங்கள் ஒரு கேள்வியை முன்வைத்ததும் தன் விளக்கொளியை அந்தக் கேள்வியின் மீது வெறுமனே அவர் திருப்புகிறார். அதில் வெளிச்சமாவது எதுவோ

அது வெளிப்படுத்தப்படுகிறது. அவர் உங்களுக்குப் பதிலளிக்கிறார். அவரது சரியான மையத்தில் - பிரமாணத்தில் - இருந்து வரும் ஒரு ஆழமான பதிலாக அது இருக்கிறது.

மனத்திற்கு ஐந்து விதமான மாற்றங்கள் உள்ளன என்கிறார் பதஞ்சலி. சரியான அறிவு. இந்த மையம் உங்களில் செயல்படத் தொடங்கினால் நீங்கள் ஒரு அறிஞர், அருளாளர் ஆவீர்கள். நீங்கள் சமயத்தன்மை உள்ளவராக ஆவீர்கள். அதற்கு முன்புவரை நீங்கள் சமயத்தன்மை உள்ளவராக ஆவதில்லை.

எனவேதான் யேசுவோ முகமதுவோ பித்தர்களாகக் காட்சியளிக்கிறார்கள். ஏனெனில் அவர்கள் வாதிடுவதில்லை. தம் தரப்பை தர்க்கம் செய்யாமல் வெறுமனே அவர்கள் முன்வைக்கிறார்கள். நேரடியாகவே அவர்கள் வலியுறுத்துகிறார்கள். ''நீர் கடவுளின் ஒரே மகன்தானா?'' என்று யேசுவிடம் நீங்கள் கேட்கிறீர்கள். அவர் ''ஆம்'' என்கிறார். பின்னும் நீங்கள் அவரிடம் ''அதை நிரூபித்துக் காட்டும்'' என்று கேட்டால் அவர் சிரிப்பார். அவர் கூறுவார், ''அதை நிரூபிக்க அவசியம் இல்லை. இதுவே நிலை என்பதை நான் அறிந்திருக்கிறேன். இது சுயசாட்சியாகவே இருக்கிறது.'' நமக்கோ இது தர்க்கத்திற்கு அப்பாலாக தோன்றுகிறது. இந்த மனிதர் மூளைக் கோளாறு உள்ளவராக, ஆதாரம் காட்டாமலே உரிமை கொண்டாடுகிறவராகத் தெரிகிறார்.

இந்தப் பிரமாணம், இந்த பிரமண மையம், 'சரியான அறிவு' என்னும் இந்த மையம் செயல்படத் தொடங்கினால் நீங்கள் அப்படியே தான் இருப்பீர்கள். நீங்கள் உரிமை கொண்டாடுவீர்கள். ஆனால் உங்களால் நிரூபிக்க முடியாது. எப்படி உங்களால் நிரூபிக்க முடியும்? நீங்கள் காதல் கொண்டால் நீங்கள் காதல் வயப்பட்டிருக்கிறீர்கள் என்பதை எப்படி நிரூபிக்க முடியும்? அதை நீங்கள் உறுதியாக சொல்லவே முடியும். உங்கள் காலில் வலி இருக்கிறது. உங்களுக்கு வலி இருக்கிறது என்பதை உங்களால் எப்படி நிரூபிக்க முடியும்? ''எனக்கு வலிக்கிறது'' என்று உங்களால் வலியுறுத்தவே முடியும். உள்ளுக்குள் எங்கோ அதை அறிகிறீர்கள். அப்படி அறிந்திருப்பதே போதுமானது.

''கடவுள் இருக்கிறாரா?'' என ராமகிருஷ்ணரிடம் கேட்டார்கள். ''ஆம்'' என்றார் அவர். ''அப்படியானால் அதை நிரூபித்து காட்டுங்கள்'' என்று கேட்டார்கள். அதற்கு அவர் சொன்னார், ''அதற்கு தேவை இல்லை. நான் அறிவேன். எனக்கு எந்தத் தேவையும் இல்லை. உங்களுக்குத் தேவை. எனவே நீங்கள் தேடுகிறீர்கள். எனக்கோ யாரும் அதை நிரூபித்துக் காட்டவும் முடியாது. நானே தேட வேண்டி இருந்தது.

நான் கண்டு கொள்ள வேண்டி இருந்தது: அப்படியே நான் கண்டு கொண்டிருக்கிறேன். கடவுள் இருக்கிறார்!''

இதுவே சரியான மையத்தின் செயல்பாடு. இதனால் ராம கிருஷ்ணரோ யேசுவோ அபத்தமாவனர்களாகக் காட்சியளிக்கிறார்கள். இதனால்தான் எந்தச் சான்றும் தராமலே சில விசயங்களை அவர்கள் வலியுறுத்திக் கொண்டிருக்கிறார்கள் எனத் தோன்றுகிறது. அவர்கள் வலியுறுத்திக் கொண்டிருக்கவில்லை. எதையும் அவர்கள் வலியுறுத்திக் கொண்டிருக்கவில்லை. குறிப்பிட்ட விசயங்கள் அவர்களுக்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளன. ஏனெனில் உங்களிடம் இல்லாத ஒரு புதிய மையம் அவர்களிடம் செயல்பாட்டில் இருக்கிறது. மேலும், உங்களிடம் அது இல்லையாதலால் உங்களுக்கு நிரூபணம் தேவையாக இருக்கிறது.

ஒன்றைப்பற்றிய உள்உணர்வு உங்களுக்கு இல்லை என்பதையே 'நிரூபணம் தேவை' என்பது நிரூபிக்கிறது என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஒவ்வொன்றையும் நிரூபித்துக் காட்ட வேண்டி இருக்கிறது. அன்பைக்கூட நிரூபிக்க வேண்டி இருக்கிறது. இப்படியே மக்கள் போய்க் கொண்டிருக்கிறார்கள். பல தம்பதிகளை நான் அறிவேன். ''நான் உன்னை நேசிக்கிறேன்'' என கணவன் நிரூபித்துக் கொண்டே போகிறான். ஆனால் மனைவியை நம்பவைக்க அவனால் முடிவதில்லை. ''நான் உங்களை நேசிக்கிறேன்'' என மனைவி நிரூபித்துக் கொண்டே இருக்கிறாள். இருந்தும் கணவனை நம்பவைக்க அவளால் முடிவதில்லை. நம்ப முடியாதவர்களாகவே அவர்கள் இருக்கிறார்கள். முரண்பாடும் இதனால் தீராமலே இருக்கிறது. ஆயின் ஒவ்வொருவரும் மற்றவர்தான் தனக்கு நிரூபித்துக் காட்டவில்லை என்னும் உணர்வுடனேயே காலம் தள்ளுகிறார்கள்.

காதலர்கள் தேடிக் கொண்டே போகிறார்கள். காதலிப்பதாக நீங்கள் நிரூபித்துக் காட்ட வேண்டியிருக்கிற நிர்ப்பந்தச் சூழ்நிலைமைகளை அவர்கள் உருவாக்குகிறார்கள். இதனால் இருவருமே படிப்படியாக சலிப்படைந்து விடுகிறார்கள் - நிரூபித்துக் காட்டுவதற்கான இந்த வீண்முயற்சியினாலும், ஆனால் எதையுமே நிரூபித்துக் காட்ட முடியாததாலும் சலித்துவிடுகிறார்கள். அன்பை எப்படி நீங்கள் நிரூபிக்க முடியும்? பரிசுகளைப் பரிமாறிக்கொள்ள முடியும். ஆனால் எதுவும் நிரூபிக்கப்படுவதில்லை. நீங்கள் முத்தமிடவும் தழுவிக்கொள்ளவும் சேர்ந்து ஆடவும் பாடவும் முடியும். ஆனால் இவையெல்லாம் எதையும் நிரூபித்து விடுவதில்லை. நீங்கள் சும்மா நடித்துக் கொண்டுகூட இருக்கலாம்.

## மனதின் முதல் மாறுபாடு: சரியான அறிவு

மனதின் முதல் மாறுபாடு சரியான அறிவு எனப்படுகிறது. தியானம் இந்த மாற்றத்துக்கு இட்டுச் செல்கிறது. மேலும் நீங்கள் சரியாக அறிய முடிகிறபோது மட்டுமே, நிரூபிக்க தேவை இல்லாதபோது மட்டுமே மனம் கைவிடப்பட முடியும்; அதற்கு முன்பு அல்ல. நிரூபிக்கத் தேவை இல்லாதபோது மனம் தேவைப்படுவதில்லை. ஏனெனில் மனமே ஒரு தர்க்கக் கருவியாகத்தான் இருக்கிறது.

ஒவ்வொரு கணத்திலும் அது உங்களுக்குத் தேவைப்படுகிறது. நீங்கள் சிந்திக்க வேண்டி இருக்கிறது. எது சரி எது தவறு எனக் கண்டு பிடிக்க வேண்டி இருக்கிறது. ஒவ்வொரு கணமும் பல தெரிவுகளும் பல மாற்றுவழிகளும் உள்ளன. அவற்றில் இருந்து தேர்ந்தெடுக்க வேண்டி இருக்கிறது. பிரமாணம் செயல்படும்போது மட்டுமே, சரியான அறிவு இயங்கும்போது மட்டுமே உங்களால் மனதை கைவிட முடியும். ஏனெனில் இப்போது தேர்ந்தெடுப்பதில் எந்த அர்த்தமும் இல்லை. தெரிவுசெய்தல் அற்ற நிலையில் நீங்கள் இருக்கிறீர்கள். சரியானது எதுவாயினும் அது உங்களுக்கு நேரடியாக வெளிப்படுத்தப்படுகிறது.

ஒருபோதும் தேர்ந்தெடுக்காதவர் என்பதே ஞானி என்பதற்கு இலக்கணமாகும். கெடுதலுக்கு எதிராக நல்லதை தேர்ந்தெடுக்கும் விதத்தில் ஒருபோதும் அவர் இயங்குவதில்லை, நல்லதன் பாதையில் தன்னைப்போல் அவர் இயங்குகிறார். இது சூரியகாந்தியைப் போலவே இருக்கிறது. சூரியன் கிழக்கில் இருக்கும்போது சூரியகாந்திப் பூ கிழக்கை நோக்கித் திரும்புகிறது; அது தேர்ந்தெடுப்பதில்லை. சூரியன் மேற்கை நோக்கி இயங்கும்போது பூவும் மேற்கு நோக்கி திரும்புகிறது. சூரியனின் போக்கில் வெறுமனே அது இயங்குகிறது. அப்படித் திரும்புவதை அது தேர்ந்தெடுக்கவில்லை. அது முடிவு செய்திருக்கவில்லை. ''சூரியன் மேற்கே போயுள்ளது. எனவே இப்போது நானும் திரும்பியாக வேண்டும்'' என அது தீர்மானம் எடுத்திருக்கவில்லை.

ஒரு ஞானி என்பவரும் சூரியகாந்தியைப் போலவே இருக்கிறார். நல்லது எந்தப்பக்கம் இருந்தாலும் தானாக அதை நோக்கி அவர் இயங்குகிறார். எனவேதான் அவர் செய்வது எதுவாயினும் அது நன்மையாக இருக்கிறது. ''ஞானிகளைத் தீர்ப்பிடாதீர்கள். உங்களுடைய வழக்கமான அளவுகோல்கள் அதற்குப் பயன்படாது'' என உபநிடதங்கள் கூறுகின்றன. கெட்டதற்கு எதிராக நீங்கள் நல்லதைச் செய்தாக வேண்டி இருக்கிறது. அவரோ எதையும் தெரிவு செய்வதில்லை; எது

நன்மையானதோ அதை நோக்கி இயல்பாக இயங்குகிறார். மேலும் இது மாற்று வழிகளைப்பற்றிய பிரச்சனை இல்லை என்பதால் அவரை உங்களால் மாற்றவும் முடியாது. ''இது கெட்டது'' என்று நீங்கள் சொன்னால் அவர் சொல்வார்,'' நல்லது, இது கெட்டதாகவே இருக்கலாம். ஆனால் இப்படித்தான் நான் இயங்குகிறேன். இவ்வாறாகத்தான் என் சீவன் பாய்ந்தோடுகிறது.''

விசயம் தெரிந்தவர்கள் - உபநிடதங்களின் காலத்தில் இருந்த மக்கள் விசயம் அறிந்தவர்களாக இருந்தார்கள் - ''ஒரு ஞானியை நாம் தீர்ப்பிடக் கூடாது'' என முடிவு செய்திருக்கிறார்கள். ஒரு மனிதர் ஒரு தடவை தன்னில் மையம் கொள்ள முடிந்துவிட்டதுமே, தியானத்தை சாதித்து விட்டதுமே, ஒரு தடவை அமைதியாக ஆகிவிட்டதுமே, மனம் கைவிடப்பட்டதுமே அவர் நமது மரபுகளுக்கும் ஒழுக்கங்களுக்கும் அப்பால்பட்டவராகி இருக்கிறார். நமது வரம்புகளுக்கு அப்பாற்பட்டவராக இருக்கிறார். அவரைப் பின்பற்ற நம்மால் முடிந்தால் பின்பற்ற முடியும். நம்மால் பின்பற்ற முடியாவிட்டால் நாம் உதவியற்ற நிலையில் இருக்கிறோம். ஆனால் ஒன்றும் செய்வதற்கு இல்லை. அவரை நாம் தீப்பிடக்கூடாது.

சரியான அறிவு செயல்படுமானால், சரியான அறிவு என்னும் மாற்றத்தை உங்கள் மனம் மேற்கொண்டிருக்குமானால், நீங்கள் சமயத்தன்மை உள்ளவராக ஆவீர்கள். இது முற்றிலும் துணிச்சலானது என்பதைப் பாருங்கள்: நீங்கள் மசூதிக்குப் போனால், குருத்துவாராவுக்குப் போனால், கோயிலுக்குப் போனால், ஏதாவது சடங்கை செய்தால், செபித்தால்... என்று பதஞ்சலி கூறவில்லை. அது சமயம் அல்ல. உங்கள் சரியான அறிவு என்னும் மையத்தை நீங்கள் செயல்பட வைக்க வேண்டி இருக்கிறது. எனவே நீங்கள் கோயிலுக்குப் போகிறீர்களா இல்லையா என்பது முக்கியமில்லை. அது ஒரு பொருட்டில்லை. உங்களின் சரியான அறிவு மையம் செயல்படுமானால் நீங்கள் செய்யும் செயல் எல்லாம் பிரார்த்தனைதான்; நீங்கள் செல்லுமிடம் எல்லாம் கோயில்தான்.

கபீர் சொல்லி இருக்கிறார், ''நான் எங்கெங்கு போனாலும் உன்னையே நான் காண்கிறேன், என் கடவுளே. எங்கெங்கு நான் அசைந்தாலும் உனக்குள்ளேயே நான் அசைகிறேன், உன் மேலேயே மோதுகிறேன். நான் என்னென்ன செய்தாலும், நடந்தாலும், சாப்பிட்டாலும் கூட அது பிரார்த்தனையாகவே இருக்கிறது.'' கபீர் கூறுகிறார், ''இந்தத் தன்னியல்பான நிலையே என் சமாதி. தன்னியல்பாக இருப்பதுவே நான் செய்யும் தியானம்.''

## இரண்டாவது மாறுபாடு: தவறான அறிவு

இரண்டாவது மாறுபாடு; தவறான அறிவு. தவறான அறிவு என்னும் மையம் உங்களில் செயல்பட்டுக் கொண்டிருந்தால் பின் நீங்கள் எதைச் செய்தாலும் அதைத் தவறாகவே செய்கிறீர்கள். எதை நீங்கள் தேர்ந்தெடுத்தாலும் தவறானதையே நீங்கள் தேர்ந்தெடுப்பீர்கள். நீங்கள் என்ன முடிவு எடுத்தாலும் அது தவறானதாகவே இருக்கும். ஏனெனில் முடிவு செய்வது நீங்கள் அல்ல, உங்களில் இருக்கும் தவறான மையமே முடிவு செய்கிறது.

சிலர் இருக்கிறார்கள். அவர்கள் தம்மை மிகவும் துரதிருஷ்ட சாலிகளாக உணர்கிறார்கள். ஏனெனில் அவர்கள் செய்வதெல்லாம் தவறாகிப்போகிறது. மறுபடியும் தவறுசெய்யக் கூடாது என அவர்கள் முயல்கிறார்கள். ஆனால் அது பயன்படப் போவதில்லை. ஏனெனில் செயல்படும் மையத்தைத்தான் மாற்றியாக வேண்டும். அவர்களின் மனங்கள் ஒரு தவறான வழியில் செயலாற்றுகின்றன. தாம் நன்மை செய்து கொண்டிருப்பதாக அவர்கள் எண்ணுவார்கள். ஆனால் தீமையே விளைவிப்பார்கள். எவ்வளவு நல்ல நல்ல எண்ணங்கள் அவர்களுக்கு இருந்தாலும் அவை பயன்பட முடிவதில்லை. அவர்கள் வகையற்ற நிலையில் இருக்கிறார்கள்.

முல்லா நசுருதீன் ஒரு சாதுவைப் போய்ப் பார்ப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். பல நாட்களாகப் போய்க் கொண்டிருந்தார். அந்த சாதுவோ ஒரு மௌன சாமியாராக இருந்தார். அவர் எதையும் பேசமாட்டார். பின் முல்லா நசுருதீனே பேச வேண்டியதாயிற்று. அவர் கேட்டார், ''நானும் திரும்பத் திரும்ப வந்துகொண்டிருக்கிறேன். நீர் ஏதாவது சொல்வீர் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் நீரோ எதையும் சொன்னதில்லை. மேலும் நீர் சொல்லாத வரை என்னாலும் புரிந்துகொள்ள முடியாது. எனவே என் வாழ்க்கைக்கு ஒரு வழியை மட்டும் காட்டும். நான் பயணம் செய்வதற்கேதுவாக ஒரு வழிகாட்டுதலையாவது வழங்கும்.'' என்றார்.

அதற்கு அந்த சூஃபி சாது சொன்னார், ''நல்லதைச் செய்து கிணற் றில் தள்ளிவிடு.'' இது மிகப் பழமையான சூஃபி மறைமொழிகளில் ஒன் றாகும்: ''நல்லதைச் செய்து கிணற்றில் தள்ளிவிடு.'' இதன் பொருள், நல் லதைச் செய்தால் உடனடியாக அதை மறந்துவிடு. ''நான் நல்லது செய்து விட்டேன்'' என்னும் நினைவைத் தூக்கி சுமந்து கொண்டு திரியாதே.

எனவே மறுநாள் முல்லாநசுருதீன் ஒரு கிழவி சாலையை கடப்பதற்கு உதவினார். பின் அவளை ஒரு கிணற்றுக்குள் தள்ளிவிட்டார்!

ஏனெனில் ''நல்லதைச் செய்து கிணற்றுக்குள் தள்ளிவிடு'' என்பதுதானே இனி தான் கடைப்பிடித்தாக வேண்டிய பாதை!

உங்களின் தவறான மையம் செயல்பட்டுக் கொண்டிருந்தால் நீங்கள் எதைச் செய்தாலும்...நீங்கள் குரான் வாசிக்க முடியும், கீதையை நீங்கள் வாசிக்க முடியும். அவற்றில் நீங்கள் அர்த்தங்களை கண்டு பிடிப்பீர்கள் - அவற்றைக் கண்டு கிருஷ்ணனே அதிர்ச்சி அடைவான். இப்படிப்பட்ட அர்த்தங்களை உங்களால் கண்டுபிடிக்க முடிவதைக் கண்டு முகமது அதிர்ச்சி அடைவார்.

மகாத்மா காந்தி தன் சுய சரிதையை, அது மக்களுக்கு உதவும் என்னும் உத்தேசத்தில் எழுதினார். பின் அவருக்கு பல கடிதங்கள் வந்தன. ஏனெனில் அவர் தன் காம அனுபவங்களை அதில் விவரிக்கிறார். அவர் நேர்மையானவராக இருந்தார். மிகவும் நேர்மையானவர்களில் அவர் ஒருவர். எனவே அவர் எல்லாவற்றையுமே எழுதினார் - கடந்த காலத்தில் தனக்கு நிகழ்ந்திருந்த எல்லாவற்றையுமே எழுதி விட்டார். தன் தகப்பனார் இறந்து கொண்டிருந்த நாளில் தான் எப்படி காம சுகம் துய்க்கும் விருப்பம் மேலிட்டவராக இருந்து கொண்டிருந்தார் என்பதை அவர் எழுதி இருக்கிறார். தன் தந்தையின் அருகில் அவரால் உட்கார்ந்திருக்க முடியவில்லை. அன்றுகூட அவரால் தன் மனைவியுடன் படுக்கச் செல்லாதிருக்க முடியவில்லை.

''இன்றுதான் கடைசி இரவு. நாளை காலையில் அவர் அப்பா உயிரோடிருக்க மாட்டார். காலையில் அவர் இறந்திருப்பார்'' என்று மருத்துவர்கள் கூறி இருந்தார்கள். ஆனால் இரவு சரியாக பன்னிரண்டு, ஒரு மணி அளவில் அவருக்குக் காம உணர்வு, உடலின்ப ஆசை மேலிட்டது. அவருடைய அப்பா மயக்க நிலையில் இருந்தார். எனவே இவர் மெதுவாக நழுவினார். தன் மனைவியிடம் போனார். கலவியில் ஈடுபட்டார். அப்போது மனைவியோ ஏற்கனவே ஒன்பது மாதக் கர்ப்பிணியாக இருந்தாள். அப்பாவோ அங்கு செத்துக் கொண்டிருக்கிறார். குழந்தையும் பின் செத்துப் பிறந்தது. இரவிலேயே அப்பாவும் செத்துப் போனார். எனவே அன்று தன் இறந்துகொண்டிருந்த தந்தையின் அருகில் தன்னால் இருந்து பார்த்துக் கொள்ள முடியவில்லையே என்னும் ஆழமான மனவருத்தம் காந்திக்கு அவரது வாழ்நாள் முழுவதும் இருந்து வந்தது. காமமானது அந்த அளவுக்கு ஆட்டிப் படைப்பதாய் இருந்தது.

ஆக ஒவ்வொன்றையும் அவர் எழுதினார். அந்த அளவுக்கு அவர் நேர்மையானவராக இருந்தார். மேலும் மற்றவர்களுக்கு உதவுவதற் காகவே அதை அவர் எழுதினார். ஆனால் அவருக்குப் பல கடிதங்கள்

வரத்தொடங்கின. அந்தக் கடிதங்கள் எத்தகையதாக இருந்தன என்றால் அவற்றைக் கண்டு அவர் அதிர்ச்சி அடைந்தார். பலபேர் பின்வருமாறு அவருக்கு எழுதி இருந்தார்கள், ''உம் சுயசரிதையைப் படித்தால், அதைப் படிப்பதற்கு முன் இருந்ததைவிட அதிக காம உணர்வுகள் எங்களுக்கு ஏற்படுகின்றன. உம் சுயசரிதையை வாசிப்பதாலேயே நாங்கள் முன்னிலும் அதிகமான காம உணர்வும், திளைப்புத் தன்மையும் கொண்டவர்களாக ஆகி இருக்கிறோம். அது சிற்றின்ப சுவை நிரம்பியதாக இருக்கிறது.''

தவறான மையம் செயல்பட்டுக் கொண்டிருந்தால் பின் எதுவும் செய்யமுடியாது. நீங்கள் எதைச் செய்தாலும், படித்தாலும், எப்படி நடந்து கொண்டாலும் அது தவறாகவே இருக்கும். தவறை நோக்கியே நீங்கள் இயங்குவீர்கள். தவறானதை நோக்கியே உங்களைத் தள்ளிவிடும் ஒருமையம் உங்களுக்குள் இருக்கிறது. நீங்கள் புத்தரிடம் போகமுடியும். ஆனால் அவரிடமும் ஏதாவது தவறையே நீங்கள் காண்பீர்கள். அதுவும் உடனடியாக! உங்களால் புத்தரைச் சந்திக்கவே முடியாது. ஏதாவது ஒரு தவறை உடனடியாகவே அவரிடம் நீங்கள் கண்டுபிடிப்பீர்கள். தவறானதை நோக்கிய ஒரு குவிமையத்தையே நீங்கள் பெற்றிருக்கி றீர்கள். எங்கெங்கும் தவறையே கண்டுபிடிக்கும் ஒரு ஆழமான உந்துதல் உங்களுக்குள் இருக்கிறது.

மனத்தின் இந்த மாறுபாட்டையே பதஞ்சலி 'விபர்யய' என்று அழைக்கிறார். விபர்யய என்றால் உருத்திரிபு ஒவ்வொன்றையும் நீங்கள் உருத்திரிக்கிறீர்கள். நீங்கள் பெயர்த்துரைக்கும் விதத்தில் ஒவ்வொன்றும் ஒரு வக்கரிப்பாகவே ஆகிறது.

''இறைவன் கருணையுள்ளவன்' என்று கூறக் கேட்டிருக்கிறேன்'' என்று உமர் கய்யாம் எழுதுகிறார். இது அழகானது. முகமதியர்கள் இதை திரும்பத் திரும்ப ஓதிக்கொண்டே போகிறார்கள். எனவே உமர் கய்யாம் சொல்கிறார், ''உண்மையிலேயே இறைவன் பரம கருணை உடையவன் என்றால், அவன் கருணையே வடிவானவன் ஆக இருந்தால் பின் பயப்படத் தேவையில்லை. நான் பாவம் செய்துகொண்டே போக முடியும். அவன் கருணையானவன் எனில் நான் எதற்குப் பயப்பட வேண்டும்? நான் விரும்பும் எதை வேண்டுமானாலும் செய்வேன். அவனோ கருணை வள்ளல் - எனவே நான் அவன்முன் நிற்கும் போதெல்லாம் நான் கூறுவேன், ''ரஹீமே, ரெஹ்மானே, ஓ கருணைக் கடவுளே, நான் பாவம் செய்துவிட்டேன். ஆனால் நீயோ கருணாகரன். உண்மையிலேயே நீ கருணை நிரம்பியவனாக இருந்தால், என்மேல் கருணை காட்டு. என்று'' எனவே அவர் குடித்துக்கொண்டே போகிறார்; தான் பாவம் என்று கருதும் எதையும் செய்துகொண்டே போகிறார்.

மிகவும் கோணலான வழியில் அதை அவர் அர்த்தப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

உலக முழுவதிலும் மக்கள் இதைச் செய்திருக்கிறார்கள். இந்தியாவில் நாம் கூறுவது இல்லையா, ''கங்கைக்குப் போனால், கங்கையில் குளித்தால் பாவம் தொலையும்'' என்று? தன்னளவில் இது ஒரு அழகான கருத்துதான். பல விசயங்களை இது தெரிவிக்கிறது. பாவம் என்பது அவ்வளவு ஆழமான ஒன்றல்ல. அது உங்களின் மீதுபடியும் அழுக்கு போன்றதே என அது தெரிவிக்கிறது. எனவே அதனால் மிக அதிகமாய் சஞ்சலம் அடைய வேண்டியதில்லை, உள்ளுக்குள் தொடர்ந்து நீங்கள் சுத்தமாகவே இருக்கிறீர்கள் என்பதையே அது காட்டுகிறது. கங்கையில் குளிப்பதுகூட அதற்கு உதவமுடியும்.

கிறித்துவத்தைப்போல பாவத்தைக் குறித்து அதிகமாய் அலட்டிக் கொள்கிறவராக நீங்கள் ஆக வேண்டியதில்லை என்பதைக் குறித்துக் காட்டுவதற்கு மட்டுமே இது உள்ளது. குற்ற உணர்வு மாபெரும் சுமையாக ஆகி இருக்கிறது. எனவே கங்கையில் ஒரு குளியல் போடுவது கூட உதவும். பெரிதாக அஞ்சி நடுங்க வேண்டியதில்லை. ஆனால் நாம் அதை எப்படி அர்த்தப்படுத்தி இருக்கிறோம்? ''அப்படியானால் நல்லதாச்சு, இனி தப்பு 'செய்து கொண்டே போவோம்'', என்கிறோம். பின்பு குறிப்பிட்ட காலத்துக்குப் பின், இத்துடன் நிறையத் தப்புச் செய்து விட்டிருக்கிறோம் என்று நாம் கருதும்போது, 'நம்மை துப்புரவாக்க கங்கைக்கு ஒரு வாய்ப்பு கொடுப்போம். பின் திரும்பி வந்து மறுபடியும் தொடங்குவோம்' - இதுவே வக்கிர மையம்.

**மூன்றாவது மாறுபாடு: கற்பனை.** மனதுக்கு கற்பனைத்திறன் இருக்கிறது. இது நல்லது. அழகானது. அழகானவை எல்லாமே கற்பனைகளின் மூலமே வந்திருக்கின்றன. ஓவியங்கள், கலை, நாடகம், இசை என அழகான ஒவ்வொன்றும் கற்பனை மூலமே வந்திருக்கிறது. ஆனால் அசிங்கமான எல்லாமும்கூட கற்பனையின் மூலம் தான் வந்திருக்கிறது. இட்லர், மாவோ, முசோலினி என்போரும் கற்பனையின் மூலமே உதித்திருக்கிறார்கள்.

ஒரு உன்னத மனிதனின் உலகை இட்லர் கனாக்கண்டான். பிரெடரிக் நீட்சேவின் கருத்துகளை அவன் நம்பினான். ''பலவீனமானவர்கள் அனைவரையும் அழித்தொழி. உன்னதமில்லாத அனைத்தையும் ஒழித்துக்கட்டு, உன்னத மனிதனை மட்டுமே பூமியில் விட்டுவை'' என நீட்சே சொல்லி இருக்கிறான். எனவே இட்லர் அழித்தான். வெறும் கற்பனை, இலட்சியக் கற்பனை - பலவீனமானவற்றை எல்லாம்

அழிப்பதன் மூலமே, அசிங்கமானவற்றை எல்லாம் அழிப்பதன் மூலமே, ஊனமானவற்றை எல்லாம் ஒழிப்பதன் மூலமே ஒரு அழகான உலகை நீங்கள் அடைந்திட முடியும் என்னும் கற்பனை. ஆனால் அழித்தொழிப்பு என்பதே இவ்வுலகில் சாத்தியமாகும் மிகப்பெரும் அசிங்கமான விளைவாக இருக்கிறது.

ஆனால் கற்பனையின் மூலமாகவே அவன் செயல்பட்டுக் கொண்டிருந்தான். ஒரு லட்சியக் கற்பனை - மிகவும் கற்பனைத்தன்மையுடைய மனிதன்! மிகுந்த கற்பனைத் திறமுடைய மனிதர்களில் இட்லர் ஒருவன். ஆதலால் அவனது கற்பனை எந்த அளவுக்கு வெறியாகவும் பைத்தியக்காரத் தனமாகவும் ஆகி இருந்தது என்றால் இந்த உலகத்தை முற்றிலுமாக அழித்தொழித்துவிட அவன் முயன்றான். அவனது கற்பனையானது வெறிநிலைக்குப் போய் விட்டிருந்தது.

கற்பனையானது உங்களுக்குக் கவிதைகளை, ஓவியங்களை, கலைகளை வழங்க முடியும். அவ்வாறே கற்பனை உங்களுக்கு வெறியையும் ஊட்டமுடியும். அதை நீங்கள் எப்படிப் பயன்படுத்து கிறீர்கள் என்பதைப் பொறுத்ததே அது. எல்லா மாபெரும் அறிவியல் கண்டுபிடிப்புகளும் கற்பனைமூலமே நிகழ்ந்திருக்கின்றன; கற்பனை செய்ய முடிந்த மனிதர்களின் மூலமே - அசாத்தியமானவற்றை கற்பனை செய்ய முடிந்த மனிதர்களின் மூலமே - அவை நிகழ்ந்திருக்கின்றன. இப்போது நாம் வானத்தில் பறந்து செல்ல முடிகிறது, இப்போது நாம் நிலவுக்கும் போக முடிகிறது.

இவை எல்லாம் மிகப்பெரிய கற்பனைகளாகவே இருந்தன. வானில் பறப்பது எப்படி, நிலவுக்குப் போவது எப்படி என்று நூற்றாண்டுகளாக, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மனிதன் கற்பனை செய்து வந்திருக்கிறான். நிலவுக்குப் போக வேண்டும், நிலவைப் பிடிக்க வேண்டும் என்ற ஆசையுடன்தான், பிறக்கும் குழந்தை ஒவ்வொன்றும் இருக்கிறது. ஆனால் நாம் அடைந்துவிட்டோம். கற்பனைத்திறன் மூலம் ஆக்கத்திறன் வருகிறது; ஆனால் கற்பனை மூலம் அழிப்புத்திறனும் வருகிறது.

கற்பனையே மனத்தின் மூன்றாவது செயல்படுமுறை என பதஞ்சலி கூறுகிறார். அதை ஒரு தவறான வழியில் நீங்கள் பயன்படுத்த முடியும். அப்படியானால் உங்களை அது அழித்துவிடும். அதை ஒரு சரியான வழியிலும் நீங்கள் பயன்படுத்த முடியும். அடுத்து கற்பனைத்

தன்மையோடு கூடிய தியானங்கள் இருக்கிறன. அவை கற்பனையில் இருந்து தொடங்குகின்றன. ஆனால் படிப்படியாக கற்பனை மேலும் மேலும் மேலும் நுண்மையாகிச் செல்கிறது. கடைசியில் கற்பனை முற்றிலுமாகக் கைவிடப்படுகிறது, உண்மையை நீங்கள் நேருக்கு் நேர் சந்திக்கிறீர்கள்.

கிறித்தவ, முகமதிய தியானங்கள் அனைத்தும் அடிப்படையில் கற்பனை மூலமாகவே அமைந்துள்ளன. முதலில் ஒன்றை நீங்கள் கற்பனை செய்து கொள்ள வேண்டி இருக்கிறது. அதன்பின் அதை நீங்கள் கற்பனை செய்துகொண்டே போகிறீர்கள். பின் கற்பனை மூலமாக உங்களைச் சுற்றிலும் ஒரு உணர்வுச் சூழ்நிலையை நீங்கள் உருவாக்குகிறீர்கள். கற்பனைமூலம் என்ன சாத்தியமாகும் என்பதை முயன்று பாருங்கள்; அசாத்தியம்கூட சாத்தியம் ஆகும்.

நீங்கள் அழகாக இருக்கிறீர்கள் என நீங்கள் கருதினால், நீங்கள் அழகானவர் என நீங்கள் கற்பனை செய்து கொண்டால், ஒரு குறிப்பிட்ட அழகு உங்கள் உடலில் நிகழத் தொடங்கும். எனவே ஒரு பெண்ணிடம் ''நீ அழகாயிருக்கிறாய்'' என்று ஒரு ஆண் கூறும் போதெல்லாம் உடனடியாக அந்தப் பெண் மாற்றம் அடைந்து விடுகிறாள். அவள் அழகானவளாக இல்லாமல் இருந்திருக்கலாம். இந்தக் கணத்துக்கு முன்புவரை அவள் அழகாக இல்லாது இருந்திருக்கலாம். வெறும் சராசரியான, எளிய தோற்றமுடையவளாகவே இருக்கலாம். ஆனால் இந்த மனிதன் அவளுக்குக் கற்பனைத் திறனை அளித்திருக்கிறான்.

எனவே காதலிக்கப்படும் ஒவ்வொரு பெண்மணியும் அதிக அழகானவளாக ஆகிறாள். காதலிக்கப்படும் ஒவ்வொரு ஆண் மகனும் அதிக அழகானவனாக ஆகிறான். அன்பு செய்யப்படாத ஒருவர் அழகாக இருக்கலாம், ஆனால் அவர் அசிங்கமானவராக ஆகிறார். ஏனெனில் அவரால் கற்பனை செய்ய முடியாது; அவளால் கற்பனை செய்ய முடியாது. மேலும் கற்பனை இல்லை எனில் நீங்கள் சுருங்குகிறீர்கள்.

மேற்கின் மாபெரும் உளவியலாளர்களில் ஒருவரான 'கூ' (*Coue*) என்பவர் கற்பனையின் மூலமாகவே பலப்பல நோய்களில் இருந்து குணம்பெற லட்சக்கணக்கான மக்களுக்கு உதவினார். அவரது செய்முறை மிகவும் எளிமையானது; ''நீங்கள் நலமாக இருப்பதான உணர்வை உணரத் தொடங்குங்கள் - அவ்வளவே. 'நான் அதிகமதிகம் நலமாகிக் கொண்டே வருகிறேன்; ஒவ்வொரு நாளும் நான் கூடுதல் சுகத்தை பெற்றுக் கொண்டிருக்கிறேன்' எனக் கற்பனை செய்து கொள்ளுங்கள்'' என்பார் அவர். ''இரவில் நீங்கள் ஆழ்ந்து உறங்கும்போது நீங்கள்

ஆரோக்கியமாக இருப்பதாக எண்ணிக்கொண்டே இருங்கள். ஒவ்வொரு கணமும் நீங்கள் அதிகமதிகமாய் நலமடைந்து வருவதாக எண்ணுங்கள். காலையில் எழும்போது உலகிலேயே முதல்தர ஆரோக்கியமுள்ள ஆளாக நீங்கள் இருப்பீர்கள். கற்பனை செய்துகொண்டே போங்கள்.''

இப்படிக் கூறி லட்சக்கணக்கான மக்களுக்கு அவர் உதவினார். குணப்படுத்த முடியாத நோய்கள்கூட குணமாயின. இது ஒரு அற்புதம் போலவே தோன்றுகிறது. உண்மையில் இது ஒன்றுமில்லை. இது ஒரு எளிய விதி மட்டுமே. அதாவது உங்கள் மனம் கற்பனையை பின்பற்றுகிறது.

குழந்தைகளிடம், ''நீ திறமை இல்லாதவன்/ள், சுறு சுறுப்பில்லாதவன் / ள்,'' என்று நீங்கள் சொல்லி வந்தால் அவர்கள் மந்தமானவர்கள் ஆகிறார்கள் என இப்போது உளவியலாளர்கள் கூறுகிறார்கள். அவர்கள் மந்தமாகும்படி அவர்களை நீங்கள் கட்டாயப்படுத்துகிறீர்கள். அவர்கள் மந்தமானவர்கள் என்னும் கருத்துத் தூண்டுதலை அவர்களின் கற்பனைக்கு நீங்கள் ஊட்டுகிறீர்கள்.

பல பரிசோதனைகள் செய்யப்பட்டுள்ளன. ஒரு குழந்தையிடம் ''நீ முட்டாள். எதையும் உன்னால் செய்ய முடியாது. இந்தக் கணக்கை உன்னால் போட முடியாது'' என்று சொல்லிவிட்டு அந்தக் கணக்கை அதனிடம் கொடுத்து ''முயன்று பார்'' என்று சொன்னால் அதனால் அதற்கு விடை காண முடியாது. கதவை நீங்கள் அடைத்து விட்டிருக்கிறீர்கள். ''நீ புத்திசாலி, உன்னைப் போன்ற புத்திசாலிக் குழந்தையை நான் பார்த்ததே இல்லை. உன் அளவுக்கு, உன் வயசுக்கு உனக்கு நிறைய அறிவு இருக்குது. உனக்குள் பல திறமைகள் இருப்பதாக தெரிகிறது. எப்பேர்ப்பட்ட கணக்கையும் உன்னால் போட்டுவிட முடியும். இப்போது இதைச் செய்துபார்'' என்று குழந்தையிடம் கூறுங்கள்; அதனால் அதைச் செய்துவிட முடியும். அவனுக்கு / அவளுக்கு கற்பனைச் சிறகை நீங்கள் தந்து விட்டீர்கள்.

இப்போது இவை விஞ்ஞான நிரூபணங்களாக, விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளாக இருக்கின்றன. அதாவது எந்தக் கற்பனையால் பீடிக்கப்பட்டாலும் அது ஒரு விதையாக ஆகிறது. வெறும் கற்பனை மூலம் முழு தலைமுறைகளே மாற்றப்பட்டிருக்கின்றன; முழு கால கட்டங்களே. முழு தேசங்களே மாற்றப்பட்டிருக்கின்றன.

பஞ்சாபுக்கு போய்ப் பாருங்கள். ஒரு தடவை நான் தில்லியில் இருந்து மணாலிக்குப் பயணம் செய்து கொண்டிருந்தேன். வாகன ஓட்டி ஒரு சீக்கியர், ஒரு சர்தார். சாலை வழி ஆபத்தானதாய் இருந்தது. கார்

மிகவும் பெரியதாக இருந்தது. வாகன ஓட்டி பல சந்தர்ப்பங்களில் பயந்துபோனார். மேலும் பல சந்தர்ப்பங்களில் அவர் ''இதற்குமேல் என்னால் வர முடியாது நான் திரும்பிப் போக வேண்டி இருக்கும்'' என்பார். அவரை ஒத்துக்கொள்ள வைக்க பலவாறும் நாங்கள் முயன்றோம். ஒரு கட்டத்தில் அவர் மிகவும் பயந்து போனவராய் காரை நிறுத்திவிட்டார். காரைவிட்டு வெளியே வந்து, முடியாது! இதற்குமேல் என்னால் ஓட்ட முடியாது. இது ஆபத்தானது.'' மேலும் அவர் சொன்னார், ''உங்களுக்கு இது ஆபத்தானதாக இல்லாதிருக்கலாம். சாவதற்கு நீங்கள் தயாராக இருக்கலாம். ஆனால் நான் தயாராக இல்லை. நான் திரும்பிப் போக விரும்புகிறேன்.'' என்று சொன்னார்.

தற்செயலாக என் நண்பர்களில் ஒருவரும் ஒரு சர்தார், பெரிய போலீஸ் அதிகாரியாக இருந்தார். அவரும் மணாலி முகாமில் கலந்துகொள்ள என் பின்னால் ஒருகாரில் வந்து கொண்டிருந்தார். அவருடைய கார் வந்து சேர்ந்தது. உடனே அவரிடம் நான், ''ஏதாவது செய்யுங்கள்! அந்த ஆள் காரைவிட்டு வெளியில் வந்து விட்டார்'' என்று சொன்னேன். அந்தப் போலீஸ் அதிகாரி வந்து சொன்னார், ''நீ ஒரு சர்தாராக - சீக்கியனாக இருந்துகொண்டு கோழையாக இருப்பதா? போ, போய் காரில் ஏறு.'' என்றார். அந்த மனிதர் உடனடியாகக் காருக்குள் வந்து உட்கார்ந்து காரை ஓட்டத் தொடங்கினார். நான் அவரைக் கேட்டேன், ''என்ன சமாச்சாரம்?'' அவர் சொன்னார், ''இப்போது அவர் என் அகத்தை தொட்டுவிட்டார். நீயெல்லாம் ஒரு சர்தாரா? சர்தார் என்றால் வீரர்தலைவன் என்று பொருள். ஒரு சீக்கியன் பேடியாக இருப்பதா? என்று சொல்லி அவர் என் கற்பனையைத் தொட்டுவிட்டார். என் பெருமிதம் எதிலோ, அதை அவர் தொட்டுவிட்டார். இனி நாம் போகமுடியும். உயிருடனோ அல்லது பிணமாகவோ நாம் மணாலியை அடைந்தே தீருவோம்.''

இது நடந்திருக்கிறது இந்த ஒரு ஆளுக்குத்தான் என்பதில்லை. நீங்கள் பஞ்சாப்புக்குப் போனால் லட்சக்கணக்கானவர்களுக்கு இது நேரிட்டிருப்பதை நீங்கள் காண்பீர்கள். பஞ்சாப்பில் இருக்கும் இந்துக்களையும் பாருங்கள், சீக்கியர்களையும் பாருங்கள். அவர்களின் ரத்தம் ஒன்றுதான். அவர்களின் இனம் ஒன்றுதான். ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் அவர்கள் எல்லாரும் இந்துக்களாகவே இருந்தார்கள். அதன்பின்... வித்தியாசமான ஒரு இனம், ஒரு போரிடும் இனம் பிறந்தது. தாடி வளர்ப்பதன்மூலமே, நீங்கள் வீரராகிவிட முடியாது. ஆனால் முடிகிறது! கற்பனைத் திறம் காரணம்.

''நீங்கள் ஒரு வித்தியாமான இனம். நீங்கள் வெல்லப்பட முடியாத வர்கள்'' என்ற கற்பனையை குரு நானக் தந்தார். அதை ஒருதடவை அவர்கள் நம்பிவிட்டதுமே, ஒரு தடவை அந்தக் கற்பனை வேலை செய்ய ஆரம்பித்து விட்டதுமே, பஞ்சாபில், ஐநூறு ஆண்டுகளுக்குள் ஒரு புதிய இனம் பஞ்சாபி இந்துக்களிடமிருந்து முற்றிலும் வேறுபட்ட ஒரு இனம் உருவாயிற்று. எதுவும் வேறுபடவில்லை. ஆனால் இந்தியாவில் அவர்களைவிடவும் வீரமானவர்கள் வேறுயாரும் இல்லை. உலகம் முழுவதிலும் சீக்கியருக்கு ஈடு இணை கிடையாது என்பதை இந்த இரண்டு உலகப்போர்களும் நிரூபித்திருக்கின்றன. பயமின்றிப் போரிட அவர்களால் முடிகிறது.

என்ன நடந்தது? அவர்களின் கற்பனையே அவர்களைச் சுற்றிலும் ஒரு உணர்வுச் சூழலை உருவாக்கி இருக்கிறது. சீக்கியராக இருப்பதன்மூலமே தம்மை வித்தியாசமானவர்கள் ஆக அவர்கள் உணர்கிறார்கள். கற்பனை செயல்படுகிறது. அது உங்களை ஒரு வீரராக ஆக்க முடியும். உங்களை ஒரு கோழையாக ஆக்கவும் அதனால் முடியும்.

ஒரு கதை கேள்விப்பட்டேன். மதுக்கடையில் உட்கார்ந்து குடித்துக்கொண்டிருந்தார் முல்லா நசுருதீன். அவர் ஒரு துணிச்சலான ஆள் அல்ல. மிகவும் கோழையான ஊஒரு மனிதர். ஆனால் மது அவருக்குத் துணிச்சலைக் கொடுத்திருந்தது. அப்போது ஒரு மனிதன், ராட்சசன் போன்ற உடம்புடன் கடைக்குள் புகுந்தான். பார்ப்பதற்கே முரட்டுத்தனமானவனாக, ஆபத்தானவனாக, கொலைகாரனைப்போலக் காணப்பட்டான். சுய நினைவோடு இருக்கும் வேறு எந்த நேரத்தில் என்றாலும், முல்லா நசுருதீன் பயந்து நடுங்கிப் போயிருப்பார். ஆனால் இப்போது அவர் குடித்திருந்ததால் அவருக்கு அறவே அச்சம் ஏற்படவில்லை.

அந்தக் கொடூரத் தோற்றமுடைய மனிதன் முல்லாவுக்கு அருகில் வந்தான். அவர் பயமே இல்லாதவராக இருப்பதைக் கண்டு அவர் காலின்மீது ஓங்கி மிதித்தான். முல்லாவுக்குக் கோபம் வந்தது. வெகுண்டெழுந்து கேட்டார், ''என்ன செய்து கொண்டிருக்கிறாய் நீ? நீ இப்படி நடந்து கொள்வது வேண்டுமென்றேவா அல்லது, சும்மா வேடிக்கைக்காகவா?''

ஆனால் இந்த நேரத்தில் - தன் காலை அவன் ஓங்கி மிதித்ததுமே - முல்லாவுக்கு குடிபோதை இறங்கிவிட்டது. சுய நினைவுக்கு வந்துவிட்டார். ஆனால் அதற்குள் அவர் ''என்ன? இப்படிச் செய்து கொண்டிருக்கிறாய்? இது காரியமாகவா இல்லை சும்மா தமாசுக்காகவா'' என்று கேட்டு விட்டிருக்கிறார்.

அந்த ஆள் சொன்னான், ''காரியமாத் தாண்டா.''

முல்லா நசுருதீன் சொன்னார், ''அப்படின்னா உங்களுக்கு நன்றிங்க. காரியமாத்தான்னா சரிதாங்க. ஏன்னா இந்த மாதிரி விளையாட்டெல்லாம் எனக்குப் பிடிக்காதுங்க.''

கற்பனைத்திறன் என்பது மனத்தின் மூன்றாவது செயல் திறன் ஆகும். நீங்கள் கற்பனை செய்து கொண்டே போகிறீர்கள். தவறாக நீங்கள் கற்பித்துக் கொண்டால் உங்களைச் சுற்றிலும் பிரம்மைகளை, மாயை களை, கனவுகளை நீங்கள் உருவாக்க முடியும். அவற்றிலேயே மூழ்கி நீங்கள் தொலைந்து போகவும் முடியும். எல்எஸ்டி போன்ற போதை மருந்துகள் இம் மையத்துக்குத்தான் உதவுகின்றன. இந்த மையத்தில்தான் வேலை செய்கின்றன. எனவே எந்தவிதமான உள்ளாற்றல் உங்களுக்கு இருந்தாலும் அதை வளர்த்தெடுக்க உங்களின் எல்எஸ்டி போதை உங்களுக்கு உதவும். எனவே எதுவும் நிச்சயமானதல்ல. உங்களிடம் மகிழ்ச்சியான கற்பனைகள் இருந்தால் போதை சஞ்சாரம் மகிழ்ச்சியான சஞ்சாரமாக, உல்லாசமாக இருக்கும். நீங்கள் அவலமான கற்பனைகளில் இருந்தால் பெருங்கவலையோடு கூடிய கற்பனைகளில் இருந்தால் உங்களின் உலா மோசமாகத்தான் இருக்கப்போகிறது.

எனவேதான் பலருடைய அறிக்கைகளும் ஒன்றுக்கொன்று முரண்பாடாக உள்ளது. பரலோக வாசலுக்கு அது ஒரு திறவுகோலாக ஆக முடியும் என ஆக்ஸ்லி கூறுகிறார். அதுதான் இறுதியான நரகம் என்பார் ரெய்னர் என்பவர். ஆகவே உங்களையே பொறுத்தது இது. எல் எஸ்டி.யால் எதையும் செய்ய முடியாது. அது வெறுமனே உங்கள் கற்பனை மையத்தின்மேல் ஏறிவிடுகிறது. அங்கிருந்துகொண்டு ரசாயன ரீதியாக செயலாற்றத் தொடங்குகிறது. கோரமான கற்பனையுடன் நீங்கள் இருந்தால் அதை நீங்கள் வளர்த்துவீர்கள், நரகத்தின் வழியாக கடந்து செல்வீர்கள். அழகான கற்பனைகளுக்கு நீங்கள் பழக்கமாகி விட்டிருந் தால் நீங்கள் சுவர்க்கத்தை எட்டலாம்.

இந்தக் கற்பனை என்பது நரகமாகவோ சொர்க்கமாகவோ செயல்பட முடியும். முழுப் பைத்தியம் ஆவதற்கும் அதை நீங்கள் பயன்படுத்த முடியும். மனநோய் மருத்துவ மனைகளில் இருக்கும் மன நோயாளிகளுக்கு என்ன நேரிட்டிருக்கிறது? அவர்கள் தம் கற்பனையை பிரயோகித்திருக்கிறார்கள். அதை அவர்கள் பயன்படுத்திய விதத்தின் காரணமாகவே அதனால் அவர்கள் சூழப்பட்டு - மூழ்கடிக்கப்பட்டிருக் கிறார்கள். ஒரு பைத்தியம் தன்னந்தனியாக உட்கார்ந்துகொண்டு இருக்கலாம். ஆனால் யாருடனோ சத்தம்போட்டுப் பேசிக்கொண்டிருக்

கிறான். பேசுவது மட்டுமல்ல, பதிலளிக்கவும் செய்கிறான். கேள்வி கேட்கிறான். அவனே பதிலளிக்கிறான். அங்கில்லாத அந்த மற்றவருக்கும் சேர்த்து அவனே பேசுகிறான். அவன் பைத்தியம் என நீங்கள் நினைக்கலாம். ஆனால் ஒரு உண்மையான ஆளுடன் தான் அவன் பேசிக்கொண்டிருக்கிறான். அவனது கற்பனையில் அந்த ஆள் நிசமாக இருக்கிறான். மேலும் எது கற்பனையானது எது நிசமானது என்று அவனால் முடிவுசெய்ய முடியவில்லை, அவ்வளவுதான்.

குழந்தைகளால் தீர்மானிக்க முடிவதில்லை. பல நேரங்களில் குழந்தைகள் ஒரு பொம்மையைத் தொலைத்து விட்டதாகக் கனவு கண்டிருக்கலாம். பின் காலையில் ''என் பொம்மையை எங்கே'' என்று கேட்டு அவர்கள் அழுவார்கள். கனவு - யதார்த்தம் இரண்டுக்கும் இடையில், எது கனவு எது யதார்த்தம் என்பதை அவர்களால் வேறுபடுத்தித் தீர்மானிக்க முடிவதில்லை. மேலும் அவர்கள் எதையும் இழந்திருக்கவும் இல்லை. அப்படிக் கனவுதான் கண்டுகொண்டிருந்தார் கள். எல்லைக்கோடுகள் மழுங்கிப் போகின்றன. கனவு எங்கே முடிகிறது. நிசம் எங்கே தொடங்குகிறது என்ற எல்லைக்கோட்டை அவர்கள் அறிந்திருப்பதில்லை.

மனநோயாளியும் மழுங்கிப்போய் இருக்கிறான். எது நிசம், எது நிசமல்ல என்பது அவனுக்குத் தெரிவதில்லை. கற்பனை சரியானபடி பயன்படுத்தப்பட்டால் பின் இது கற்பனையே என்பதை நீங்கள் அறிந்து இருப்பீர்கள்; இது கற்பனையே என்பதில் நீங்கள் தொடர்ந்தும் விழிப்பாக இருப்பீர்கள். அதை நீங்கள் அனுபவிக்க முடியும். ஆனால் அது நிசமல்ல என்பதை உணர்ந்தபடி இருப்பீர்கள்.

எனவே மக்கள் தியானிக்கும் போது அவர்களின் கற்பனை மூலமாக பல விசயங்கள் நடைபெறுகின்றன. அவர்கள் ஒளிகளையும் வண்ணங்களையும் காட்சிகளையும் காணத் தொடங்குகிறார்கள். கடவுளிடமே பேசுவதாக, யேசுவுடன் கூட நடந்து போவதாக, கிருஷ்ணனுடன் ஆடிப் பாடுவதாக எல்லாம் ''தரிசனம் காண்கிறார்கள். இவை எல்லாம் கற்பனை சமாச்சாரங்களே. எனவே இவை எல்லாம் கற்பனையின் செயல்பாடுகள் என்பதை ஒரு தியானி நினைவில்கொள்ள வேண்டி இருக்கிறது. அதை நீங்கள் ரசித்து அனுபவிக்க முடியும். அதில் எந்தத் தவறும் இல்லை - அவை ஒரு வேடிக்கைதான். அவற்றை நிசமானவை என்று மட்டும் நம்பிவிடாதீர்கள்.

சாட்சியாய் இருக்கும் உணர்வு மட்டுமே உண்மையானது என்பதை நினைவில் கொள்ளுங்கள். வேறு எதுவுமே உண்மையானது அல்ல.

நிகழ்வது எதுவாயினும் - அது அழகாக, ஆனந்தமாக இருப்பதாயினும் அதை அனுபவியுங்கள். கிருஷ்ணனுடன் ஆடுவது அழகானதுதான். அதில் எந்தத் தவறும் இல்லை. ஆடுங்கள்! அனுபவித்து மகிழுங்கள்! ஆனால் இது கற்பனைதான், அழகான ஒரு கனவுதான் என்பதை தொடர்ச்சியாக நினைவில் கொண்டிருங்கள். அதிலேயே மூழ்கி தொலைந்து போகாதீர்கள். நீங்கள் தொலைந்து போனால் கற்பனை அபாயகரமானதாக ஆகிவிடுகிறது. மதவாதிகள் பலரும் வெறும் கற்பனையிலேயே மூழ்கி இருக்கிறார்கள். கற்பனையிலேயே உலவி, தம் வாழ்க்கையை வீணாக்கி விடுகிறார்கள்.

**நான்காவது மாறுபாடு: உறக்கம்**. உறக்கம் என்றால் உங்களின் வெளிப்யேறும் பிரக்ஞையைப் பொறுத்த வரை பிரக்ஞையின்மை என்று பொருள்படும். அது தனக்குள்ளேயே ஆழமாகச் சென்றிருக்கிறது. நடவடிக்கை நிறுத்தப்பட்டிருக்கிறது; உணர்வுள்ள நடவடிக்கை நிறுத்தப்பட்டிருக்கிறது. மனம் செயலாற்றிக் கொண்டிருப்பதில்லை. மனம் செயல் அற்றிருக்கும் நிலையே உறக்கம். நீங்கள் கனவு கண்டு கொண்டிருந்தால் அது உறக்க நிலை அல்ல, விழிப்புக்கும் உறக்கத்துக்கும் இடைப்பட்ட நிலையில் நீங்கள் இருக்கிறீர்கள். விழித்திருக்கும் நிலையில் இருந்து நீங்கள் கிளம்பிவிட்டிருக்கிறீர்கள். ஆனால் இன்னும் உறக்க நிலைக்குள் பிரவேசித்திருக்கவில்லை. இரண்டுக்கும் இடைப்பட்ட நிலையில் நீங்கள் இருக்கிறீர்கள்.

உறக்கம் என்றால் முற்றிலும் உள்ளடக்கம் அற்ற நிலையாகும். மனத்தின் எந்த நடவடிக்கையும், எந்த அவலமும் அற்ற நிலை. மனம் முழுமையாக உள்ளிழுக்கப்பட்டு, இளைப்பாறுதலாக இருக்கிறது. இந்த உறக்கம் அழகானது. இது உயிரளிப்பது. இதை நீங்கள் பயன்படுத்த முடியும். மேலும் இந்த உறக்கத்தை உபயோகிப்பது எப்படி என்பதை நீங்கள் அறிந்து கொண்டால் அது சமாதியாக ஆகவும் முடியும். ஏனெனில் சமாதியும் உறக்கமும் ஒன்றிலிருந்து மற்றது மிகவும் வித்தியாசம் ஆனதல்ல. ஒரே ஒரு வேறுபாடு மட்டுமே உள்ளது: சமாதியில் நீங்கள் விழிப்புடன் இருப்பீர்கள்; மற்ற யாவும் இரண்டிலும் ஒரேமாதிரியாகவே இருக்கும்.

சமாதியைப் போல் தூக்கத்திலும் மற்ற யாவும் ஒன்றாகவே இருக்கிறது; நீங்கள் பிரக்ஞையுடன் இருப்பதில்லை என்பதில் மட்டுமே வேறுபாடு. புத்தர் பிரவேசித்த அதே பேரின்பத்தில், ராமகிருஷ்ணர் வாழ்கிற அதே பேரின்பத்தில், யேசு தம் வீட்டை அமைத்திருக்கிற அதே பேரின்பத்தில்தான் நீங்களும் இருக்கிறீர்கள். ஆழ்ந்த உறக்கத்தில்

நீங்களும் அதே ஆனந்த நிலையிலேயே இருக்கிறீர்கள். ஆனால் அதை நீங்கள் உணர்ந்துகொண்டு இருப்பதில்லை. எனவே காலையில் எழுந்ததும் இரவு உறக்கம் நன்றாகக் கழிந்ததாக நீங்கள் உணர்கிறீர்கள். காலையில் நீங்கள் புத்துணர்ச்சி பெற்றவர்களாக, உயிரூட்டம் பெற்றவர்களாக, இளமை திரும்பியவர்களாக உணர்கிறீர்கள். இரவு மிகவும் அருமையாக இருந்ததாக காலையில் நீங்கள் உணர்கிறீர்கள் - ஆனால் இது வெறும் பின்னொளி (ஆஃப்ட்டர்குலோ) மட்டுமே நடந்தது என்ன, உண்மையில் என்ன நிகழ்ந்தது என்பது உங்களுக்குத் தெரியவில்லை. நீங்கள் விழிப்பாக இருக்கவில்லை.

உறக்கத்தை இரண்டு வழிகளில் பயன்படுத்த முடியும். இயற்கையான ஓய்வுபோல் ஒன்று - இதைக்கூட நீங்கள் இழந்து விட்டிருக்கிறீர்கள். மக்கள் உண்மையில் உறக்கத்துக்குள் ஆழ்வதே இல்லை. அவர்கள் தொடர்ச்சியாகக் கனவு கண்டுகொண்டே போகிறார்கள். சில நேரங்களில் ஒருசில வினாடி நேரம் அவர்கள் தொடர்கிறார்கள். தொட்ட உடனேயே மறுபடியும் கனவு காண தொடங்குகிறார்கள். உறக்கத்தின் அமைதி, உறக்கத்தின் ஆனந்த ர்ரகம், அறியப்படாததாகவே ஆகிவிட்டிருக்கிறது. அதை நீங்கள் அழித்துவிட்டிருக்கிறீர்கள். இயற்கையான உறக்கம்கூட நாசமாக்கப் பட்டிருக்கிறது. நீங்கள் மிகுந்த கிளர்ச்சியும் கொந்தளிப்பும் உள்ளவர்களாக ஆகி இருப்பதால் மனம் இருக்குமிடம் தெரியாமல் முற்றிலுமாக காணாமல் போக முடிவதில்லை.

ஆனால் இயற்கை உறக்கம் உடல்நலத்துக்கு நல்லது என்று பதஞ்சலி கூறுகிறார். உறக்கத்திலும் நீங்கள் விழிப்பாக இருக்கமுடிந்தால் அது சமாதியாக ஆகமுடியும் என்கிறார் பதஞ்சலி. அது ஒரு ஆன்மீக நிகழ்வாக ஆகமுடியும். அதற்கு வழிமுறைகள் இருக்கின்றன - உறக்கத்தை எப்படி விழித்திருத்தலாக மாற்றமுடியும் என்பதுபற்றி பின்னர் நாம் விவாதிப்போம். உறங்கிக்கொண்டிருக்கும்போது கூட யோகியானவன் தூங்குவதில்லை என்கிறது கீதை. அவன் விழிப்பாகவே இருக்கிறான். அவனுக்குள் ஒன்று தொடர்ந்து விழிப்பாக உணர்வுடன் இருந்துகொண்டிருக்கிறது. உடல் முழுவதும் உறக்கத்தில் வீழ்கிறது. மனம் உறக்கத்தில் வீழ்கிறது. ஆனால் சாட்சி நிலையோ தொடர்கிறது: ஏதோ ஒன்று கவனித்துக் கொண்டிருக்கிறது. கோபுரத்தின் உச்சியில் இருந்துகொண்டு பார்த்துக்கொண்டிருக்கும் ஒன்று தொடர்கிறது. அந்நிலையில் உறக்கம் சமாதியாக ஆகிறது. அதுவே முடிவான பரவசமாக ஆகிறது.

இறுதியாக, ஞாபகம். இது மனத்தின் ஐந்தாவது மாறுபாடு ஆகும். இதையும் சரியாகப் பயன்படுத்தவும் முடியும், தவறாகப் பயன்படுத்தவும் முடியும். ஞாபகத்தைத் தவறாகக் கையாண்டால் அது குழப்பத்தை உருவாக்குகிறது. உண்மையாகவே, ஒரு விசயம் உங்களின் நினைவுக்கு வரலாம். ஆனால் அது அப்படித்தான் நிகழ்ந்ததா இல்லையா என்பதை நீங்கள் உறுதியாகக் கூறமுடியாது. உங்கள் நினைவுத்திறன் நம்பகமானதல்ல. நீங்கள் அதில் பல கதைகளைச் சேர்த்து விடலாம். கற்பனை அதில் புகுந்துகொண்டு விடலாம். பல விசயங்களை அதிலிருந்து நீங்கள் கழித்து விடலாம். அதன்மீது பல காரியங் களையும் நீங்கள் செய்து விடலாம். ஆகவே ''இதுதான் எனது ஞாபகம்'' என்று ஒன்றை நீங்கள் சொல்லும்போது அது மிகவும் வடிகட்டப் பட்டதாகவும் முற்றிலும் மாறிய ஒன்றாகவுமே இருக்கிறது. நிசம் அது அல்ல.

''எனது குழந்தைப்பருவம் ஒரு சொர்க்கமாகவே இருந்தது'' என ஒவ்வொருவரும் கூறுகிறார்கள். ஆனால் குழந்தைகளின் நிலைமையைப் பாருங்கள். இதே குழந்தைகளும் பின்னாளில் தம் குழந்தைப் பருவம் சொர்க்கமாகத்தான் இருந்தது என்று கூறுவர். ஆனால் இன்று அவை துன்புற்றுக்கொண்டிருக்கின்றன. சீக்கிரமாக வளர்வது எப்படி, பெரிய ஆளாக ஆவது எப்படி என ஒவ்வொரு குழந்தையும் ஏங்குகிறது. பெரியவர்கள் எல்லாரும் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள், அனுபவிக்கத் தகுதியான யாவற்றையும் அனுபவித்துக்கொண்டு அவர்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள் என்றே ஒவ்வொரு குழந்தையும் எண்ணுகிறது. பெரியவர்கள் ஆற்றல் மிக்கவர்களாக இருக்கிறார்கள், எதை வேண்டுமானாலும் அவர்களால் செய்ய முடியும், நானோ பரிதாபத்துக்குரிய நிலையில் இருக்கிறேன் என நினைக்கிறது. தாங்கள் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதாகவே குழந்தைகள் கருதுகின்றன. ஆனால் இதே குழந்தைகள் நீங்கள் வளர்ந்திருப்பதுபோலவே வளரும். பிற்காலத்தில் அவை, குழந்தைப்பருவமே இனிமையானது, அழகானது, ஆனந்தமானது என்று கூறும்.

உங்களின் நினைவுத்திறனை நம்ப முடியாது. நீங்கள் கற்பனை செய்து கொண்டிருக்கிறீர்கள். உங்களின் இறந்த காலத்தை மறுபடியும் உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். அதற்கு நீங்கள் உண்மையாக இல்லை. அதிலிருக்கும் பல விசயங்களையும் நீங்கள் கைவிடுகிறீர்கள். அசிங்கமான அனைத்தையும் சோகமான அனைத்தையும் வேதனை தரக்கூடிய அனைத்தையும் விட்டுவிடுகிறீர்கள். அழகான அனைத்தையும் நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்கள். உங்களின் அகங்காரத்துக்கு ஆதரவாக இருக்கும் அனைத்தும் உங்கள் நினைவுக்கு வருகின்றன. உங்களை

அங்கீரிக்காத அனைத்தையும் நீங்கள் கைவிட்டு விடுகிறீர்கள். அதையெல்லாம் மறந்துவிடுகிறீர்கள்.

எனவே கைவிடப்பட்ட, மறக்கடிக்கப்பட்ட நினைவுகளின் மாபெரும் பாதுகாப்பு அறை ஒன்று ஒவ்வொருவருக்குள்ளும் இருக்கிறது. மேலும் நினைவில் இருந்து நீங்கள் எடுத்துக் கூறுவது எதுவுமே மெய்யானதாக இல்லை. நிசமான முறையில் உங்களால் நினைவுகூற முடியாது. உங்களின் மையங்கள் யாவும் குழம்பிப் போய் இருக்கின்றன; ஒன்றில் மற்றது ஊடுருவி அவை தொல்லை விளைவிக்கின்றன.

'சரியான ஞாபகம்' - இந்தச் சொற்களைத்தான் தியானத்தைக் குறிக்க புத்தர் பயன்படுத்தி இருக்கிறார். ஒருவரின் ஞாபகம் சரியானதாக இருக்கிறது என்றால், அவர் முழுக்கவும் தனக்கு நேர்மையானவராக இருந்தாக வேண்டும் என்கிறார் பதஞ்சலி. பிறகே, பிறகுமட்டுமே, ஞாபகம் என்பது சரியானதாக இருக்க முடியும். என்ன நடந்திருந்தாலும், நல்லதோ கெட்டதோ, அதை மாற்றாதீர்கள்; உள்ளதை உள்ளபடி அறியுங்கள். இது மிகவும் கடினமானதே! சிரமமானதே! நீங்களோ தெரிவு செய்கிறீர்கள், மாற்றுகிறீர்கள். உங்களின் கடந்த காலத்தை உள்ளபடியே அறிவது என்பது, உங்களின் வாழ்க்கை முழுவதையுமே மாற்றக் கூடியது ஆகும். உங்களின் கடந்த காலத்தை உள்ளவாறே நீங்கள் சரியாக அறிந்தால் அதை வருங்காலத்திலும் திரும்பச் செய்ய விரும்ப மாட்டீர்கள். அதை எப்படி ஒரு திருத்திய வடிவத்தில் திரும்பவும் செய்யலாம் என்றே தற்சமயம் ஒவ்வொருவரும் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் உங்களின் கடந்தகாலத்தை அது எப்படி இருந்ததோ அப்படியே நீங்கள் அறிந்தால் மீண்டும் அதைச் செய்ய நீங்கள் விரும்பமாட்டீர்கள்.

சரியான ஞாபகமானது எல்லாப் பிறவிகளில் இருந்தும் எவ்வாறு விடுபடுவது என்பதற்கான தூண்டுவிசையை உங்களுக்கு வழங்கும். மேலும் ஞாபகம் சரியானதாக இருந்தால் பின் நீங்கள் உங்களின் கடந்த பிறவிகளுக்குள்ளும் கூட ஊடுருவ முடியும். நீங்கள் நேர்மையுடன் இருந்தால் கடந்த பிறவிகளுக்குள்ளேயும் நீங்கள் போக முடியும். அப்போது உங்களுக்கு ஒரே ஒரு ஆசைதான் இருக்கும்: இந்த மொத்த அபத்தத்தில் இருந்தும் விடுபட்டு கடந்துசெல்வது எப்படி என்னும் ஒரே ஆசைதான் உண்டாகும். ஆனால் கடந்தகாலம் அழகாக இருந்தது என்று நீங்கள் நினைக்கிறீர்கள். வருங்காலம் அற்புதமாக அமையப்போகிறது என்றும் நீங்கள் நினைக்கிறீர்கள். இந்த நிகழ்காலம் மட்டுமே தவறானது என எண்ணுகிறீர்கள். ஆனால் கடந்தகாலம் என்பது ஒரு சில

நாட்களுக்குமுன் நிகழ்காலமாகத்தான் இருந்தது. வருங்காலமும் ஒருசில நாட்களுக்குப் பின் நிகழ்காலமாகத்தான் ஆகப்போகிறது. எல்லா இறந்தகாலமும் அழகாகவே தோன்றுகிறது. எல்லா வருங்காலமும் அற்புதமாகவே தோன்றுகிறது. இதுதான் தவறான ஞாபகம் ஆகும். நேரடியாக பாருங்கள்; மாற்றாதீர்கள். கடந்த காலத்தை அது இருந்தபடி பாருங்கள் . ஆனால் நாம் நேர்மை இல்லாதவர்களாக இருக்கிறோம்.

ஒவ்வொருவரும் தன் தகப்பனை வெறுக்கிறார். ஆனால் யாரிடமாவது நீங்கள் கேட்டால் அவர் கூறுவார், ''நான் என் தந்தையை நேசிக்கிறேன். என் தந்தையை எல்லாவற்றுக்கும் மேலோக மதிக்கிறேன்.'' ஒவ்வொரு பெண்ணும் தன் தாயை வெறுக்கிறாள். ஆனால் கேட்டால் ஒவ்வொரு பெண்ணும் ''என் தாய் ஒரு தெய்வம்'' என்றே கூறுவாள். இதுதான் தவறான ஞாபகம்.

கிப்ரான் ஒரு கதை சொல்வார்: ஒரு இரவில் ஒரு தாயும் மகளும் ஒரு சத்தம் கேட்டு திடீரென தூக்கத்தில் இருந்து விழித்துக்கொண்டார்கள். இருவருமே தூக்கத்தில் நடக்கும் வியாதி உள்ளவர்கள். அப்படி இருக்க அந்தத் திடீர் சத்தம் அருகில் எங்கோ எழுந்த நேரத்தில் இருவரும் தூங்கியபடியே தோட்டத்தில் நடந்து கொண்டு இருந்தார்கள். அவர்கள் தூக்கத்தில் நடப்பவர்கள்.

அது ஒரு அதிர்ச்சியாகவே இருந்திருக்க வேண்டும். ஏனென்றால் வயதானவளான தாய் தூக்கக் கலக்கத்தில் மகளிடம் ''உன்னால்தான், பேயே, உன்னால்தான் என் இளமை எல்லாம் பறிபோய்விட்டது. என்னை நீ நாசமாக்கிவிட்டாய். இப்போது வீட்டுக்கு வரும் எவரும் உன்னைத்தான் பார்க்கிறார்கள். என்னை யாரும் ஏறெடுத்தும் பார்ப்பதில்லை.'' என்று சொன்னாள். மகள் வனப்பும் வாலிபமும் உடையவளாக ஆனதும் ஒவ்வொரு தாய்க்கும் ஒரு ஆழமான பொறாமை வருகிறது. ஒவ்வொரு தாய்க்கும் இது நிகழ்கிறது. ஆனால் அது ஆழத்தில் இருக்கிறது.

அதேபோல் மகனும் கூறிக்கொண்டிருந்தான், ''கிழட்டுப் பிணமே... உன்னால்தான் என் வாழ்வை நான் ருசிக்க முடியவில்லை. நீதான் தடைக்கல்லாக இருக்கிறாய். ஒவ்வொரு இடத்திலும் நீயே தடையாக, முட்டுக்கட்டையாக இருக்கிறாய். என்னால் காதலிக்க முடியவில்லை. என்னால் அனுபவிக்க முடியவில்லை.''

சப்தம் திடீரென்று ஏற்பட்ட காரணத்தால் அவர்கள் இருவருக்கும் இப்போது விழிப்பு ஏற்பட்டுவிட்டது. உடனே வயதான பெண் சொன்னாள், ''என் கண்ணே, இந்த நேரத்தில் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்? உனக்குச் சளி பிடித்துவிடப் போகிறது. உள்ளே வா

மகளே.'' அதுபோலவே மகளும் சொன்னாள். ''நீங்களும்தான் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? உங்களுக்கு உடம்புக்கு சரியில்லை. இரவு வேறு குளிராக உள்ளது. வாங்கம்மா, கட்டில்லுக்கு வாங்க.''

இந்தக் கதையின் முதல் பகுதி உணர்வற்ற தளத்தில் இருந்து வந்திருந்தது. இப்போது அவர்கள் மறுபடியும் பாசாங்கு செய்கிறார்கள். அவர்கள் விழித்து விட்டிருக்கிறார்கள். இப்போது உணர்வற்ற மனம் பின்னுக்குப் போய் இருக்கிறது. உணர்வுமனம் முன்னுக்கு வந்திருக்கிறது. இப்போது அவர்கள் பாசாங்குக்காரர்களாகி இருக்கிறார்கள். உங்கள் உணர்வு மனம் பாசாங்கு நிரம்பியதாகவே இருக்கிறது.

தன் சொந்த நினைவுகளுக்கு நிசமாகவே நேர்மையாக இருப்பதற்கு ஒருவர் மெய்யாகவே கடுமையான முயற்சிகளின் வழியாக கடந்து செல்ல வேண்டி இருக்கும். மேலும் என்ன ஆனாலும் நீங்கள் நிசமானவர்களாகவே இருக்க வேண்டி இருக்கும். அப்பட்டமான உண்மையுடன் நீங்கள் இருக்க வேண்டி இருக்கும். உங்கள் அப்பாவைப்பற்றி, உங்கள் அம்மாவைப்பற்றி, உங்கள் அண்ணன் தம்பியைப்பற்றி, உங்கள் அக்காள் தங்கையைப்பற்றி, உண்மையாகவே உண்மையாகவே என்ன நினைக்கிறீர்கள் என்பதை நீங்களே அறிந்தாக வேண்டி இருக்கிறது. மேலும் கடந்த காலத்தில் உங்களிடம் இருந்தவற்றைப் போட்டுக் கலக்காதீர்கள், குழப்பாதீர்கள், மாற்றாதீர்கள், மெருகு ஏற்றாதீர்கள். உள்ளது உள்ளபடி வெளிப்பட அனுமதியுங்கள். இது மட்டும் நிகழ்ந்தால், பின், இது ஒரு விடுதலையாகும் என்கிறார் பதஞ்சலி. அதை நீங்கள் விட்டு விடுவீர்கள். மொத்த விவகாரமும் அபத்தமானது. அதை மறுபடியும் வருங்காலத்தின்மீது ஏற்றிப்பார்க்க நீங்கள் விரும்பமாட்டீர்கள்.

அப்போதுதான் நீங்கள் ஒரு வெளிவேசக்காரராக இருக்க மாட்டீர்கள். நிசமானவராக, உண்மையானவராக, நேர்மையான வராக இருப்பீர்கள், நம்பகமானவராக ஆகி இருப்பீர்கள். மேலும் நீங்கள் நம்பகமானவராக ஆகிறபோது நீங்கள் ஒரு பாறைபோல் ஆகிறீர்கள். எதுவும் உங்களை அசைக்க முடியாது. எதுவும் உங்களைக் கலைக்க முடியாது.

நீங்கள் ஒரு வாள்போல் ஆகிறீர்கள். தவறானது எதையும் எப்போதும் உங்களால் பிளந்தெறிய முடிகிறது. சரியானது எதையும் தவறானதில் இருந்து வெட்டிப் பிரித்துவிட முடிகிறது. அப்போது ஒரு மனத்தெளிவு சாதிக்கப்படுகிறது. அந்தத் தெளிவு உங்களைத் தியானத் துக்கு இட்டுச்செல்ல முடியும். வளர்வதற்கு - அப்பாலுக்கும் அப்பால் வளர்ந்து செல்வதற்கு -. அந்தத் தெளிவு ஒரு அடித்தளம் ஆக முடியும்.

முதல் கேள்வி:

***பைத்திய நிலை அல்லது தியான நிலை என்னும் இரண்டு மாற்று நிலைகள்மட்டுமே மனிதர்களுக்கு இருக்கின்றன என்று நீங்கள் சொன்னீர்கள். ஆனால் பூமியில் இருக்கும் கோடிக்கணக்கான மக்கள் இந்த முடிவான இரண்டு நிலைகளில் எந்த நிலையையும் இன்னும் அடைந்திருக்க வில்லை. அத்தகைய நிலைஅடைவார்கள்என்று நீங்கள் நினைக்கிர்களா?***

அவர்கள் ஏற்கனவே அடைந்து விட்டிருக்கிறார்கள்! தியான நிலையை அவர்கள் அடைந்திருக்கவில்லை, ஆனால் பைத்திய நிலையை அவர்கள் அடைந்தே இருக்கிறார்கள்! ஆனால் மனநோய் மருத்துவ மனையில் இருக்கும் பைத்தியங்களுக்கும் வெளியில் இருக்கும் பைத்தியங்களுக்கும் இடையில் இருக்கும் வேறுபாடு மிகவும் சிறிய வேறுபாடுதான். அந்த வேறுபாடு அளவுரீதியான வேறுபாடு மட்டுமே. பண்புரீதியானது அல்ல. நீங்கள் அரைப் பைத்தியமாக இருக்கலாம், அவர்கள் முழுப் பைத்தியமாக இருக்கலாம். ஆனால் மனிதர் இன்று இருக்கிற நிலையில் அவர் பைத்தியமாகவே இருக்கிறார்.

இன்று மனிதர் இருக்கிற நிலையில் அவர் பைத்தியமாகவே இருக்கிறார் என்று நான் ஏன் கூறுகிறேன்? பைத்திய நிலை என்பது பல நிலவரங்களைக் குறிக்கிறது. ஒன்று, நீங்கள் மையம் கொண்டிருப்ப தில்லை. மையம் கொண்டு இல்லாவிட்டால் நீங்கள் மூளை குழம்பிய வராகவே இருப்பீர்கள். நீங்கள் மையம்கொண்டு இல்லாவிட்டால் பல்வேறுபட்ட குரல்கள் உங்களுக்குள் ஒலிக்கும். நீங்கள் பலராக இருக்கிறீர்கள் - ஒரு கும்பலாக இருக்கிறீர்கள். மேலும் அந்த வீட்டில் தலைவர் யாரும் இருப்பதில்லை. வீட்டின் வேலையாள் ஒவ்வொருவரும் தானே தலைவர் என உரிமை கொண்டாடுகிறார். குழப்பமும் மோதலும், ஓயாத போராட்டமும் அங்கே நிலவுகிறது. தீராத உட்பூசலில், பிணக்கில் நீங்கள் இருக்கிறீர்கள். உட்பூசல் நடைபெறாதிருந்தால் அப்போது நீங்கள் தியான நிலையில் இருப்பீர்கள். ஆனால் இரவும் பகலும் இருபத்து நான்கு மணிநேரமும் பூசல் தொடர்கிறது. ஒரு சில நிமிடங்களுக்கு உங்கள் மனதில் ஓடிக் கொண்டிருப்பவை எவை ஆயினும் அவற்றை ஒரு தாளில் எழுதுங்கள். அதில் நேர்மையாக இருங்கள். உள்ளுக்குள் ஓடுவது எத்தகையது ஆக இருந்தாலும் அவற்றைச் சிறிதும் மாற்றாமல்

அப்படியே பதிவு செய்யுங்கள். அப்போது அது பைத்திய நிலைதான் என்பதை நீங்களே புரிந்து கொள்வீர்கள்.

நான் ஒரு உத்தியைக் கைவசம் வைத்திருக்கிறேன். பல பேருக்கும் அதை நான் பயன்படுத்துகிறேன். ஒரு மூடிய அறைக்குள் உட்கார்ந்துகொண்டு சத்தம்போட்டுப் பேசத் தொடங்குமாறு அவர்களிடம் நான் கூறுகிறேன். மனதில் இருந்து எது வந்தாலும் அதை அப்படியே பேசுங்கள். நீங்களே காது கொடுத்துக் கேட்க முடியும்படியாக உரக்கப் பேசுங்கள். வெறும் பதினைந்து நிமிடங்களுக்குப் பேசிக் கொண்டிருந்தாலே, ஒரு பைத்தியத்தின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருக்கிறோம் என்று நீங்களே உணர்வீர்கள். அபத்தமும் தாறுமாறும் ஆன உளறல்களும், தொடர்பற்ற பிதற்றல்களும் மனதில் நிரம்பி வழிகின்றன. அதுதான் உங்களின் மனம்! எனவே நீங்கள் தொண்ணூற்று ஒன்பது விழுக்காடு பைத்தியக்காரர்களாக இருக்கலாம். யாரோ ஒருவர் எல்லையைத் தாண்டிப் போய்விட்டிருக்கலாம். நூறு விழுக்காட்டையும் கடந்து போய்விட்டிருக்கலாம். நூறு சதவீதம் தாண்டிப் போய்விட்டவர்களை நாம் பைத்தியக் காப்பகங்களில் போடுகிறோம். உங்களை ஏன் பைத்தியர் காப்பகங்களில் வைக்க முடிவதில்லை என்றால் அத்தனை காப்பகங்கள் இல்லை! மேலும் அத்தனை காப்பகங்கள் இருக்கவும் முடியாது. ஏனெனில் அப்போது பூமி முழுவதுமே ஒரு பெரிய பைத்தியக் காப்பகமாகவே இருக்கவேண்டி இருக்கும்.

கலீல் கிப்ரான் ஒரு சிறு நிகழ்ச்சிக் குறிப்பை உரைத்திருக்கிறார்: அவருடைய நண்பர்களில் ஒருவர் மனநோயாளி ஆகிவிட்டார். எனவே அவர் ஒரு பைத்தியக் காப்பகத்தில் சேர்க்கப்பட்டார். அவர்மேல் கொண்ட அன்பினால் கருணையினால் கலீல் கிப்ரான் அவரைப் பார்க்கப் போனார். பைத்தியக் காப்பகத்தைச் சேர்ந்த ஒரு தோட்டத்தில் ஒரு மரத்தடியில் அந்த நோயாளி உட்கார்ந்து கொண்டு இருந்தார். அந்த தோட்டத்தைச் சுற்றிலும் ஒரு உயரமான மதில்சுவர் எழுப்பப்பட்டிருந்தது. கலீல் கிப்ரான் அங்கு சென்றார். தன் நண்பர் உட்கார்ந்திருந்த பெஞ்சின்மீது, அவர் அருகில் உட்கார்ந்துகொண்டு கேட்டார், ''நீ ஏன் இங்கு இருக்கிறாய் என்பதை எப்போதாவது நீ எண்ணிப் பார்த்திருக்கிறாயா?'' மனநோயாளி சிரித்தார். பின் சொன்னார், ''வெளியில் இருக்கும் பெரிய பைத்தியக்கார விடுதியை விட்டு விலக நான் விரும்பியதால் இங்கே நான் இருக்கிறேன். மேலும் இங்கு - இந்தக் காப்பகத்தில் - நான் அமைதியாக, சமாதானமாக இருக்கிறேன். இந்த இடத்தை நீர் பைத்தியக் காப்பகம் எனலாம். ஆனால் இங்கு யாரும் பைத்தியம் இல்லை.''

தாம் பைத்தியக்காரர்கள் என்று பைத்தியக்காரர்களால் யோசிக்க முடியாது - பைத்தியக்காரத்தனத்தின் அடிப்படையான பண்புகளில் இது ஒன்றாகும். நீங்கள் பைத்தியக்காரராக இருந்தால் நீங்கள் ஒரு பைத்தியம் என்று உங்களால் சிந்திக்க முடியாது. நீங்கள் ஒரு பைத்தியமாக இருக்கிறீர்கள் என்பதை உங்களால் சிந்திக்க முடிந்தால் பின் அதில் இருந்து வெளியேற வாய்ப்பு இருக்கிறது. நீங்கள் ஒரு பைத்தியமாகவே இருக்கிறீர்கள் என்பதைச் சிந்திக்கவும் புரிந்துகொள்ளவும் உங்களால் முடிந்தால், இப்பவும் கொஞ்சம் மனநலத்துடனேயே நீங்கள் இருக்கிறீர்கள். உங்களுக்கு இன்னும் முழுஅளவில் பைத்தியம் பிடித்துவிடவில்லை. எனவே இதுதான் விசித்திரம்: உண்மையாகவே மனநலத்துடன் இருக்கிறவர்கள் தாம் பைத்தியமாக இருப்பதை அறிந்து இருக்கிறார்கள். முற்றிலும் பைத்தியமாகிப் போனவர்களால், தாம் பைத்தியம் என்பதை எண்ணிப் பார்க்கக் கூட முடிவதில்லை.

நீங்கள் பைத்தியமாயிருக்கிறீர்கள் என்பதை ஒருபோதும் நீங்கள் நினைத்துப் பார்ப்பதில்லை. இதுவே பைத்திய நிலையின் ஒரு அறிகுறிதான். நீங்கள் மையம்கொண்டில்லை. நீங்கள் மனநலத்துடன் இருப்பது என்பது முடியாத காரியம். உங்கள் மனநலம் மேலோட்டமாக மட்டுமே இருக்கிறது; செயற்கையாக உண்டாகப்பட்டதாகவே இருக்கிறது. வெளித்தோற்றத்தில் மட்டுமே நீங்கள் மனநலம் உடையவர் களாகக் காட்சி அளிக்கிறீர்கள். எனவேதான் உங்களைச் சுற்றிலும் இருக்கும் உலகத்தைத் தொடர்ச்சியாக நீங்கள் ஏமாற்றிக்கொண்டே இருக்கவேண்டி இருக்கிறது. பலவற்றையும் நீங்கள் மறைக்க வேண்டி இருக்கிறது. நிறைய விசயங்களை நீங்கள் தடுத்து நிறுத்திக்கொள்ள வேண்டி இருக்கிறது. எல்லாமே வெளிப்படுவதற்கு நீங்கள் விடுவதில்லை. பலவற்றையும் நீங்கள் அமுக்கி வைக்கிறீர்கள். ஒன்றை நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் நீங்கள் சொல்லிக் கொண்டிருப்பது வேறொன்றாய் இருக்கும். வெளியே நீங்கள் நடித்துக் கொண்டிருக்கிறீர்கள். இந்தப் பாசாங்கின் - வெளிவேசத்தின் காரணமாக உங்களைச் சுற்றி ஒரு குறைந்த பட்சமான, மேலோட்டமான மன நலத்தை நீங்கள் பெற்றிருக்க முடியும். உள்ளுக்குள்ளோ நீங்கள் கொதித்துக் கொண்டு இருக்கிறீர்கள்.

சில நேரங்களில் அவை வெடித்து வெளிப்படுகின்றன. கோபத்தில் நீங்கள் வெடித்து வெளிப்படுகிறீர்கள். நீங்கள் மறைத்துக் கொண்டு வந்திருக்கிற பைத்தியம் வெளிப்படுகிறது. உங்களின் எல்லா சாக்குப் போக்கு ஏற்பாடுகளையும் அது குலைத்து விடுகிறது. எனவே கோபம்

என்பது தற்காலிகமாகப் பைத்தியம்பிடித்த ஒரு நிலையே என்கிறார்கள் உளவியலாளர்கள். மறுபடியும் நீங்கள் சமனம் பெறுவீர்கள். மறுபடியும் உங்களின் உண்மையான நிலையை நீங்கள் மறைத்துக் கொள்வீர்கள். மறுபடியும் உங்களின் வெளிப்புறத்தை நீங்கள் பளபளப்பாக்குவீர்கள். மறுபடியும் நீங்கள் மனநலமுள்ளவராக ஆவீர்கள். ''அது தவறுதான். என்னையும்மீறி அதை நான் செய்துவிட்டேன். ஒருபோதும் அதை நான் மனத்தால் நினைத்தும் பார்த்ததில்லை. எனவே என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்'' என்றும் நீங்கள் சொல்வீர்கள். ஆனால் நீங்கள் அதை மனத்தால் நினைத்துப் பார்த்திருக்கிறீர்கள்! அதுதான் அதிக உண்மை. இந்த மன்னிப்பு கேட்பதெல்லாம் வெறும் பாசாங்கே. மறுபடியும் உங்களின் மேல்பரப்பை, உங்களின் முகமூடியை நீங்கள் காப்பாற்றிக்கொண்டு இருக்கிறீர்கள்.

மனநலம் உடைய மனிதரிடம் முகமூடி கிடையாது. அவரது முகம் அசலானது. அவர் யாராக இருந்தாலும் அவராகவே இருக்கிறார். ஒரு பைத்தியக்காரனோ தன் முகங்களைத் தொடர்ச்சியாக மாற்றிக்கொள்ள வேண்டி இருக்கிறது. வெவ்வேறு சூழ்நிலைகளில் வெவ்வேறு உறவுகளில் வெவ்வேறு முகமூடியை ஒவ்வொரு கணமும் அவன் அணிந்து கொள்ள வேண்டி இருக்கிறது. உங்களின் முகங்களை நீங்களே மாற்றிக் கொண்டு போவதை வெறுமனே கவனித்துப் பாருங்கள். உங்கள் மனைவியிடம் வருகிறபோது ஒரு குறிப்பிட்ட முகத்தை நீங்கள் அணிந்திருக்கிறீர்கள். உங்கள் காதலியிடம், உங்கள் கண்ணாடியிடம் போகிறபோது நீங்கள் வேறொரு முகத்தை அணிந்திருக்கிறீர்கள்.

உங்கள் பணியாளரிடம் பேசும்போது வேறொரு முகமூடியை அணிந்திருக்கிறீர்கள். உங்கள் முதலாளியிடம் - எசமானரிடம் பேசும்போது முற்றிலும் வேறுவிதமான முகத்தை அணிந்திருக்கிறீர்கள். உங்கள் ஊழியர் உங்களின் வலது புறத்திலும் உங்கள் எசமானன் உங்களின் இடதுபுறத்திலும் நின்று கொண்டிருக்கிறார்கள் என்றால் அப்போது நீங்கள் ஏககாலத்தில் இரண்டு முகங்களைப் பெற்றிருக்கி றீர்கள். இடதுபுறத்தில் ஒரு முகத்தை காட்டுகிறீர்கள். வலது புறத்தில் வேறொரு முகத்தைக் காட்டுகிறீர்கள். ஏனெனில் வேலைக்காரரிடம் அதே முகத்தை நீங்கள் காட்ட முடியாது. தேவையில்லை. அங்கு நீங்களே எசமானனாய் இருக்கிறீர்கள். எனவே உங்கள் முகத்தின் ஒருபக்கம் எசமானரின் முகமாய் இருக்கும். அதே முகத்தை உங்களின் எசமானிடம் நீங்கள் காட்ட முடியாது. அங்கு உங்கள் முகம் ஒரு பணியாளருடைய தாய் இருக்கும். உங்கள் முகத்தின் மறுபுறம் ஒரு அடிமை மனோபாவத்தைக் காட்டும்.

தொடர்ச்சியாக இது நடந்துகொண்டே போகிறது. நீங்கள் கவனித்துக்கொண்டு இருப்பதில்லை. எனவேதான் இதுகுறித்த விழிப்பு உங்களுக்கு இருப்பதில்லை. நீங்கள் கவனித்தால் நீங்கள் பைத்திய மாகவே இருக்கிறீர்கள் என்பதை உணர்ந்து கொள்வீர்கள். உங்களுடையது என எந்த முகமும் இல்லை. உங்களின் சொந்த முகம் தொலைந்துபோய் விட்டுள்ளது. அந்த அசல் முகத்தைத் திரும்ப அடைவதே தியானம் என்பதன் பொருள்.

எனவேதான் ''போய் உன் அசல்முகத்தைக் கண்டுபிடி: நீ பிறப்பதற்கும் முன் நீ பெற்றிருந்த முகமே உன் அசல் முகம். நீ இறந்துபோன பின்பும் உன்னிடம் எஞ்சி நிற்கும் முகமே உன் அசல் முகம் - அதைக் கண்டு பிடி'' என ஸென் ஆசான்கள் கூறுகிறார்கள். பிறப்புக்கும் இறப்புக்கும் இடையில் நீங்கள் பொய் முகங்களைப் பெற்றிருக்கிறீர்கள். தொடர்ச்சியாக ஏமாற்றிக்கொண்டே போகிறீர்கள் - மற்றவர்களை மட்டுமல்ல; ஒரு கண்ணாடி முன் நீங்கள் நிற்கிற போது உங்களையே ஏமாற்றிக் கொள்கிறீர்கள். கண்ணாடியில் உங்களின் நிசமான முகத்தை ஒருபோதும் நீங்கள் பார்ப்பதில்லை. உங்களையே எதிர்கொள்ளும் அந்தளவு துணிச்சல் உங்களிடம் இல்லை. கண்ணாடியில் பார்க்கும் முகமும் போலியானதாகவே இருக்கிறது. நீங்கள் உருவாக்கும் முகம் அது. அதையே நீங்கள் ரசிக்கிறீர்கள். அதுவோ வண்ணம் பூசிய ஒரு முகமூடிதான்.

மற்றவர்களை மட்டுமல்ல நாம் ஏமாற்றிக் கொண்டிருப்பது. நம்மையுமே நாம் ஏமாற்றிக் கொண்டிருக்கிறோம். உண்மையைச் சொல்வதானால், முதலில் நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளாமல் மற்றவர்களை நம்மால் ஏமாற்றிவிட முடியாது. எனவே நாமே உருவாக்கிய நம் சொந்தப் பொய்களை முதலில் நாமே நம்பியாக வேண்டி இருக்கிறது. அப்போது மட்டும்தான் அவற்றை மற்றவர்களும் நம்பும்படி செய்ய நம்மால் முடியும். உங்கள் பொய்களை நீங்களே நம்புவதில்லை என்றால், மற்றவர் எவரும் அதை நம்பி ஏமாறப்போவதும் இல்லை.

மேலும் உங்களின் வாழ்க்கை என்று நீங்கள் அழைத்துக் கொள்கிற இந்த மொத்த அலைக்கழிப்பும் உங்களை எங்கும் கொண்டு சேர்ப்பதில்லை. இது ஒரு பைத்தியக்காரத்தனமான விவகாரமாக இருக்கிறது. உங்களின் தேவைக்கும்மேல் நீங்கள் உழைக்கிறீர்கள். அதிகப்படியாக வேலை செய்கிறீர்கள். ஓடிச்சாடுகிறீர்கள். வாழ்க்கை முழுவதும் போராடுகிறீர்கள் - ஆனால் எங்கும் போய்ச் சேர்வதில்லை. நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியாது. எங்கே

போய்க்கொண்டிருக்கிறீர்கள், எதை நோக்கி இயங்கிக் கொண்டிருக்கி றீர்கள் என்பதும் உங்களுக்கு தெரியாது. தெருவழியில் ஒரு மனிதரை நீங்கள் நெருங்கி,'' எங்கிருந்து வருகிறீர்கள் ஐயா,'' என்று அவரிடம் கேட்கிறீர்கள். அதற்கு ''எனக்குத் தெரியாது'' என்கிறார் அவர். ''எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று அவரைக் கேட்கிறீர்கள். அதற்கும் ''எனக்கு தெரியாது'' என்கிறார் அவர். இருந்தாலும் ''என்னைத் தடுக்காதே, நான் அவசரமாகப் போயாக வேண்டும்'' என்கிறார் என்றால் அவரைப்பற்றி நீங்கள் என்ன நினைப்பீர்கள்? சரியான பைத்தியம் என்றே அவரைக்குறித்து நீங்கள் நினைப்பீர்கள்.

நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள், எங்கே போய்க்கொண்டிருக்கி றீர்கள் என்பதை நீங்கள் அறிந்திருக்கவில்லை என்றால் பின் எதற்கு அவசரம்? ஆனால் இதுதான் ஒவ்வொருவரின் நிலவரமும் ஆக இருக்கிறது. ஒவ்வொருவரும் தெருவழியிலேயே இருக்கிறார். வாழ்க்கை ஒரு பயணப் பாதை. எப்போதும் அதில் நீங்கள் இடை வழியிலேயே இருக்கிறீர்கள். மேலும் எங்கிருந்து நீங்கள் வந்திருக்கிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரிவதில்லை. எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள் என்பதும் உங்களுக்குத் தெரிவதில்லை. மூலாதாரத்தைத் தோற்றிடத்தைப் பற்றிய அறிவு உங்களுக்கு இல்லை. இலக்கைப்பற்றிய பிரக்ஞை இல்லை. ஆனால் மிகுந்த அவசரம் மட்டும் இருக்கிறது. சேராத இடத்தைப் போய்ச் சேருவதற்காக எல்லாவிதமான முயற்சிகளையும் செய்து கொண்டிருக்கிறீர்கள்.

இது என்ன விதமான மனநலம்? மேலும் இந்தப் போராட்டம் முழுவதிலும் இருந்தும் மகிழ்ச்சியின் சிறு திவலைகள்கூட - சிறு கீற்றுகள்கூட உங்களுக்கு வருவதில்லை. என்றோ ஒருநாள், நாளை, அல்லது நாளை மறுநாள் அல்லது செத்தபின் அல்லது ஏதாவது ஒரு மறுபிறவியில் மகிழ்ச்சி நிறைவு உங்களை எதிர்பார்த்து உங்களுக்காகக் காத்துக்கொண்டு இருக்கிறது என வெறுமனே நம்புகிறீர்கள். இது வெறும் தந்திரம் மட்டுமே; ஒத்திவைப்பதற்கும் இந்தக் கணத்தில் மிகவும் பரிதாபமாக உணராமல் இருப்பதற்குமான சூழ்ச்சி மட்டுமே இது.

ஆனந்தத்தின் கணநேரக் காட்சிகூட உங்களுக்குக் கிடைக்க வில்லை. அப்படியானால் என்ன விதமான மனநலம் இது? தொடர்ச்சி யான துன்பம், அதற்கும் மேல், அந்தத் துன்பத்தை உருவாக்குவது வேறு யாரும் இல்லை, உங்கள் வேதனையை நீங்களேதான் உருவாக்கிக் கொள்கிறீர்கள் என்றால், என்ன விதமான மனநலம் இது? உங்கள்

துன்பத்தை இடைவிடாமல் உருவாக்குவதே நீங்கள்தான். இதைத்தான் பைத்திய நிலை என்கிறேன் நான்.

மனநலம் என்றால் இப்படி இருக்கும்: நீங்கள் மையம் கொள்ளவில்லை என்பதை நீங்கள் உணர்ந்தவராக ஆவீர்கள். எனவே மையம் கொண்டிருப்பதே, மையம் கொண்டவர் ஆவதே, ஒரு மையத்தை உங்களுக்குள் உருவாக்குவதே நீங்கள் செய்யவேண்டிய முதல் வேலை. அந்த மையத்தில் இருந்தே உங்கள் வாழ்வை நீங்கள் நடத்திச் செல்ல முடியும்; உங்கள் வாழ்வை நீங்கள் நெறிப்படுத்திக்கொள்ள முடியும். உங்களுக்குள் ஒரு தலைவரைப் பெற்றிருப்பதே தலைமையான வேலை. அங்கிருந்தே நீங்கள் இயக்கமுடியும், இயங்க முடியும். திடப்படுதலே, நிலையான உருப்பெறுதலே முதல் தேவை. இரண்டாவது தேவை உங்களுக்கு நீங்களே அவலத்தை உருவாக்கிக் கொள்ளாதிருப்பதாகும். அவலத்தை உருவாக்கும் அனைத்தையும் - அந்த அனைத்து உள்நோக்கங்களையும் ஆசைகளையும் நம்பிக்கைகளையும் - கைவிடுவதே இரண்டாவது தேவை.

ஆனால் நீங்கள் விழிப்பாக இருப்பதில்லை; அவற்றையே திரும்பத் திரும்பச் செய்துகொண்டே போகிறீர்கள். அவற்றை உருவாக்கியது நீங்களே என்பதை நீங்கள் காண்பதில்லை. எதை நீங்கள் செய்தாலும் அதன்மூலம் ஏதாவது ஒன்றுக்கான விதைகளை விதைத்துக்கொண்டே இருக்கிறீர்கள். பின்னர் அவை மரமாகும். எதை நீங்கள் விதைத்தீர்களோ அதையே நீங்கள் அறுப்பீர்கள். மேலும் எப்போதெல்லாம் நீங்கள் அறுப்பீர்களோ அப்போதெல்லாம் அவலமே ஏற்படுகிறது. ஆனால் அந்த விதைகளை விதைத்ததே நீங்கள்தான் என்பதை ஒருபோதும் நீங்கள் திரும்பிப் பார்ப்பதில்லை. உங்களுக்கு துன்பம் ஏற்படும் போதெல்லாம் வேறு எங்கிருந்தோ அது வருவதாகவே நீங்கள் நினைக்கிறீர்கள். அதை ஏதோ தற்செயலானது என்றோ சில தீய சக்திகள் உங்களுக்கு எதிராகச் சதிசெய்து கொண்டிருக்கின்றன என்றோ நினைக்கிறீர்கள்.

இப்படித்தான் நீங்கள் பேயை சிருஷ்டித்திருக்கிறீர்கள். பேய்/ சாத்தான் என்பது ஒரு பலிகடாதான். உண்மையில் நீங்களே பேயாக இருக்கிறீர்கள். உங்களின் துன்பத்தை நீங்களே உருவாக்குகிறீர்கள். ஆனால் நீங்கள் துன்புறும் போதெல்லாம் அதற்கான காரணத்தை சிறிதும் தயங்காமல் பேயின்மேல் போட்டு விடுகிறீர்கள். பேய்தான் ஏதோ சதி செய்து கொண்டிருக்கிறது! இனி நீங்கள் கவலை இன்றி இருக்கலாம்! இனி, உங்கள் சொந்த முட்டாள்தனமான வாழ்க்கை முறையை, மடத்தனமான

வாழ்க்கை முறையைக் குறித்து ஒருபோதும் நீங்கள் உணர்வுள்ளவர் ஆக வேண்டுவதில்லை.

அல்லது அதை நீங்கள் விதி என்கிறீர்கள். அல்லது கடவுள் என்னை சோதிக்கிறார் என்கிறீர்கள். எப்படியும், உங்களுக்கு நேரிடுவது எதுவாயினும் அதற்கான முழுக் காரணமும் நீங்களே என்னும் அடிப்படை உண்மையைத் தவிர்த்துக்கொண்டே போகிறீர்கள். ஆனால் தற்செயல் என்று எதுவுமே இல்லை. ஒவ்வொன்றுக்கும் ஒரு காரணத் தொடர்பு இருக்கிறது. நீங்களே அந்த இணைப்புக் காரணி.

எடுத்துக்காட்டாக, நீங்கள் காதல் கொள்கிறீர்கள். காதல் உங்களுக்கு ஒருவித உணர்வைத் தருகிறது. ஆனந்தம் என்பது அருகில்தான் எங்கோ இருப்பதான உணர்வை அது தருகிறது. உங்களை ஒருவர் வரவேற்கிறார்.' குறைந்தபட்சம் ஒருவராவது உங்களை வரவேற்கிறார் என்பதை முதல்முறையாக உணர்கிறீர்கள். நீங்கள் மலரத் தொடங்குகிறீர்கள். ஒருவராவது உங்களை ஏற்றுக்கொண்டிருக்கிறார். உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார். உங்களை அன்புசெய்து கொண்டும் உங்கள்மேல் அக்கறை எடுத்துக்கொண்டும் இருக்கிறார். இதனால் நீங்கள் மலரத் தொடங்குகிறீர்கள். ஆனால் இது தொடக்கத்தில் மட்டும்தான். பின் உடனடியாகவே உங்கள் தவறான பழக்கப் பதிவுகள், மனப் பாங்குகள் வேலைசெய்ய ஆரம்பிக்கின்றன. உடனடியாகவே உங்கள் காதலரை - உங்களின் அன்புக்குரியவரை - உடைமைகொள்ள ஆசைப்படுகிறீர்கள்.

ஆனால் உடைமை கொள்ளுதல் என்பது உயிரை கொல்லுதலே ஆகும். காதலரை உடைமை கொண்ட அக்கணமே அவரை நீங்கள் கொன்று வீடுகிறீர்கள். பின் நீங்கள் துன்புறுகிறீர்கள். பின் நீங்கள் அழுது புலம்புகிறீர்கள். பின் நீங்கள் 'காதலர் மேல்தான் தவறு,' 'விதி செய்த சதி' என்று எண்ணுகிறீர்கள். ''விதி எனக்குச் சாதகமாக இல்லை'' என்கிறீர்கள். ஆனால் உடைமை கொள்ளுதல்மூலம், உடைமை மனப் பான்மை மூலம் நீங்கள்தான் காதலுக்கு உலை வைத்து விட்டீர்கள் என்பது உங்களுக்குத் தெரிவதில்லை.

ஆனால் ஒவ்வொரு காதலரும் இதைத்தான் செய்து கொண்டிருக்கிறார். ஒவ்வொரு காதலரும் அதனால் துன்புறுகிறார். மிகப் பெரிய ஆசீர்வாதங்களை உங்களுக்கு வழங்க முடிகிற காதலானது மிகுந்த அவலத்தைத் தருவதாக ஆகிறது. எனவேதான் பழைய பண்பாடுகளில், குறிப்பாக இந்தியப் பண்பாட்டில், பழைய காலத்தில்

காதல் என்னும் நிகழ்வையே முற்றிலுமாக அவர்கள் அழித்து விட்டு இருக்கிறார்கள். காதல் வருவதற்கான வாய்ப்பே எழாதபடிக்கு பால்ய விவாகத்தை அவர்கள் நடத்தி வைத்தார்கள். ஏனெனில் அன்பு கொள்வது அவலத்துக்கு இட்டுச் செல்கிறது. இது எந்த அளவுக்கு எல்லாருக்கும் தெரிந்த நிகழ்வாக இருந்தது என்றால், அதாவது அன்புக்கு நீங்கள் இடமளித்தால், பின்பு அன்பானது அவலத்துக்கு இட்டுச் செல்கிறது என்கிறபோது, அந்த வாய்ப்புக்கே இடமில்லாமல் செய்து விடுவதுவே அதிக நல்லதாகும். சிறு குழந்தைகளுக்குத் திருமணம் செய்து வைத்து விடுவோம். காதலில் அவர்கள் வசப்பட முடிவதற்கு முன்பே அவர்கள் திருமணம் செய்தவர்களாகட்டும். அப்போது தான் காதல் என்றால் என்ன என்பதே ஒருபோதும் அவர்களுக்குத் தெரியாது போகும். அப்போது அவர்கள் அவலத்தில் வீழ மாட்டார்கள்.

ஆனால் அன்பு ஒருபோதும் அவலத்தை உருவாக்குகிறதில்லை. நீங்கள்தான் அதை நஞ்சாக்கி விடுகிறீர்கள். அன்பு எப்போதும் ஆனந்தமாகவே இருக்கிறது. அன்பு எப்போதும் கொண்டாட்டமாகவே இருக்கிறது. இயற்கை உங்களுக்கு வழங்குகிற மிக ஆழமான பரவசமாகவே அன்பு இருக்கிறது. ஆனால் நீங்களோ நாசமாக்குகிறீர்கள். ஆக, அவலத்தில் வீழக் கூடாது என்பதற்காகவே இந்தியாவிலும் மற்ற பழமைப் பண்பாடுள்ள நாடுகளிலும் அன்புக்கான சாத்தியம் முற்றிலுமாக அடைக்கப்பட்டது. அப்போது நீங்கள் அவலத்தில் விழ மாட்டீர்கள். ஆனால் அப்போது இயற்கை உங்களுக்கு வழங்குகிற அந்த ஒரே பரவசத்தையும் நீங்கள் இழந்து விடுகிறீர்கள். எனவே ஒரு சாதாரண மான இரண்டும் கெட்டான் வாழ்க்கைதான் அங்கு இருக்கும். துன்பமும் வராது, இன்பமும் வராது. எப்படியோ ஓட்டிக் கொண்டு போவதாக மட்டுமே அது இருக்கும். கடந்த காலத்தில் திருமணம் என்பது இப்படித்தான் இருந்து வந்திருக்கிறது.

இப்போது காதலை உயிர்ப்பிக்க அமெரிக்கா முயன்று கொண்டிருக்கிறது. மேற்குலகமும் முயற்சி செய்து வருகிறது. ஆனால் அதன்வாயிலாக மிகுந்த அவலமே உருவாகிக் கொண்டிருக்கிறது. எனவே கூடிய சீக்கிரத்தில் மேலை நாடுகளும் திரும்பவும் பால்ய விவாகத்தையே தேர்ந்தெடுக்க வேண்டி இருக்கும். காதலானது மிகுந்த துயரத்தை உருவாக்கிக் கொண்டிருப்பதனால் திரும்பவும் குழந்தைமணத்தை கொண்டுவர வேண்டும் என்று அங்குள்ள சில உளவியல்காரர்கள் ஏற்கனவே கருத்து முன்வைத்திருக்கிறார்கள். ஆனால் திரும்பவும் நான் கூறுகிறேன்: அப்படிக் கொண்டுவரும் குழந்தை

மணம் அன்புடன் விளங்க முடியாது. மெய் அன்பு, துன்பத்தை உருவாக்க முடியாது. அதை உருவாக்குவது நீங்கள்தான், உங்கள் பைத்தியக்கார மனப்பாங்குதான். காதலில் மட்டுமல்ல, எல்லா விசயங்களிலும் இதுவே நிலைமை. எல்லா விசயங்களிலும் உங்கள் மனத்தை நீங்கள் பயன்படுத்த, கொண்டுவர வேண்டியே இருக்கிறது.

பல பேர் என்னிடம் வருகிறார்கள். எடுத்துக்காட்டாக அவர்கள் தியானம் செய்யத் தொடங்குகிறார்கள். தொடக்கத்தில் திடீர் வெளிச்சங்கள் கிட்டுகின்றன. ஆனால் இது தொடக்கத்தில் மட்டுமே. குறிப்பிட்ட விதமான அனுபவங்களை ஒரு தடவை அவர்கள் அறிந்துவிட்டதுமே, குறிப்பிட்ட, தரிசனக் கீற்றுகளை ஒருதடவை அவர்கள் அறிந்து கொண்டு விட்டதுமே, எல்லாமே நின்று விடுகிறது. பின் அவர்கள் அழுது புலம்பிக் கொண்டே என்னிடம் வருகிறார்கள். வந்து ''என்ன ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது? ஏதோ நிகழ்ந்து கொண்டிருந்தது. இப்போது எல்லாமே நின்று விட்டிருக்கிறது. எங்களால் ஆனவரை முயற்சி செய்து வருகிறோம். ஆனால் ஒன்றுமே, அதனால் விளைவிதில்லை'' என்கிறார்கள்.

நான் அவர்களிடம் கூறுகிறேன், ''முதல் முறையாக அது நிகழ்ந்தது ஏனென்றால் அப்போது நீங்கள் எதிர்பார்த்திருக்கவில்லை. இப்போது நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள். எனவே மொத்த சூழலும் மாறி இருக்கிறது. முதல் தடவையாக அந்த எடையற்ற தன்மையை நீங்கள் உணர்ந்த போது, அறியப்படாத ஏதோ ஒன்றால் நிரம்பி இருந்ததாக நீங்கள் உணர்ந்த போது, உங்கள் செத்த வாழ்வில் இருந்து அப்புறப்படுத்தப்படுவதாக உணர்ந்தபோது, பரவச கணங்களை நீங்கள் உணர்ந்த போது - அப்போது அதை நீங்கள் எதிர்பார்த்திருக்கவில்லை. அத்தகைய கணங்களை அதற்கு முன் ஒருபோதும் நீங்கள் அறிந்திருந்ததும் இல்லை. முதல் தடவையாக அவை உங்கள்மேல் இறங்கி இருந்தன. அவற்றை நீங்கள் அறியாமலும் எதிர்பார்க்காமலும் இருந்தீர்கள். அதுவே அப்போதைய நிலைமையாக இருந்தது.

''இப்போதோ நிலைமையை நீங்கள் மாற்றிக்கொண்டு இருக்கிறீர்கள். இப்போது ஒவ்வொரு நாளும் தியானத்துக்காக நீங்கள் அமர்கிறபோது எல்லாம் அதை எதிர்பார்த்துக்கொண்டு இருக்கிறீர்கள். இப்போது நீங்கள் தந்திரமானவராக, விவரமானவராக, கணக்குப் போடுவராக ஆகி இருக்கிறீர்கள். முதன்முதல் தடவையாக உங்களுக்கு காட்சி கிட்டிய போது நீங்கள் அப்பாவியாக இருந்தீர்கள். எத்தகைய எதிர்பார்ப்பும் உங்களிடம் இருக்கவில்லை. அப்போது அது நிகழ்ந்தது.

மறுபடியும் அது நிகழும். ஆனால் அதற்கு மறுபடியும் நீங்கள் அப்பாவியாக இருக்க வேண்டி இருக்கும்.

''இப்போதோ உங்கள் மனம் உங்களுக்கு அவலத்தையே கொண்டு வருகிறது. 'அந்த அனுபவத்தைத் திரும்பத் திரும்ப நான் அடைந்தாக வேண்டும்' என நீங்கள் வற்புறுத்திக் கொண்டே போனால் எப்போதைக்குமே அதை நீங்கள் இழந்து விடுவீர்கள். அதை முற்றிலுமாக நீங்கள் மறக்காதவரை, திரும்பவும் அது நிகழ ஆண்டுகள்கூட ஆகலாம். அத்தகைய ஒரு நிகழ்ச்சியானது கடந்த காலத்தில் எப்போதோ நிகழ்ந்தது என்பதை முற்றிலும் கவனியாதவராக நீங்கள் ஆனால் மட்டுமே அந்த வாய்ப்பு மறுபடியும் உங்களுக்கு வாய்க்கும்.''

இதையே நான் பைத்திய நிலை என்கிறேன்: எல்லாவற்றையுமே நீங்கள் நாசமாக்குகிறீர்கள். உங்கள் கைக்குக் கிட்டுபவை எவையாயினும் உடனடியாக அவற்றை நீங்கள் அழிக்கிறீர்கள். ஒன்றை நினைவில் கொள்ளுங்கள்: வாழ்க்கை உங்களுக்குப் பல பரிசுகளை நீங்கள் கேட்காமலேயே வழங்குகிறது. நீங்கள் ஒருபோதும் வாழ்க்கையிடம் கேட்டதில்லை. ஆனால் வாழ்க்கை உங்களுக்குப் பல பரிசுகளை வழங்குகிறது. ஆனால் ஒவ்வொரு பரிசையும் நீங்கள் அழிக்கிறீர்கள். ஒவ்வொரு பரிசும் மென்மேலும் பெரிய பரிசாக ஆக முடியும். அது வளர்ந்து செல்ல முடியும். ஏனெனில் செத்துப்போன எதையும் ஒருபோதும் வாழ்க்கை உங்களுக்குத் தருவதில்லை. அன்பு உங்களுக்கு தரப்பட்டிருக்கிறது என்றால் அது வளர முடியும். முன்பு அறிந்திராத அளவுகளுக்கு அது வளர முடியும். ஆனால் எடுத்த எடுப்பிலேயே அதை நீங்கள் நாசமாக்கி விடுகிறீர்கள்.

தியான நிலை உங்களுக்கு வாய்த்திருக்கிறது என்றால் கடவுள் தன்மைக்கு நன்றி உள்ளவர்களாக மட்டும் இருங்கள். மற்றபடி அதை மறந்து விடுங்கள். நன்றி உணர்வுடன் மட்டும் இருங்கள். தியானநிலையை அடைவதற்கான எந்தத் திறனையும் நீங்கள் பெற்றிருக்கவில்லை, தியான நிலையை அடைவதற்காக எவ்வகையிலும் உங்களுக்கு அதிகார உரிமை அளிக்கப்பட்டிருக்கவில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். அது ஒரு பரிசாக இருந்திருக்கிறது. இறைமையின் ஒரு பொங்கி வழிதலாக அது இருந்திருக்கிறது. அதை மறந்து விடுங்கள். அதை எதிர்பார்க்காதீர்கள். அதை வற்புறுத்திக் கேட்காதீர்கள். மறுநாள் அது கூடுதல் ஆழத்துடன், கூடுதல் மேன்மை யுடன், கூடுதல் பெரியதாக வரும். அது விரிவடைந்து கொண்டே

போகும். ஆனால் ஒவ்வொரு நாளும் மனதில் இருந்து அதை உதிர்த்துவிடுங்கள்.

அதன் சாத்தியப்பாடுகளுக்கு எல்லையே இல்லை. அது எல்லை அற்றதாக ஆகும். முழு பிரபஞ்சமுமே உங்களுடையதாக ஆகும். ஆனால் அதற்கு, மனதை நீங்கள் கைவிட வேண்டி இருக்கும். உங்கள் மனமே பைத்திய நிலையில் இருப்பதுதான். எனவே பித்த நிலை, சித்த நிலை என்னும் இரு நிலைகள் /வழிகள் மட்டுமே இருக்கின்றன என்று நான் சொல்லும்போது மனம், தியானம் என்னும் இரண்டையும் நான் குறிப்பிடுகிறேன். மனத்திலேயே நீங்கள் கட்டுண்டு கிடந்தால் தொடர்ந்து நீங்கள் பைத்தியமாகவே இருப்பீர்கள். மனத்தைக் கடந்து அப்பால் நீங்கள் செல்லாத வரை பித்த நிலையை நீங்கள் கடந்துவிட முடியாது. அதிகபட்சம் இந்தச் சமுதாயத்தில் செயல்படும் ஒரு உறுப்பினராக வேண்டுமானால் நீங்கள் இருக்க முடியும், அவ்வளவுதான். மேலும் இன்றைய சமுதாயத்தின் ஒரு செயல்படும் உறுப்பினராக எப்படி உங்களால் இருக்க முடிகிறது என்றால் மொத்தச் சமுதாயமும் உங்களைப் போலவேதான் உள்ளது. இங்கு ஒவ்வொருவரும் பைத்தியமாகவே இருக்கிறார் என்பதால்தான். பைத்திய நிலையே இயல்பான நிலைபோல் இன்று இருக்கிறது.

விழிப்படையுங்கள். மற்றவர்கள்தான் பைத்தியங்கள் என்று நினைக்காதீர்கள். நீங்களே பைத்தியமாக இருப்பதை ஆழமாக உணருங்கள். அதுவும் உடனடியாகச் செய்தாக வேண்டும்! இது மிகுந்த அவசர அவசியம்! இதைத் தள்ளிப் போடாதீர்கள். ஏனென்றால் இனி உங்களால் ஒன்றும் செய்ய முடியாது என்று சொல்லக்கூடிய தருணம் வரலாம். இனி உங்களால் ஒன்றும் செய்ய முடியாது என்னும் அளவுக்கு பைத்திய நிலையில் நீங்கள் மிகுந்த அளவுக்கு முற்றிப்போய் விடலாம்.

இப்போது தான் உங்களால் எதாவது செய்ய முடியும். இன்னமும் நீங்கள் வரம்புக்குள் இருக்கிறீர்கள். இப்போதுதான் ஏதாவது செய்ய முடியும். சில முயற்சிகள் மேற்கொள்ளப்பட முடியும். வழிமுறைகளை மாற்றிக் கொள்ள முடியும். ஆனால் உங்களால் எதையும் செய்ய முடியாத ஒரு கட்டம் வரமுடியும். நீங்கள் முற்றிலுமாக தகர்ந்து போய்விடுகிற ஒரு கட்டம், உணர்வை அறவே நீங்கள் இழந்துபோயிருக்கிற ஒரு கட்டம் வர முடியும்.

நீங்கள் பைத்தியமாகவே இருக்கிறீர்கள் என்பதை உங்களால் உணர முடிந்தால் அது மிகவும் நம்பிக்கை தரத்தக்க ஒரு அறிகுறியாகும். உங்கள்

சொந்த இருத்தலை நோக்கிய இடையறாத விழிப்புள்ளவராக நீங்கள் ஆக முடியும் என்பதை அதுகாட்டுகிறது. கதவு அங்கே இருக்கிறது. உண்மையாகவே மன நலமுள்ளவராக நீங்கள் ஆகமுடியும். குறைந்தபட்சம், நீங்கள் புரிந்துகொள்ள முடிகிறது என்னும் அளவுக்காவது அங்கே மனநலம் இருக்கிறது.

**இரண்டாவது கேள்வி:**

**சரியான அறிவுத் திறன் என்பது மனதின் ஐந்து திறன் களில் ஒன்று. ஆனால் அது ஒரு மனமற்ற நிலை அல்ல. அப்படியானால், இந்த மையத்தின் வழியாக ஒருவர் காணும் எதுவும் சரியாக இருக்கும் என்பது எப்படி சாத்தியம்? சரியான அறிவு என்னும் இந்த மையம், ஞானம் அடைந்த பிறகு செயல்படுகிறதா அல்லது ஒரு தியானிப்ப வரும் சாதகரும்கூட இந்த மையத்துடன் இருக்க முடியுமா?**

ஆம், பிரமாணம் அல்லது சரியான அறிவு மையம் இன்னும் மனதுக்குள்தான் இருக்கிறது. அறியாமை/ மடமை என்பது மனதினுடையது. அறிவு என்பதும் மனத்தின் உடையதே. மனத்துக்கு அப்பால் நீங்கள் செல்லும் போது அங்கு இரண்டும் இல்லை. அங்கு அறியாமையும் இல்லை, அறிவும் இல்லை. அறிவும் ஒரு நோய்தான். நல்ல தனமான நோய், தங்கமான நோய். ஆனாலும் அதுவும் ஒரு நோய்தான்! எனவே உண்மையிலேயே 'எனக்குத் தெரியும்' என்று புத்தர் சொன்னார் என்று சொல்ல முடியாது. 'எனக்குத் தெரியாது' என்று அவர் சொன்னதாகவும் சொல்ல முடியாது. அவர் கடந்து சென்றிருக்கிறார். அவர் அறிந்திருக்கிறாரா அறியாமையில் இருக்கிறாரா என்பதைப்பற்றி உறுதியாக எதுவும் கூறமுடியாது.

மனமே இல்லாதபோது நீங்கள் எப்படி அறிந்திருக்கவோ அறியாதிருக்கவோ முடியும்? அறிதல் என்பதே மனத்தின் வாயிலாகத்தான். அறியாதிருத்தல் என்பதும் மனத்தின் வாயிலாகத்தான். மனத்தின் வழியாக நீங்கள் தவறாக அறியவும் முடியும். மனத்தின் வழியாக நீங்கள் சரியாக அறியவும் முடியும். மனம் இல்லாதபோது அறிவு, அறியாமை இரண்டுமே மறைகின்றன. இதைப் புரிந்து கொள்வது கடினமாகவே இருக்கும். ஆனால் நீங்கள் நடைமுறைப்படுத்தினால் அது எளிதாகவே இருக்கிறது: மனம் அறிகிறது. எனவே மனதால் அறியாதிருக்கவும் முடியும். ஆனால் மனமே இல்லாதிருக்கையில் எப்படி நீங்கள் அறியாதவராயிருக்க முடியும்? எப்படி நீங்கள் அறிந்தவராக

இருக்க முடியும்? நீங்கள் இருக்கிறீர்கள். ஆனால் அறிதலும் அறியாதிருத்தலும் இரண்டுமே மறைந்திருக்கின்றன.

மனத்துக்கு இரண்டு மையங்கள் இருக்கின்றன. ஒன்று, சரியான அறிவு (மையம்) அந்த மையம் செயல்பட்டால் அது கவனக் குவிப்பு, தியானம், ஆழ்ந்த சிந்தனை, பிரார்த்தனை முதலியவற்றின் வழியாக செயல்படத் தொடங்குகிறது. அப்போது நீங்கள் அறிய வருவது எதுவாயினும் அது சரியானதாக இருக்கிறது. மற்றது தவறான (அறிவு) மையம். நீங்கள் தூக்கக் கலக்கமாக இருந்தால், வசியத்துக்கு ஆட்பட்டது போன்ற நிலையில் வாழ்ந்தால், காமம் - இசை - போதை மருந்துகள் அல்லது இவைபோன்ற எதனாலாவது வெறியேறி மதிமயங்கி இருந்தால் இந்த மையம் செயல்படுகிறது.

உணவுப் பழக்கத்துக்கு நீங்கள் அடிமையாகிவிட முடியும். அந்நிலையில் அதுவே ஒரு போதைப் பொருளாக ஆகிவிடும். அளவுக்கு அதிகமாக நீங்கள் உண்டு கொண்டிருக்கலாம். உணவின் மீது நீங்கள் பைத்தியமாகி இருக்கிறீர்கள். வெறிகொண்டிருக்கிறீர்கள் என்றால், அந்நிலையில் உணவே மதுபோல் ஆகிறது. உங்கள் மனதை ஆட்கொள்வது எதுவானாலும், 'அது இல்லாமல் என்னால் வாழமுடியாது' என நீங்கள் கூறும் எதுவும், போதை வெறி ஊட்டுவதாகவே ஆகிறது. ஆக இத்தகைய போதைப் பொருள்களின் துணையோடு நீங்கள் வாழ்ந்தால் அப்போது உங்களின் தவறான அறிவு என்னும் மையம் செயல்படுகிறது. அந்நிலையில் நீங்கள் அறிய வருவது எதுவானாலும் அது தவறானதாகவே, சரியற்றதாகவே இருக்கிறது. பொய்களின் உலகில் நீங்கள் வாழ்கிறீர்கள்.

ஆனால் இந்த இரு மையங்களுமே மனத்தைச் சேர்ந்தவையே. மனத்துக்கு சொந்தமானவையே. மனம் உதிர்கிற போது, தியானம் தன் முழுமையை வந்து அடைந்திருக்கிறபோது.... சமஸ்கிருதத்தில் நாம் இரண்டு சொற்களை கையாள்கிறோம். ஒரு சொல் தியானம். மற்ற சொல் சமாதி. சமாதி என்றால் தியானம்கூடத் தேவையற்றதாக ஆகிவிடக்கூடிய நிலையில் உள்ள செம்மையுற்ற தியானம். அந்நிலையில் தியானம் செய்வதுகூட அர்த்தம் அற்றதாக இருக்கிறது. அதை நீங்கள் செய்ய முடியாது. அதுவாகவே நீங்கள் ஆகி இருக்கிறீர்கள் என்றால் அதுவே சமாதி.

சமாதி என்னும் நிலையில் மனம் இருப்பதில்லை. மேலும் அறிவு அறியாமை என்பவையும் இருப்பதில்லை. தூய இருத்தல் மட்டுமே

இருக்கிறது. இந்தத் தூய இருத்தல் என்பது முற்றிலும் வேறுபட்ட ஒரு பரிமாணம் ஆகும். இது அறிதல் என்னும் பரிமாணம் அல்ல. இருத்தல் என்னும் பரிமாணம்.

புத்தர் அல்லது யேசுவைப் போன்ற ஒரு மனிதரும்கூட உங்களுடன் தொடர்பு கொள்ள விரும்பினால் அவர்தம் மனத்தைப் பயன்படுத்த வேண்டியே இருக்கும். தொடர்பு கொள்வதற்கு தன் மனத்தை அவர் பயன்படுத்த வேண்டி இருக்கும். நீங்கள் ஒரு கேள்வி கேட்டால் தன் மனத்தின் சரியான அறிவு என்கிற மையத்தை அவர் பயன்படுத்த வேண்டி இருக்கும். தொடர்பு கொள்வதற்கும் சிந்திப்பதற்கும் அறிவதற்குமான கருவியே மனம்.

ஆனால் நீங்கள் எதையும் கேட்காமல் இருக்கும்பொழுது புத்தர் தன் போதிமரத்தின் அடியில் அமர்ந்திருக்கும்போது அவர் அறியாதவராக வும் இல்லை, அறிகிறவராகவும் இருப்பதில்லை. அவர் அங்கே இருக்கிறார். உண்மையில் மரத்துக்கும் புத்தருக்கும் இடையில் எவ்வித வேறுபாடும் இருப்பதில்லை. வேறுபாடு இருக்கிறது - ஆனால் ஒரு விதத்தில் வேறுபாடு இருப்பதில்லை. அவர் ஒரு மரமாகவே ஆகியிருக்கிறார். அவர் சும்மா இருக்கிறார். அறிவின் இயக்கம் உட்பட எந்த இயக்கமும் இருப்பதில்லை. சூரியன் உதிக்கும். ஆனால் சூரியன் உதித்திருக்கிறது என்பதை அவர் அறியார். அதை அவரால் அறிய இயலாது என்பதல்ல இதன் பொருள். மாறாக அப்போதைய அவரது இயக்கத்தில் அதற்கு இடம் இல்லை - அவ்வளவே.

அவர் எந்த அளவுக்கு அமைதியானவராக - நிலைத்தவராக ஆகி இருக்கிறார் என்றால் அவருள் எதுவுமே இயங்குவதில்லை. அவர் அந்த மரத்தைப் போன்றே இருக்கிறார். மரம் முற்றிலும் அறியாமையில் இருக்கிறது. அல்லது இதை நீங்கள் இப்படிச் சொல்ல முடியும்: வளர்ச்சிப் படி நிலையில் மரம் மனத்தைவிட கீழ்நிலையில் இருக்கிறது.

அதில் இன்னும் மனம் செயல்பட தொடங்கி இருக்கவில்லை. இனிவரும் ஏதாவது ஒரு பிறவியில் மரம் மனிதனாக ஆகக்கூடும். ஏதாவது ஒரு பிறவியில் மரம் உங்களைப் போன்றே பைத்தியமாக ஆகக்கூடும். ஏதாவது ஒரு பிறவியில் மரமும் தியானம் செய்ய முயலக் கூடும். அவ்வாறே என்றாவது ஒருநாள் மரமும் ஒரு புத்தராக ஆகவும் கூடும். தற்போது இன்னும் மனம் உருவாகாத கீழ்நிலையிலேயே மரம் இருக்கிறது. மரத்தின் அடியில் அமர்ந்திருக்கும் புத்தரோ மனத்தையும் கடந்த வளர்ந்த படிநிலையில் இருக்கிறார். இருவருமே மனமற்றவர்

களாக இருக்கிறார்கள் இனித்தான் மரம் மனத்தைப் பெற்றாக வேண்டும். புத்தரோ ஏற்கனவே மனத்தைப் பெற்று அதைக் கடந்தும் விட்டிருக்கிறார்.

ஆகவே மனம் கடக்கப்படுகிற போது, மனமற்ற நிலை சாதிக்கப்படுகிறபோது, நீங்கள் தூய இருத்தலாக, சச்சிதானந்தமாக இருக்கிறீர்கள். உங்களுக்குள் எதுவும் நிகழ்ந்துகொண்டு இருப்பதில்லை. அங்கே செயலும் இல்லை, அறிதலும் இல்லை. ஆனால் நமக்கு இது கடினமானதாகவே இருக்கிறது. இருமை முழுமையாகக் கடக்கப் படுகிறது என்றே வேதங்கள் சொல்லிக் கொண்டே போகின்றன.

அறிவு - அறியாமை என்னும் இருமையில் அறிவும் ஒரு பகுதிதான். ஆனால் ஞானிகள் என்று சொல்லப்படுகிறவர்கள், புத்தர் ஒரு 'அறிந்தவர்' ஆகியிருக்கிறார் என்று சொல்லிக்கொண்டே இருக்கிறார் கள். எனவே நாமும் இருமையைத் தொற்றிக் கொண்டிருக்கிறோம். எனவேதான் புத்தர் ஒருபோதும் பதில் அளிக்கிறதில்லை. ''ஒரு ஆள் புத்தராக ஆனதும் என்ன நிகழ்கிறது?'' என்று பல தடவைகள் - லட்சக்கணக்கான தடவைகள் அவரிடம் கேட்டிருக்கிறார்கள். அவரோ மௌனம் சாதிக்கிறார். ''நீங்களே ஒரு புத்தராகி அறிந்து கொள்ளுங்கள்'' என்கிறார். என்ன நிகழ்கிறது என்பதைப்பற்றி எதுவும் கூற முடியாது. ஏனெனில் எதைச் சொல்ல முடிவதானாலும் அதை உங்கள் மொழியில்தான் சொல்ல வேண்டும். ஆயின் உங்கள் மொழியோ அடிப்படையிலேயே இருமைத் தன்மையானது. எனவே அந்நிலையில் சொல்ல வருவது எதுவானாலும் அது சரியற்றதாகவே இருக்கும்.

அவர் அறிந்திருக்கிறார் என்று சொல்லப்படுமானால் அது சரியற்றதாகவே இருக்கும். அவர் அழியாதநிலையை அடைந்தவர் ஆகி இருக்கிறார் என்று சொல்லப்படுமானால் அதுவும் சரியற்றதாகவே இருக்கும். இப்போது அவர் ஆனந்தத்தை அடைந்திருக்கிறார் என்று சொல்லப்படுமானால் அதுவும் சரியற்றதாகவே இருக்கும். ஏனெனில் எல்லா இருமையும் மறைந்துவிடுகிறது. அவலம் மறைகிறது, மகிழ்ச்சியும் மறைகிறது. அறியாமை மறைகிறது, அறிவும் மறைகிறது. இருட்டு மறைகிறது, வெளிச்சமும் மறைகிறது. சாவு மறைகிறது, வாழ்வும் மறைகிறது. என்னவாகவும் சொல்லமுடியாது. பின்வருமாறு மட்டும் தான் சொல்ல முடியும்: அதாவது எதை நீங்கள் நினைக்க முடிவதாயினும் அது அங்கே இராது. நீங்கள் கருத முடிவது எதுவாயினும் அது அங்கே இராது. ஆனால் அதுவாகவே ஆவது மட்டுமே ஒரே வழி. அதன்பிறகே நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள்.

மூன்றாவது கேள்வி:

ராமனைப் பார்த்தது போலவோ, கிருஷ்ணனுடன் நாம் ஆடுவது போலவோ நாம் காட்சியில் கண்டால் அது கற்பனையே என்பதை நினைவில் கொள்ளுமாறு நீங்கள் சொன்னீர்கள். ஆனால் இன்னொரு நாள் இரவில், ''ஏற்புத் தன்மையுடன் நாம் இருந்தால் இக்கணமே கிறிஸ்து அல்லது புத்தர் அல்லது கிருஷ்ணனுடன் நம்மால் தொடர்பு கொள்ள முடியும் என்றும் நீங்கள்தான் சொன்னீர்கள். தொடர்பு நிகழ்கிற போதும்கூட அது கற்பனைதானா? அல்லது கிறிஸ்துவின் காட்சி அல்லது புத்தரின் காட்சி உண்மையாகவே இருக்கக்கூடிய தியான நிலைகளும் உள்ளனவா? இது புரிந்து கொள்ளச் சற்று சிரமமாக இருக்கிறது.

முதல் விசயம்: நூறு சம்பவங்களில் தொண்ணூற்றி ஒன்பது சம்பவங்கள் கற்பனையாகத்தான் இருக்கும். நீங்கள் கற்பனை செய்கிறீர்கள். எனவேதான் ஒரு கிறிஸ்தவருக்கு வரும் காட்சிகளில் ஒருபோதும் முகமதுவைக் காண்பதில்லை. முகமதுவையும் யேசுவையும் விட்டுவிடுவோம். அவர்கள் அதிக தொலைவில் இருக்கிறார்கள். ஆனால் ஒரு சமணருக்குக்கூட அவர்களது காட்சிகளில் ராமன் ஒருபோதும் தோன்றுவதில்லை; தோன்ற முடிவதில்லை. ஒரு இந்துவுக்கு ஒருபோதும் மகாவீரர் காட்சி அளிப்பதில்லை. ஏனெனில் மகாவீரரை கற்பனை செய்வதற்கான அடிப்படை எதுவும் உங்களிடம் இருப்பதில்லை.

நீங்கள் ஒரு இந்துவாகப் பிறந்தால் ராமன், கிருஷ்ணன் என்னும் கருத்துகளுடனேயே நீங்கள் வளர்க்கப்பட்டிருக்கிறீர்கள். நீங்கள் கிறிஸ்தவராகப் பிறந்திருந்தால் உங்களுக்குள் - உங்களின் கணினிக்குள், உங்களின் மனத்துக்குள் - யேசுவின் உருவமே ஊட்டப்படுகிறது. எனவே நீங்கள் தியானிக்கத் தொடங்கும் போதெல்லாம் ஊட்டப்பட்ட, பதியச் செய்யப்பட்ட உருவமே மனத்தில் மேலெழுகிறது. அது மனத்தில் பளிச்சிடுகிறது.

உங்களுக்கு மட்டுமே இயேசு தோன்றுகிறார். யூதர்களுக்கு ஒருபோதும் அவர் தோன்றுவதில்லை. இத்தனைக்கும் அவர் ஒரு யூதராகப் பிறந்தார். ஒரு யூதராக இருந்தவர். ஆயினும் யூதர்களுக்கு அவர் ஒருபோதும் காட்சியளிப்பதில்லை. ஏனெனில் அவர்கள் ஒருபோதும் அவரை நம்பியதில்லை. அவரை ஒரு போக்கிரி என்றே அவர்கள் கருதினார்கள். ஒரு குற்றவாளியாகத் தீர்ப்பிட்டு அவரைச்

சிலுவையில் அறைந்தார்கள். யேசு, யூதர் குலத்தைச் சேர்ந்தவர். யூத இனத்தின் ரத்தமே அவருக்குள் ஓடியது. எனினும் அவர் ஒருபோதும் யூதர்களுக்குக் காட்சி அளிப்பதில்லை.

ஒரு வேடிக்கைக் கதை ஒன்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஜெர்மனியில் இட்லரின் நாஜி படைவீரர்கள் ஒரு நகரில் இருந்த யூதர்களைப்படுகொலை செய்து கொண்டிருந்தார்கள். நிறையப் பேரை அவர்கள் கொன்று விட்டிருந்தார்கள். சில யூதர்கள் தப்பித்து விட்டார்கள். ஒரு ஞாயிற்றுக் கிழமை காலை அவர்கள் தப்பி ஓடினார்கள். ஒரு கிறித்தவக் கோயிலுக்குள் போய் ஒளிந்து கொண்டார்கள். ஏனென்றால் கிறித்தவக் கோயில்தான் தாம் ஒளிந்து கொள்வதற்கு மிகவும் சரியான இடம் என்று அவர்கள் நினைத்தார்கள். கோயிலில் கிறித்தவர்கள் நிரம்பி இருந்தார்கள். அன்று ஞாயிற்றுக்கிழமை காலை. எனவே பத்துப் பன்னிரண்டு யூதர்கள் அங்கே ஒளிந்து கொள்ள முடிந்தது.

யூதர் சிலர் கிறித்தவ ஆலயத்தக்குள் போய்விட்டிருக்கிறார்கள், அங்கே போய் ஒளிந்து கொண்டிருக்கிறார்கள் என்னும் செய்தி படைவீரர்களுக்குக் கிடைத்தது. எனவே அவர்கள் கிறித்தவ ஆலயத்துக்குள் நுழைந்தார்கள். வழிபாட்டை நிறுத்துமாறு பாதிரியிடம் ஆணையிட்டார்கள். படைவீரர்களின் தலைவன் பீடத்துக்குச் சென்று சொன்னான், ''எங்களை யாரும் ஏமாற்ற முடியாது. இங்கு சில யூதர்கள் ஒளிந்து கொண்டிருக்கிறார்கள். எனவே எல்லா யூதனும் வெளியே போய் வரிசையாக நிற்க வேண்டும். எங்கள் உத்தரவுக்கு கீழ்ப்படிந்தால் உங்களை நீங்கள் காப்பாற்றிக் கொள்ள முடியும். ஏமாற்றுவதற்கு எவனாவது முயற்சி செய்தால் உடனடியாக அவன் கொல்லப்படுவான்.''

எனவே யூதர்கள் ஒவ்வொருவராக ஆலயத்தில் இருந்து வெளியேறி வரிசையில் நின்றார்கள். அப்போது ஆலயத்தில் இருந்த மொத்தக் கூட்டமும் ஒன்றைக் கவனித்தது. அதாவது யேசுவின் சிலை திடீரென மறைந்து விட்டிருந்தது. அவரும் ஒரு யூதர் என்பதால் வெளியே வரிசையில் அவர் நின்று கொண்டிருந்தார்!

ஆனாலும் யேசுநாதர் ஒருபோதும் யூதர்களுக்குக் காட்சி அளித்ததில்லை. அவர் கிறித்தவராக இருந்ததில்லை. எந்தக் கிறித்தவ திருச்சபையையும் சேர்ந்தவராக அவர் இருந்ததில்லை. அவர் திரும்பி வருவாரானால் ஒரு கிறித்தவ கோயிலையும் அவரால் அடையாளம் கண்டு கொள்ள முடியாது. யூத செபக்கூடத்தை நோக்கித்தான் அவர்

போவார். யூத சமூகத்திடம்தான் அவர் போவார். யூதமத போதகரையே போய்ப் பார்ப்பார். கத்தோலிக்கப் பாதிரியையோ புராட்டஸ்டண்ட் பாஸ்டரையோ அவர் போய் பார்க்க மாட்டார். அவர்களை அவர் அறியமாட்டார். ஆனாலும் ஒருபோதும் அவர் யூதர்களுக்குக் காட்சி அளிப்பதில்லை. ஏனெனில் அவர்களின் கற்பனைகளுக்கு ஒரு விதையாக ஒருபோதும் அவர் இருந்ததில்லை. அவர்கள் மறுதலித்து விட்டார்கள். எனவே தான் விதை அங்கு இல்லை.

ஆக நிகழ்வனவற்றில் தொண்ணூற்றி ஒன்பது விழுக்காடு நிகழ்வுகள் ஏற்கனவே உள்ளீடு செய்யப்பட்ட அறிவை - கருத்தாக்கங் களை பிம்பங்களை கொண்டதாகவே இருக்க முடியும். அவை உங்கள் மனத்தின் முன்னே பளிச்சிடுகின்றன. நீங்கள் தியானம் செய்யத் தொடங்கும் போது உணர்ச்சி உள்ளவராக ஆகிறீர்கள். எந்த அளவுக்கு உங்கள் உணர்ச்சி கூர்மை பெறுகிறது என்றால் உங்களின் சொந்தக் கற்பனைக்கு நீங்களே பலியாகிவிட முடிகிறது. மேலும் அந்தக் கற்பனை மிகவும் நிசமானதாகத் தெரியும். எனவே அது நிசமானதுதானா பிரமையா என்பதை தீர்மானிக்கவும் வழி இருப்பதில்லை.

ஒரே ஒரு விழுக்காடு நிகழ்வுகளில்தான் அது கற்பனையானதாக இருப்பதில்லை. ஆனால் அதை அறிவது எவ்வாறு? அந்த ஒரு விழுக்காடு நிகழ்வுகளில் உண்மையில் எந்த உருவமும் தோன்றாது. உங்கள் முன்னால் சிலுவையில் அறைப்பட்ட நிலையில் யேசு நின்று கொண்டிருப்பதாக நீங்கள் உணர மாட்டீர்கள். உங்கள் முன் கிருஷ்ணன் நின்று கொண்டிப்பதுபோல, அவருடன் நீங்கள் ஆடிக் கொண் டிருப்பதுபோல உணர மாட்டீர்கள். பிரசன்னத்தை நீங்கள் உணர்வீர்கள். ஆனால் எந்தப் பிம்பமும் இருக்காது. இதை நினைவில் கொள்ளுங்கள். ஒரு தெய்வீக அருட்பிரசன்னம் இறங்குவதை நீங்கள் உணர்வீர்கள். அறியப்படாத ஏதோ ஒன்றால் நீங்கள் நிரப்பப்படுவீர்கள். ஆனால் அதற்கு எந்த வடிவமும் இருக்காது. எந்தக் கிருஷ்ணரும் ஆடிக் கொண்டிருக்க மாட்டார்., எந்த யேசுவும் சிலுவையில் தொங்கிக் கொண்டிருக்க மாட்டார். எந்த புத்தரும் சித்தாசனத்தில் உட்கார்ந்திருக்க மாட்டார். ஒரு பிரசன்னம் மட்டுமே இருக்கும். உயிராற்றலின் பிரசன்னம் உங்களின் உள்ளும் புறமும் பாய்ந்து கொண்டிருக்கிறது. அதனால் நீங்கள் நிரம்பிவழிகிறீர்கள். அந்த சமுத்திரத்திலேயே நீங்கள் இருக்கிறீர்கள்.

உங்களுக்குள் யேசு இருக்க மாட்டார்; நீங்கள் யேசுவுக்குள் இருப்பீர்கள் - அதுதான் வேறுபாடு. கிருஷ்ணன் உங்கள் மனதில் ஒரு

உருவமாக இருக்கமாட்டார்; நீங்கள் கிருஷ்ணனுக்குள் இருப்பீர்கள். ஆனால் அப்போது கிருஷ்ணன் உருவம் அற்றவனாக இருப்பான். அது ஒரு அனுபவம். மனத்தோற்றம் அல்ல.

பின் அதை ஏன் கிருஷ்ணன் என்று அழைக்கவேண்டும். உருவமே இருக்காது. பின் ஏன் அதை யேசு என்று அழைக்க வேண்டும்? இவை எல்லாம் வெறும் அடையாளங்கள் - மொழியியல் அடையாளங்கள். யேசு என்னும் சொல்லுடன் நீங்கள் பரிச்சயப்பட்டிருக்கிறீர்கள். எனவே அந்தப் பிரசன்னம் உங்களை நிரப்பும்போது நீங்கள் அதன் ஒரு பகுதியாக - ஒரு அதிர்வுத் துடிப்பு மிக்க பகுதியாக ஆகிறீர்கள். அந்தப் பெருங்கடலின் ஒரு துளியாக நீங்கள் ஆனதும் அதை வெளிப்படுத்துவது எவ்வாறு? உங்களுக்குத் தெரிந்த மிக அழகான சொல் யேசு என்பதாக இருக்கலாம். அல்லது புத்தர் அல்லது கிருஷ்ணன் என்பதே உங்களுக்கான மிகவும் அழகிய சொல்லாக இருக்கலாம். இந்தச் சொற்கள் மனத்துக்குள் ஊட்டிப் பதிக்கப்பட்டவை. எனவே அந்தப் பிரசன்னத்தைக் குறிப்பிட, குறிப்பிட்ட சொற்களை நீங்கள் தேர்ந்து கொள்கிறீர்கள்.

ஆனால் அந்தப் பிரசன்னம் என்பது ஒரு பிம்பம் அல்ல. அது ஒரு கனவு அல்ல. அது ஒரு காட்சியே அல்ல. யேசுவை நீங்கள் பயன்படுத்த முடியும். கிருஷ்ணரை நீங்கள் பயன்படுத்த முடியும். அல்லது எதை வேண்டுமானாலும் - உங்களைக் கவர்கிற எந்தப் பெயரை வேண்டுமானாலும் நீங்கள் பயன்படுத்த முடியும். உங்களுக்குப் பிடித்தமான எந்தப் பெயரையும் நீங்கள் பயன்படுத்த முடியும். அது உங்களையே பொறுத்தது. அந்தச் சொல்லும் அந்தப் பெயரும் அந்த உருவமும் உங்கள் மனத்தில் இருந்தே வருகிறது. ஆனால் அனுபவமோ தன்னளவில் உருவமற்றதாக இருக்கிறது. அது ஒரு மன வடிவம் அல்ல - ஒரு கற்பனை அல்ல.

ஒரு கத்தோலிக்கப் பாதிரி, நான் - இன் ஸென் என்ற குருவைப் பார்க்கச் சென்றிருந்தார். யேசுவைப்பற்றி எதுவுமே அறிந்திராத மனிதர் நான் - இன். எனவே கத்தோலிக்கப் பாதிரி நினைத்தார்: ''இதுவும் நன்மைக்கே. நான் சென்று, மலைப் பிரசங்கத்தில் இருந்து சில பகுதிகளை வாசித்துக் காட்ட வேண்டும். அதற்கு நான் - இன் எவ்வாறு எதிர்வினை புரிகிறார் என்பதை நான் பார்ப்பேன். ஏனெனில் மக்கள் அவரை ஞானம்பெற்ற மனிதர் என்கிறார்கள்.''

எனவே அந்த கத்தோலிக்கப் பாதிரி நான் - இன்னிடம் போனார். அவர் சொன்னார், ''குருவே, நான் ஒரு கிறித்தவன். என்னிடம் ஒரு

புத்தகம் உள்ளது. அதை நான் நேசிக்கிறேன். அதிலிருந்து சில பகுதிகளை உங்களுக்கு வாசிக்கிறேன். அதற்கு நீங்கள் எவ்வாறு எதிர்வினை புரிகிறீர்கள், என்ன பதில்குறிப்புத் தருகிறீர்கள் என்பதை தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.'' என்றார். அதன்படி புதிய ஏற்பாட்டில் இருக்கும் மலைப்பிரசங்கத்தில் இருந்து சில வரிகளை அவர் வாசித்தார். அவற்றை ஜப்பானிய மொழியில் பெயர்த்துச் சொன்னார். ஏனெனில் நான் - இன்னுக்கு ஜப்பானிய மொழியை மட்டுமே புரிந்துகொள்ள முடியும்.

அவர் அதை மொழிபெயர்த்துச் சொல்லச் சொல்ல, நான் - இன்னுடைய முகம் முழுவதும் முற்றிலுமாக மாறியது. அவர் கண்களில் இருந்து கண்ணீர் பொழியத் தொடங்கியது. அவர், ''இவை புத்தரின் வார்ததைகளே என்று அவர் கூறினார்.'' கிறிஸ்தவப் பாதிரி சொன்னார், ''இல்லை இல்லை, இவை யேசுவுடைய வசனங்கள்.'' அதற்கு நான் - இன் சொன்னார், ''எந்தப் பெயரை நீர் சொன்னால் இவை புத்தருடைய வாசகங்களே என்பதை நான் உணர்கிறேன். ஏனெனில் புத்தரை மட்டுமே நான் அறிவேன். புத்தரிடம் இருந்து மட்டுமே இத்தகைய வார்த்தைகள் வெளிப்பட முடியும். அல்லது இவை யேசுவிடம் இருந்து வந்த சொற்கள்தான் என்று நீர் சொல்லும் வீரனால் பின் அந்த யேசு ஒரு புத்தர்தான். அதனால் எந்த மாறுபாடும் ஏற்படுவதில்லை. ஆகவே யேசுவும் ஒரு புத்தரே என்று என் சீடர்களிடம் நான் கூறுவேன்.''

இந்த உணர்வுதான் இருக்கும். தெய்வீகத் தன்மையின் பிர சன்னத்தை நீங்கள் உணர்ந்தால் பெயர்கள் முதலியவை புறக்கணிக்கத் தக்கவை ஆகின்றன. பெயர்கள் ஒவ்வொருவருக்கும் கண்டிப்பாக வெவ்வேறாகவே இருக்கின்றன. ஏனெனில் பெயர்கள் கல்வியில் இருந்து வருகின்றன. பெயர்கள் கலாச்சார்த்தில் இருந்து வருகின்றன. பெயர்கள் நீங்கள் சார்ந்த இனப் பின்னணியில் இருந்து வருகின்றன. ஆனால் அந்தத் தெய்வீக அனுபவம் எந்த ஒரு சமுதாயத்துக்கும் தனிப் பட சொந்தமானது அல்ல. அந்த அனுபவம் எந்த ஒரு கலாச்சாரத்துக்கும் தனிப்பட உரிமை உடையதல்ல. அந்த அனுபவம் உங்களின் மனம் என்னும் கணிப்பொறியின் உடையதல்ல. அது உங்களுடையதே.

எனவே இதை நினைவில் கொள்ளுங்கள் - நீங்கள் உருவக் காட்சிகளைக் கண்டால் அவை கற்பனைக் காட்சிகளே, நிசமான அனுபவங்கள் அல்ல. உருவமற்ற, இருத்தலியலான அனுபவங்களை நீங்கள் உணரத் தொடங்கினால், அவற்றால் சூழ்ந்து கொள்ளப்பட்டால்,

அவற்றில் கலந்துவிட்டால், அவற்றுக்குள் கரைந்துவிட்டால்,பின் உண்மையாகவே நீங்கள் தொடர்பு கொண்டிருக்கிறீர்கள்.

அந்தத் தோற்றத்தை நீங்கள் யேசு என அழைக்க முடியும். அந்த பிரசன்னத்தை நீங்கள் புத்தர் என அழைக்க முடியும். அது உங்களைப் பொறுத்தது.அதனால் எந்த வேறுபாடும் ஏற்படுவதில்லை. யேசு ஒரு புத்தர்தான். புத்தரும் ஒரு கிறிஸ்துதான். மனத்தைக் கடந்து அப்பால் சென்றிருக்கிறவர்கள், ஆளுமைகளையும் கடந்து அப்பால் சென்றுவிட்டிருக்கிறார்கள். உருவங்களையும் கடந்து அப்பால் சென்று விட்டிருக்கிறார்கள். யேசுவும் புத்தரும் சேர்ந்து நின்று கொண்டிருந்தால் அங்கு உடல்கள் இரண்டு இருக்கும். ஆனால் ஆன்மாவோ ஒன்றாகவே இருக்கும். இரண்டு உருவங்கள் இருக்கும். ஆனால் இரண்டு தோற்றம் இராது. ஒரே தோற்றமே இருக்கும்.

இது, ஒரு அறையில் இரண்டு விளக்குகளை நீங்கள் ஏற்றி வைப்பது போன்றதே. விளக்குகள் இரண்டு. உடம்புகள் இரண்டு. ஆனால் வெளிச்சம் ஒன்றாக ஆகி இருக்கிறது. இந்த வெளிச்சம் இந்த விளக்கைச் சேர்ந்து, அந்த வெளிச்சம் அந்த விளக்கில் இருந்து வருகிறது என உங்களால் பிரித்துக்காட்ட முடியாது. வெளிச்சங்கள் - ஒன்று கலந்திருக்கின்றன. விளக்கின் ஜடப்பகுதி மட்டுமே தனித்தனியாக இருக்கிறது. ஆனால் சடப்பொருள் அல்லாத பகுதி ஒன்றாகவே இருக்கிறது.

புத்தரும் யேசுவும் அருகருகே வந்தால், அவர்கள் ஒன்று சேர்ந்து நின்றால் நீங்கள் அங்கு இரண்டு தனித்தனி விளக்குகளையே காண்பீர்கள். ஆனால் அவர்களின் ஒளிகளோ ஏற்கனவே ஒன்று கலந்திருக்கின்றன. அவர்கள் ஒன்றாகவே இருக்கிறார்கள். சத்தியத்தை அறிந்திருக்கிற அனைவருமே ஒன்றாகவே இருக்கிறார்கள். அவர்களைப் பின்பற்றுவோருக்கு வேண்டுமானால் அவர்களின் பெயர்கள் வெவ்வேறாக இருக்கலாம்; அவர்களுக்கோ இப்போது எந்தப் பெயர்களும் இல்லை.

**நான்காவது கேள்வி:**

**விழிப்புணர்வு என்பதும் மனத்தின் மாறுபாடுகளில் ஒன்றுதானா என்பதை தயவுசெய்து விளக்குங்கள்.**

இல்லை. விழிப்புணர்வு என்பது மனத்தின் பகுதி அல்ல. மனத்தின் வழியாக அது பாய்ந்தோடுகிறது. ஆனால் மனத்தின் பகுதி அல்ல. அது

இந்த மின்விளக்கைப் போன்றதாகவே உள்ளது. இதன் வழியாக மின்சாரம் பாய்கிறது. ஆனால் மின்சாரம் மின்விளக்கின் பகுதி அல்ல. மின்விளக்கை நீங்கள் உடைத்தால் அதன்மூலம் மின்சாரத்தை நீங்கள் உடைத்துவிடுவதில்லை. வெளிப்படுதல் தடைபடும். ஆனால் உள்ளாற்றல் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் ஊறுபடாமல் அப்படியே தான் இருக்கிறது. இன்னொரு மின்விளக்கைப் பொருத்தினால் மின்சாரம் அதன்வழியாகப் பாயத் தொடங்குகிறது.

மனம் ஒரு கருவிமட்டுமே. விழிப்புணர்வு, மனத்தின் பகுதி அல்ல. ஆனால் மனத்தின் வழியாகவே விழிப்புணர்வு பாய்கிறது. மனம் கடக்கப்படுகிறபோது விழிப்புணர்வு தன்னில்தான் தங்கி இருக்கிருது. எனவேதான் ஒரு புத்தர்கூட உங்களுடன் பேசுவதானால், உங்களுடன் உரையாடுவதானால் மனத்தைப் பயன்படுத்த வேண்டி இருக்கும் என்கிறேன். ஏனெனில் அப்போது அவர் - அவரது உள் மின்னோட்டம் - பாய வேண்டி இருக்கும். அதற்கான கருவிகளையும் ஊடகங்களையும் அவர் பயன்படுத்த வேண்டியே இருக்கும். அந்நிலையில் மனம் செயல்படும். ஆனால் மனம் வெறும் வாகனம் மட்டுமே.

நீங்கள் ஒரு வாகனத்தில் ஏறிப் போகிறீர்கள். ஆனால் நீங்கள் அந்த வாகனம் அல்ல. நீங்கள் ஒரு காரில் போகிறீர்கள். அல்லது விமானத்தில் பறக்கிறீர்கள். ஆனால் நீங்கள் அந்த வாகனம் அல்ல. மனம் ஒரு வாகனம் மட்டுமே. மேலும் மனத்தின் ஆற்றலை முழுமையாக நீங்கள் பயன்படுத்துவதும் இல்லை. மனத்தின் ஆற்றலை முழுமையாக நீங்கள் பயன்படுத்தினால் அதுவே சரியான அறிவு ஆக ஆகும்.

ஒரு விமானத்தை பேருந்துபோல ஒருவர் பயன்படுத்த முடிந்தால் எப்படி இருக்குமோ அப்படியே நம் மனத்தை நாம் பயன்படுத்தி வருகிறோம். விமானத்தின் இறக்கைகளை ஒடித்துவிட்டு சாலையில் செல்லும் ஒரு பேருந்தைப் போல அதை நீங்கள் பயன்படுத்த முடியும். அப்படிச் செய்தாலே போதும்: அது ஒரு பேருந்துபோல் இயங்கும். ஆனால் நீங்கள் முட்டாளாக இருக்கிறீர்கள். அந்தப் பேருந்தால் பறக்க முடியும்! ஆனால் அதன் சரியான திறனை நீங்கள் பயன்படுத்திக் கொள்ளாமல் இருக்கிறீர்கள்!

கனவுகளுக்கும் கற்பனைகளுக்கும் பைத்தியக்காரத்தனத்துக்குமே நீங்கள் உங்கள் மனத்தைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். இதன்மூலம் நீங்கள் அதைப் பயன்படுத்திக்கொண்டு இருக்கவில்லை. அதன் சிறகுகளை நீங்கள் முறித்துவிட்டு இருக்கிறீர்கள். அதன் சிறகுகளோடு அதை நீங்கள் பயன்படுத்தினால் அது சரியான அறிவாக

ஆக முடியும். ஆனால் அப்போதும் அது மனத்தின் பகுதிதான்; அப்போதும் அது ஒரு வாகனம்தான். பயன்படுத்துவர் பின்னணியில் இருக்கிறார். பயன்படுத்துபவர் பயன்படுத்தப்படும் பொருளாக இருக்க முடியாது. நீங்கள் அதைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள் - மேலும் நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கிறீர்கள். இந்த விழிப்புணர்வை அதன் தூய நிலையில் - எந்த ஊடகத்தின் வாயிலாகவும் அன்றி அறிந்து கொள்வது என்பதே தியானத்துக்கான எல்லா முயற்சிகளின் பொருளாகும். எந்த சாதனமும் இன்றி ஒருமுறை அதை நீங்கள் அறிந்து கொண்டாலே.... உங்களால் அதை அறிய முடியும்! ஆனால் மனம் தன் செயல்பாட்டை நிறுத்தி இருக்கிறபோது மட்டுமே அதை நீங்கள் அறிந்து கொள்ள முடியும். மேலும், செயல்படுவதை மனம் நிறுத்தி விட்டதுமே விழிப்புணர்வு அங்கே இருக்கிறதை நீங்கள் அறிந்தவர் ஆவீர்கள்; அது நிரம்பப்பெற்றவராக நீங்கள் ஆகிறீர்கள். மனம் ஒரு வாகனம் மட்டுமே; ஒரு வாயில் மட்டுமே. இனி, நீங்கள் விரும்பினால் மனத்தை உங்களால் பயன்படுத்த முடியும்; நீங்கள் விரும்பவில்லை என்றால் அதை நீங்கள் பயன்படுத்தத் தேவை இல்லை.

உடல், மனம் இரண்டும் வாகனங்களே. நீங்களோ வாகனம் அல்ல. நீங்கள் இந்த வாகனங்களின் பின்னே மறைந்திருக்கிற அதிகாரி. ஆனால் இதை நீங்கள் முற்றிலுமாக மறந்து விட்டிருக்கிறீர்கள். நீங்கள் ஒரு வண்டியாக ஆகி விட்டிருக்கிறீர்கள். நீங்களே வாகனமாக ஆகி இருக்கிறீர்கள். இதைத்தான் அடையாளப்படுத்திக் கொள்ளுதல் என குருட்ஜீப் அழைக்கிறார். இதைத்தான் இந்தியாவைச் சேர்ந்த யோகிகள் 'தடாத்மியா' அதாவது நீங்கள் எதுவாக இல்லையோ அதனுடன் உங்களை ஒருமைப்படுத்திக் கொள்ளுதல் என்று அழைத்திருக்கிறார்கள்.

ஐந்தாவது கேள்வி:

**வெறுமனே பார்ப்பதன் மூலமே, மூளை அணுக்களில் இருக்கும் பதிவுகளைக் கவனித்தபடி சும்மா இருப்பதன் மூலமே, சிந்தனை நிகழ்முறையின் ஆதாரங்கள் மறைந்து விட முடியும் என்பது எப்படிச் சாத்தியம் ஆகிறது என்பதை தயவுசெய்து விளக்கப் படுத்துங்கள்.**

ஒருபோதும் அவை மறைந்துவிடுவதில்லை. ஆனால் சாட்சி மாத்திரமாய் இருப்பதன் வாயிலாக அடையாளப்படுத்திக்கொள்ளும் செயல் அறுபடுகிறது. தான் ஞானநிலைபேறு பெற்றதற்குப் பின்னும் நாற்பது ஆண்டுகள் புத்தர் தன் உடம்புடன் உயிர் வாழ்ந்தார். உடம்பு

இல்லாமல் போய்விடவில்லை. நாற்பது ஆண்டுகள் தொடர்ச்சியாக அவர் பேசிக்கொண்டும், விவரித்துக் கொண்டும் இருந்தார். தனக்கு நிகழ்ந்திருக்கிறது என்ன? அதுவே எப்படி அவர்களுக்கும் நிகழ முடியும் என்பதை மக்கள் புரிந்துகொள்ளுமாறு செய்துகொண்டு வந்தார். அதற்கு அவர் மனத்தைப் பயன்படுத்திக் கொண்டிருந்தார். மனம் மறைந்து போயிருக்கவில்லை. மேலும் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின் தன் சொந்த ஊருக்கு அவர் திரும்பி வந்தபோது தன் தந்தையை அவர் அடையாளம் கண்டு கொண்டார். தன் மனைவியை அடையாளம் கண்டார். தன் மகனை அடையாளம் கண்டார். மனம் இருந்தது. நினைவு இருந்தது. இல்லாவிட்டால் நினைவு கூறுதல் சாத்தியம் இல்லை.

மனம் உண்மையில் இல்லாமல் போய்விடுவதில்லை. மனம் இல்லாது ஒழிகிறது என்று நாம் கூறும்போது அதனுடனான உங்களின் அடையாளப்படுத்தல் அறுபடுகிறது என்றே கூறுகிறோம். அதுமனம், இது நான் - என்பதை இப்போது நீங்கள் அறிகிறீர்கள். பாலம் உடைந்துவிட்டது. இனி மனம் எசமான் அல்ல. இனி அது ஒரு கருவியாக மட்டுமே இருக்கிறது. தன் சரியான இடத்துக்கு அது வந்து சேர்ந்து விட்டிருக்கிறது. எனவே உங்களுக்குத் தேவைப்படும் போதெல்லாம் அதை நீங்கள் பயன்படுத்த முடிகிறது. ஒரு மின் விசிறியைப் போலவே அது இருக்கிறது! அதை நீங்கள் பயன்படுத்த விரும்பினால் அதை இயக்குகிறீர்கள். அப்போது மின்விசிறி இயங்கத் தொடங்குகிறது. இப்போது நாம் அதைப் பயன்படுத்தவில்லை - அப்படியானால் அது இயங்காமல் இருக்கிறது. ஆனால் அது அங்கு இருக்கவே செய்கிறது. அது இல்லாமல் போய்விடவில்லை. எந்தக் கணத்திலும் அதை நீங்கள் பயன்படுத்த முடிகிறது. அது மறைந்துவிட்டிருக்கவில்லை.

சாட்சியாய் இருப்பதன் மூலம் அடையாளப்படுத்துதல்தான் மறைகிறது, மனம் மறைவதில்லை. ஆனால் அடையாளப்படுத்திக் கொள்ளுதல் மறைகிறது. முற்றிலும் புதிய ஒரு பிறவியாக நீங்கள் இருக்கிறீர்கள். முதல் தடவையாக உங்களின் உண்மையான சிறப்பை, உங்களின் மெய்யான மெய்மையை நீங்கள் அறிய வந்திருக்கிறீர்கள். நீங்கள் யார் என்பதை வாழ்க்கையிலேயே முதல்முறையாக நீங்கள் அறிய வருகிறீர்கள். இனி உங்களைச் சூழ்ந்து உள்ள யந்திர அமைப்பின் ஒரு பகுதியாக மட்டுமே மனம் இருக்கிறது.

நீங்கள் ஒரு விமானியாக இருந்து ஒரு விமானத்தில் பறந்து கொண்டிருப்பது போன்றதே இது. பல விசைகளை நீங்கள்

இயக்குகிறீர்கள். பல பொறிகளின் மீதும் உங்கள் கண்கள் வேலை செய்து கொண்டிருக்கின்றன. தொடர்ச்சியாக இதையும் அதையும் குறித்து கவனமாக இருந்து கொண்டிருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் அந்தக் கருவிகள் அல்ல.

இந்த மனம், இந்த உடல் மற்றும் உடல் - மனத்தின் பல செயல்பாடுகளும் உங்களை உடனடியாக சூழ்ந்து உள்ளன. அவை யந்திர அமைவு. இந்த யந்திர அமைவில் நீங்கள் இரண்டு விதங்களில் இயங்க முடியும்: ஒருவித இருத்தல் உங்களை நீங்களே மறந்து உங்களையே அந்த எந்திர அமைப்பாக உணருதல். இது அடிமைத்தனம். இது அவலம். இதுவே உலகம்.

இயங்குவதிலே உள்ள இன்னொரு விதம் இதுதான்: நீங்கள் தனியானவர், நீங்கள் வேறானவர் என்பதில் முழுக் கவனமாக இருத்தல். இனிமேலும் நீங்கள் பயன்படுத்திக் கொண்டு போவீர்கள். ஆனால் இப்போது மாபெரும் வேறுபாடு இருக்கிறது. இப்போது முதல் நீங்கள் என்பது அந்த யந்திரம் அல்ல. ஆகவே யந்திரத்தில் ஏதாவது கோளாறு ஏற்படுமானால் அதை நீங்கள் சரிசெய்ய முயலமுடியும். ஆனால் அதற்காக நீங்கள் கலங்கமாட்டீர்கள், குழம்பமாட்டீர்கள். மொத்த யந்திர அமைவும் மறைந்துபோனாலும் அதனால் நீங்கள் அலைக்கழிய மாட்டீர்கள்.

புத்தர் இறக்கும் விதமும் நீங்கள் இறக்கும் விதமும் இரண்டு வெவ்வேறு விதமான நிகழ்வுகளாகும். புத்தர் மரணம் அடையும் போது யந்திரம் மட்டுமே இறந்து கொண்டிருக்கிறது என்பதை அறிந்தபடியே இருக்கிறார். அது பயன்படுத்தப்பட்டது. இப்போது தேவையற்றுப் போயிருக்கிறது. ஒரு சுமை இறக்கப்பட்டு இருக்கிறது. அவர் விடுபட்டுக் கொண்டு இருக்கிறார். இனி அவர் உருவமின்றியே இயங்குவார். ஆனால் நீங்கள் இறக்கும் விதமோ முற்றிலும் வேறுவிதமாக இருக்கிறது. நீங்கள் துன்புறுகிறீர்கள். நீங்கள் அழுது புலம்புகிறீர்கள். ஏனெனில் யந்திரமல்ல, நீங்களே இறந்து - அழிந்து கொண்டிருப்பதாக நீங்கள் கருதுகிறீர்கள். அது உங்களின் சாவாக இருக்கிறது. அது கடுமையான வேதனையாக ஆகிறது.

வெறுமனே கவனிப்பதன்மூலம் மனம் இல்லாமல் போய்விடாது. மூளை அணுக்கள் மறைந்துபோய் விடாது. மாறாக அவை கூடுதல் ஆற்றல் உள்ளதாகவே ஆகும். ஏனெனில் முரண்பாடு குறைவாக இருக்கும்; ஆற்றல் கூடுதலாக இருக்கும். எனவே அவை அதிக புத்துணர்ச்சி உள்ளவையாக விளங்கும். எனவே அவற்றை நீங்கள்

மேலும் சரியாக, மேலும் நுட்பமாகப் பயன்படுத்த முடியும். ஆனால் அவற்றால் நீங்கள் பாரம் சுமக்கிறவர்களாக ஆகிவிட மாட்டீர்கள்: ஏதாவது ஒன்றை செய்யும்படி உங்களை அவை நெருக்கமாட்டா. இங்கும் அங்குமாக உங்களை அவை இழுத்தடிக்க மாட்டா. நீங்களே அதிகாரியாக இருப்பீர்கள்.

ஆனால் வெறுமனே சாட்சியாய் இருப்பதன்மூலம் இது எப்படிச் சாத்தியம் ஆகிறது? இது சாத்தியமே. ஏனெனில் சாட்சியாய் இருந்து கவனித்தால் தளை ஏற்படாது. நீங்கள் உன்னிப்பாக - விழிப்பாக இல்லாததனாலேயே தளை ஏற்பட்டிருக்கிறது. எனவே நீங்கள் விழிப்புள்ளவராக ஆனால் தளை மறைந்துவிடும். விழிப்புணர் வில்லாமைதான் தளை. எதை நீங்கள் செய்வதாயினும் அதில் கூடுதல் கவனம் உள்ளவராக ஆகுங்கள் - வேறெதுவும் செய்யத் தேவையில்லை.

நீங்கள் இங்கு உட்கார்ந்து கொண்டு என்னைக் கவனித்துக் கொண்டிருக்கிறீர்கள். விழிப்புடனும் நீங்கள் கவனிக்க முடியும். விழிப் பில்லாமலும் நீங்கள் கவனிக்க முடியும். விழிப்பில்லாத முறையிலும் கவனித்தல் நிகழ முடியும். ஆனால் அது வேறு. அதன் தன்மை வேறுபடும். அந்நிலையில் உங்கள் காதுகள் கவனித்துக் கொண்டிருக்கும்; உங்கள் மனமோ வேறெங்கோ செயல்பட்டுக் கொண்டிருக்கும்.

அந்நிலையிலும் எவ்வாறோ சில வார்த்தைகள் உங்களுக்குள் புகுந்துவிடும். ஆனால் அவை அங்கொன்றும் இங்கொன்றுமாக இருக்கும். அவற்றை உங்கள் மனம் தனக்கே தெரிந்த முறையில் அர்த்தப்படுத்திக் கொள்ளும். மேலும் அவற்றுள் அது தன் சொந்தக் கருத்துகளையும் சேர்த்துக் கொள்ளும். எல்லாமே ஒரே குழப்படியாகவும் தாறுமாறாகவும் இருக்கும். நீங்கள் கேட்டுக் கொண்டிருப்பீர்கள். ஆனால் பல விசயங்கள் உங்களுக்கு எட்டாமல் போய்விடும். பல செய்திகளை நீங்கள் கவனிக்க மாட்டீர்கள். நீங்கள் தேர்ந்தெடுப்பீர்கள். அப்போது மொத்தச் செய்தியுமே திரிக்கப்பட்டுவிடும்.

நீங்கள் எச்சரிக்கையாக இருந்தால், நீங்கள் எச்சரிக்கையாக ஆகிற அக்கணமே, எண்ணுவது மறைந்துவிடுகிறது. கூர்ந்த கவனிப்பின் போது நீங்கள் சிந்திக்க முடியாது. மொத்த ஆற்றலும் ஆழ்ந்த கவனிப்பாக மாறுகிறது- சிந்தனைக்குள் போவதற்கு ஆற்றல் எதுவும் மீதம் இருப்பதில்லை. நீங்கள் வெறுமனே கவனித்தபடி இருக்கிறீர்கள். எந்தத் தடையும் இருப்பதில்லை. கலந்து போவதற்கு உங்கள் வார்த்தைகள் அங்கே இருப்பதில்லை. நீங்கள் சொந்தமாக அர்த்தம் செய்துகொள்ள தேவையில்லை. தாக்கம் - விளக்கம் நேரடியானதாக இருக்கிறது.

முழுக் கவனத்துடன் நீங்கள் கவனிக்க முடியுமானால் பின் நான் சொல்லிக் கொண்டிருப்பது அர்த்தம் உள்ளதாக இருந்தாலும் அர்த்தம் அற்றதாக இருந்தாலும் உங்கள் விழிப்புடன் கூடிய கவனிப்பு எப்போதுமே அர்த்த முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கும். அந்த முழு கவனத் தன்மையே உங்கள் பிரக்ஞையின் ஒரு உச்சமாக இருக்கும். இறந்த காலம் கரையும். வருங்காலம் மறையும்.வேறு எங்கும் நீங்கள் காணப்பட மாட்டீர்கள்; இங்கேயே இப்போதே நீங்கள் இருப்பீர்கள். அந்த அமைதியான கணத்தில், எண்ணுதல் என்பது இல்லாதபோது, உங்களின் சொந்த மூல ஆதாரத்துடன் நீங்கள் ஆழ்ந்த தொடர்பில் இருப்பீர்கள். அந்த ஆதாரமே ஆனந்தமாகும். அந்த ஆதாரமே தெய்வீகமாகும். எனவே செய்யும் செயல் ஒவ்வொன்றையும் கவனத்துடன் செய்வதே செய்யப்படவேண்டிய ஒரே காரியம் ஆகும்.

**கடைசி கேள்வி:**

***'லாவோ சு'வைப்பற்றிப் பேசும்போது நீங்கள் ஒரு தாவோ முனிவராக ஆகிறீர்கள். தந்த்ராவைப் பற்றிப் பேசும்போது நீங்கள் ஒரு தாந்திரிகர் ஆகிவிடுகிறீர்கள். பக்திபற்றி பேசும்போது நீங்கள் ஒரு ஞானமடைந்த பக்தராக ஆகிறீர்கள். யோகத்தைப்பற்றி பேசும்போது நீங்கள் ஒரு செம்மையான யோகியாக இருக்கிறீர்கள். இந்த நிகழ்வு எப்படிச் சாத்தியம் ஆக முடிகிறது என்பதைக் குறித்து தயவுசெய்து விளக்குவீர்களா?***

நீங்கள் இல்லாத போதுமட்டுமே அது சாத்தியம் ஆக முடியும். நீங்கள் இருந்தால் பின் அது சாத்தியமாக முடியாது. நீங்கள் இல்லாவிட்டால்,உபசரிப்பவர் முற்றிலுமாக மறைந்திருந்தால் அப்போது விருந்தினரே உபசரிப்பவர் ஆகிறார். எனவே அந்த விருந்தாளி லாவோ சு ஆக இருக்கலாம். அந்த விருந்தாளி பதஞ்சலி ஆக இருக்கலாம். உபசரிப்பவர் இங்கு இல்லை. எனவே விருந்தினரே முழுமையாக இடம் பிடித்துக் கொள்கிறார். அவரே பரிமாறுபவராகவும் ஆகிறார். நீங்கள் இல்லை என்றால் பின் நீங்களே பதஞ்சலியாக ஆக முடியும். இதில் எந்தச் சிரமமும் இல்லை. நீங்கள் கிருஷ்ணராக ஆக முடியும். நீங்கள் கிறிஸ்துவாக ஆக முடியும். நீங்கள் அங்கு இருந்தால் இது மிகவும் கடினமானதே. மேலும் நீங்கள் அங்கு இருக்கையில் நீங்கள் கூறுவது எல்லாம் தவறானதாகவே இருக்கும்.

எனவேதான் இவை விளக்க உரை அல்ல என்கிறேன். பதஞ்சலிக்கு நான் உரைகூறிக் கொண்டிருக்கவில்லை. பதஞ்சலிக்கு இடம் கொடுத்து

விட்டு நான் இல்லாமல் போகிறேன் - அவ்வளவே. எனவே இது ஒரு விளக்க உரை அல்ல. விளக்கஉரை என்றால் பதஞ்சலி தனியாக இருக்கிறார், நான் தனியாக இருக்கிறேன்; பதஞ்சலியின் மீது நான் உரை ஆற்றிக் கொண்டு இருக்கிறேன் என்றாகும். ஆதலால் அது திரித்துக் கூறுவதாகவே இருக்கும். ஏனெனில் பதஞ்சலிக்கு நான் எவ்வாறு உரைகூற முடியும்? நான் கூறுவது எதுவாயினும் அது என் கூற்றே ஆகமுடியும். நான் உரைப்பது எதுவாயினும் அது என் வியாக்கியான மாகவே ஆகும். பதஞ்சலியின் உடையதாக அது இருக்க முடியாது. அது நல்லது அல்ல. அது கெடுதலானது. எனவே நான் உரைகூறிக் கொண்டிருக்கவே இல்லை. நான் வெறுமனே அனுமதித்துக் கொண்டு இருக்கிறேன். நீங்கள் இல்லாவிட்டால்தான் இந்த அனுமதித்தல் என்பது சாத்தியம்.

நீங்கள் ஒரு சாட்சியாக ஆகையில் அகங்காரம் மறைகிறது. அகங்காரம் மறைகையில் நீங்கள் ஒரு வாகனமாக ஆகிறீர்கள். ஒரு வாயிலாக ஆகிறீர்கள். ஒரு புல்லாங்குழலாக ஆகிறீர்கள். இந்தக் குழல் பதஞ்சலியின் உதடுகளில் பொருந்த முடியும். இந்தக் குழல் கிருஷ்ணனின் உதடுகளில் பொருந்த முடியும். இந்தக் குழல் புத்தரின் உதடுகளில் பொருந்த முடியும். ஆயின் குழல் அதே குழல்தான். ஆனால் புத்தரின் உதடுகளில் அது பொருந்துகையில் அதன் வழியாக புத்தர் பொழிந்த கொண்டு இருக்கிறார்.

எனவே இது ஒரு உரை அல்ல. இது புரிந்துகொள்ளக் கடின மானதே. ஏனெனில் நீங்கள் அனுமதிப்பதில்லை. உங்களுக்குள் நீங்களே நிறைய இடத்தை அடைத்துக் கொண்டிருக்கிறீர்கள். எனவே எவரையும் உங்களால் அனுமதிக்க முடிவதில்லை. மேலும் இவை ஆட்களும் அல்ல. பதஞ்சலி ஒரு ஆள் அல்ல. பதஞ்சலி ஒரு பிரசன்னம். நீங்கள் இல்லாதிருந்தால்தான் பிரசன்னம் இருக்க முடியும், இயங்கமுடியும்.

மேலும் பதஞ்சலியையே நீங்கள் கேட்டாலும் அவரும் இதைத் தான் கூறுவார். பதஞ்சலியிடம் நீங்கள் கேட்டால் இந்தச் சூத்திரங்களை உருவாக்கியது தான்தான் என்று அவர் கூறமாட்டார். ''இவை மிகவும் பழமையானவை, சநாதனமானவை'' என்பார். ''கோடிக்கணக்கான ஞானிகள் இவற்றைக் கண்டிருக்கிறார்கள். நான் ஒரு வாகனம் மட்டுமே. நான் இல்லாதிருக்கிறேன். என் வழியாக அவர்களே பேசிக்கொண்டு இருக்கிறார்கள்'' என்றே கூறுவார். கிருஷ்ணரை நீங்கள் விசாரித்தால் அவரும் கூறுவார், ''இதை நான் சொல்லவில்லை. இது மிகவும் புராதன காலத்துச் சேதியாகும். எப்போதுமே அது அப்படித்தான் இருந்து

வந்திருக்கிறது.'' மேலும் நீங்கள் யேசுவை கேட்டால் அவரும் ''நானல்ல, நான் அங்கு இல்லை'' என்றே சொல்வார்.

ஏன் இந்த வலியுறுத்தல்? இல்லாதவராக ஆகிற எவரும், அகங்காரமற்றவராக ஆகிற எவரும் ஒரு வாகனமாக, ஒரு வாசலாகச் செயல்படத் தொடங்குகிறார். சரியானவை அனைத்துக்கும் வாயிலாக, இருத்தலில் மறுக்கப்பப்பட்டிருக்கிற அனைத்திற்கும் வாயிலாக-பாய்ந்தோட வாயிலாக - செயல்படத் தொடங்குகிறார். மேலும், சில நொடிகளாவது நீங்கள் இல்லாதிருந்தால் மட்டுமே, நான் கூறும் எதையும் உங்களால் புரிந்து கொள்ளவும் முடியும்.

நீங்களே அங்கு அளவுக்கு அதிகமாக இருந்தால், உங்கள் அகங்காரம் அங்கு இருந்தால், பின் நான் எதைச் சொல்லிக் கொண் டிருந்தாலும் அது உங்களுக்குள் பாய முடியாது. இது ஒரு அறிவார்த்த மான தொடர்புமட்டும் அல்ல. அதைவிட ஆழமானது இது.

ஒரே ஒரு கண நேரமாவது நீங்கள் அகங்காரமற்றவராக இருந்தால் அப்போதுதான் அந்தத் தாக்கம் உணரப்படும். அந்நிலையில் அறியப்படாத ஒன்று உங்களுக்குள் பிரவேசித்திருக்கிறது. அந்தக் கணத்திலேயே நீங்கள் புரிந்து கொள்வீர்கள். மேலும், புரிந்து கொள்வதற்கு வேறு மார்க்கமும் கிடையாது.

*7. சரியான அறிவின் தோற்றுவாய்கள் மூன்று: நேரடி அறிவு, ஊக அறிவு மற்றும் விழிப்புப்பெற்ற ஞானிகளின் வாய்மொழி அறிவு.*

*8. பொருளின் உண்மை நிலையுடன் பொருந்திவராத பொய்யான கருத்தாக்கமே தவறான அறிவு.*

*9. உள்ளுக்குள் எவ்வித சாரமும் இன்றி வெறும் வார்த்தைகளைக் கொண்டு தோற்றுவிக்கப்படும் பிம்பமே கற்பனை அல்லது விகல்பம்.*

*10. எவ்வித உள்ளடக்கமும் இல்லாத தன்மையின் அடிப்படையிலான மன விருத்தியே உறக்கம்.*

*11. கடந்த கால அனுபவங்களை நினைவு கூறுதலே ஞாபகம்.*

*முதல் சூத்திரம்:*

***சரியான அறிவின் தோற்றுவாய்கள் மூன்று: நேரடி அறிவு, ஊக அறிவு, விழிப்புப் பெற்ற ஞானிகளின் வாய்மொழி அறிவு.***

பிரத்தியட்சம் அல்லது நேரடி அறிவு என்பது சரியான அறிவின் முதல் தோற்றுவாய் ஆகும். நேரடியாக அறிதல் என்றால் எந்தவித இடையீடுமின்றி எந்த வித ஊடகமும் இன்றி எந்தவித வெளித்துணையும் இன்றி, இருத்தலை நேருக்கு நேர் எதிர்கொள்ளுதல் ஆகும். ஒன்றை நீங்கள் நேரடியாக அறிகிறபோது, அறிகிறவர் அறியப்படுகிற பொருளை தானே நேரடியாக எதிர்கொள்கிறார். அதனைத் தொடர்புபடுத்த யாருமில்லை. இணைப்புப் பாலமெதுவும் இருப்பதில்லை. அப்போது தான் அது சரியான அறிவாகிறது. ஆனால் இதில் பல பிரச்சனைகள் எழுகின்றன.

சாதாரணமாக இந்த நேரடி அறிவு என்பது மிகவும் தவறான ஒரு முறையிலேயே மொழிபெயர்க்கப்பட்டும், பொருள் கொள்ளப்பட்டும், உரைகூறப் பட்டும் வந்திருக்கிறது. 'பிரத்தியட்சம்' என்னும் சொல்லுக்கே 'கண்களுக்கு முன்னால்' என்பதே பொருள். ஆனால் கண்களே ஒரு இடையீடாகத்தான் இருக்கின்றன. அதற்கும் பின்னேதான் அறிகிறவர் மறைந்திருக்கிறார். கண்கள் ஊடகங்களாகத்தான் இருக்கின்றன. நான் பேசுவதை நீங்கள் கேட்டுக்கொண்டிருக்கிறீர்கள். ஆனால் இது

நேரடியானதல்ல, இது உடனடியானதல்ல. புலன்களின் வாயிலாகவே - காதுகளின் வாயிலாகவே நீங்கள் நான் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள்; கண்களின் வாயிலாகவே நீங்கள் என்னைப் பார்த்துக்கொண்டிருக்கிறீர்கள்.

உங்களின் கண்கள் உங்களுக்குத் தவறான அறிக்கை தந்துவிட முடியும். உங்களின் காதுகள் தவறாக அறிவித்துவிட முடியும். எவரையும் நம்பிவிடக் கூடாது. எந்த இடையீட்டாளரையும் நம்பி விடக் கூடாது. ஏனெனில் இடையீட்டாளரைநீங்கள் சார்ந்திருக்க முடியாது. உங்கள் கண்கள் நோய் வாய்ப்பட்டிருந்தால் அவை வேறுவிதமாகத் தெரியப்படுத்தும். உங்கள் கண்களில் போதை ஏறினால் அவை வேறுபாடாகத்தான் அறிக்கைதரும். ஞாபகத்தால் உங்கள் கண்கள் நிரம்பிஇருந்தால் அவை வேறுவிதமாகவே தெரியப்படுத்தும். நீங்கள் காதல் வயப்பட்டிருந்தால் நீங்கள் பார்க்கும் பார்வை ஒரு விதமாக இருக்கும். நீங்கள் காதல் வயப்படாதிருந்தால் அவ்விதமாக நீங்கள் ஒருபோதும் பார்க்க முடியாது. காதலின் ஊடாகக் கண்டால் சராசரிப் பெண்கூட உலகத்திலேயே அழகான பெண்மணியாகக் காட்சி அளிக்க முடியும். உங்கள் கண்களில் காதல் நிரம்பி இருக்குமானால் அவை அறிக்கையிடுவது ஒன்றாக இருக்க முடியும். உங்கள் கண்களில் வெறுப்பால் நிரம்பி இருந்தால் அதே ஆள் மிகவும் அறுவறுப்பானவராக தோன்றவும் முடியும். எனவே அவை நம்பகமானவை அல்ல.

காதுகளின் வழியாக நீங்கள் கேட்கிறீர்கள். காதுகள் வெறும் கருவிகளே. தவறாகவும் அவை செயல்பட முடியும். சொல்லப்பட்டிராத ஒன்றை அவை கேட்கவும் முடியும். சொல்லப்பட்ட ஒன்றை அவை தவறவிடவும் முடியும். புலன்கள் நம்பத்தக்கவையாக இருக்க முடியாது. புலன்கள் வெறுமனே எந்திரத்தனமான கருவிகளே.

அப்படியானால் பிரத்தியட்சம் என்பதுதான் என்ன? நேரடியாக அறிதல் என்றால் எது? புலன்கள் உட்பட்ட இடையீடு எதுவும் இல்லாதபோது மட்டுமே நேரடி அறிவு இருக்க முடியும். அப்போதுதான் அது சரியான அறிவு என பதஞ்சலி கூறுகிறார். இதுவே சரியான அறிவின் அடிப்படையான முதல் ஆதாரம் ஆகும். ஒன்றை நீங்கள் அறிவதற்கு எவரையும் எதனையும் நீங்கள் சார்ந்து இருக்கத் தேவை இல்லாத பொழுது அது சரியான அறிவின் முதல் தோற்றுவாய் ஆகிறது.

ஆழ்நிலைத் தியானத்தில் மட்டுமே புலன்களை நீங்கள் கடந்து செல்கிறீர்கள். அப்போதுதான் நேரடி அறிதல் சாத்தியம் ஆகிறது. புத்தர் தன் உள்ளார்ந்த சீவனை அறிய வருகிறபோது அந்த உள் உணர்வே

பிரத்தியட்சம் (=நேரடி அறிதல்) ஆக இருக்கிறது. எந்தப் புலன்களும் இதில் சம்பந்தப்படுவதில்லை. யாரும் எவரும் இதைத் தெரியப்படுத்திய தில்லை. தொடர்பாளர் என்று சொல்லத்தக்க யாரும் அங்கு இல்லை. அறிகிறதும் அறியப்படுகிறதும் நேருக்கு நேர் சந்திக்கின்றன. இடையில் தடை எதுவும் இல்லை. இதுவே உடனடித்தன்மை. எனவே இந்த உடனடித் தன்மை மட்டுமே மெய்யானதாக இருக்க முடியும்.

எனவே முதல் சரியான அறிவு என்பது உள்ளார்ந்த சீவனின் (**உள்ளுணர்வின்**) உடையதாக மட்டுமே இருக்க முடியும். அகில **உலகத்தையும் நீங்கள் அறிந்தவராகலாம்.** ஆனால் உங்கள் இருப்பின் உள்ளார்ந்த நடுமையத்தை நீங்கள் அறிந்திராவிட்டால் உங்கள் மொத்த அறிவும் அபத்தமே. உண்மையில் அது அறிவே அல்ல. அது மெய்யானதாக இருக்கமுடியாது. ஏனென்றால் சரியான அறிவின் முதல் அடிப்படை உங்களின் உள்ளே நிகழ்ந்திருக்கவில்லை. உங்களின் முழு மாளிகையும் பொய்யானதே. பல விசயங்களை நீங்கள் அறிந்திருக்கலாம். ஆனால் உங்களை நீங்கள் அறிந்திருக்காவிட்டால், உங்கள் அறிவு அனைத்தும் அறிக்கைகளின் அடிப்படையிலேயே - புலன்கள் தரும் அறிக்கைகளின் அடிப்படையிலேயே அமைந்திருக்கும். ஆனால் புலன்கள் சரியானதைத்தான் தெரியப்படுத்துகின்றன என்பதை எப்படி நீங்கள் நிச்சயிக்க முடியும்?

இரவில் நீங்கள் கனவு காண்கிறீர்கள். கனவு கண்டுகொண்டு இருக்கும்போது அக்கனவை உண்மையென்றே நீங்கள் நம்பி இருக்கிறீர்கள். அந்தக் கனவை உங்கள் புலன்களே உங்களுக்குக் காட்டிக் கொண்டிருக்கின்றன. உங்கள் காதுகள் அதைக் கேட்டுக்கொண்டிருக் கின்றன. அதை நீங்கள் தொட்டுணர்ந்து கொண்டும் இருக்கலாம். உங்கள் புலன்களே உங்களுக்கு அதை தெரியப்படுத்திக்கொண்டு இருக்கின்றன. எனவேதான் அது உண்மை என்னும் பிரம்மைக்கு - மாயைக்கு நீங்கள் ஆட்படுகிறீர்கள். இங்கே நீங்கள் இருக்கிறீர்கள். இது வெறுமனே ஒரு கனவாகக்கூட இருக்கலாம். எதார்த்தத்தில் நான் உங்களிடம் பேசிக் கொண்டிருக்கிறேன் என்று எப்படி நீங்கள் நிச்சயிக்க முடியும்? அது வெறும் கனவாகவே இருக்கலாம் என்பதும் சாத்தியமே. என்னை நீங்கள் இப்போது பார்த்துக்கொண்டு இருப்பது ஒரு கனவில் ஆகக்கூட இருக்கலாம். (ஏனெனில்) எந்த ஒரு கனவுமே, அதைக் கண்டு கொண்டிருக்கும்போது உண்மையானதாகத்தானே தோன்றுகிறது?

ஒருசமயம் ச்சுவாங்சு ஒரு கனவு கண்டார். அக்கனவில் அவர் ஒரு வண்ணத்துப் பூச்சியாக மாறி இருந்தார். காலையில் அவர் சோகமாகக் காணப்பட்டார். ''ஏன் இவ்வளவு சோகமாக இருக்கிறீர்கள்'' என்று

அவருடைய சீடர்கள் கேட்டார்கள். ச்சுவாங் சு பதில் சொன்னார், ''நான் ஒரு சிக்கலில் இருக்கிறேன். இப்பேர்ப்பட்ட சிக்கலில் இதற்குமுன் ஒருபோதும் நான் இருந்தது இல்லை. இந்தப் புதிர் அசாத்தியமானதாகத் தோன்றுகிறது. அதைத் தீர்க்கவே முடியாது. அது என்னவென்றால், நேற்று இரவு நான் ஒரு கனவு கண்டேன். அதில் நான் ஒரு வண்ணத்துப் பூச்சியாக மாறிவிட்டிருக்கிறேன்'' என்றார்.

சீடர்கள் சிரித்தார்கள். அவர்கள் சொன்னார்கள், ''அதனால் என்ன? இது ஒரு புதிரே அல்ல. கனவு என்பது வெறும் கனவுதானே.'' ச்சுவாங் சு சொல்கிறார், ''அப்படி இல்லை. கவனியுங்கள்: நான் ஒரு சிக்கலை எதிர்கொள்கிறேன் - அதாவது தான் ஒரு வண்ணத்துப் பூச்சியாக ஆகி இருப்பதாக ச்சுவாங் சு''வால் கனவு காண முடியும் என்றால், தான் ச்சுவாங் சு'ஆக ஆகி இருப்பதாக இப்போது ஒரு வண்ணத்துப்பூச்சி கனவு கண்டு கொண்டிருக்கலாம் இல்லையா? எனவே இப்போது நான் எதிர்கொண்டு இருப்பது எதார்த்தத்தையா அல்லது மறுபடியும் ஒரு கனவையா என்பதைத் தீர்மானிப்பது எவ்வாறு? ஏனெனில் ச்சுவாங் சு தன் கனவில் ஒரு வண்ணத்துப் பூச்சியாக மாற முடியுமென்றால் ஒரு வண்ணத்துப்பூச்சி இப்போது அதன் கனவில் தான் ச்சுவாங் சுவாக ஏன் மாறி இருக்கக்கூடாது?''

அசாத்தியமானது என்று எதுவும் இல்லை. நிகழும் ஒன்றுக்கு நேர் எதிரானதும் நிகழ முடியும். புலன்களை நீங்கள் நம்பிச் சார்ந்திருக்க முடியாது. கனவில் உங்களை அவை ஏமாற்றிவிடுகின்றன. ஒரு போதைப் பொருளையோ எல். எஸ்.டி போன்ற பொருளையோ நீங்கள் உட்கொண்டால் உங்கள் புலன்களே உங்களை ஏமாற்றத் தொடங்கு கின்றன. இல்லாதவற்றை இருப்பவையாகக் காணத் தொடங்குகிறீர்கள். எந்த அளவுக்கு அவை உங்களை ஏமாற்றிவிட முடியும் என்றால் அவ்றை நீங்கள் முற்றிலுமாக நம்பத் தொட்டகிவிட முடியும்; ஆபத்தான நிலையில் நீங்கள் இருக்கலாம் என்று நம்பிவிட முடியும்.

நியூயார்க்கில் ஒரு பெண் பதினாறாவது மாடியில் இருந்து குதித்து விட்டாள். ஏனென்றால் எல். எஸ்.டி. யின் போதையில் இப்போது தன்னால் பறக்க முடியும் என்று அவள் எண்ணிவிட்டாள். ச்சுவாங் சு கூறியதில் தவறில்லை. அந்தப் பெண் நிசமாகவே சன்னலுக்கு வெளியில் பறக்கவே செய்தாள். அவள் இறந்து போனாள் என்பது வேறு விசயம். ஆனால் போதைப் பொருளின் பாதிப்பினால்தான் தன் புலன்கள் தன்னை இவ்வாறு ஏமாற்றி விட்டன என்பதை இனி அவள் ஒருபோதும் அறியப் போவதில்லை.

போதைப் பொருள்களை உட்கொள்ளாத நிலையிலும் நமக்கு பிரமைகள் ஏற்படவே செய்கின்றன. ஒரு இருண்ட வீதியின் வழியாக நீங்கள் நடந்து சென்று கொண்டிருக்கிறீர்கள். அப்போது திடீரென நீங்கள் பீதி அடைகிறீர்கள். ஒரு பாம்பை அங்கே காண்கிறீர்கள். உடனே ஓடத் தொடங்குகிறீர்கள். அங்கே பாம்பு எதுவும் இல்லை, ஒரு கயிறுதான் அங்கே கிடக்கிறது என்பதைப் பிறகுதான் அறிய வருகிறீர்கள். ஆனால் அங்கு இருந்தது பாம்புதான் என்று நீங்கள் உணர்ந்தபோது, அங்கு ஒரு பாம்பு இருந்தது. அங்கு ஒரு பாம்பு இருப்பதாகவே உங்கள் கண்கள் உங்களுக்குத் தெரியப்படுத்திக்கொண்டிருந்தன. நீங்களும் அதற்கேற்ப செயல்பட்டீர்கள். அந்த இடத்தைவிட்டுத் தப்பி ஓடினீர்கள்.

புலன்களை நம்ப முடியாது. அப்படியானால் நேரடி அறிதல் என்றால் என்ன? புலன்களின் துணையின்றி அறியப்படுவதே நேரடி அறிவாகும். எனவே முதல் சரியான அறிவானது உள் உணர்வின் உடையதாக மட்டுமே இருக்கிறது. ஏனென்றால் அந்த இடத்தில் / நிலையில் மட்டுமே புலன்களுக்கு வேலை இராது. வேறு எல்லா இடத்திலும் புலன்கள் தேவைப்படும். என்னை நீங்கள் பார்க்க விரும்பினால் கண்களின் வாயிலாகவே பார்க்க வேண்டியிருக்கும். ஆனால் உங்களை நீங்கள் பார்க்கவிரும்பினால் கண்கள் தேவைப்படுவதில்லை. கண்ணில்லாதவர்கூட தன்னைத் தானே காண முடியும். என்னை நீங்கள் பார்க்க விரும்பினால் வெளிச்சம் தேவைப் படும். ஆனால் உங்களை நீங்கள் பார்க்க விரும்பினால் இருட்டேகூடப் போதுமானது; வெளிச்சம் தேவைப்படுவதில்லை.

கும்மிருட்டான குகையில்கூட உங்களை நீங்கள் அறியமுடியும். வெளிச்சம், கண்கள் என எந்த வெளித்துணையும் ஊடகமும் தேவை இல்லை. உள் அனுபவம் உடனடியானதாக இருக்கிறது. ஆகவே உடனடி - நேரடி அனுபவமே எல்லா சரியான அறிவினதும் அடிப்படையாக இருக்கிறது.

அந்த உள் அனுபவத்தில் ஒருதடவை நீங்கள் வேர்கொண்டதுமே பல விசயங்கள் உங்களுக்கு நிகழத் தொடங்கும். இப்போது அவற்றை நீங்கள் விளங்கிக் கொள்வது சாத்தியமில்லை. உங்களின் உள் மையத்தில், உள்ளார்ந்த சீவனில் நீங்கள் வேர்கொண்டிருப்பீர்கள். அதை ஒரு நேரடி அனுபவமாக அறிய வந்திருப்பீர்கள். அந்நிலையில் உங்கள் புலன்களால் உங்களை ஏமாற்ற முடியாது. நீங்கள் விழிப்படைந் திருக்கிறீர்கள். இந்நிலையில் உங்கள் கண்கள் உங்களை ஏமாற்ற முடியாது. உங்கள் காதுகள் உங்களை ஏமாற்றமுடியாது. அப்போது

எதுவுமே உங்களை ஏமாற்றமுடியாது. ஏமாற்றப்படுதல் என்பது இனி உங்களுக்கு இல்லை.

இப்போதோ நீங்கள் மாயையில் வாழ்ந்து வருகிறீர்கள். எனவேதான் நீங்கள் ஏமாற்றத்துக்கு ஆளாகிறீர்கள். சரியாக அறிபவர் என்னும் நிலையை ஒரு தடவை நீங்கள் அடைந்து விட்டால் அதன்பின் எதுவும் உங்களை ஏமாற்ற முடியாது; யாரும் உங்களை ஏமாற்ற முடியாது. பின் ஒவ்வொன்றும் மெதுமெதுவாக. சரியான அறிவாக உருவெடுக்கிறது. உங்களையே நீங்கள் ஒருதடவை அறிந்துகொண்டு விட்டால் பின் நீங்கள் அறிவது எதுவாயினும் அது தானாகவே சரியானதாகத் தான் இருக்கும். ஏனென்றால் இப்போது நீங்கள் சரியாகி இருக்கிறீர்கள். இந்த வேறுபாட்டை நினைவில்கொள்ள வேண்டும்: அதாவது நீங்கள் சரியாக இருந்தால் எல்லாமே சரியாக ஆகிறது. நீங்கள் தவறாக இருந்தால் எல்லாமே தவறாகப் போகிறது. எனவே வெளியில் ஒன்றைச் செய்யும் பிரச்சனை அல்ல இது. உள்ளே செய்ய வேண்டிய ஒன்றைப்பற்றிய பிரச்சனை இது.

ஒரு புத்தரை உங்களால் ஏய்க்க முடியாது. அது சாத்தியமில்லை. ஒரு புத்தரை எவ்வாறு நீங்கள் ஏமாற்ற முடியும்? தன்னில் அவர் வேர் கொண்டிருக்கிறார். அவரது பார்வை உங்களை ஊடுருவிக் காணக் கூடியதாக இருக்கிறது. உங்களால் அவரை ஏமாற்ற முடியாது. நீங்கள் அறிவதற்கு முன்பே அவர் உங்களை அறிவார். உங்களுக்குள் ஒரு எண்ணம் லேசாக எழும்போதே அதை முழுவதுமாக அவர் கண்டு கொள்கிறார். உங்கள் உயிரையே ஊடுருவிக் காண்கிறார் அவர்.

எவ்வளவு தூரத்துக்கு உங்களையே நீங்கள் ஊடுருவிக் காண்பீர்களோ அவ்வளவு தூரத்துக்கே மற்றவர்களையும் நீங்கள் ஊடுருவிக் காண முடியும். உங்களை நீங்கள் ஆழமாக ஊடுருவிக்காண முடிந்தால்தான் பின் அதே அளவுக்கு எல்லாவற்றையும் உங்களால் ஊடுருவிக்காண முடியும். உள்ளுக்குள் எவ்வளவு ஆழமாக நீங்கள் போவீர்களோ அவ்வளவு ஆழமாக வெளியிலும் நீங்கள் போக முடியும். ஆனால் உள்ளே ஒரே ஒரு அங்குல தூரம்கூட நீங்கள் போயிருக்கவில்லை. எனவே வெளியேயும் நீங்கள் என்னென்ன செய்தாலும் எல்லாம் ஒரு கனவைப் போன்றதாகவே இருக்கிறது.

சரியான அறிவின் முதல் தோற்றுவாய் உடனடி - நேரடி அறிவு அல்லது பிரத்தியட்சம் என்பதே என்கிறார் பதஞ்சலி. கண்ணால் காண்பதே மெய், கண்முன் இருப்பது மட்டுமே நிஜம் / பிரத்தியட்சம் என்று சொன்ன பழைய பொருள்முதல் வாதிகளாகிய சார்வாகர்களின் கருத்தை அவர் பொருட்படுத்துவதில்லை.

பிரத்தியட்சம் அதாவது நேரடி அறிதல் என்னும் இந்தச் சொல்லின் காரணமாக பெருமளவுக்கு தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டுள்ளது. இந்தியப் பொருள்முதல் வாதிகளில் சார்வாகர்கள் ஒரு குழுவினர். இந்தியப் பொருள்முதல் வாதத்தின் மூலவர் பிருகஸ்பதி என்பவர். மிகவும் கூர்மையான சிந்தனையாளர் அவர். ஆனாலும் அவர் ஒரு சிந்தனையாளர் மட்டும்தான். மிகவும் ஆழமான தத்துவ வாதிதான் அவர். ஆனாலும் அவர் வெறும் தத்துவவாதிதான்; ஞானமடைந்த மனிதர் அல்லர். பிரத்தியட்சம் = நேர்க்காட்சி மட்டுமே மெய்யானது என்று அவர் கூறுகிறார். பிரத்தியட்சம் / நேர்க்காட்சி என்றால் புலன்களின் வாயிலாக நீங்கள் அறிய வருகிற அனைத்தும் எனக் கொள்கிறார். மேலும் புலன்களின் துணை இன்றி எதையும் அறிவதற்கு வேறு வழி எதுவும் கிடையாது என்கிறார் அவர். எனவே சார்வாகர் களைப் பொறுத்தவரை புலனறிவு மட்டுமே சரியானது, மெய்யானது.

எனவேதான் கடவுள் என்று எதுவும் இருக்க முடியும் என்பதை அவர் மறுக்கிறார். ஏனெனில் எவரும் ஒருபோதும் கடவுளைக் கண்டதில்லை. ஆனால் கண்ணால் காணப்பட முடிவது மட்டுமே மெய்யாக இருக்க முடியும். காணப்பட முடியாதது மெய்யானதாக இருக்க முடியாது. கடவுளை உங்களால் பார்க்க முடிவதில்லை. எனவே கடவுள் இல்லை. ஆன்மாவை உங்களால் பார்க்க முடிவதில்லை. எனவே ஆன்மா இல்லை என்கிறார் அவர். மேலும் அவர், ''கடவுள் இருந்தால் நான் பார்க்கும்படியாக அவரை என்முன் கொண்டு வாருங்கள். நான் பார்க்கமுடிந்தால் அவர் இருக்கிறார். ஏனெனில் கண்ணுக்குப் புலனாவது மட்டுமே உண்மை.'' என்று கூறுகிறார்.

பிரத்தியட்சம் அதாவது நேரடி அறிதல் என்ற சொல்லை அவர் பயன்படுத்துகிறார். ஆனால் அதற்கு அவர் எடுத்துக் கொள்ளும் பொருள் முற்றிலும் வேறானது. பிரத்தியட்சம் என்னும் சொல்லைப் பதஞ்சலி பயன்படுத்தும்போது அவர் தரும் பொருள் முற்றிலும்வேறானது. எந்தக் கருவியின் மூலமும் எந்த ஊடகத்தின் வாயிலாகவும் விடுவிக்கப் படாததே அறிவு. அது உடனடியானது, அது மெய்யானது, என்கிறார் அவர். மேலும் ஒரு தரம் இந்த அறிவு ஏற்பட்டுவிட்டால் நீங்களே மெய்யாக ஆகி இருக்கிறீர்கள். இனி பொய்யான எதுவும் உங்களுக்கு நிகழ முடியாது. நீங்கள் மெய்யானவராக இருக்கும்போது சத்தியத்தில் வேரூன்றியவராக இருக்கும்போது உங்களுக்கு மாயைகள் ஏற்பச் சாத்தியமில்லை வித்தியாசமான நிலையில்.

எனவேதான், புத்தர்கள் ஒருபோதும் கனவு காண்பதில்லை என்கிறார்கள். விழிப்பில் இருக்கிறவர் ஒருபோதும் கனவுகள் காண்பதில்லை. ஏனெனில் கனவுகூட அவருக்குத் தோன்ற முடியாது. அவர் ஏமாற்றப்பட முடியாது. அவரும் தூங்கவே செய்கிறார், ஆனால் உங்களைப் போல அல்ல. முற்றிலும் வேறுபட்ட ஒரு முறையில் அவர் தூங்குகிறார். அதன் தன்மை வேறு. அவருடைய உடல் மட்டுமே உறங்குகிறது, இளைப்பாறுகிறது. ஆனால் அவரது சீவனோ / உயிரோ / இருத்தலோ இடையறாத விழிப்பிலேயே இருக்கிறது.

மேலும் அந்த விழிப்பு நிலையானது, எந்தக் கனவும் வர அனுமதிக்காது. விழிப்புநிலை தொலைந்துபோகிற போது மட்டுமே நீங்கள் கனவு காண முடியும். நீங்கள் கவனமாக இல்லாத போதுதான், ஆழமான வசியநிலைக்கு நீங்கள் ஆட்பட்டிருக்கிற போதுதான், நீங்கள் கனவுகாணத் தொடங்குகிறீர்கள். முழுக்கவும் உணர்வில்லாதவராக நீங்கள் இருக்கிற போது மட்டுமே கனவு நிகழ முடியும். அதிக விழிப்பற்ற நிலையில் அதிக கனவுகள் வரும். அதிக உணர்வுடன் இருந்தால் கனவுகள் வருவது குறையும். முழுமையான விழிப்பில் இருந்தால் கனவே வராது. தன்னில் வேர் கொண்டிருக்கிற ஒருவருக்கு. உள் இருத்தலை உடனடியாக / நேரடியாக அறிய வந்திருக்கிற ஒருவருக்கு, கனவு காண்பதும்கூட அசாத்தியம் ஆகிறது.

இதுவே சரியான அறிவின் முதல் ஆதாரம் / தோற்றுவாய். இரண்டாவது ஆதாரம் ஊகம். இது இரண்டாம் நிலையிலானதே. ஆனாலும் இதுவும் பரிசீலிக்கத் தகுதியானதே. ஏனெனில் இப்போது நீங்கள் இருக்கிற நிலையில் உள்ளுக்குள் 'சுயம்' என ஒன்று இருக்கிறதா இல்லையா என்பதை நீங்கள் அறியவில்லை. உங்களின் உள் இருத்தலைப்பற்றிய நேரடி அறிவு உங்களுக்கு இல்லை. இந்நிலையில் இரண்டு சாத்தியங்களே உள்ளன. ஒன்று, உங்கள் இருத்தலின் உள்ளார்ந்த மையம் என ஒன்று இல்லை, ஆன்மா இல்லை என எளிதாக நீங்கள் மறுத்துவிடலாம். இதைத்தான் சார்வாகர்கள் செய்கிறார்கள். அவ்வாறே மேற்கில் எபிக்யூரசு, மார்க்ஸ் - எங்கல்சு முதலியோர் செய்திருக்கிறார்கள்.

ஆனால் பதஞ்சலி கூறுகிறார், ''நீங்கள் அறிந்தே இருக்கிற போது ஊகத்துக்கு தேவை இல்லை. ஆனால் நீங்கள் அறிந்திராத போது ஊகம்செய்வது உதவிகரமாக இருக்கும். எடுத்துக்காட்டாக, மேற்குலகின் மாபெரும் சிந்தனையாளர்களில் ஒருவரான தெகார்தே அவர்தம் தத்துவத்தேடலை சந்தேகத்தின் மூலமாகவே தொடங்கினார். மிகவும்

தொடக்கத்தில் இருந்தே அவர் ஒரு நிலைபாட்டை கடைப்பிடித்தார்: அதாவது சந்தேகப்படக்கூடிய எதையும் அவர் நம்ப மாட்டார். சந்தேகப் பட முடிகிற எதையும் அவர் சந்தேகிப்பார். சந்தேகப்பட முடியாத ஒரு நிலையைக் கண்டுபிடிக்க அவர் முயல்வார். அந்த நிலையின்மீது மட்டுமே தனது சிந்தனை மாளிகை முழுவதையும் அவர் கட்டி எழுப்புவார். அழகான தேடல்தான். நேர்மையானது, கடினமானது, அத்துடன் ஆபத்தானதும்கூட.

ஆக, கடவுளை அவர் மறுத்தார். ஏனெனில் அதை நீங்கள் சந்தேகிக்க முடியும். பலரும் சந்தேகித்திருக்கிறார்கள். அவர்களில் எவரும் தம் சந்தேகங்களுக்கு விடைகாண முடிந்ததில்லை. அவர் மறுத்துக்கொண்டே போகிறார். மறுக்க முடிகிற யாவற்றையும், சந்தேகத்துக்கு இடமானதாக கருதமுடிகிற யாவற்றையும் அவர் மறுத்தார். தொடர்ந்து பல ஆண்டுகளாக அவர் மனக்குழப்பத்திலேயே இருந்தார். பின்பே சந்தேகத்துக்கு அப்பால்பட்ட நிலையைத் தற்செயலாக அவர் கண்டு பிடித்தார்: தன்னை அவரால் மறுக்க முடியவில்லை. அது முடியாததாக இருந்தது. 'நான் இல்லை' என்று யாரும் சொல்ல முடியாது. அதை நீங்கள் சொன்னாலே, அப்படி நீங்கள் சொல்வதுவே, நீங்கள் இருக்கிறீர்கள் என்பதைத்தான் நிரூபணம் செய்கிறது. எனவே அதுதான் சரியான அடித்தளம் ஆகும். அதாவது ''என்னை நான் மறுக்க முடியாது. நான் இல்லை என்று என்னால் சொல்ல முடியாது. யார்தான் அப்படிச் சொல்ல முடியும்? என்னை நான் சந்தேகிப்பதற்கும்கூட நான் இருக்க வேண்டியவனாக இருக்கிறேன்.''

இதுவே ஊக அறிவு என்பது. இது நேரடி அறிதல் இல்லை. தர்க்கம் மற்றும் வாதத்தின் வழியாகத்தான் இது செயல்படுகிறது. ஒரு நிழலான அர்த்தத்தையே இது தருகிறது. ஒரு மேலோட்டமான காட்சியையே இது வழங்குகிறது. ஒரு வாய்ப்பை, ஒரு வாசலை மட்டுமே உங்களுக்கு இது திறந்துவிடுகிறது பிறகு இதன்மூலமே அந்த உறுதியானபாதையை வந்துஅடைந்துவிட்டார் தெகார்தே. அந்தப் பாறையின்மேல் ஒரு மாபெரும் கோயிலை எழுப்ப முடியும். சந்தேத்துக்கு இடமற்றதாக ஒரே ஒரு உண்மை கிடைத்துவிட்டாலும் அதைக்கொண்டு முற்றான உண்மையை நீங்கள் அடைய முடியும். சந்தேகத்துக்கிடமான ஒன்றில் இருந்து நீங்கள் தொடங்கினால் ஒருபோதும் நீங்கள் ஓரிடத்துக்கும் சென்று சேர மாட்டீர்கள். ஏனெனில் அடித்தளத்திலேயே ஐயம் தங்கி இருக்கிறது.

சரியான அறிவின் இரண்டாவது தோற்றுவாய் ஊகம் என்கிறார் பதஞ்சலி. சரியான தர்க்கம், சரியான சந்தேகம், சரியான வாதம் - இவை

சரியான அறிவை நோக்கி செல்ல உதவக்கூடிய ஒன்றை வழங்க முடியும். அதையே ஊகம் / அனுமானம் என்று அவர் அழைக்கிறார். நேரடியாக நீங்கள் கண்டிருக்கவில்லை. ஆனால் எல்லாமே அதை நிரூபிக்கிறது. ஆகவே அது அப்படித்தான் இருந்தாக வேண்டும். அது அப்படித்தான் என்பதற்குச் சூழ்நிலைச் சாட்சியங்கள் இருக்கின்றன.

எடுத்துக்காட்டாக உங்களைச் சுற்றிலும் இருக்கும் பரந்து விரிந்த பேரண்டத்தை நீங்கள் பார்க்கிறீர்கள். கடவுள் இருக்கிறார் என்று கருத உங்களால் இயலாமல் போகலாம். ஆனால் சாதாரண ஊகத்தின் துணையுடன் பார்த்தால்கூட, உலகம் முழுவதும் ஒரு ஒழுங்கமைப்பு ஆக, ஒரு இசைவான முழுமையான திட்ட வடிவமைப்பாக இருக்கிறது என்பதை உங்களால் மறுக்க முடியாது. அதற்குப்பதில் அறிவியலானது இன்னுமதிக திட்ட அமைவுகளையும் அதிகமதிக இயற்கை விதிகளையும் கண்டுபிடித்துக் கொண்டே போகிறது.

உலகம் வெறும் ஒரு தற்செயல் நிகழ்வுதான் என்றால் அறிவியல் என்பது அசாத்தியம் ஆகிவிடும். ஆனால் உலகம் ஒரு தற்செயல் நிகழ்வாகத் தோன்றுவதில்லை. அது ஒரு திட்டமிட்ட நிகழ்வாகவே தோன்றுகிறது. திட்டவட்டமான விதிகளின்படியே அது இயங்கிக் கொண்டிருக்கிறது. மேலும் அந்த விதிகளோ ஒருபோதும் மாறுபடுவதில்லை.

பிரபஞ்சத்தில் காணும் திட்ட வடிவமைப்பை மறுத்துவிட முடியாது என்பார் பதஞ்சலி. மேலும் அதில் ஒரு வடிவமைவு இருப்பதை ஒரு தடவையாவது நீங்கள் உணர்வீர்களானால் அதை வடிவமைத்தவர் உள்ளே வந்து விடுகிறார். ஆனால் அது ஒரு ஊகம்தான். அவரை நீங்கள் நேரடியாக அறிந்திருக்கவில்லை. ஆனால் இந்தப் பிரபஞ்சத்தின் அமைப்பு, திட்டம், விதிகள், ஒழுங்கு... மேலும் அந்த ஒழுங்கோ மிகவும் அபாரமாக இருக்கிறது! அது அளவற்ற நுணுக்கமானதாக, அளவற்ற அற்புதம் நிரம்பியதாக, அளவற்ற விரிவுடையதாக - எல்லையற்றதாக இருக்கிறது. அதில் ஒழுங்கு இருக்கிறது. ஒவ்வொன்றும் ஒரு ஒழுங்குடன், மொத்தப் பிரபஞ்சமும் இசைலயத்துடன் அதிர்ந்து கொண்டிருக்கிறது. எனவே இத்தனைக்கும் பின்னால் யாரோ மறைந்து இருப்பதாகத் தோன்றுகிறது. ஆனாலும் அது ஒரு ஊகம்தான்; அனுமானம்தான்.

சரியான அறிவை நோக்கிய பயணத்துக்கு ஊகத்தாலும் உதவ முடியும் என்கிறார் பதஞ்சலி. ஆனால் அது ஒரு சரியான ஊகமாக இருக்கவேண்டி இருக்கிறது. தர்க்கம் அபாயகரமானது. அது இருபுறக் கூர்கொண்டது. தர்க்கத்தை நீங்கள் தவறாகவும் பயன்படுத்த முடியும். அப்போதும் நீங்கள் முடிவுகளை வந்தடைய முடியும்.

எடுத்துக்காட்டாக உலகில் திட்டம் இருக்கிறது. வடிவமைப்பு இருக்கிறது. ஒழுங்கு இருக்கிறது. அழகான, செம்மையான ஒரு ஒழுங்கு இருக்கிறது என்று உங்களிடம் நான் கூறினேன். அதற்குப் பின்னால் யாருடைய கைகளோ, கைவண்ணமோ இருப்பதாகத் தோன்றுகிறது என்பது சரியான ஊகமாக இருக்கமுடியும். நேரடியாக நம்மால் அறியமுடியாமல் இருக்கலாம். அந்தக் கைகளுடன் நமக்கு நேரடித் தொடர்பு இல்லாமல் இருக்கலாம். ஆனால் ஒரு கை அங்கு மறைந்து இருப்பதாகவே தோன்றுகிறது - இது சரியான ஊகம்.

ஆனால் இதே காரணங்களில் இருந்து நீங்கள் தவறான ஊக முடிவுக்கும் வர முடியும். சில சிந்தனையாளர்கள் இப்படிச் சொல்லி இருக்கிறார்கள்... திதரோ கூறி இருக்கிறார், ''ஒழுங்கு நிலவுவதால் கடவுள் இருக்கிறார் என என்னால் நம்ப முடியவில்லை. உலகில் செம்மையான ஒழுங்கு நிலவுவதாகத் தெரிகிறது. இந்த ஒழுங்கு நிலவுவதன் காரணமாகவே தான் என்னால் கடவுளை நம்ப முடியவில்லை'' அவருடைய தர்க்கம் என்ன? திரைமறைவில் ஒரு கரம் இருந்தால் பின் இந்த அளவுக்கு ஒழுங்கு நிலவ முடியாது என்கிறார் அவர். பின்னணியில் ஒரே ஆள் இருந்தால் சில வேளைகளிலாவது நிச்சயமாக அவர் தவறிழைத்து விடுவார். சில நேரங்களில் அவர் தன் மனம்போன போக்கில் விசித்திரமாகவும் கிறுக்குத்தனமாகவும் செயல்பட்டு விடுவார். சில நேரங்களிலாவது அவர் தன்னிலை திரிந்தாக வேண்டும். பின்புலத்தில் எவரேனும் இருந்தால் விதிகள் இந்த அளவு செம்மையாக இருக்க முடியாது. யாரும் பின்னணியில் இல்லாதிருந்தால்தான் விதிகள் செம்மையாக இருக்க முடியும். அவை வெறுமனே யந்திரம் போன்றே செயல்படுகின்றன.

இதுவும் ஏற்புடையதாகவே தெரிகிறது. எல்லாமே செம்மையாகவே இயங்குமானால் அது யந்திர இயக்கமாகவே தோன்றுகிறது. ஏனெனில் தவறிழைப்பது மனித குணம் என்று மனிதர்களைப்பற்றி சொல்கிறார்கள். பின்னணியில் யாராவது இருந்தால் பின் சில வேளைகளிலாவது அவர் தவறிவிடவே செய்வார். இந்த அளவு துல்லியமான சூழலில் அவருக்கு சலிப்புத் தட்டவே செய்யும். மேலும் சில நேரங்களிலாவது அதை அவர் மாற்றி அமைக்கவும் விரும்புவார்.

நூறு டிகிரி வெப்ப நிலையில் தண்ணீர் கொதிக்கிறது. காலகாலமாக என்றென்றைக்கும் அது நூறாவது டிகிரிலேயே கொதித்து வந்திருக்கிறது. பின்னணியில் கடவுள் என்று ஒருவர் இருந்தால், நிச்சயம் அவருக்கு இதில் சலிப்புத் தட்டிவிடும் என்று கூறுகிறார் திதரோ. எனவே சும்மா ஒரு மாறுதலுக்காகவாவது ஒருநாள் அவர் பின்வருமாறு

கூறிவிடலாம்: ''இன்று முதல் தொண்ணூறு டிகிரியில் தண்ணீர் கொதிக்கட்டும்.'' ஆனால் இப்படி ஒருபோதும் நிகழ்வதில்லை. எனவே எந்த மனிதரும் பின்னணியில் இல்லை என்றே தோன்றுகிறது.

இரண்டு வாதங்களுமே முற்றிலும் சரியானதாகவே தோன்றுகின்றன. ஆனால் உங்களின் வளர்ச்சிக்கான வாய்ப்புகளை வழங்கும் ஊகமே சரியான ஊகம் என்கிறார் பதஞ்சலி. தர்க்கம் சரியானதா தவறானதா என்பதல்ல கேள்வி. உங்கள் தர்க்கத்தின் முடிவு, உங்களின் வளர்ச்சிக்கு ஒரு திறவுகோலாக ஆக முடியுமா என்பதே கேள்வி. கடவுள் இல்லை என்றால் அது ஒரு தடையாக ஆகிறது. அப்போது நீங்கள் வளர முடியாது. பின்னணியில் ஒரு கரம் மறைந்திருக்கிறது என்று நீங்கள் முடிவு செய்வீர்களானால் இந்த உலகம் ஒரு புதிராக ஆகிறது. அப்படியானால் நீங்கள் இப்போது இங்கே இருப்பது வெறும் தற்செயல் அல்ல. அந்நிலையில் உங்கள் வாழ்க்கை அர்த்தம் நிறைந்ததாக ஆகிறது. அந்நிலையில் ஒரு மாபெரும் செயல் திட்டத்தின் பகுதியாக நீங்கள் இருக்கிறீர்கள். அப்போதுதான் ஏதாவது சாத்தியம் ஆகிறது. விழிப்புணர்வில் நீங்கள் வளர முடிவதற்கு அப்போதுதான் உங்களால் ஏதாவது செய்ய முடியும்.

சரியான ஊகம் என்றால், உங்களுக்கு வளர்ச்சியை வழங்க முடிகிற ஊகம் என்று பொருள். தவறான ஒரு ஊகம் வெளித் தோற்றத்தில் எவ்வளவு சிறந்ததாகத் தெரிந்தாலும் உங்களின் வளர்ச்சியை அது அடைத்து விடுகிறது. ஊகமும் கூட சரியான அறிவுக்கான ஒரு தோற்றுவாயாக ஆக முடியும். தர்க்கத்தையும்கூட சரியான அறிவுக்கான ஒரு ஆதாரமாகப் பயன்படுத்த முடியும். ஆனால், நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்பதில் மிகுந்த கவனத்துடன் நீங்கள் இருக்க வேண்டி இருக்கிறது. உங்கள் தர்க்கம் வறட்டுத்தனமானதாக இருந்தால் அதைக் கொண்டு நீங்கள் தற்கொலையும் செய்து கொள்ளக்கூடும். தர்க்கமே ஒரு தற்கொலையாக முடியலாம். பலருக்கு அது அப்படித்தான் ஆகிறது.

ஒருசில நாட்களுக்கு முன்புதான் கலிபோர்னியாவில் இருந்து ஒரு மெய்யன்பர் இங்கு வந்திருந்தார். அவர் நீண்ட தொலைவு பயணம் செய்து வந்திருந்தார். என்னைச் சந்திப்பதற்காக அவர் வந்திருந்தார். அப்போது அவர் சொன்னார், ''நான் தியானிக்கும் முன் அல்லது என்னை நீங்கள் தியானிக்க சொல்லுமுன் ஒரு விசயம்: உங்களிடம் யார் வந்தாலும் அவரை நீங்கள் தியானத்துக்குள் பிடித்துத் தள்ளி விடுகிறீர்கள் என்று கேள்விப்பட்டேன். எனவே என்னை நீங்கள் தள்ளி விடுவதற்கு

முன் சில கேள்விகள் வைத்திருக்கிறேன்.'' குறைந்தது ஒரு நூறு கேள்விகள் கொண்ட ஒரு பட்டியலையே அவர் வைத்திருந்தார். கடவுளைப் பற்றி, ஆன்மாவைப்பற்றி, உண்மையைப்பற்றி, சொர்க்கத்தைப் பற்றி, நரகத்தைப் பற்றி என எல்லாவற்றைப்பற்றியும் ஒரு தாள் நிறைந்த கேள்விகள் - கேட்க முடிகிற எந்தக் கேள்வியையும் அவர் விட்டு வைக்கவில்லை என்று நினைக்கிறேன். அவர் சொன்னார், ''முதலில் இந்தக் கேள்விகளுக்கு நீங்கள் தீர்வு தந்தாக வேண்டும். இல்லாவிட்டால் நான் தியானிக்கப் போவதில்லை.'' என்றார்.

ஒருவகையில் அவர் கூறுவது தர்க்கரீதியானதே. ஏனெனில் ''எனது கேள்விகளுக்குப் பதில் அளிக்கப்படாத வரையில் எவ்வாறு என்னால் தியானிக்க முடியும்'' என்கிறார் அவர். ''நீங்கள் கூறுவது சரிதான் என்பதை, என் சந்தேகங்களுக்கு நீங்கள் தக்க விடையளித்து விட்டீர்கள் என்பதை உறுதியாக நான் உணராத வரை, நீங்கள் சுட்டிக் காட்டும் ஒரு திசையில் எவ்வாறு நான் பயணிக்க முடியும்? நீங்கள் தவறானவராக இருக்கலாம். எனவே எனது சந்தேகங்கள் அகன்றால் மட்டுமே உங்கள் சரித்தன்மையை நீங்கள் நிரூபித்தவராக முடியும்.''

ஆனால் அவரது ஐயங்கள் தீர்க்கப்பட முடியாதவை. இதுதான் தர்மசங்கடம். அவர் தியானித்தால் மறைந்துபோக முடியும். ஆனால் அந்தச் சந்தேகங்கள் மறைந்துபோன பின்புதான் நான் தியானிப்பேன் என்கிறார் அவர். என்ன செய்வது? ''கடவுள் இருக்கிறார் என்பதை முதலில் நிரூபியுங்கள்.'' என்றால் எவரும் ஒருபோதும் அதை நிரூபித்ததில்லை. நிரூபிக்கவும் முடியாது. இதன் பொருள் கடவுள் இல்லை என்பது அல்ல. ஆனால் கடவுளை நிரூபித்துக் காட்ட முடியாது. நிரூபிக்கப்படவோ மறுதலிக்கப்படவோ முடிகிற வகையிலான ஒரு சிறிய பொருள் அல்ல அவர். அப்பேர்ப்பட்ட உயிராதாரமான ஒன்று அது. நீங்கள் அதை வாழ்ந்து பார்த்தே அறிய வேண்டி இருக்கிறது. நிரூபணம் எதுவும் உதவ முடியாது.

ஆனால் தர்க்க ரீதியில் பார்த்தால் அவர் சொல்வது சரிதான். அவர் கூறுகிறார், ''நீங்கள் நிரூபிக்காத வரை எப்படி நான் தொடங்க முடியும்? ஆன்மா இல்லை என்றால் தியானம் செய்யப் போவது யார்? எனவே முதலில் ஆன்மா என்ற ஒன்று இருக்கிறது என்பதை நிரூபியுங்கள். பிறகே நான் தியானிக்க முடியும்.''

இந்த மனிதர் தற்கொலை செய்து கொண்டிருக்கிறார். இவருக்கு நிறைவளிக்கும் விடை அளிக்க எவராலும் முடியாது. எல்லாவித தடைகளையும் அவர் உருவாக்கி இருக்கிறார். மேலும் இந்தத் தடைகளின்

வாயிலாக அவர் வளர்ச்சி பெறுவதென்பதும் இயலாததாகிறது. ஆனால் அவர் கூறுவது என்னவோ தர்க்கப்படி சரியானதே. இத்தகைய ஒரு மனிதருடன் நாம் என்ன செய்வது? அவருடைய கேள்விகளுக்கு நான் பதிலளிக்கத் தொடங்கினால் நூறு சந்தேகங்கள் எழுப்ப முடியக்கூடிய அந்த மனிதர், கோடி சந்தேகங்களை எழுப்ப முடியும். ஏனெனில் சந்தேகிப்பதென்பது மனிதன் ஒரு செயல்பாடாக - ஒரு பாணியாக இருக்கிறது. ஒரு கேள்விக்கு நீங்கள் பதில் அளிக்க முடிந்தால் உங்கள் பதிலில் இருந்து பத்துக் கேள்விகளை அவர் உருவாக்கிவிட முடியும். ஏனெனில் மனம் அப்படியேதான் இருக்கிறது.

சந்தேகங்களையே அவர் விரும்பி எதிர்நோக்குகிறார். ஆனால் தர்க்கரீதியாக நான் பதில் தருவேனேயானால் அவருடைய தர்க்க பூர்வமான மனம் ஊட்டி வளர்க்கப்படவும் அதில் வலுப்பெறவும் உதவியவன் ஆகிறேன். அதற்கு இன்னும் அதிகமான ஊட்டம் கொடுப்பவன் ஆகிறேன். ஆகவே, இது உதவப் போவதில்லை. அவரது தர்க்கத் தன்மையில் இருந்து முதலில் அவரை வெளிக் கொண்டு வந்தாக வேண்டியிருக்கிறது.

எனவே ''எப்போதாவது நீங்கள் காதலித்திருக்கிறீர்களா?'' என்று அவரைக் கேட்டேன். அதற்கு அவர் ''இப்போது இது எதற்கு? பேச்சை மாற்றப் பார்க்கிறீர்கள்'' என்றார். நான் சொன்னேன், ''உங்கள் கேள்விகளுக்கு நான் பிறகு வருகிறேன். ஆனால் இப்போது திடீரென்று இந்தக் கேள்வி எனக்கு மிகவும் அர்த்தமுடையதாக ஆகிவிட்டிருக்கிறது. எப்போதேனும் நீங்கள் காதலித்திருக்கிறீர்களா?'' ''ஆம்'' என்றார் அவர். அவருடைய முகபாவம் மாறியது. ''ஆனால் அந்த முழு விவகாரத்தையும் சந்தேகிக்கும் முன்பே நீங்கள் காதலித்தீர்களா? அல்லது காதல் வயப்படும் முன் அந்த விவகாரம் முழுவதையுமே நீங்கள் சந்தேகித்தீர்களா?'' என்று கேட்டேன்.

இப்போது அவர் தடுமாறினார். அசவுகரியமாக உணர்ந்தார். ''இதைக் குறித்து நான் ஒருபோதும் சிந்தித்துப் பார்த்ததில்லை. எடுத்த எடுப்பில் காதல் கொண்டுவிட்டேன். பிறகுதான் அதை நான் உணர்ந்தவன் ஆனேன்.'' என்றார். இதற்கு நான் சொன்னேன், ''இதற்கு நேர்மாறாகச் செய்யுங்கள். முதலில் காதலியைப்பற்றி சிந்தியுங்கள். காதல் சாத்தியமா? காதல் என ஒன்று நிலவுகிறதா? காதல் என ஒன்று நிலவ முடியுமா? என்பதைச் சிந்தியுங்கள். முதலில் அது நிரூபிக்கப் படட்டும். அது நிரூபிக்கப்படாவிட்டால் யாரையும் நீங்கள் காதலிக்க மாட்டீர்கள் என்பதை ஒரு நிபந்தனை ஆக்குங்கள்.''

அவர்: ''நீங்கள் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள்? என் பிழைப்பையே நீங்கள் கெடுத்து விடுவீர்கள் போலிருக் கிறதே! இதை ஒரு நிபந்தனையாக ஆக்கினால் பின் என்னால் எப்படி காதலிக்க முடியும்?'' என்றார் நான் அவரிடம் ''ஆனால் இதைத்தானே நீங்களும் செய்து கொண்டிருக்கிறீர்கள். தியானமும் அன்பை - காதலைப் போன்றதே. முதலில் இதை நீங்கள் புரிந்து கொண்டாக வேண்டும். கடவுளும் காதலைப் போன்றவர்தான். எனவேதான் கடவுள் என்றால் அன்பு, அன்பே கடவுள் என்று எப்போதும் சொல்கிறார் யேசுநாதர். அது (கடவுள்) அன்பைப் போன்றதே: முதலில் அது ஒருவருக்கு அனுபவமாக வேண்டி இருக்கிறது.'' என்றோர்.

தர்க்கபூர்வ மனம் மூடிக்கொண்டு விட முடியும். மேலும் எந்த அளவுக்கு அது தர்க்கப் பொருத்தமாக இருக்கும் என்றால் தன் சொந்த வளர்ச்சிக்கான அனைத்து வாய்ப்புகளையும் வழிகளையும் அவரே அடைத்து விடுகிறார் என்பதை ஒருபோதும் அவர் உணர மாட்டார். எனவே ஊகம் அல்லது அனுமானம் என்றால், வளர்ச்சிக்கு உதவக்கூடிய ஒருவழியில் சிந்தித்தல் என்பதாகும். அந்நிலையில் தான் அது சரியான அறிவுக்கான ஒரு தோற்றுவாயாக, ஆதாரமாக ஆக முடிகிறது.

மூன்றாவது ஆதாரம் மிகவும் அழகானது. அதுவே ஆகமம் அல்லது விழிப்படைந்த ஞானிகளின் வாய்மொழிகள் என்பதாகும். சரியான அறிவுக்கு ஒரு ஆதாரமாக வேறெங்கும் இது கூறப்பட்டிருக்க வில்லை. இந்த மூன்றாவது தோற்றுவாயைப்பற்றி ஒரு நீண்ட நெடிய சர்ச்சை இருந்து வந்திருக்கிறது. நேரடியாக உங்களால் அறிந்துகொள்ள முடியுமானால் அது சரியே, நல்லதே என்கிறார் பதஞ்சலி. அவ்வாறே சரியான வழியில் உங்களால் அனுமானிக்க முடிந்தாலும் நீங்கள் சரியான பாதையிலேயே இருக்கிறீர்கள்; எனவே மூலத்தை நீங்கள் அடைந்து விடுவீர்கள்.

ஆனால் நேரடியாக நீங்கள் அறிந்திருக்காததும் உங்களால் ஊகிக்க முடியாததும் ஆன சில விசயங்கள் இருக்கின்றன. இந்தப் பூமியில் பிறந்த முதல் மனிதர் அல்ல நீங்கள். உண்மையைத் தேடுபவர்களில் முதலாமவராகவும் நீங்கள் இல்லை. எண்ணற்ற யுகங்களாக எண்ணற்ற மனிதர்கள் தேடிக் கொண்டு வந்திருக்கிறார்கள். இந்தக் கோளில் மட்டுமல்ல, மற்ற கோள்களிலும்தான். இந்தத் தேடல் அனாதியானது. பலர் சென்று அடைந்துமிருக்கிறார்கள். இலக்கை அவர்கள் அடைந்துவிட்டிருக்கிறார்கள். கோயிலின் கருவறைக்குள் அவர்கள் பிரவேசித்து விட்டிருக்கிறார்கள். அவர்களின் வாய்ச் சொற்களும் சரிய்ான அறிவுக்கோர் ஆதார்மாகவே இருக்கின்றன.

ஆகமங்கள் என்றால் ஏற்கனவே அறிந்திருக்கிறவர்களின் அடைந்திருக்கிறவர்கள் வாய்மொழிகள் என்று பொருள். புத்தர் ஒன்றைக் கூறுகிறார் அல்லது யேசு ஒன்றைக் கூறுகிறார்... அவர் கூறுவது என்ன என்பது நமக்குத் தெரிவதில்லை. அந்த அனுபவத்தை நாம் பெற்றிருக்கவில்லை. எனவே அதைப்பற்றி முடிவுசெய்ய நமக்கு எந்த வழியும் இல்லை. அவரது சொற்களின் வாயிலாக எதை எவ்வாறு சரியாக ஊகித்துணர்வது என்பது நமக்கு தெரிவதில்லை. மேலும் அந்த வார்த்தைகள் ஒன்றுக்கொன்று முரணாக உள்ளன என்பதால், நீங்கள் விரும்பும் எந்தப் பொருளை வேண்டுமானாலும் அவற்றிலிருந்து நீங்கள் ஊகித்துக் கொள்ள முடிகிறது.

யேசு மூளைக் கோளாறுடைய ஒரு மனிதராகவே இருந்தார் என்று கருதும் சிலர் இருக்கிறார்கள். அவருக்கு நரம்புக் கோளாறு இருந்தது. அவர் ஒரு கிறுக்கர் என்று நிரூபிக்க மேலை உளவியல்காரர்கள் முயன்று கொண்டிருக்கிறார்கள். ''நான் கடவுளின் மகன், ஒரே மகன்'' என்று அவர் உரிமை கொண்டாடும் போது அவர் ஒரு பைத்தியமாகவே அகங்கார வெறியராகவே மூளை திறம்பியவராகவே தெரிகிறார். மேலும் இத்தகைய உரிமைகளை கோரும் பலரும் மூளைக் கோளாறு உடையவர்களாகவே காணப்படுகிறார்கள். எனவே யேசுவும் சித்தம் கலங்கியவராகவே இருந்தார் என்று நிரூபித்துவிட முடியும். பைத்தியக் காப்பகங்களில் இப்படி நிறையபேர் இருப்பதை நீங்கள் காண முடியும்.

முன்போர் காலத்தில் பாக்தாத்தில் ஒரு சம்பவம் நடந்தது. அப்போது காலிப் ஓமர் அரசனாக இருந்தான். அப்போது ஒரு மனிதன் பாக்தாதின் வீதிகளில் பின்வருமாறு அறிவித்துக்கொண்டு திரிந்தான். ''நானே பைகம்பர். நானே இறை தூதன். நானே தீர்க்கதரிசி. இனி முகமதுவுக்கு இடமில்லை. ஏனெனில் நான் வந்துவிட்டேன். இறைவனிடம் இருந்து வரும் கடைசி வார்த்தையாக கடைசிச் சேதியாக நானே இருக்கிறேன். எனவே இனி முகம்மது தேவை இல்லை. அவர் காலாவதியாகிவிட்டார். இது வரைக்கும் அவரே இறை தூதராக இருந்தார். இப்போதோ நான் வந்துவிட்டேன். இனி நீங்கள் முகம்மதுவை மறந்துவிடலாம்.''

அது ஒரு இந்து நாடு அல்ல. இந்துக்கள் சகிப்புத் தன்மை உடையவர்கள். இந்துக்களைப் போல் வேறு யாரும் சகிப்புக் காட்டியதில்லை. எதையும் சகித்துக் கொள்ள அவர்களால் முடியும். ''ஏனென்றால் துல்லியமாக நீங்களே அறியாதவரை உங்களால் ஆம் என்றும் கூற முடியாது. இல்லை என்றும் கூற முடியாது.

இந்நிலையில் அவர் இறைத் தூதராகவே கூட இருக்கலாம், யாருக்குத் தெரியும்'' என்பார்கள் அவர்கள்.

ஆனால் முகம்மதியர்கள் வேறு மாதிரியானவர்கள். மிகவும் வறட்டுத்தனமானவர்கள். அவர்களுக்கு சகிப்புத்தன்மை என்பது அறவே கிடையாது. எனவே புதிய தீர்க்கதரிசியைப் பிடித்து, சிறையில் தள்ளினான் காலிப் ஓமர். அவன் கூறினான், ''இருபத்தி நான்கு மணிநேர அவகாசம் உனக்கு தரப்படுகிறது. அதற்குள் மறுபரிசீலனை செய்துகொள். ''நான் தீர்க்கதரிசி அல்ல. முகம்மதுவே தீர்க்கதரிசி'' என்று நீ சொன்னால் விடுவிக்கப்படுவாய். உன்னுடைய கிறுக்குத்தனத்தையே தொடர்ந்து நீ வலியுறுத்திக் கொண்டிருந்தால் இருபத்திநாலு மணிநேரம் கழித்து சிறைக்கு நான் வருவேன். அப்போது நீ கொல்லப்படுவாய்.''

அந்த மனிதன் சிரித்தான். அவன் சொன்னான், ''இதோ பார். திருமறையிலேயே இதுதான் எழுதி இருக்கிறது. எப்போதுமே தீர்க்க தரிசிகள் இப்படித்தான் நடத்தப்படுவார்கள் என்று எழுதி இருக்கிறது. அதுபோல்தான் நீயும் என்னை நடத்திக் கொண்டிருக்கிறாய்.'' அவனது வாதம் தர்க்கபூர்வமானது. முகம்மதுவே இப்படித்தான் நடத்தப்பட்டார். எனவே இது ஒன்றும் புதியது அல்ல. அந்த மனிதன் ஓமரிடம் சொன்னான், ''இது ஒன்றும் புதியது அல்ல. இயல்பாகவே எல்லாமே இப்படித்தான் நடக்கிறது; நடந்துவரும். மேலும் மறுபரிசீலனை செய்யும் நிலையில் நான் இல்லை. அதற்கு நான் அதிகாரி அல்ல. நான் வெறும் தூதன் மட்டுமே. கடவுள் மட்டுமே மாற்ற முடியும். இருபத்து நான்கு மணி நேரத்துக்குப் பின் நீ வரும் போதும் என்னை இதே நிலைபாட்டிலேயே நீ காண்பாய். அதை மாற்ற என்னை நியமித்திருக்கிறவரால் மட்டுமே முடியும்.''

இந்த உரையாடல் நடந்து கொண்டிருக்கும் போது, சங்கிலிகளால் ஒரு தூணோடு சேர்த்துக் கட்டி வைக்கப்பட்டிருந்த இன்னொரு பைத்தியக்காரன் சத்தம்போட்டு சிரிக்கத் தொடங்கினான். ''நீ ஏன் சிரிக்கிறாய்?'' என்று ஓமர் கேட்டான். அதற்கு அவன் சொன்னான், ''இந்த மனிதன் சொல்வது முற்றிலும் தவறானது. இவனை நான் நியமிக்கவே இல்லை. இதை என்னால் அனுமதிக்க முடியாது. முகம்மதுவுக்குப் பிறகு எந்தத் தூதரையும் நான் அனுப்பி வைக்க வில்லை.'' ஒவ்வொரு பைத்தியக்கார விடுதியிலும் இத்தகைய மனிதர்கள் இருக்கிறார்கள். இவர்களைப் போன்ற ஒருவர்தான் யேசு என்று நிரூபித்துவிட முடியும்தான்.

மேலும் அந்த வார்த்தைகள் ஒன்றுக்கொன்று சுத்த முரண்பாடாக வும் தர்க்கமற்றதாகவுமே இருக்கின்றன. அறிந்திருக்கிற ஒவ்வொரு வருமே சுய முரண்பாடாகவும் விசித்திரமாகவும் பேசவேண்டிய கட்டாயத்தில் இருக்கிறார். ஏனெனில் புதிர்கள் மூலமாக மட்டுமே உண்மையானது வெளிப்படுத்தப்படக் கூடியதாக இருக்கிறது. அவர்களின் அறிக்கைகள் தெளிவாக இருப்பதில்லை; மறைபொருள் களாகவே இருக்கின்றன. மேலும் ஊக்கத்தைக் கொண்டு நீங்கள் அவற்றில் இருந்து எந்த வித முடிவுக்கும் வர முடியும் என்று நீங்கள் அனுமானிக்கிறீர்கள். அதிலே உங்கள் மனம் இருக்கிறது. மனத்தின் ஊகமே உங்கள் ஊகமாகவும் இருக்கப் போகிறது.

எனவேதான் மூன்றாவது ஒரு ஆதாரம் இருக்கிறது என்கிறார் பதஞ்சலி. நீங்கள் அறிந்திருப்பதில்லை. நேரடியாக நீங்கள்அறிந்தால் பின் எந்தச் சிக்கலும் இல்லை. அத்துடன் அப்போது வேறெந்த ஆதாரத்துக்குமான தேவையும் இல்லை. நேரடி அறிவு உங்களுக்கு இருந்தால் ஊகத்துக்கான தேவையோ விழிப்படைந்த ஞானிகளின் வாய்மொழிகளுக்கான தேவையோ இருப்பதில்லை. நீங்களே ஞானமடைந்தவராக இருக்கிறீர்கள். அந்நிலையில் மற்ற இரண்டு ஆதாரங்களையும் நீங்கள் கைவிட்டுவிடமுடியும். ஆனால் இது நிகழ்ந்திருக்கவில்லை என்றால் பின் ஊகம் இருக்கிறது. ஆனால் இந்த ஊகமோ உங்களுடையதாகவே இருக்கும். நீங்கள் பித்தராக இருந்தால் உங்கள் ஊகமும் பித்தத் தன்மையிலேயே இருக்கும். அந்நிலையில்தான் மூன்றாவது ஆதாரம் - அதாவது விழிப்படைந்த ஞானிகளின் வாய்மொழிகள் என்பது முயன்றுபார்க்கத் தகுதி உடையதாய் இருக்கிறது.

அவற்றை நீங்கள் நிரூபிக்க முடியாது. அவற்றை நீங்கள் மறுத்துவிடவும் முடியாது. அவற்றின்மீது ஆழ்ந்த நம்பிக்கை மட்டுமே வைக்க முடியும். அந்த விசுவாசமும் அடிப்படைவிஷய நிலையி லானதே; பெரிதும் அது அறிவியல் தன்மை கொண்டதே. அறிவியலிலும் அடிப்படைவிஷயம் இன்றி ஒன்றும் செய்ய முடியாது. ஆனால் அடிப்படைவிஷயம் என்பது ஒரு நம்பிக்கையே அல்ல. செயல்படுவதற் கான ஒரு ஏற்பாடாக மட்டுமே அது இருக்கிறது. அடிப்படைவிஷயம் என்பது ஒரு திசைவழி மட்டுமே. அந்த வழியில் நீங்கள் ஆய்வுசெய்ய வேண்டி இருக்கும். ஆராய்ச்சியில் அவ்விஷயம் சரியானது என நிரூபிக்கப்பட்டால் பின் அந்த அடிப்படைவிஷயம் ஒரு கோட்பாடாக ஆகிறது. ஆராய்ச்சியில் அந்த அடிப்படை தவறானது என தெரிய வருமானால் பின் அது கைவிடப்படுகிறது. விழிப்படைந்த ஞானிகளின்

வாய்ச்சொற்கள் விசுவாசத்தின் அடிப்படையிலேயே, ஒரு அடிப்படை விஷயமாக எடுத்துக்கொள்ளப்பட வேண்டியிருக்கின்றன. பின் அவற்றை உங்கள் வாழ்வில் நடைமுறைப்படுத்துங்கள். அவை சரியானவை என நிரூபணம் ஆனால் பின் அந்த விஷயங்கள் ஒரு திடநம்பிக்கையாக ஆகிறது. அவை தவறானவை என நிரூபணம் ஆனால் பின் அந்த அடிப்படை விஷயங்கள் கைவிட வேண்டி இருக்கிறது.

நீங்கள் ஒரு புத்தரிடம் போகிறீர்கள். அவர் உங்களிடம் ''காத்திருங்கள். பொறுமையாக இருங்கள். தியானியுங்கள். இரண்டு ஆண்டுகளுக்கு எந்த கேள்வியும் கேட்காதீர்கள்'' என்று கூறலாம். ஆயின் இதை நீங்கள் ஆழ்ந்த நம்பிக்கையின் அடிப்படையிலேயே எடுத்துக்கொள்ள வேண்டி இருக்கிறது வேறு வழி இல்லை.

''இந்த மனிதர் என்னை ஏமாற்றிக்கொண்டே இருக்கலாம். அந்நிலையில் என் வாழ்வின் இரண்டு ஆண்டுகள் வீணாய்ப் போகின்றன. இந்த மனிதர் ஒரு பித்தலாட்டக்காரர்தான், ஒரு ஏமாற்றுக்காரர்தான் அல்லது தன்னைத் தானே ஏமாற்றிக் கொண்டவர்தான்; தான் ஞானமடைந்து விட்டதான பிரம்மையில் இருக்கிறவர்தான் என்பது இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு நிரூபணம் ஆனால், இந்த இரண்டு ஆண்டுகளும் வீணாக்கப்பட்டதாகுமே'' என்று நீங்கள் நினைக்க முடியும். ஆனால் வேறு வழி இல்லை. இந்த இக்கட்டை நீங்கள் மேற்கொள்ளவே வேண்டி இருக்கிறது. மேலும் புத்தரை விசுவாசிக்காமல் அவரிடம் நீங்கள் இருந்து கொண்டிருந்தால் அந்த இரண்டு ஆண்டுகளும் பயனற்றுப் போகும். ஏனெனில் ஆழ்ந்த நம்பிக்கை இல்லாவிட்டால் உங்களால் செயல்பட முடியாது. மேலும் இந்த வேலை எவ்வளவு தீவிரத்தன்மை வாய்ந்தது என்றால் உங்களுக்கு விசுவாசம் இருந்தால் மட்டுமே நீங்கள் அதற்குள் முழுமையாக - முற்றிலுமாக இயங்க முடியும். உங்களிடம் விசுவாசம் இல்லை என்றால் பின் நீங்கள் உங்களில் ஒரு பகுதியைக் கைவிடாமலே பிடித்து வைத்துக் கொண்டிருப்பீர்கள். அப்படி பிடித்துவைப்பதானது புத்தர் சுட்டிக் காட்டும் அனுபவத்தை நீங்கள் பெறவிடாமல் தடுத்துவிடும்.

இதில் அபாயம் இருக்கிறது. ஆனால் அப்படி பார்த்தால் வாழ்க்கையே அபாயம் மிகுந்ததுதான் - மேலான வாழ்க்கைக்கான பாதையில் அபாயம் இருக்கவே செய்யும். ஒரு அபாயகரமான பாதையில் நீங்கள் இயங்கிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள்: வாழ்வில் தவறுதல் என்பது ஒன்றே ஒன்றுதான் -

.இயங்காதிருத்தலே தவறு. பயந்துசாவதும் சும்மா இருத்தலுமே தவறு. இயங்கினால் ஏதாவது தவறாகிப் போகுமோ என அஞ்சுவதே தவறு. (எனவே) சகித்துக்கொண்டு முடங்கிக் கிடப்பதே மேல் என்பதே தவறு. இதனால் உங்களுக்கு எவ்விதமான ஆபத்தும் ஏற்படாமல் இருக்கலாம். ஆனால் கூடவே, எவ்விதமான வளர்ச்சியும் உங்களுக்கு ஏற்படவும் வாய்ப்பில்லாமல் போகிறது.

நீங்கள் அறியாத விசயங்கள் இருக்கின்றன. உங்களின் தர்க்கத்தைக் கொண்டு ஊகிக்க முடியாத காரியங்களும் இருக்கின்றன என்கிறார் பதஞ்சலி. நீங்கள் ஆழ்ந்த நம்பிக்கை வைத்தாக வேண்டி இருக்கிறது. இந்த மூன்றாவது ஆதாரத்தின் காரணமாக குரு / ஆசான் / அறிந்திருக்கிற ஒருவர் அத்தியாவசியம் ஆகிறார். இந்த ஆபத்தான முயற்சியை நீங்கள் மேற்கொள்ளவே வேண்டி இருக்கிறது. இதை ஆபத்து என்றே நான் கூறுகிறேன். ஏனெனில் இதில் எந்த உத்திரவாதமும் இல்லை. மொத்தக் காரியமும் முற்றிலும் வீண் என பின்னர் தெரிய வரலாம். ஆனாலும் அந்த ஆபத்தான் முயற்சியை மேற்கொள்வது தகுதியானதே. ஏனெனில் அது வீண் என்பது நிரூபணம் ஆனாலும் நீங்கள் அதன்மூலம் கற்றுக்கொள்வது அதிகம். இனி வேறெந்த மனிதனும் உங்களை அவ்வளவு எளிதாக ஏமாற்றிவிட முடியாது. குறைந்தபட்சம் அந்த அளவுக்காவது நீங்கள் கற்றுக் கொண்டிருக்கிறீர்கள்.

மேலும் விசுவாசத்துடன் நீங்கள் இயங்குவீர்கள் என்றால் ஒரு புத்தரை முழுமையாகப் பின்பற்றி ஒரு நிழல்போல் அவரை நீங்கள் பின் தொடர்வீர்களானால் சம்பவங்கள் நிகழத் தொடங்கலாம். ஏனெனில் மற்றவர்களுக்கு அவை நிகழ்ந்திருக்கின்றன. ஒரு கவுதம புத்தருக்கு, ஒரு யேசுவுக்கு, ஒரு மகாவீரருக்கு அவை நிகழ்ந்திருக்கின்றன. வழியை அவர்கள் அறிந்திருக்கிறார்கள். அவர்கள் பயணம் செய்திருக்கிறார்கள். அவர்களுடன் நீங்கள் எதிர்வாதம் செய்தால் நீங்கள்தான் இழப்பவர் ஆவீர்கள். அவர்களுக்கு ஒன்றும் நட்டமில்லை. உங்களை அப்படியே விட்டுவிட்டு அவர்கள் அகன்று விடுவார்கள்.

இந்த நூற்றாண்டில் இது குருட்ஜீப்பிடம் நிகழ்ந்திருக்கிறது. ஏராளமான பேர் அவரை நோக்கி ஈர்க்கப்பட்டார்கள். ஆனால் புதிதாக வரும் சீடர்களுக்கு அவர் மிகவும் நெருக்கடியான சூழ்நிலைகளையே உருவாக்குவார். எந்த அளவுக்கு என்றால் அவரை அவர்கள் முழுமையாக நம்பாவிட்டால் உடனடியாக அவர்கள் அந்த இடத்தை விட்டு ஓடிவிட வேண்டி இருக்கும். அபத்தமான விசயங்களையும்கூட அவர்கள் முழுமையாக நம்பவேண்டி இருந்தது. மேலும் அந்த

அபத்தங்கள் திட்டமிட்டே தீட்டப்பட்டன. குருட்ஜீப் தன் பாட்டுக்கு பொய் சொல்லிக்கொண்டே போவார். காலையில் ஒன்றைக் கூறுவார். மதியத்தில் வேறொன்றைக் கூறுவார். மாலையிலோ முற்றிலும் எதிரான ஒன்றைக் கூறுவார். ஆனால் அதுபற்றி நீங்கள் கேள்வி எதுவும் கேட்கக் கூடாது! உங்கள் தர்க்கரீதியான மனத்தை முற்றிலுமாகத் தகர்ப்பதற்கே இப்படி அவர் நடந்துகொள்வார்.

காலையில் அவர் ''இந்தக் குழியைத் தோண்டு. இது இன்று கண்டிப்பாக செய்து முடிக்கப்பட வேண்டும். மாலைக்குள் இது முற்றுப் பெற்றிருக்க வேண்டும்'' என்பார். ஆகவே நாள் முழுதும் அதை நீங்கள் தோண்டிக்கொண்டு இருப்பீர்கள். உழைத்துக் களைத்துப் போயிருப் பீர்கள். வேர்த்து விறுவிறுத்துக்கொண்டு இருப்பீர்கள். உணவுகூட உட்கொண்டிருக்க மாட்டீர்கள். ஆனால் மாலை வாக்கில் அவர் வந்து ''குழிக்குள் மறுபடியும் மண்ணைப் போட்டு நிரப்பு! படுக்கச் செல்லும் முன் இதை முடித்தாக வேண்டும்.'' என்று கூறுவார்.

ஒரு சராசரி மனிதர் கூட இந்நிலையில் ''என்னய்யா இது? முழு நாளையும் நான் வீணாக்கி இருக்கிறேன். இது மிகவும் அவசியமான ஒரு காரியம் போலும் எனவேதான் மாலைக்குள் அதை முடித்தாக வேண்டும் போலும் என நான் எண்ணிக்கொண்டு இருக்கிறேன். ஆனால் இப்போது நீர் வந்து 'மறுபடியும் மண்ணைப்போட்டு மூடு என்கிறீரே'' என்று கேட்பார். இப்படி நீங்கள் கேட்டால் குருட்ஜீப் கூறுவார், ''உடனடியாக இங்கிருந்து ஓடிவிடு! இடத்தைக் காலிசெய்! நான் உனக்கானவன் அல்ல. நீ எனக்கானவன் அல்ல.'' என்பார்.

குழியை தோண்டுவதோ நிரப்புவதோ அல்ல முக்கியம். அவர் அபத்தமானவராகத் தோன்றும்போது கூட அவரை நீங்கள் முழுமையாக நம்பமுடியுமா முடியாதா என்பதையே அவர் சோதித்துக் கொண்டிருக்கிறார். உங்களால் அவரை பரிபூரணமாக நம்ப முடியும்; அவர் உங்களை எங்கே இட்டுச் செல்வதாயினும் அவருடன் சேர்ந்து நீங்கள் இயங்க முடியும் என்று ஒருதடவை அவர் அறிய வந்ததுமே - அதன் பிறகு மட்டுமே, மெய்யான காரியங்கள் தொடரும். அத்தோடு சோதனை முற்றுப் பெறுகிறது. நீங்கள் பரிசோதிக்கப்பட்டு தகுதியானவர் என இனம் காணப்பட்டிருக்கிறீர்கள். வேலை செய்யவும் பூரணமாக நம்பவும் முடியக்கூடிய ஒரு மெய்யான சாதகர் என்று கண்டுகொள்ளப்பட்டிருக்கிறீர்கள். ஆயின் இனித்தான் நிசமான காரியங்கள் உங்களுக்கு நிகழ முடியும்; அதற்கு முன்னதாக நிகழவே வாய்ப்பில்லை.

பதஞ்சலி ஒரு ஆசான் / ஞான குரு. தனது ஆயிரம் ஆயிரம் சீடர்களைக் கொண்டு தான் பெற்ற சுய அனுபவத்தின் மூலமாக இந்த மூன்றாவது தோற்றுவாயை மிகத் தெளிவாக அவர் அறிவார். பலப்பல சீடர்களிலும் சாதகர்களிலும் இதை அவர் செயல் படுத்திப் பார்த்திருக்க வேண்டும். அதன் பிறகு மட்டுமே யோக சூத்திரங்கள் போன்ற ஒரு ஆய்வுமுடிவு நூலை ஒருவர் இயற்ற முடியும். ஒரு சாதாரண சிந்தனையாளருக்கு இது சாத்தியமில்லை. பலவிதமான மனங்களுடன் பரிசோதனைகள் செய்து பார்த்தவரும், மனத்தின் பலப்பல அடுக்குகளையும், தான் சந்தித்த எல்லாவிதமான ஆளுமைகளையும் ஊடுருவிப் பார்த்தவரும் ஆன ஒருவராலேயே இது கூடும். இதனால்தான் விழிப்படைந்த ஞானிகளின் வாய்மொழிகளை மூன்றாவது ஆதாரமாக அவர் ஆக்குகிறார்.

**இரண்டாவது சூத்திரம்:**

**பொருளின் உண்மை நிலையுடன் பொருந்திவராத பொய்யான கருத்தாக்கமே தவறான அறிவு.**

இப்போது 'விபர்யய' அதாவது தவறான அறிவின் வரையறை பற்றிய சில விளக்கங்கள். இவை பின்னால் பயன்படும். பொருளின் உண்மையான தன்மையைப் பிரதிபலிக்காத பொய்யான கருத்தாக்கமே தவறான அறிவு ஆகும். தவறான அறிவின் பெருஞ்சுமையாலேயே நாமெல்லோரும் அவதிப்படுகிறோம். ஏனெனில் ஒரு நடப்பை எதிர்கொள்ளும் முன்பே அதைப்பற்றிய ஒரு முன்முடிவுக்கு நாம் வந்துவிடுகிறோம்.

நீங்கள் ஒரு இந்துவாக இருந்து அந்நிலையில் ஒருவர் உங்களுக்கு அறிமுகம் செய்யப்படுகிறார். அவர் தன்னை முகம்மதியர் என்கிறார் என்றால் அந்த மனிதர் தவறானவராகத்தான் இருக்க வேண்டும் - என்னும் தவறான மனப்பான்மையை - நிலைபாட்டை உடனடியாகவே நீங்கள் மேற்கொண்டு விடுகிறீர்கள்.

நீங்கள் ஒரு கிறித்தவராக இருந்து, யாரேனும் ஒரு ஆள் தன்னை ஒரு யூதர் என்று உங்களிடம் அறிமுகப்படுத்திக் கொண்டால், அந்த ஆளை நீங்கள் விரும்ப, புரிந்துகொள்ளப் போவதில்லை. அந்த மனிதருடன் நீங்கள் ஒட்டி உறவாடப் போவதில்லை. 'யூதர்'என்று சொன்ன மாத்திரத்திலேயே உங்களின் முன்முடிவு / தப்பெண்ணம் தலைநீட்டி விடுகிறது. அதற்குள்ளாகவே அந்த மனிதரை நீங்கள் 'அறிந்து விட்டீர்கள்'. எனவே இனி அதற்கு தேவை இல்லை. இந்தப் புதியவர்

எத்தகையவர் என்பதை, அவர் ஒரு 'யூதர்' என்றதன்மூலமே நீங்கள் அறிந்து கொண்டு விட்டீர்கள்!

ஒரு முன்கருத்து, ஒரு முன்முடிவு கொண்ட மனத்தை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். முன்முடிவு ஏறிய அந்த மனம் உங்களுக்குத் தவறான அறிவையே தருகிறது. எல்லா யூதர்களும் கெட்டவர்கள் அல்லர். அல்லது கிறித்தவர்கள் அனைவருமே நல்லவர்களும் அல்லர். எல்லா முஸ்லீம்களும் மோசமானவர்கள் அல்லர். அப்படியே இந்துக்கள் யாவரும் யோக்கியர்களும் அல்லர். உண்மையில் நற்குணமும் தீக்குணமும் எந்த ஒரு இனத்துக்கும் ஒட்டு மொத்தமாய் சொந்தமானதல்ல. அது தனிமனிதருக்கே சொந்தமானது. தவறான முகமதியர்கள், தவறான இந்துக்கள் இருக்கலாம். அப்படியே நல்லவரான முகமதியர்களும் நல்லவரான இந்துக்களும் இருக்கலாம். நன்மையும் கேடும் எந்த ஒரு தேசத்துக்கும் இனத்துக்கும் கலாச்சாரத்துக்கும் பொதுவான சொந்தமான குணங்கள் அல்ல. அது தனி ஆட்களுக்கு / ஆளுமைகளுக்கு உரியது. ஆனால் ஒரு மனிதரைச் சந்திக்கும்போது எவ்வித முன்முடிவும் முன் கருத்தும் இல்லாமல் சந்திப்பது கடினமாகவே உள்ளது. அப்படி யாரையேனும் சந்தித்தால் அது உங்களுக்கு புதுமையான அனுபவங்களை வழங்கமுடியும்.

ஒருமுறை இப்படி நடந்தது: நான் ரயில் பயணம் செய்து கொண்டிருந்தேன். என் பெட்டியில் ஏறினேன். என்னை வழி அனுப்ப நிறைய பேர் வந்திருந்தார்கள். எனவே நான் ஏறிய பெட்டியில் இருந்த ஒரு மனிதர் - இன்னொரு பயணி - உடனடியாக என் காலைத் தொட்டு கும்பிட்டு, ''நீங்கள் பெரிய சுவாமியாக இருக்க வேண்டும். ஏராளமானபேர் வந்திருக்கிறார்களே!'' என்றார்.

அதற்கு அந்த ஆளிடம், ''நான் ஒரு முகம்மதியன். நான் ஒரு பெரிய சாமியாராக இருக்கலாம். ஆனால் நான் முகம்மதியன்.'' என்றேன். அந்த ஆள் அதிர்ந்து போனார்! ஒரு முகம்மதியரின் காலை அவர் தொட்டுவிட்டிருக்கிறார். இத்தனைக்கும் அவர் ஒரு பிராமணன். அவருக்கு வேர்த்துக் கொட்ட ஆரம்பித்தது. அவர் அமைதி இழந்தார். மறுபடியும் என்னைப் பார்த்து சொன்னார், ''இல்லை. நீங்கள் விளையாட்டுக்குச் சொல்கிறீர்கள்.'' தன்னைத் தானே தேற்றிக் கொள்வதற்காகவே ''நீங்கள் விளையாட்டாகச் சொல்கிறீர்கள்'' என்றார் அவர். ''நான் விளையாட்டுக்கு சொல்லவில்லை. நான் ஏன் உம்மிடம் விளையாட வேண்டும்? என் காலைத் தொடும் முன்பே நீர் விசாரித்திருக்க வேண்டும்!'' என்றேன்.

பின்னரும் அந்தப் பெட்டியில் நாங்கள் இருவரும் சேர்ந்தே இருந்தோம். மீண்டும் மீண்டும் அவர் என்னை ஏறிட்டுப் பார்ப்பார். நீண்ட நெடிய பெருமூச்சு எறிவார். போய் ஒரு குளியல் போட வேண்டும் என அவர் நினைத்துக்கொண்டு இருந்திருக்க வேண்டும்! நான் அங்குதான் இருக்கிறேன். ஆனால் அவர் என்னை நேராகப் பார்க்கவில்லை. அதற்குப்பதில் 'முகம்மதியர்'என்னும் கருத்தைப் பார்த்துக் இருக்கிறார். அதற்கும்மேல் அவர் ஒரு பார்ப்பனர். என்னைத் தொட்டதன்மூலம் அவர் அசுத்தமாகி - தீட்டுப்பட்டுவிட்டார்!

பொருள்களை, மனிதர்களை, அவை - அவர்கள் இருக்கிற தன்மையிலேயே யாரும் எதிர்கொள்வதில்லை. உங்களுக்கு ஒரு முன்முடிவு இருக்கிறது. இந்த முன்முடிவுகள் 'விபர்யய' அதாவது தவறான அறிவை உருவாக்குகின்றன. எதை எதை நீங்கள் சிந்தித்தாலும், ஒரு உண்மையை நீங்களே புதிதாகக் கண்டு கொள்ளவில்லை என்றால் அது தவறானதாகவே இருக்கப் போகிறது. உங்களின் கடந்தகாலத்தை கொண்டுவராதீர்கள். உங்கள் முன்முடிவுகளை கொண்டுவராதீர்கள். உங்கள் மனத்தை அப்பால் வையுங்கள். உண்மையை நேரடியாக எதிர்கொள்ளுங்கள். காண்பதற்கு அங்கே இருப்பது எதுவானாலும் வெறுமனே காணுங்கள்; கருத்துக்களை அபிப்பிராயங்களை உருவாக்காதீர்கள்.

நம் மனத்தின் கருத்துகளை நாம் வெளிப்படுத்திக் கொண்டே போகிறோம். குழந்தைப்பருவத்தில் இருந்தே நம் மனமானது முற்றிலுமாக நிரப்பப்பட்டும் மாறாத படிக்கு நிலைநிறுத்தப்பட்டும் இருக்கிறது. ஒவ்வொன்றும் ஆயத்தமான நிலையில் நமக்கு வழங்கப்பட்டிருக்கிறது. ஏற்கனவே தயாராக அந்த ஆயத்த அறிவின் காரணமாக நம் வாழ்க்கை முழுவதுமே ஒரு மாயையாக ஆகிறது. உண்மையான மனிதரை ஒருபோதும் நீங்கள் சந்திப்பதில்லை. உண்மை யான மலரை ஒருபோதும் நீங்கள் பார்ப்பதில்லை. ''ரோஜா'' என்ற சொல்லை காதால் கேட்டதுமே ''அழகான மலர்'' என்று யந்திரத்தன மாக உச்சரிக்கிறீர்கள் நீங்கள். அந்த அழகை நீங்கள் உணர்ந்திருக்க வில்லை. அனுபவித்திருக்கவில்லை. அந்த மலரை நீங்கள் தொட்டுப் பார்த்திருக்க வில்லை. ''ரோஜா அழகானது'' என்ற கருத்து மட்டும் ஏற் கனவே உங்கள் மனதில் இருக்கிறது. எனவே ''ரோஜா'' என்பதை காதில் கேட்ட உடனேயே ''அழகானது!'' என்ற கருத்தை வெளிப்படுத்துகிறது மனம்.

மேலும் இதன்மூலம் ரோஜா அழகானது என்பதை நீங்கள் உணர்ந்துவிட்டிருப்பதாகவே நீங்கள் நம்பலாம். ஆயின் அது அப்படி அல்ல. இது போலியானது. வெறுமனே பாருங்கள். இதனால்தான் வளர்ந்த மனிதர்களைவிட குழந்தைகள் விசயங்களை அதிக ஆழமாகக் கண்டு கொள்கிறார்கள். ஏனென்றால் அவர்களுக்குப் பெயர்கள் தெரியாது. அவர்கள் இன்னும் முன்முடிவுகளுக்கு வந்து சேரவில்லை. ஒரு ரோஜா உண்மையாகவே அழகாய் இருந்தால் மட்டும்தான் அது அழகானது. ரோஜாக்கள் என்றாலே அழகுதான் என்பதில்லை. குழந்தைகள் உண்மைக்கு அதிக அருகில் வருகிறார்கள். அவர்களின் கண்கள் புத்தம் புதிதாக - நிர்மலமாக இருக்கின்றன. பொருள்களை அவை உள்ளபடியே அவர்கள் காண்கிறார்கள். ஏனெனில் கருத்தை ஏற்றிப்பார்ப்பது என்பது அவர்களுக்குத் தெரியாதது.

ஆனால் அவர்களை வளர்ந்தவர்கள் ஆக்கிவிட வேண்டும், வயது வந்தவர்கள் ஆக்கிவிட வேண்டும் என்று எப்போதுமே நாம் அவசரப்படுகிறோம். அவர்களின் மனதில் ஆயத்த அறிவை, தகவல் திரட்டை நாம் திணித்துக் கொண்டிருக்கிறோம். இது உளவியல் அறிஞர்களின் மிகவும் சமீபத்திய கண்டுபிடிப்புகளில் ஒன்றாகும்: அதாவது பல்கலைக்கழகத்தை விட்டு வெளிவரும் காலத்தைவிட பள்ளிக்குள் நுழையும் காலத்தில்தான் குழந்தைகள் அதிக நுண்ணறிவு பெற்றவர்களாய் இருக்கிறார்கள். சமீபத்திய கண்டுபிடிப்புகள் இதை நிரூபிக்கின்றன. முதல் வகுப்பில் குழந்தைகள் சேரும்போது அவர்கள் அதிக புத்தி உள்ளவர்களாய் இருக்கிறா.ர்கள். அறிவில் அவர்கள் வளர வளர புத்தியில் அவர்கள் குறைந்து கொண்டே போகிறார்கள்.

இந்நிலையில் அவர்கள் இளங்கலை, முதுகலைப் பட்டதாரிகளாக ஆசிரியர்களாக ஆகிற சமயத்தில் அவர்கள் முடிந்து போகிறார்கள். ஒரு ஆசிரியர் பட்டத்துடன், மருத்துவ நிபுணர் பட்டத்துடன் அவர்கள் திரும்பி வருகிற போது அவர்கள்தம் நுண்ணறிவை பல்கலைக் கழகத்துக்குள் எங்கோ தொலைத்து விட்டிருக்கிறார்கள். அவர்கள் உயிர் இழந்தவர்களாக, அறிவால் நிரப்பப்பட்டவர்களாக, அறிவு திணிக்கப்பட்டவர்களாக இருக்கிறார்கள். ஆனால் அந்த அறிவோ முற்றிலும் போலியானது. எல்லாவற்றைப்பற்றியும் ஆன முன்முடிவே அது. இப்போது அவர்கள் பொருள்களை - விசயங்களை நேரடியாக உணர இயலாது; உயிருள்ள மனிதர்களை நேரடியாக அவர்களால் புரிந்துகொள்ள இயலாது. நேரடியான முறையில் அவர்களால் வாழ முடியாது. எல்லாமே வார்த்தையளவாக, வார்த்தை மயமாக ஆகி

இருக்கிறது. இப்போது அது உண்மை நிலையாக இல்லை. இப்போது அது மனத்தளவாக மாறி இருக்கிறது.

பொருளின் உண்மை நிலையுடன் பொருந்தி வராத பொய்யான கருத்தாக்கமே தவறான அறிவு.

உங்களின் முன்முடிவுகளை, தயாரான அறிவை, கருத்துகளை, ஏற்கனவே திரட்டிய தகவல்களை தள்ளிவையுங்கள். புத்தம்புதிதாக பாருங்கள். மறுபடியும் ஒரு குழந்தையாக ஆகுங்கள். கணத்துக்கு கணம் செய்யப்படவேண்டியதே இது. ஏனெனில் ஒவ்வொரு கணமும் நீங்கள் சேகரித்துக் கொண்டிருக்கிறீர்கள்; உங்களிடம் சேர்ந்து கொண்டு இருக்கிறது.

மிகப் பழைய யோக முதுரைகளில் ஒன்று: ஒவ்வொருகணமும் புதிதாய்ப் பிறக்க முடிவதற்காக ஒவ்வொரு கணமும் இறந்துவிடுங்கள்' என்பது ஆகும். ஒவ்வொரு கணமும் கடந்த கணத்துக்கு இறந்து விடுங்கள். நீங்கள் சேகரித்திருக்கிற குப்பை அனைத்தையும் தூர எறியுங்கள். புத்தம் புதிதாக இருங்கள். ஆனால் இது இடையறாது செய்ய வேண்டியது. ஏனெனில் மறு கணமே மாசு மறுபடியும் படிந்து விட்டிருக்கிறது. நீங்கள் மடிந்து விட்டிருக்கிறீர்கள்.

நான் - இன் என்பவர் தான் சீடராக இருந்த காலத்தில் தகுதியான ஒரு குருவைத் தேடியவாறு இருந்தார். தன் குருவுடன் பல ஆண்டுகள் அவர் வாழ்ந்து வந்தார். பின் அந்த குரு ''எல்லாமே நல்லபடி நிறை வேறி இருக்கிறது. இப்போது நீ ஏறக்குறைய அடைந்து விட்டிருக்கி றாய்.'' என்று கூறினார். ஆனால் அவர் ''ஏறக்குறைய'' என்றாரே... எனவே ''நீங்கள் கூறுவதன் பொருள் என்ன?'' என்று நான் - இன் கேட்டார். குரு சொன்னார், ''ஒரு சில நாள்களுக்கு உன்னை இன்னொரு குருவிடம் அனுப்பப் போகிறேன். இறுதியான நிறைவுப் பணியை அது செய்து முடிக்கும்.''

நான் - இன் மிகவும் மனக்கிளர்ச்சி அடைந்தார். ''உடனடியாக என்னை அனுப்பி வையுங்கள்!'' என வேண்டினார். அவரிடம் ஒரு கடிதம் தரப்பட்டது. தன் குருவைவிடவும் பெரிய ஒரு குருவிடம் தான் அனுப்பப்படுவதை அவர் நினைத்துப் பார்த்தபோது அவருக்கு மிகுந்த உற்சாகம் ஏற்பட்டது. ஆனால் அவர் அந்த ஆளிடம் வந்தடைந்ததும் பார்த்தால் அது வேறு யாருமில்லை, ஒரு சத்திரம் வைத்து நடத்துபவர்தான்.

அவர் மிகுந்த ஏமாற்றம் அடைந்தார். ''இது ஒரு வித வேடிக்கைக்காகத்தான் இருக்கவேண்டும். இவன்தான் என் இறுதி குருவா? இவன்தான் எனக்கு நிறைவு பூச்சு வழங்க போகிறவனா?'' எள அவர் நினைத்தார். ஆனால் அவர் வந்துவிட்டார். எனவே ''ஒரு சிலநாள்கள் இங்கு இருப்பது நல்லதே. குறைந்தபட்சம் ஓய்வு எடுக்கவாவது செய்யலாம். பிறகு நான் திரும்பிப் போவேன். நெடுந்தூரம் பயணம் செய்து வந்திருக்கிறேனே'' என்று நினைத்தார். எனவே சத்திரக்காரரிடம் என் குரு இந்தக் கடிதத்தைத் தந்து அனுப்பினார்'' என்றார்.

சத்திரக்காரர் சொன்னார், ''எனக்கு எழுதப் படிக்க தெரியாது. எனவே உன் கடிதத்தை நீயே வைத்துக்கொள். அதற்குத் தேவையும் இல்லை. இங்கு நீ தாராளமாக அதற்கு நான் இன் தங்கி இருக்கலாம்.'' ''ஆனால் உம்மிடம் இருந்து கொஞ்சம் கற்றுக்கொள்ளவே நான் அனுப்பப்பட்டிருக்கிறேன்.'' என்றார்.

அதற்குச் சத்திரக்காரர், ''நான் வெறும் பராமரிப்பாளன்தான். நான் ஒரு குரு அல்ல, ஆசிரியர் அல்ல. ஏதோ தவறுதல் நேர்ந்திருக்க வேண்டும். இப்போது நீ வந்திருப்ப்து ஒரு தவறான ஆளிடம் ஆக இருக்கலாம். நான் ஒரு சாதாரண சத்திரக்காரன். எனக்கு போதிக்கத் தெரியாது. எனக்கு ஒன்றுமே தெரியாது. ஆனாலும் இப்போது நீ வந்துவிட்டதால் பேசாமல் என்னை கவனித்துக்கொண்டிருக்கலாம். அது உனக்கு உதவலாம். ஓய்வெடு.ஓய்வாக கவனித்திரு.'' என்றார்.

ஆனால் கவனிப்பதற்கும் பெரிதாக ஏதுமிருக்கவில்லை. காலையில் விடுதியின் கதவை விடுதிக்காரர் திறந்து விடுவார். விடுதியில் தங்கும் ஆட்கள் வருவார்கள். அவர்களின் உபயோகப் பொருள்களை, பாத்திர பண்டங்களை அவர் சுத்தம் செய்வார். அவர்களுக்குப் பரிமாறுவார். சேவை செய்வார். இரவு வந்ததும், போகிறவர்கள் போனபின், தங்குபவர்கள் தத்தம் படுக்கைளுக்கு தூங்கச் சென்ற பின், மறுபடியும் பாத்திர பண்டங்கள் முதலியவற்றைக் கழுவி வைப்பார். மீண்டும் மறுநாள் காலையில் எழுந்து அதே கதை.

மூன்று நாட்களுக்குள்ளாகவே நான் - இன்னுக்கு சலித்துவிட்டது. அவர் சொன்னார், ''இதில் கவனிப்பதற்கு ஏதுமில்லை. நீர் எப்போது பார்த்தாலும் பாத்திரம் கழுவிக்கொண்டு இருக்கிறீர். சாமானியமான பணிவிடைகளையே செய்துகொண்டு போகிறீர். எனவே நான் போகிறேன்.'' விடுதிக்காரர் சிரித்தார். ஆனால் ஒன்றும் சொல்லவில்லை.

நான் - இன் திரும்பிவந்தார். தன் குருமீது அவருக்குக் கோபம் கோபமாக வந்தது. அவர் சொன்னார், ''ஏன், ஏன் இவ்வளவு நீண்ட பயணத்துக்கு, இவ்வளவு சிரமமான பயணத்துக்கு என்னை அனுப்பினீர்கள்? இத்தனைக்கும் அந்த ஆள் ஒரு சாதாரண சத்திரக்காரன் தான். மேலும் அவன் எனக்கு எதையும் கற்பிக்கவும் இல்லை. 'கவனி' என்று மட்டுமே அவன் சொன்னான். ஆனால் கவனிப்பதற்கும் அங்கு எதுவும் இல்லை.'' என்றார்

அதற்கு குரு, ''இருந்தாலும் நீ அங்கு மூன்று நான்கு நாட்கள் இருந்துள்ளாய் அல்லவா? கவனிப்பதற்கு அங்கு ஏதும் இல்லாவிட்டாலும் நீ கவனித்துக் கொண்டுதான் இருந்திருக்க வேண்டும், இல்லையா? அப்படியானால் நீ கவனித்தவை என்னென்ன?'' என்றார். அதற்கு நான் - இன் சொன்னார், ''நான் கவனித்துக் கொண்டேதான் இருந்தேன். இரவில் பாத்திர பண்டங்களை எல்லாம் அவன் தேய்த்துக் கழுவி வைப்பான். பின் காலையில் பார்த்தால் மறுபடியும் அவற்றை எடுத்து கழுவிக் கொண்டிருப்பான்''

குரு சொன்னார், '' இதுவே தான் என் போதனையும்! உன்னை நான் அனுப்பி வைத்ததே இதைக் கவனிப்பதற்குத்தான்! பாத்திரங்களை இரவில் அவர் விளக்கி வைத்தார். இருந்தாலும் அந்த விளக்கிய பாத்திரங்களையே காலையிலும் அவர் திரும்ப எடுத்துக் கழுவிக் கொண்டிருந்தார். இதன் பொருள் என்ன? இரவிலும்கூட, ஒன்றுமே நிகழாதிருக்கும் போதுகூட, அவை அழுக்காகி இருக்கின்றன. ஓரளவு தூசு, மாசு அதற்குள் படிந்து விட்டிருக்கிறது. எனவே நீங்கள் தூயவராக இருக்கலாம். நீங்கள் சுத்தமானவராக - அப்பழுக்கு இல்லாதவராக இருக்கலாம். ஆனாலும் ஒவ்வொரு கணமும் உங்களை நீங்கள் தொடர்ச்சியாக துப்புரவாக்கிக் கொண்டே இருக்க வேண்டி இருக்கிறது. எதையுமே நீங்கள் செய்யாமல் இருக்கலாம். அப்போதும் நீங்கள் காலத்தின் போக்கினால் கறை படிந்தவர் ஆகிறீர்கள். கணத்துக்கு கணம் என்பதும் காலப் போக்குதான். எதையுமே செய்யாமல் இருந்தாலும், ஒரு மரத்தடியில் சும்மா உட்கார்ந்துகொண்டு இருந்தாலும், கால ஓட்டத்தாலேயே நீங்கள் களங்கமடைகிறீர்கள். அந்த அசுத்தம் என்பது நீங்கள் ஒரு கெட்ட தவறான செயலைச் செய்து கொண்டிருந்தீர்கள் என்பதால் ஏற்படுவது அல்ல. வெறும் காலப் போக்கினாலேயே கூட அது நிகழ்ந்து விடுகிறது. களிம்பு சேர்கிறது. எனவே நீங்கள் சுத்திகரித்துக் கொண்டே போகிறீர்கள். இதுதான் நான் வழங்கும் இறுதிப் பூச்சு - கைவண்ணம். ஏனெனில் நீ தூயவனாய் இருக்கிறாய் என்பதில் இப்போது

நீ ஆணவப்பட்டு விட்டாய். எனவே இடையறாமல் உன்னை சுத்திகரித்து வரவேண்டும் என்பதைக் குறித்து இப்போது நீ கவலைப்படுவதில்லை. இதை அறிந்ததால்தான் நான் அந்த இறுதிப் பூச்சை உனக்கு வழங்க முடிவு செய்தேன்.''

கணத்துக்கு கணம் ஒருவர் இறக்கவும் மறுபடியும் பிறக்கவும் வேண்டியிருக்கிறது. அப்போது மட்டுமே தவறான அறிவில் இருந்து நீங்கள் விடுபடுகிறீர்கள்.

**மூன்றாவது:**

**உள்ளுக்குள் எந்தவிதச் சாரமும் இன்றி வெறும் வார்த்தை களைக் கொண்டு தோற்றுவிக்கப்படும் தோற்றமே-பிம்பமே கற்பனை அல்லது விகல்பம்.**

வார்த்தைகளால், வார்த்தைக் கட்டுமானங்களால் மட்டுமே ஆனதாக இருக்கிறது கற்பனை. நீங்கள் ஒன்றை உருவாக்குகிறீர்கள். ஆனால் அது அங்கே இருப்பதில்லை. அது ஒரு யதார்த்தம் அல்ல. ஆனால் உங்கள் மன பிம்பங்களின் மூலமாக அதை நீங்கள் உருவாக்குகிறீர்கள். எந்த அளவுக்கு அதை நீங்கள் உருவாக்க முடிகிறது என்றால் நீங்களே அதனால் ஏமாற்றப்படும் அளவுக்கு அதை நிசம் என்று நீங்களே நினைத்து விடுகிறீர்கள். வசியத்தில் நடப்பது இதுவே. ஒரு ஆளை வசியம் செய்து அவரிடம் ஒன்றை கூறுங்கள். அந்த பிம் பத்தை அவரே கட்டி அமைத்துக் கொள்கிறார். அவரைப் பொறுத்தவரை அந்த பிம்பம் நிசமானதாக ஆகிறது. உங்களால் இதை உருவாக்க முடிகிறது. பல விதங்களிலும் இதை நீங்கள் செய்து கொண்டிருக்கிறீர்கள்.

மிகவும் புகழ்பெற்ற அமெரிக்க நடிகைகளில் ஒருத்தியான கிரெட்டா கார்போ ஒரு நினைவுக்குறிப்பு நூல் எழுதி இருக்கிறாள். அவள் ஒரு சாதாரணப் பெண்மணியாக, ஒரு குடும்பப் பெண்ணாக, சராசரிப் பெண்ணாக, மிகவும் எளிய நிலையில் இருந்தாள். குறைந்த காசுகளுக்காக ஒரு முடிதிருத்தும் கடையில் வேலை செய்து வந்தாள். வாடிக்கையாளரின் முகத்தில் சோப்புப் போட்டு விடுவதே அவள் செய்ய வேண்டிய வேலை. மூன்று ஆண்டுகளாக இதைத்தான் அவள் செய்து வந்தாள்.

ஒருநாள் ஒரு அமெரிக்க திரைப்பட இயக்குநர் அந்த முடிதிருத்தும் கடைக்கு வந்தார். அவர் முகத்துக்கு அவள் சோப்பு போட்டுக் கொண்டிருந்தாள். அப்போது அவர் கண்ணாடியை ஏறிட்டுப் பார்த்தார். அந்தப் பெண்ணின் பிரதிபலிப்பை பார்த்த அவர், அமெரிக்கர்கள்

இயல்பாக கூறுவது போல ''எவ்வளவு அழகாக இருக்கிறாய்!'' என்றார். இதை அவர் கூறியபோது அவர் தன் மனதில் எதையும் உத்தேசிக்காமலே கூறி இருக்கலாம். ஆனால் அந்தக் கணத்திலேயே கிரெட்டா கார்போ புதிதாய்ப் பிறந்தாள்!

அவள் எழுதுகிறாள்: திடீரென அவள் வேறுவிதமாக ஆனாள். தன்னை ஒரு அழகி என ஒருபோதும் அவள் நினைத்துமில்லை. கனவிலும் அதை அவள் எண்ணிப் பார்த்தவள் அல்ல. மேலும் அவளை அழகானவள் என வேறு எவரும் கூறக்கேட்டதும் இல்லை. முதல் முதலாக அவள் தன்னைக் கண்ணாடியில் பார்த்தாள்: அந்த முகம் புதுமாதிரியாக இருந்தது. இந்த ஆள் அவளை ஒரு அழகி ஆக்கி விட்டான்! அது ஒரு முழு வாழ்க்கை முறையையுமே மாற்றிவிட்டது. அந்த மனிதனை அவள் பின்தொடர்ந்தாள். மிகவும் புகழ்பெற்ற திரைப்பட நடிகையருள் ஒருத்தியாக ஆனாள்.

என்ன நிகழ்ந்தது? ஒரு வசியம் மட்டுமே. 'அழகு' என்ற ஒரு சொல்லின் வசியம் - அது வேலை செய்தது. அது வேலை செய்கிறது. அது வேதிவினை புரிவதாக ஆகிறது. ஒவ்வொருவரும் தம்மைக் குறித்து ஏதோ ஒன்றை நம்புகிறார். அந்த நம்பிக்கை உண்மையாக ஆகிறது. ஏனெனில் அந்த நம்பிக்கை உங்கள் மீது வேலை செய்யத் தொடங்குகிறது.

கற்பனை என்பது ஒரு ஆற்றல் ஆகும். ஆனால் அது மனக்கண்ணில் கட்டி எழுப்பும் ஆற்றலாகும். அதை நீங்கள் பயன்படுத்த முடியும். அதனால் நீங்கள் பயன்படுத்தப்படவும் முடியும். நீங்கள் அதை பயன்படுத்த முடிந்தால் அது உதவிகரமாக இருக்கும். நீங்கள் அதனால் பயன்படுத்தப்பட்டால் அது நாசகரமாக, பேரழிவு பயப்பதாக இருக்கும். அது அபாயகரமானது. கற்பனையானது, எந்தக் கணத்திலும் பைத்தியக்காரத்தனமாக ஆக முடியும். கற்பனையின் வழியாக உங்கள் உள் வளர்ச்சிக்கும் உருப்படுதலுக்கும் ஆன ஒரு சூழ்நிலையை நீங்கள் உருவாக்க முடிந்தால் அது உதவிகரமாக இருக்க முடியும்.

ஆனால் அது சொற்களின் மூலமானதே, ஒரு மன உருவாக்கமே. சொற்கள், மொழி, வார்த்தைக் கட்டமைப்புகள் முதலியவை மனிதப்பிறவிகளுக்கு மிகவும் முக்கியமுடையவை ஆக ஆகி இருக்கின்றன. எந்த அளவுக்கெனில் அவற்றைக் காட்டிலும் அதிக முக்கியத்துவம் உடையது இப்போது எதுவுமில்லை. திடீரென ஒருவர் ''தீ!'' என்று சத்தம் எழுப்பினால் ''தீ'' என்னும் அந்தச் சொல் உங்களை உடனடியாக மாற்றும். அங்கு தீயே இல்லாதிருக்கலாம். நான்

பேசுவதைக் கவனித்துக் கொண்டிருப்பதை நீங்கள் நிறுத்தி விடுவீர்கள். நிறுத்துவதற்கான முயற்சி எதுவும் செய்யாமலே நிறுத்தி விடுவீர்கள். நான் கூறுவதைக் கவனிப்பதைத் திடுமென நீங்கள் நிறுத்திவிட்டு இருப்பீர்கள். இங்கும் அங்கும் ஓடத் தொடங்குவீர்கள். ''தீ'' என்னும் சொல் கற்பனையைப் ப்ற்றி இருக்கிறது.

இப்படித்தான் நீங்கள் வார்த்தைகளால் பாதிக்கப்படுகிறீர்கள். கற்பனைகளைத் தட்டி எழுப்ப எத்தகைய சொற்களைப் பயன்படுத்த வேண்டும் என்பதை, விளம்பரத் தொழிலில் இருப்பவர்கள் நன்கு அறிவார்கள். அந்தச் சொற்களின் வாயிலாக உங்களை அவர்கள் கைப்பற்றுகிறார்கள். சந்தை முழுவதையுமே அவர்கள் கைப்பற்று கிறார்கள். அத்தகைய சொற்கள் பல இருக்கின்றன. பாணிகளை அவர்கள் மாற்றிக்கொண்டே போகிறார்கள்.

கடந்த சில ஆண்டுகளாக புழக்கத்தில் இருக்கும் சொல் ''புதிய'' என்பதாகும். எனவே விளம்பரங்களை நீங்கள் பார்த்தால் எல்லா வற்றிலும் ''புதிய'' என்பது இருக்கிறது. ''புதிய'' லக்ஸ் சோப். ''லக்ஸ் சோப்'' போதாது. ''புதிய'' என்பது'உடனடியாக கவனிக்கும்படி செய்கிறது. எல்லாருமே புதியதையே ஆதரிக்கிறார்கள். ஒவ்வொரு வருமே புதிதையே, புதியதான ஒன்றையே தேடிக் கொண்டிருக்கிறார். புதியதாக ஏதாவது வேண்டும். ஏனெனில் எல்லாருக்குமே 'பழையது' சலித்து விட்டது. எனவே புதியது எதுவானாலும் கவர்கிறது. பழையதைவிட அது சிறந்ததாக இல்லாமல்கூட இருக்கலாம். சொல்லப் போனால் பழையதைவிட மோசமாகக் கூட இருக்கலாம். ஆனால் ''புதிய'' என்னும் வெறும் சொல்லே மனத்தில் வரிசையான சாத்தியக் கூறுகளை திறந்துவிடுகிறது.

இத்தகைய சொற்களையும் அவற்றின் தாக்கங்களையும் ஆழமாகப் புரிந்துகொள்வது அவசியம். உண்மையைத் தேடும் ஒருவர் சொற்களின் தாக்கத்தைப்பற்றி கவனமாக இருக்க வேண்டும். அரசியல் வாதிகள், விளம்பரத் தொழிலினர் போன்றோர் சொற்களைப் பயன்படுத்தி வருகிறார்கள்; சொற்களைக் கொண்டு மாபெரும் கற்பனையை படைத்துக்காட்ட அவர்களால் முடிகிறது. எந்த அளவுக்கெனில் அதற்காக உங்கள் உயிரையும் கூட உங்களால் விட்டுவிட முடிகிறது. வெறும் வார்த்தைகளுக்காக உங்கள் உயிரைக்கூட நீங்கள் துச்சமென தூக்கியெறிய முடிகிறது.

''தேசம்,'' ''தேசியக்கொடி'' - இவைகள் எல்லாம் என்ன? வெறும் வார்த்தைகள் தான். ''இந்து மதம்,'' ''இந்துமதம்ஆபத்தில் இருக்கிறது

என்று நீங்கள் சொல்கிறீர்கள். உடனே பலபேர் அதற்காக எதையாவது செய்வதற்கோ அல்லது சாவதற்கோகூட துணிந்து விடுகிறார்கள். ஒரு சில வார்த்தைகள் மட்டுமே இவை. ''நமது நாடு அவமதிக்கப்பட்டுவிட்டது.'' ''நமது நாடு'' என்றால் என்ன? இரண்டு சொற்கள் மட்டுமே. கொடி என்பது ஒரு துண்டுத் துணியைத் தவிர ஒன்றுமில்லை. ஆனால் ஒரு கொடிக்காக முழு தேசமே சாக முடியும். ஏனெனில் யாரோ கொடியை கீழே இறக்கி அவமதித்து விட்டாராம். வெறும் வார்த்தைகளுக்காக இந்த உலகில் என்னென்ன மடத்தனங்கள் எல்லாம் நடந்து கொண்டிருக்கிறது! வார்த்தைகள் அபாயகரமானவை. உங்களுக்குள் ஆழமான செல்வாக்கு செலுத்துவதற்கான ஆதாரங்களை அவை கொண்டுள்ளன. உங்களுக்குள் இருக்கும் எதையோ ஒன்றை அவை தூண்டி விடுகின்றன. அதில் நீங்கள் சிக்கி சிறைப்பட்டுவிட முடியும்.

கற்பனை என்றால் என்ன என்பதைப் புரிந்து கொண்டாக வேண்டி இருக்கிறது என்கிறார் பதஞ்சலி. ஏனெனில் தியான மார்க்கத்தில் மற்றவர்கள் நம்மீது தாக்கம் ஏற்படுத்துவதைத் தவிர்க்க முடிவதற்காக வார்த்தைகள் கைவிடப்பட்டாக வேண்டி இருக்கும். சொற்களை நமக்கு மற்றவர்களே கற்றுக் கொடுக்கிறார்கள். சொற்களுடன் நாம் பிறப்பதில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்களுக்கு சொல்லித்தரப் படுபவையே அவை. சொற்களின் மூலமாக பல தப்பு அபிப்பிராயங்களையும் ஊட்டி விடுகிறார்கள். வார்த்தைகளின் மூலமாக மதத்தை ஊட்டுகிறார்கள். வார்த்தைகளின் மூலமாக பொய் புனைவுகளை புகட்டுகிறார்கள் - எல்லாமே வெளியில் இருந்து திணிக்கப்படுகிறது. கலாச்சாரம், சமுதாயம், மற்றும் தகவல் தொடர்பின் சாதனமாக, வாகனமாக வார்த்தையே இருக்கிறது.

ஒரு தேசத்துக்காகப் போரிடும்படி விலங்குகளை நீங்கள் தூண்டிவிட முடியாது. ஏன் முடியாது எனில் ''தேசம்'' என்றால் என்ன என்பதை அவை அறிய மாட்டா. எனவேதான் விலங்குகளின் ராஜ்ஜியத்தில் யுத்தங்கள் என்பதே இல்லை. அங்கே போர்கள் இல்லை, கொடிகள் இல்லை, கோவில்கள் இல்லை, மசூதிகள் இல்லை. மேலும் விலங்குகளால் நம்மை உற்று நோக்க முடிந்தால் சொற்களின் மீதான ஏதோ மோகத்தால் மனிதன் பீடிக்கப்பட்டிருக்கிறான் என்றே அவை கருதும். ஏனெனில் சொற்களை மையப்படுத்தியே போர்கள் நடந்து கொண்டே போகின்றன. வெறும் வார்த்தைகளுக்காக லட்சக்கணக்கான மக்கள் கொல்லப்படுகிறார்கள்.

ஒருவர் யூதராக இருக்கிறார். ''யூதன்'' என்ற சொல்லே போதும். 'கொல் அவனை.'' பெயரை விலாசத்தை மாற்று - இப்போது அவர் ஒரு ''கிறிஸ்தவர்.'' அப்படியானால் அவரைக் கொல்லத் தேவை இல்லை. ஆனால் அப்படி மாற்றிக் கொள்ள அவர் தயாராயில்லை.'' நான் கொல்லப்படுவதைக்கூட விரும்பி ஏற்பேனே தவிர என் மீதுள்ள முகவரியை என்னால் மாற்றிக்கொள்ள முடியாது. நான் ஒரு யூதன்தான்.'' என்று அவர் வைராக்கியமாக இருக்கிறார். மற்றவர்களும் பிடிவாதமாக இருக்கிறார்கள். ஆனால் எல்லாம் வெறும் சொற்களே.

ழான் - பால் சார்த்தர் தன் வாழ்க்கை வரலாற்றை எழுதி இருக்கிறார். அதற்கு அவர் தந்துள்ள தலைப்பு ''சொற்கள்''. அழகான தலைப்பு. ஏனெனில் மனத்தைப் பொறுத்த வரை, எந்த மனத்தின் முழு சுய சரிதையிலும் சொற்களைத் தவிர வேறு என்ன இருக்கிறது? இதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும் என்கிறார் பதஞ்சலி. ஏனெனில் தியான மார்க்கத்தில் வார்த்தைகளைப் பின்னனால் விட்டுவிட்டு முன்னால் செல்ல வேண்டி இருக்கிறது. மனிதர் மாசற்றவராக, வார்த்தைகளில் இருந்து விடுபட்டவராக ஆகவேண்டி இருக்கிறது. வார்த்தையில் இருந்து நீங்கள் விடுபட்டதும் அங்கு எந்தக் கற்பனையும் இராது. கற்பனை இராதபோது உண்மையை நீங்கள் தரிசிக்க முடியும். அதுவரை நீங்கள் கற்பனையை வளர்த்துக்கொண்டே தான் போவீர்கள்.

கடவுளை நீங்கள் சந்திக்க நேர்ந்தால் எந்த வார்த்தைகளும் இன்றியே அவரை நீங்கள் சந்தித்தாக வேண்டும். உங்களிடம் எவ்விதமான சொற்கள் இருந்தாலும் அதற்கு அவர் பொருந்தாமல் போகலாம். உங்கள் கருத்துடன் அவர் பொருந்தாமல் போகலாம். ஏனெனில் கடவுளுக்கு ஆயிரம் கைகள் என்று ஒரு இந்து நினைத்து, கடவுளோ வெறும் இரண்டு கைகளுடன் மட்டுமே வருவாரானால் அவரை ஒரு இந்துவானவன் புறக்கணித்து விடுவான். ''நீ கடவுளே அல்ல. உனக்கு இரண்டு கைகள்தானா? கடவுள் என்றால் ஆயிரம் கைகள் இருக்க வேண்டும். உன் மற்ற கைகளையும் காட்டு. அப்போது மட்டுமே என்னால் உன்னை நம்பமுடியும்'' என்பான்.

இது நடந்தது. கடந்த நூற்றாண்டின் மிகவும் அழகிய மனிதர்களில் ஒருவர் சீரடி சாயிபாபா ஆவார். அவருக்கு ஒரு நண்பர். சீடர் இருந்தார். சாயிபாபா ஒரு முகம்மதியர். அல்லது அவரை முகம்மதியரா இந்துவா என்பது எவருக்கும் தெரியாது எனலாம். ஆனால் அவர் ஒரு மசூதியில்தான் வசித்து வந்தார். எனவே அவரை முகம்மதியர் என்றே நம்பினார்கள். அவருடைய சீடரோ ஒரு இந்துவாக இருந்தார். அவர்

சாயிபாபாவை நேசித்தார், மதித்தார்; அவர்மேல் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தார். ஒவ்வொரு நாளும் அவரைத் தரிசிக்க அவர் வருவார். அவரைப் பார்க்காமல் போக மாட்டார். சிலநேரங்களில் இப்படி நடந்துவிடும்: நாள் முழுதும் அவர் காத்திருக்க வேண்டிவரும். இருந்தாலும் அவரைப் பார்க்காமல் அவர் போக மாட்டார். மேலும் சாயிபாபாவை பார்க்காமல் அவர் உணவும்கூட உட்கொள்ள மாட்டார்.

ஒருதடவை முழு நாளும் கடந்துவிட்டது. பெருங்கூட்டம், கும்பல் இருந்தது - அவரால் உள்ளே நுழைய முடியவில்லை. மற்ற எல்லாரும் போய்விட்ட பின்பு இரவில்தான் அவர் அவர் பாதங்களை தொட்டார்.

அவரிடம் சாயிபாபா சொன்னார், ''ஏன் நீ அனாவசியமாகக் காத்திருக்கிறாய்? என்னை நீ இங்கேதான் பார்க்க வேண்டும் என்ற தேவையே இல்லை. நானே அங்கு வர முடியும். நாளையில் இருந்து இதை விட்டுவிடு. இனி நான் வருகிறேன். நீ உணவு உட்கொள்ளும் நேரத்துக்கு முன்பாக இனி தினமும் என்னை நீ காண்பாய்.'' என்றார்.

சீடர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். அதன்படி மறுநாள் அவர் நெடுநேரமாகக் காத்துக் கொண்டே இருந்தார். ஆனால் ஒன்றும் நிகழவில்லை. உண்மையில் பல காரியங்கள் நடந்தன. ஆனால் அவருடைய கருத்தாக்கத்துக்கு பொருத்தமான எதுவும் நிகழவில்லை. மாலை ஆன போது அவர் மிகுந்த கோபம் கொண்டார். அதுவரை அவர் உணவு உட்கொண்டிருக்கவில்லை. ஆனால் சாயிபாபாவோ காட்சி அளிக்கவில்லை. எனவே மறுபடியும் அவர் அங்கு போனார். ''நீங்கள் வாக்களித்துவிட்டு நிறைவேற்றவில்லையே'' என்றார்.

சாயிபாபா சொன்னார், ''ஆனால் நான் ஒரு தடவை அல்ல, மூன்று தடவை உன்னிடம் வந்தேன். முதல் தடவை ஒரு பிச்சைக்காரனாக நான் வந்தேன். என்னிடம் நீ 'போய்விடு இங்குஇருந்து! வராதே இங்கே!' என்றாய். இரண்டாவது தடவை நான் வந்தபோது ஒரு கிழவியாக வந்தேன். நீயோ என்னை ஏறிட்டும் பார்க்கவில்லை. உன் கண்களை நீ இறுக மூடிக் கொண்டாய்.'' ஏனெனில் அந்த சீடர் பெண்களை ஏறிட்டும் பார்ப்பதில்லை என்னும் வழக்கம் உடையவர். பெண்களைப் பார்ப்பதில்லை என்னும் வழக்கத்தை அவர் கடைப்பிடித்து வந்தார். எனவேதான் அவர் தன் கண்களை மூடிக் கொண்டார். சாயிபாபா சொன்னார், ''நான் வந்திருந்தேன். ஆனால் நீ எதை எதிர்பார்க்கிறாய்? உன் மூடிய கண்களுக்குள் நான் ஊடுருவிப் பிரவேசிப்பதையோ? நான் உன் முன்தான் நின்றுகொண்டு இருந்தேன். ஆனால் நீதான் கண்களை மூடிக் கொண்டாய். என்னைப் பார்த்த அக்கணமே நீ கண்களை மூடிக்

கொண்டாய். பின் மூன்றாவது தடவையாக நான் ஒரு நாயாக உன்னை வந்தடைந்தேன். ஆனால் நீயோ என்னை உள்ளேயே அனுமதிக்க வில்லை. ஒரு குச்சியுடன் வாசலிலேயே வழிமறித்து நின்றுகொண்டாய்.''

இந்த மூன்று காரியங்களும் நடந்தே இருந்தன. மேலும் இக்காரியங்கள் எல்லா மனிதர்களுக்கும் நிகழ்ந்து கொண்டேதான் வந்திருக்கின்றன. இறைமை பல வடிவங்களில் வருகிறது. ஆனால் உங்களிடம் ஒரு தப்பு அபிப்பிராயம் இருக்கிறது. முன்கூட்டியே உருவாக்கிக்கொண்ட ஒரு கருத்தாக்கத்துடன் நீங்கள் இருக்கிறீர்கள். உங்களால் பார்க்க முடிவதில்லை. உங்களுக்கு ஏற்புடைய விதத்திலேயே அவர் வந்து தோன்ற வேண்டும். ஆனால் அவரோ ஒருபோதும் உங்களுக்கு ஏற்ற விதத்தில் காட்சி அளிப்பதில்லை; மேலும் உங்களுக்குப் பிடித்தமான முறையில் ஒருபோதும் அவர் காட்சி அளிக்கப்போவது மில்லை. அவருக்கு நீங்கள் ஒரு அளவுகோலாக முடியாது. அவருக்கு எந்த நிபந்தனையையும் உங்களால் விதிக்க முடியாது.

எல்லாக் கற்பனையும் கைவிடப்பட்ட பிறகு மட்டுமே உண்மை தோன்றுகிறது. அதுவரை கற்பனையானது நிபந்தனைகள் விதித்துக் கொண்டே போகிறது. உண்மையோ காட்சி அளிப்பதில்லை. மனமற்ற மனத்தில் மட்டுமே, எவ்வித மறைப்பும் அற்ற திறந்த மனத்தில் மட்டுமே உண்மை வெளிப்பட்டுத் தோன்றுகிறது. ஏனெனில் அங்குதான் அதை நீங்கள் உருத்திரிக்க முடியாது.

**நான்காவது சூத்திரம்:**

**எந்த விதமான உள்ளீடும் அற்ற தன்மையின் அடிப்படையிலான மனவிருத்தியே உறக்கம்.**

இதுவே உறக்கத்தின் வரையறை: மனத்தின் நான்காவது உருமாற்றம் உறக்கம். இது உள்ளடக்கம் எதுமற்ற நிலை. தூக்கநிலை தவிர மற்ற எல்லா நிலைகளிலும் மனம் உள்ளீடுள்ளதாகவே இருக்கிறது. ஏதோ ஒன்று அங்கு இருக்கிறது. ஏதாவது எண்ணம் ஓடிக் கொண்டிருக்கிறது. ஏதாவது உணர்ச்சி ஓடிக் கொண்டிருக்கிறது. ஏதாவது ஆசை ஓடிக்கொண்டிருக்கிறது. ஏதாவது ஒரு நினைவு, ஏதாவது ஒரு வருங்காலக் கற்பனை, ஏதாவது ஒரு சொல் - ஏதோ ஒன்று ஓடிக்கொண்டிருக்கிறது. ஏதோ ஒன்று தொடர்ச்சியாக தொடர்கிறது. நீங்கள் ஆழ்ந்து உறங்கும் போது மட்டுமே உள்ளடக்கங்கள் நிற்கின்றன. மனம் மறைகிறது. நீங்கள் உங்களுக்குள் எவ்வித உள்ளடக்கமும் இன்றி இருக்கிறீர்கள்.

இதை நினைவில் கொண்டாக வேண்டும். ஏனெனில் சமாதியிலும் இதே நிலைதான் இருக்கிறது. ஒரே ஒரு வேறுபாடு மட்டும்: சமாதியில் நீங்கள் உணர்வுடன் இருப்பீர்கள். உறக்கத்தில் நீங்கள் உணர்வின்றி இருக்கிறீர்கள். மனம் முழுமையாக இல்லாது போகிறது. நீங்கள் ஏகாந்தமாக இருக்கிறீர்கள். எந்த எண்ணமும் இன்றி உங்கள் சீவனோடு மட்டும் தன்னந் தனியாக விடப்படுகிறீர்கள் - ஆனால் அதை நீங்கள் உணர்ந்திருப்பதில்லை. உங்களை அலைக்கழிக்க அங்கே மனம் இருப்பதில்லை. ஆனாலும் நீங்கள் உணர்வோடு இருப்பதில்லை.

உணர்வோடு மட்டும் இருந்தால் உறக்கமே ஞானநிலை பேறாக ஆகிறது. உள்ளீடற்ற உணர்வு அதில் (உறக்கத்தில்) இருக்கிறது. ஆனால் அந்த உணர்வு விழிப்பாக இல்லை. ஒரு விதை போலவே அது மறைந்திருக்கிறது. சமாதியிலோ விதை திறக்கப்படுகிறது; உணர்வு விழிப்பாக ஆகிறது. உணர்வு விழிப்பாக இருந்து, உள்ளடக்கமும் அற்றிருக்கையில் இலக்கு கைகூடிவிடுகிறது. விழிப்போடு கூடிய உறக்கமே - இலக்கு.

உறக்கமே மனத்தின் நான்காவது மாறுபாடாகும். ஆனால் விழிப்புணர்வோடு கூடிய உறக்கம் என்னும் இலக்கானது மனத்தின் வளர்ச்சி நிலையாக ஆக முடியாது. மாறாக அது மனத்தைக் கடந்த நிலையாகும். விழிப்புணர்வு என்பது மனத்துக்கு அப்பாற்பட்டதாகும். தூக்கத்தையும் விழிப்பையும் ஒன்று சேர்க்க உங்களால் முடிந்தால் நீங்கள் ஞானம் அடைந்தவராகிவிடுகிறீர்கள். ஆனால் அது கடினமே. ஏனெனில் பகலில் நாம் கண்விழித்துக் கொண்டு இருக்கையிலேயே நாம் விழிப்பாக, உன்னிப்புடன் இருப்பதில்லை. விழித்திருக்கும் போதும் கூட நாம் விழித்திருப்பதில்லை. அந்தச் சொல்லே தவறாக இருக்கிறது. அப்படி இருக்க நாம் உறங்கும்போது எப்படி நம்மால் விழிப்பாக இருக்க முடியும்? விழித்திருக்கும் போதே நாம் விழிப்பாக இருப்பதில்லையே.

எனவே பகலில் நீங்கள் விழித்திருக்கும் போதில் இருந்து தொடங்க வேண்டி இருக்கிறது. அதிக விழிப்புள்ளவராக - மேலும்மேலும் உன்னிப்பான விழிப்புள்ளவராக நீங்கள் இருக்க வேண்டி இருக்கிறது. அதன்பின் நீங்கள் கனவுகளுடன் சோதனை செய்து பார்க்க வேண்டி இருக்கிறது: கனவின்போது நீங்கள் விழிப்பாக இருக்க வேண்டி இருக்கிறது. விழித்திருக்கும் நிலையில் நீங்கள் வெற்றி பெற்றிருந்தால் மட்டுமே, அதன்பின் கனவுகாணும் நிலையில் நீங்கள் வெற்றி பெற்றால் மட்டுமே, அதன்பிறகே மூன்றாவது நிலையான தூக்க நிலையிலும் உங்களால் வெற்றிகாண முடியும்.

முதலில் தெருவில் நடந்துகொண்டிருக்கும்போது முயலுங்கள். விழிப்பாக இருக்க முயலுங்கள். தானியங்கி போல, யந்திரத்தனமாக நடந்து கொண்டு போகாதீர்கள். ஒவ்வொரு அசைவு குறித்தும். நீங்கள் விடும் ஒவ்வொரு மூச்சு குறித்தும் கவனமாக இருங்கள். வெளிமூச்சு விடும்போதும் உள்மூச்சு வாங்கும் போதும் அதுபற்றிய உணர்வுடன் இருங்கள். உங்கள் கண்களின் ஒவ்வொரு அசைவைக் குறித்தும் நீங்கள் பார்க்கும் ஒவ்வொரு மனிதரைக் குறித்தும் உன்னிப்பாயிருங்கள். நீங்கள் எதைச் செய்தாலும் கூடவே விழிப்பாக இருங்கள் - அதைக் கவனத்துடன் செய்யுங்கள்.

அடுத்து இரவில். நீங்கள் ஆழ்ந்து உறங்கும் போது விழிப்பாக இருக்க முயலுங்கள். இரவில் ஒருநாளின் இறுதிக்கட்டம் கடந்து கொண்டிருக்கும். நினைவுகள் மிதந்து கொண்டிருக்கும். அப்போது விழிப்பிலேயே நிலைத்திருங்கள். விழிப்புடனேயே உறக்கத்தில் ஆழ முயலுங்கள். இது கடினமாகத்தான் இருக்கும். ஆனாலும் நீங்கள் முயற்சி செய்தால் ஒருசில வாரங்களுக்குள்ளாகவே உங்களுக்கு ஒரு கணநேர காட்சியாகிலும் கிட்டி இருக்கும்: விழிப்பு நிலையிலேயே நீங்கள் உறங்குவீர்கள். ஒரே ஒரு கணத்தக்கு அது கைகூடினாலும்கூட அது மிகவும் அழகானதே; அது மிகவும் ஆனந்தம் நிரம்பியது. அதன் பிறகிருந்து ஒருபோதும் நீங்கள் பழையமாதிரி இருக்க மாட்டீர்கள்.

அதன்பின் நீங்கள் ''தூக்கம் என்பது வெறும் கால விரயம்'' என்று ஒருபோதும் சொல்ல மாட்டீர்கள். அது மிகவும் மதிப்புள்ள ஒரு சாதனா ஆக முடியும். ஏனெனில் விழித்திருக்கும் வேளை கடந்து தூங்கிக் கொண்டிருக்கும் வேளை தொடங்கியதும் ஒரு மாறுதல் இருக்கிறது. உள்புறத்தின் இயக்கப் போக்கில் ஒரு மாற்றம். இது, ஒரு காரின் கியரை மாற்றுவதைப் போன்றதேதான். ஒரு கியரில் இருந்து மற்றதுக்கு நீங்கள் கியர்மாற்றும் போது ஒரே ஒரு வினாடி அந்த இரண்டுக்கும் இடையில் ஒரு நடுவாந்தரகியர் ஏற்படுகிறது - அதாவது அப்போது கியரே இருப்பதில்லை. அந்த நடுநிலை வினாடி மிகவும் முக்கியமானது.

இதுதான் மனத்திலும் நடைபெறுகிறது. விழிப்பிலிருந்து உறக்கத்துக்கு போகும்போது நீங்கள் விழிப்புமற்று உறக்கமும் அற்று இருக்கிற ஒரு கணம் வருகிறது. அந்த கணத்தில் கியர் இருப்பதில்லை. பொறி அமைவு செயல்படுவதில்லை, தற்போக்கான உங்களின் ஆளுமையானது அந்தக் கணத்தில் செயல்படாமல் போகிறது. அந்தக் கணத்தில் உங்களின் பழைய பழக்கங்கள் உங்களை ஒரு குறிப்பிட்ட பாணிக்குள் வலிந்து செலுத்த முடியாது. அந்தக் கணத்தில் நீங்கள் தப்பி வெளியேற முடியும், விழிப்படைய முடியும்.

இந்தக் கணத்தையே இந்தியாவில் சந்தியா காலம் என்று அழைக்கிறார்கள். இடைப்பட்ட கணம் என்பது இதற்குப் பொருள். இரண்டு சந்தியாக்கள் - இரண்டு இடைப்பட்ட காலங்கள் இருக்கின்றன. ஒன்று இரவில், நீங்கள் விழிப்பில் இருந்து உறங்கச் செல்லும்போது. மற்றது காலையில், மறுபடியும் நீங்கள் உறக்கத்திலிருந்து விழித்துக் கொள்ளும்போது. ஆயின் இந்த இரண்டு காலங்களையும் பிரார்த்தனைக் கணங்கள் என்று இந்துக்கள் அழைக்கிறார்கள்; சந்தியா காலம் - நடுவில் இருக்கும் காலம் என்கிறார்கள். ஏனெனில் அப்போது உங்களுடைய ஆளுமை ஒருகண நேரம் அங்கே இருப்பதில்லை. அந்த ஒரு கணத்தில் நீங்கள் தூயவராக, பரிசுத்தமானவராக இருக்கிறீர்கள். அந்தக் கணத்தில் மட்டும் நீங்கள் விழிப்பாக இருக்க முடியுமானால், உங்கள் வாழ்க்கையே முழுவதுமாக மாறிப்போகும்; முழுமையான மாற்றத்துக்கான அடித்தளத்தை நீங்கள் போட்டு விடுகிறீர்கள்.

அதன்பின் கனவு நிலையில் விழிப்பாயிருக்க முயலுங்கள். கனவு நிலையில் விழிப்பாக இருப்பது எவ்வாறு என்பதற்கு பல முறைகள் உள்ளன. ஒன்று செய்யுங்கள். நீங்கள் முயன்று பார்க்க விரும்பினால்.... முதலில் விழித்திருக்கும் நிலையில் முயலுங்கள். விழிப்பு நிலையில் நீங்கள் வெற்றி பெற்ற பிறகு. கனவு நிலையில். உங்களால் வெற்றிபெற முடியும். ஏனெனில் கனவுநிலை என்பது அதிக ஆழமானது. அதிக முயற்சி தேவைப்படும். மேலும் அது அதிகக் கடினமானதும் ஆகும். ஏனெனில் கனவுக்குள் ஒருவர் என்ன செய்ய முடியும்? அதை எப்படிச் செய்வது?

கனவு நிலையில் செய்ய ஒரு அருமையான முறையை குருட்ஜிப் வகுத்தார். பழைய திபெத்திய முறைகளில் ஒன்றே அது. மேலும் திபெத்திய சாதகர்கள் கனவுலகுக்குள் மிக ஆழமாகச் சென்று ஆய்வுகள் செய்திருக்கிறார்கள். அந்த முறை என்ன என்றால், வழக்கம்போல் நீங்கள் தூங்கிவிட வேண்டியதே. ஆனால் ஒன்றே ஒன்றை மட்டும் - அது எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம் - நினைவில் கொள்ள முயலுங்கள். உதாரணமாக ஒரு ரோஜாமலரை நினையுங்கள். ஒரு ரோஜாமலரை மனக் காட்சியில் கொண்டு வாருங்கள். கனவிலும் அதை நீங்கள் காண்பீர்கள்என நினைத்துக் கொண்டே இருங்கள் - அவ்வளவுதான். காட்சிக்குக் கொண்டு வந்து. கனவிலும் அதை நினைத்துக்கொண்டே இருக்க வேண்டும். கனவு என்ன கனவானாலும், இந்த ரோஜாமலர் மட்டும் தவறாமல் அதில் இடம்பெற வேண்டும். அதன் நிறத்தை, அதன் மணத்தை, எல்லாவற்றையும் மனக்காட்சிக்குக் கொண்டு

வாருங்கள். உங்களுக்குள்ளே அது உண்மையானதாகவே ஆகும் அளவுக்கு அதை உணருங்கள். பின்அந்த ரோஜாவுடனேயே தூக்கத்தில் ஆழுங்கள்.

சில நாட்களுக்குள்ளேயே நீங்கள் அந்த மலரை உங்கள் கனவுக்குள் கொண்டுவர முடியும். இது ஒரு மாபெரும் வெற்றியாகும். ஏனெனில் இப்போது குறைந்த பட்சம் உங்கள் கனவின் ஒரு பகுதியை நீங்களே உண்டுபண்ணி இருக்கிறீர்கள். இப்போது நீங்களே அதிகாரியாகி இருக்கிறீர்கள். குறைந்தது கனவின் ஒரு பகுதியானது - அதாவது அந்த மலர் - உங்கள் வசப்பட்டிருக்கிறது, உங்கள் கையில் இருக்கிறது. மேலும் அந்த மலரைக் காணும் அக்கணமே இது ஒரு கனவுதான் என்பதை உடனடியாக நீங்கள் நினைவுகூர்வீர்கள்.

வேறு எந்தத் தேவையும் இல்லை. மலரும், ''இது ஒரு கனவே'' என்னும் நினைவும் இணைக்கப்பட்டு விடுகிறது. ஏனெனில் கனவுக்குள் அந்த மலரை உருவாக்கியதே நீங்கள்தானே. மேலும் கனவில் இந்த மலர் வந்து தோன்ற வேண்டும் என்றும் இடைவிடாமல் நீங்கள் நினைத்துக் கொண்டிருந்தீர்கள். அப்படியே அந்த மலர் வந்து தோன்றி இருக்கிறது. உடனடியாகவே 'இது ஒரு கனவு' என்பதை நீங்கள் உணர்ந்து கொள்வீர்கள் - உடனடியாகவே அந்தக் கனவின் முழு தன்மையும் மாறிவிடும்; அந்த மலர்க் கனவும் அந்தக் கனவை சார்ந்த /சூழ்ந்த எல்லாமுமே தன்மை மாற்றம் பெற்றுவிடும்: (கனவிலும்) நீங்கள் விழிப்பானவராக ஆகி இருப்பீர்கள்.

இதன்பின் அக்கனவை ஒரு புதிய முறையில் - ஒரு திரைப்படத்தைக் காண்பது போலவே - நீங்கள் கண்டு அனுபவிக்க முடியும். இதன்பின் அக்கனவை நிறுத்திவிட நீங்கள் விரும்பினால் உடனடியாக அதை நீங்கள் நிறுத்திவிட, அனைத்துவிட முடியும். ஆனால் அதற்கு இன்னும் கொஞ்சம் கூடுதல் காலமும் கூடுதல் பயிற்சியும் தேவைப்படும். மேலும் இனி உங்கள் சொந்தக் கனவுகளை நீங்கள் உருவாக்க முடியும். இனி நீங்கள் உங்களுக்கு வரும். கனவுகளால் பாதிக்கப்படுவராக இருக்கத் தேவைஇல்லை; உங்களுக்கு தேவையான கனவுகளை எல்லாம் நீங்களேபடைத்துக் கொள்கிறவர்ாக இருக்க முடியும். உங்கள் சொந்தக் கனவுகளில் நீங்கள் வாழ முடியும். உறங்கச் செல்லுமுன் கனவுக்கான ஒரு கருவை நீங்கள் உருவாக்கிக்கொள்ள முடியும். ஒரு திரைப்பட இயக்குநர்போலவே உங்கள் கனவுகளை நீங்கள் இயக்க முடியும். மேலும் அதிலிருந்து ஒரு கருவை நீங்கள் உருவாக்கிக்கொள்ளவும் முடியும்.

கனவு உருவாக்கங்களை திபெத்தியர்கள் பயன்படுத்தி இருக்கிறார்கள். ஏனெனில் கனவு ஆக்கம் மூலம் உங்களின் மொத்த

மனத்தையும் அதன் கூட்டமைப்பையும் உங்களால் மாற்ற முடியும். மேலும் கனவுகளில் நீங்கள் வென்று விட்டால் பின் தூக்கத்திலும் நீங்கள் வெற்றி பெற முடியும். ஆனால் தூக்கத்தில் செயல்படுவதற்கான உத்தி எதுவும் இல்லை. ஏனெனில் தூக்கத்துக்கு உள்ளடக்கம் கிடையாது. உள்ளடக்கம் இருந்தால் மட்டும்தான் உத்திகள் வேலை செய்யும். ஆனால் உள்ளீடு எதுவும் இல்லாவிட்டால் உத்தி எதுவும் உதவாது. ஆனால் கனவின் வாயிலாகவும் விழிப்பாயிருக்க நீங்கள் கற்றுக்கொள்வீர்கள் என்றால் அந்த விழிப்புணர்வை தூக்கத்துக்குள்ளும் எடுத்துச் செல்ல முடியும்.

**கடைசி சூத்திரம்:**

**கடந்த கால அனுபவங்களை நினைவு கூறுதலே ஞாபகம்.**

இவைகள் வரையறைகள் மட்டுமே. பிற்பாடு நீங்கள் குழப்பிக் கொள்ளத் தேவையில்லை என்பதற்காகவே விசயங்களை அவர் தெளிவுபடுத்திக் கொண்டிருக்கிறார். ஞாபகம் என்றால் என்ன? கடந்தகால அனுபவங்களை நினைவு கூறுதலே ஞாபகம். ஞாபகம் என்பது தொடர்ச்சியாக நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஒன்றை நீங்கள் பார்க்கும் போதெல்லாம் உடனடியாக ஞாபகம் இடையில் வந்து அதை திரித்து விடுகிறது. என்னை முன்பே நீங்கள் பார்த்திருக்கிறீர்கள். மறுபடியும் என்னை நீங்கள் பார்க்கிறீர்கள். உடனடியாக ஞாபகம் வருகிறது. ஐந்து ஆண்டுகளுக்கு முன் என்னை நீங்கள் பார்த்திருந்தால், ஐந்தாண்டுகளுக்கு முந்திய என் உருவம் , கடந்த கால சித்திரம், உங்கள் கண்களுக்குள் வந்து நிறைகிறது. அந்தப் படத்தின்மூலமாக என்னை நீங்கள் பார்ப்பீர்கள்.

எனவேதான், உங்கள் நண்பரை பலநாட்கள் நீங்கள் பார்க்காதிருந்து பிறகு பார்க்கும்போது, பார்த்த மாத்திரத்திலேயே நீங்கள் கூறுகிறீர்கள், ''நீ துரும்பாய் இளைத்துப் போயிருப்பதுபோல் தெரிகிறாய்'' அல்லது ''நீ மிகவும் சுகமில்லாததுபோல் தோன்றுகிறாய்'' அல்லது ''சதை போட்டிருக்கிறாய்'' என்கிறீர்கள். அதுவும் உடனடியாகவே கூறுகிறீர்கள்! அது எப்படி? எப்படி என்றால், நீங்கள் ஒப்பிட்டுப் பார்க்கிறீர்கள். ஞாபகம் வந்துவிடுகிறது. அந்த நபரேகூட, தான் சதை போட்டிருப்பதையோ அல்லது மெலிந்து போயிருப்பதையோ உணராமல் இருக்கலாம். ஆனால் நீங்கள் அதை உணர்ந்து விடுகிறீர்கள். ஏனெனில் உடனடியாக ஒப்பிட்டுப் பார்க்க உங்களால் முடிகிறது. கடந்தகாலம், கடந்தகாலச் சித்திரம் மேலெழுகிறது. அதனுடன் நிகழ்காலத்தை உடனடியாக நீங்கள் ஒப்பிட முடிகிறது.

இந்த ஞாபகம் என்பது தொடர்ச்சியாக இருந்து கொண்டிருக்கிறது. நீங்கள் பார்க்கும் எதன்மீதும் அது ஏற்றப்பட்டுகிறது. ஆனால் இந்த கடந்தகால நினைவை நீங்கள் கைவிட வேண்டி இருக்கிறது. உங்களின் அறிதலில் அது ஒரு ஓயாத இடையூறாக இருக்கக்கூடாது. ஏனெனில் புதியதை அறிவதற்கு அது உங்களை ஒருபோதும் அனுமதிக்காது. எப்போதும் நீங்கள் பழையதன் பாணியிலேயே - பழையதை அடிஒட்டியே - அறிகிறீர்கள். புதியதை - அதன் புதுமையை நீங்கள் உணர்வதற்கு அது உங்களை அனுமதிக்காது. எல்லாவற்றையுமே அது பழசாக, பயனற்றதாக ஆக்குகிறது. ஞாபகத்தின் காரணத்தாலேயே எல்லாரும் சலிப்படைந்து விடுகிறார்கள். மனித குலம் முழுவதுமே சலித்துப் போயுள்ளது. எவருடைய முகத்தை வேண்டுமானாலும் பாருங்கள். அவர் சலிப்புற்றிருக்கிறார். சாகும் அளவுக்கு சலிப்படைந்திருக்கிறார்: எதுவுமே புதியதில்லை, எதிலுமே இனிமை இல்லை.

குழந்தைகள் ஏன் ஆனந்தமாக இருக்கிறார்கள்? அதிலும் மிகவும் எளிமையான விசயங்களில்கூட அவர்கள் பேருவகை கொள்கிறார்கள். இந்த ஆனந்தம் எதனால் ஏற்படுகிறது என்பதை உங்களால் கற்பனைசெய்தும் பார்க்க இயலாது. கடற்கரையில் கிடக்கும் சாதாரண வண்ணக் கற்களைப் பார்த்ததுமே அவர்கள் மகிழ்ச்சியால் கூத்தாடத் தொடங்கிவிடுகிறார்கள். அவர்களுக்கு என்ன நேர்கிறது? உங்களால் ஏன் கூத்தாட முடிவதில்லை? எனெனில் அவை வெறும் கற்களே என்பதை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். உங்கள் ஞாபகம் அங்கே இருக்கிறது. குழந்தைகளுக்கோ ஞாபகம் என்பது இல்லை. எனவே தான் அவர்களுக்கு அந்தக் கற்கள் ஒரு அற்புதமாகத் தென்படுகின்றன. ஏதோ நிலவையே அவர்கள் அடைந்து விட்டது மாதிரி மகிழ்ச்சியால் கூத்தாடுகிறார்கள்.

முதன்முதலாக மனிதன் நிலவை அடைந்ததும் உலகம் முழுவதிலும் மாபெரும் மகிழ்ச்சிக் கிளர்ச்சி ஏற்பட்டது என்று நான் படித்திருக்கிறேன். அப்போது எல்லாரும் தத்தம் தொலைக்காட்சியில் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் பதினைந்து நிமிடங்களுக்குள்ளாகவே எல்லாருக்குமே சலித்துவிட்டது; உற்சாகம் வடிந்துவிட்டது. இனி என்ன செய்வது? மனிதன் நிலவின்மீது நடந்து கொண்டிருக்கிறான். வெறும் பதினைந்தே நிமிடங்களுக்குப் பின்... ஆனால் அந்த இடத்தை அடைவதற்கு இந்தக் கனவுக்கு லட்சக்கணக்கான ஆண்டுகள் பிடித்தது...இப்போதோ நடந்து கொண்டிருப்பது குறித்து யாருக்குமே ஆர்வம் அக்கறை இல்லாமல் போய்விட்டது.

ஒவ்வொன்றுமே பழசாக ஆகிறது. உடனடியாக அது ஞாபகமாக மாறுகிறது; பழசாக ஆகிறது. உங்கள் நினைவுகளை மட்டும் உங்களால் கைவிட முடிந்தால்! கைவிடுதல் என்றால் உங்களுக்கு ஞாபகமே வரக்கூடாது, ஞாபகமே இல்லாமல் போய்விட வேண்டும் என்பதல்ல; கைவிடுதல் என்றால் இந்த அளவுக்கு தடை, தலையீடு இல்லாது ஒழிய வேண்டும் என்பது மட்டுமே பொருள். தேவையாகும்போது அதை நீங்கள் உங்கள் கவனத்துக்கு ஈர்த்துக்கொள்ள முடியும். தேவைப்படாதபோது அங்கேயே அது அமைதியாக இருக்கும்; தொடர்ச்சியாக வந்துகொண்டிருக்க வேண்டியதில்லை.

இறந்தகாலம் தொடர்ச்சியாக இருந்து கொண்டிருந்தால் நிகழ்காலம் இருப்பதற்கு அது இடமளிக்காது; ஆயின் நிகழ்காலத்தை தவறவிட்டாலோ எல்லாவற்றையுமே தவறவிட்டவராகிறீர்கள் நீங்கள்.

முதல் கேள்வி:

**பதஞ்சலியின் யோகம் மிகவும் சரியான ஒரு அறிவியல், முற்றிலும் தர்க்கபூர்வமானது. இரண்டும் இரண்டு நான்கு என்பதைப் போல அதன் விளைவு சர்வ நிச்சயமான ஒன்று என்றெல்லாம் நீங்கள் சொன்னீர்கள். அறிய முடியாததும் அளவுகடந்ததுமான ஒன்றினை அடையும் சாதனையை, வெறும் தர்க்க முடிவாகக் குறைத்துவிட முடியுமானால், வரம்புக்கு உட்படாத ஒரு நிகழ்வானது வரம்புக்கு உட்பட்ட மனத்தின் வட்டத்துக்குள் அடங்கிவிடும் என்று ஆகி விடாதா? அத்துடன் அது ஒரு அபத்தமான முடிவும் ஆகும் அல்லவா?**

**அ**து அபத்தம்போல் தோன்றுகிறது. முரண்பாடு போல் அது தோன்றுகிறது. ஆனால் அப்படிப் பார்த்தால் இருத்தலே ஒரு அபத்தமாகத்தான் இருக்கிறது. இயற்கையே முரண்பாடாகத்தான் இருக்கிறது. வானம் எல்லையற்றதுதான். ஆனால் மிகவும் சிறிய ஒரு குட்டையில் அது பிரதிபலிக்கப்பட முடிகிறதே. முழுவானமும் பிரதிபலிக்கப்படுவது இல்லைதான். அது இயலாத காரியமே. ஆனாலும் பகுதியும் முழுமையே. பகுதியும் முழுமையின் - வானத்தின் - பகுதியே.

மனித மனம் ஒரு கண்ணாடியைப் போன்றே செயல்படுகிறது. அது தூய்மையாக இருக்குமானால் எல்லையற்றதான அது அதில் பிரதிபலிக்க முடியும். அந்தப் பிரதிபலிப்பு எல்லையற்றதாக இருக்க முடியாது, அதன் ஒரு பகுதியாக, கீற்றாக மட்டுமே இருக்க முடியும். ஆனாலும் அந்தச் சிறு பகுதியே ஒரு வாயிலாக ஆகிறது. அதன்பின் மெதுமெதுவாக நீங்கள் கண்ணாடியை பின்னால் விட்டுவிட்டு எல்லையற்றதுக்குள் புக முடியும். பிரதிபலிப்பை விட்டு நீங்கி நிஜத்துக்குள் பிரவேசிக்க முடியும்.

உங்கள் ஜன்னலின் வழியாக, ஜன்னலின் சிறிய ஒரு சட்டத்தின் வாயிலாக, எல்லையற்ற வானம் அங்கே இருக்கிறது. சன்னலின் வழியாக நீங்கள் பார்க்கிறபோது முழுவானத்தையும் உங்களால் பார்க்க முடியாதுதான். ஆனாலும் உங்கள் பார்வையில் தெரிவதெல்லாமே வானம்தான். எனவே நினைவில் கொள்ள வேண்டிய ஒரே விசயம்: நீங்கள் பார்ப்பதெல்லாம் எல்லையற்ற பரம்பொருள்தான் என்று நினைக்காதீர்கள். அது எல்லையற்றதாகவே இருக்கலாம்.

எல்லையற்றதாக இல்லாமலும் இருக்கலாம். அது எல்லையற்றது அல்ல. ஆக மனித மனத்தால் கருத முடிவது எதுவாயினும் அதெல்லாம் இறைமையாக இருக்கலாம்; ஆனால் இறைமையின் ஒரு பகுதியை மட்டுமே, அதன் ஒரு கணநேர காட்சியை மட்டுமே மனித மனத்தால் - காண முடியும். இதை நீங்கள் நீங்காமல் நினைவில் வைத்திருந்தால் அதன்பின் எந்தப் பிழையும் நேராது. இனி படிப்படியாக சட்டத்தை உடையுங்கள். மனத்தை படிப்படியாக முழுமையாக ஒழியுங்கள். அதன்பின் அங்கு கண்ணாடி இருப்பதில்லை. அப்போதே நீங்கள் பிரதிபலிப்பில் இருந்து விடுபடுகிறீர்கள்; முழுமையான யதார்த்தத்துக்குள் பிரவேசிக்கிறீர்கள்.

மேலோட்டமாகப் பார்த்தால் அது அபத்தமாகவே தெரிகிறது. இவ்வளவு அற்பமான ஒரு மனதுக்கு எவ்வாறு நித்தியமான - எல்லையற்ற - இறுதியற்ற பரம்பொருளுடன் தொடர்பு ஏற்பட முடியும்? இன்னொரு விசயத்தையும் புரிந்து கொண்டாக வேண்டும். இந்த அற்ப மனம் உண்மையில் அற்பமானதும் அல்ல. ஏனெனில் இதுவும் அந்த எல்லையற்றதன் ஒரு பகுதிதான். இது அற்பமாகத் தோன்றுவது உங்களால்தான். இது இறுதியுடையது போலத் தோன்றுவது உங்களால்தான். இதன் எல்லைகளை நீங்களே உருவாக்கி இருக்கிறீர்கள். எல்லைகளோ பொய்யானவை. உங்களின் மிகச்சிறிய மனதும்கூட எல்லையற்றதற்கு சொந்தமானதே. அதன் பகுதியே அது.

புரிந்துகொள்ள வேண்டிய சங்கதிகள் இன்னும் பல உள்ளன: எல்லையற்றதைப் பற்றிய மிகவும் விசித்திரமான - புதிரான செய்திகளில் ஒன்று இதுதான்: அதாவது பகுதி எப்போதுமே முழுமைக்குச் சமமாக இருக்கிறது. ஏனெனில் எல்லையற்றதை உங்களால் பிரிக்க முடியாது. பிரிவினைகள் செயற்கையானவையே. பயன்பாட்டு நோக்கில் எல்லாப் பிரிவினைகளும் செய்யப்படலாம். இந்தியத் துணைக்கண்டத்தின் மேலே உள்ள வானத்தை 'இந்திய வானம்' என்று இந்தியா கூறுவதுபோல், என் வீட்டின் - என் முற்றத்தின் மேலே உள்ள வானத்தை 'என் வானம்' என்று நான் கூறிக்கொள்ள முடியும். இப்படி நீங்கள் கூறுவதன் பொருள் என்ன? வானத்தை உங்களால் கூறுபோட முடியாது. அதை இந்திய வானம் என்றோ சீனவானம் என்றோ பிரிக்க உங்களால் முடியாது. அது ஒரு பிரியாத விரிவாக இருக்கிறது. எங்கிருந்தும் அது தொடங்குவதில்லை, எங்கும்போய் அது முடிவதுமில்லை.

மனத்தின் விசயத்திலும் இதுவேதான் நிகழ்ந்திருக்கிறது. மனத்தை 'உங்களுடைய மனம்' என நீங்கள் அழைக்கிறீர்கள். இந்த

''உங்களுடைய'' என்பது பொய்யானது - தவறானது - இல்லாதது. எல்லையற்றதன் ஒரு பகுதியே மனமும். புறப்பொருள் எப்படி எல்லையற்ற பரம்பொருளின் ஒரு பகுதியோ அப்படியே அகமும் அதன் ஒரு பகுதிதான். உங்களின் ஆன்மாவும் அனந்தத்தின் ஒரு பகுதிதான்.

''எனது'' ''என்னுடைய'' என்பது இல்லாமல் போனதும் நீங்களே எல்லையற்றவராக இருக்கிறீர்கள். எனவே நீங்கள் எல்லை உள்ளவராக தோன்றுவது ஒரு மாயைதான். முடிவுள்ள தன்மை என்பது யதார்த்தத்தில் இல்லை. முடிவுள்ள தன்மை என்பது வெறும் ஒரு கருத்தாக்கமே, அது ஒரு கற்பனை மட்டுமே. மேலும் உங்களின் அந்தக் கருத்தாக்கத்தின் காரணமாகவே அதில் நீங்கள் கட்டுண்டு கிடக்கிறீர்கள். மேலும் எப்படியெல்லாம் நீங்கள் எண்ணுகிறீர்களோ அப்படியே நீங்கள் ஆவீர்கள்'' எவ்வாறெல்லாம் நீங்கள் எண்ணுவீர்களோ அவ்வாறே நீங்கள் ஆவீர்கள்''என்று புத்தர் சொல்லி இருக்கிறார். நாற்பதாண்டுகளாக அதைத்தான் அவர் தொடர்ந்து திரும்பத் திரும்பக் கூறிவந்தார். நீங்கள் இருக்கிற நிலை எதுவானாலும் அதை உங்களின் எண்ணமே உருவாக்குகிறது. நீங்கள் வரம்புள்ளவராக இருந்தால் அது நீங்கள் ஏற்றுக்கொண்டுள்ள ஒரு நிலைபாடுதான். அந்த நிலைபாட்டைத் துறந்துவிட்டால் அப்போதே நீங்கள் எல்லையற்றவராக ஆகிறீர்கள்.

ஆகவே யோகத்தின் மொத்த நிகழ்முறையுமே 'துறப்பது எப்படி' என்பதைப்பற்றியதுதான்; சட்டத்தை துறப்பது எப்படி, கண்ணாடியை கைவிடுவது எப்படி, பிரதிபலிப்பில இருந்து யதார்த்தத்துக்குப் போவது எப்படி, எல்லைகளைக் கடந்து அப்பால் செல்வது எப்படி என்பதைப் பற்றியதுதான்.

எல்லைக்கோடுகள் என்பவை நாமாக உருவாக்கிக் கொள்பவை. உண்மையில் அவை வெளியில் இல்லை. வெறும் எண்ணங்களே அவை. எனவேதான் மனத்தில் எண்ணம் இல்லாமல் போகும் போதெல்லாம் நீங்களும் இல்லாமல் போகிறீர்கள். எண்ணமற்ற மனமே அகங்காரமற்ற மனம். எண்ணமற்ற மனமே எல்லையறற மனம். எண்ணமற்ற மனம் ஏற்கனவே வரம்பற்றதாக இருக்கிறது. ஒரே ஒரு கணத்துக்கேனும் நீங்கள் எண்ணம் இல்லாது இருந்தால் அப்போது நீங்கள் வரம்பற்றவராக இருக்கிறீர்கள். ஏனெனில் எண்ணம் இல்லாவிட்டால் எல்லைக்கோடு இருக்கமுடியாது. எண்ணம் இல்லாவிட்டால் அங்கு நீங்கள் இருப்பதில்லை. நீங்கள் இல்லாவிட்டால் அங்கு தெய்வீகத் தன்மை இறங்கி நிற்கிறது.

எண்ணத்துடன் இருப்பது என்பது மனிதராக இருப்பதாகும். எண்ணத்திலும் கீழாக இருப்பது என்பது விலங்காக இருப்பதாகும். எண்ணத்தைக் கடந்து மேல்சென்று இருப்பது என்பது தெய்வீகத் தன்மையில் இருப்பதாகும். ஆனால் தர்க்கபூர்வமான மனம் தடைகளை எழுப்பவே செய்யும். தர்க்கமனம் ''பகுதி எவ்வாறு முழுமைக்கு சமமாக ஆகமுடியும்? என்று கேட்கும். பகுதி என்பது முழுமைக்குக் குறைந்த தாகத்தான் இருந்தாக வேண்டும். அதற்குச் சமமானதாக இருக்க முடியாது'' என்று சொல்லும்.

உலகின் மிகச்சிறந்த நூல்களில் - மிகச் சிறந்தவையான சில நூல்களில் ஒன்றான 'டெர்ஷியம் ஆர்கானம்' என்னும் நூலில் அவுஸ்பென்ஸ்கி என்பவர் எழுதுகிறார்: ''பகுதி என்பது முழுமைக்குச் சமமானதாக மட்டுமல்ல, முழுமையைவிட அதிகமானதாகவும் கூட இருக்க முடியும்.'' என்று. ஆனால் இதை அவர் உயர்நிலைக் கணிதம்' என்று அழைக்கிறார். அந்தக் கணிதம் உபநிடதங்களுக்குச் சொந்த மானது. ஈசாவாசிய உபநிடதத்தில் சொல்லப்பட்டிருப்பது வருமாறு: ''முழுமையில் இருந்து முழுமையை நீங்கள் கழித்த பின்னரும் அந்த முழுமை அப்படியே மிச்சம் இருக்கிறது. முழுமையுடன் முழுமையை நீங்கள் கூட்டினால் அப்பவும் அந்த முழுமை அதே அளவிலேயே தங்கி இருக்கிறது.''

இது அபத்தம். இதை அபத்தம் என்று அழைக்க நீங்கள் விரும்பினால் அப்படியே நீங்கள் அழைக்க முடியும். ஆனால் உண்மையில் அது ஒரு உயர்நிலைக்கணிதம். அதற்கு எவ்வித எல்லைகளும் இல்லை. ஒரு துளியே அங்கு ஒரு சமுத்திரமாக ஆகிறது. சமுத்திரமும் அங்கு ஒரு துளியே அன்றி வேறில்லை.

தர்க்க மனம் கேள்விகளை எழுப்புகிறது. எழுப்பிக் கொண்டே போகிறது. தர்க்க மனத்தின் தன்மையே அதுதான். கேள்விகளை எழுப்பவதே அதன் இயல்பு. ஆனால் அந்தக் கேள்விகளை நீங்கள் தொடர்ந்து கொண்டே போனால் முடிவின்றி நீங்கள் போய்க்கொண்டே இருக்க முடியும். மனத்தைக் கழற்றி தூர வையுங்கள் - அதன் தர்க்கத்தையும் அதன் பகுத்தாய்வையும் தூரவையுங்கள். சிலகண நேரத்துக்காவது எண்ணமின்றி இருக்க முயலுங்கள். ஒரே ஒருகண நேரமேனும் அந்த எண்ணமற்ற நிலையில் நீங்கள் இருக்க முடிந்தால், பகுதியும் முழுமையும் சமம் என்பதை நீங்கள் உணர்ந்து விடுவீர்கள். ஏனெனில் திடீரென எல்லா எல்லைக்கோடுகளும் மறைந்து விட்டிருப்பதை நீங்கள் காண்பீர்கள். அவை கனவுத்தன்மையான

எல்லைகள். எல்லைகள் எல்லாம் மறைந்துவிடுகின்றன. நீங்களும் முழுமையும் ஒன்றாகிவிடுகிறீர்கள்.

இது அனுபவமாக முடியும். இது ஒரு தர்க்கபூர்வ அனுமானமாக இருக்க முடியாது. ஆனால் பதஞ்சலி தர்க்கபூர்வமானவர் என்று நான் கூறும்போது அதை என்ன பொருளில் நான் கூறுகிறேன்? என்றால், உள் - ஆன்மீக - இறுதி அனுபவத்தைப் பொறுத்தவரை பயணமுடிவில் எவரும் தர்க்க பூர்வமாக இருக்க முடியாது. ஆனால் பாதை வழியில் அப்படி உங்களால் இருக்க முடியும். யோகத்தின் அறுதிப் பயனைப் பொறுத்த வரையில் பதஞ்சலியும்கூட தர்க்கத் தன்மையுடன் இருக்கமுடியாது. எவருமே அப்படி இருக்க முடியாது. ஆனால் அந்த இலக்கை அடைவதற்கு நீங்கள் ஒரு தர்க்க பூர்வமான பாதையைப் பின்பற்ற முடியும்.

இந்தப் பொருளில் பதஞ்சலி தர்க்கரீதியானவர்தான், பகுத்தறிவுரீதியானவர்தான், கணித ரீதியானவர்தான், அறிவியல் ரீதியானவர்தான். நம்பிக்கை எதையும் கோருவதில்லை அவர். ஆய்வு செய்வதற்கான துணிவை, இயங்குவதற்கான துணிவை, அறியாததற்குள் குதித்து விடுவதற்கான துணிவை மட்டுமே அவர் கேட்கிறார். ''முதலில் நம்புங்கள், பிறகுதான் உங்களுக்கு அனுபவமாகும்'' என்பதில்லை அவர். ''அனுபவம் பெறுங்கள், பிறகு நீங்களே நம்புவீர்கள்'' என்றே அவர் கூறுவார்.

மேலும் படிப்படியாக முன்னேறிச் செல்வது எவ்வாறு என்பதற்கு ஆன ஒரு வரிசைக் கிரமத்தை - கட்டமைப்பை அவர் ஏற்படுத்தி இருக்கிறார். அவரது பாதை தாறுமாறானதல்ல. அது ஒரு சந்தும் பொந்துமான பாதை அல்ல. அது ஒரு தேசிய நெடுஞ்சாலை போன்றது. எல்லாமே தெளிவாக இருக்கிறது. சாத்தியமாகிறவற்றிலேயே மிக சுருக்கமான தடமாக இருக்கிறது. ஆனால் அதன் ஒவ்வொரு நிலவரத்தையும் நீங்கள் அப்படியே பின்பற்றியாக வேண்டி இருக்கிறது. இல்லாவிட்டால் பாதையில் இருந்து விலகி பாலைக்குள் போய்விடுவீர்கள்.

எனவேதான் அவர் தர்க்கபூர்வமானவர் என்கிறேன் நான். மேலும் அவர் எந்தளவுக்கு தர்க்கபூர்வமானவர் என்பதை நீங்களே காண்பீர்கள். உடலில் இருந்து அவர் தொடங்குகிறார். ஏனெனில் உடலிலேயே நீங்கள் வேரூன்றி இருக்கிறீர்கள். உங்கள் மூச்சிலிருந்தே அவர் தொடங்கி வேலை செய்கிறார். ஏனெனில் உங்களின் மூச்சே உங்கள் உயிராக - வாழ்வாக இருக்கிறது. முதலில் உடம்பின் மீது அவர் வேலைசெய்கிறார்.

பின், இருத்தலின் இரண்டாவது அடுக்கான பிராணன்மீது - உங்களின் சுவாசத்தின்மீது - வேலை செய்கிறார். பிறகு எண்ணங்களின்மீது வேலைசெய்யத் தொடங்குகிறார்.

எடுத்த எடுப்பிலேயே - நேரடியாகவே எண்ணத்தின்மீது செயல்படத் தொடங்கும் முறைகள் பல உள்ளன. அவை மிகுந்த தர்க்கபூர்வமாகவும் அறிவியல் பூர்வமாகவும் உள்ளன. ஏனெனில் நீங்கள் செயல்பட்டுக் கொண்டிருக்கும் மனிதர் உடம்பிலேயே நிலைகொண்டிருக்கிறார். அவர் ஒரு சோமா, அதாவது ஒரு உடல். அறிவியல் ரீதி அணுகுமுறை என்பது உடலில் இருந்தே தொடங்கியாக வேண்டும். உங்கள் உடம்பே முதலில் மாற்றப்பட வேண்டும். உங்கள் உடம்பு மாற்றப்படும்போது பிறகே உங்கள் மூச்சு மாற்றம்பெற முடியும். உங்கள் மூச்சு மாற்றப்படும்போது அதன் பிறகே உங்கள் எண்ணங்கள் மாற்றம்பெற முடியும். மேலும் உங்களின் எண்ணங்கள் மாற்றப்படும்போது மட்டுமே நீங்கள் மாற்றம்பெற முடியும்.

பல அடுக்குகள் நெருக்கமாக இணைந்த ஒரு அமைப்பே நீங்கள். இதை நீங்கள் உணராமல் இருக்கலாம். நீங்கள் ஓடும்போது உங்கள் மூச்சு மாறுகிறது. ஏனெனில் அதிக ஆக்சிஜன் தேவைப்படுகிறது. நீங்கள் ஓடும்போது உங்கள் சுவாசம் மாறுகிறது. அப்படியே உங்கள் சுவாசம் மாறும்போது உடனடியாகவே உங்களின் எண்ணங்களும் மாறுகின்றன.

உங்களுக்கு கோபம் வந்தால் உடனே பேசாமல் ஓடத் தொடங்குங்கள் என்று திபெத்தில் கூறுகிறார்கள். உங்கள் வீட்டைச்சுற்றி இரண்டு - மூன்று தடவை ஓடுங்கள். பிறகு திரும்பி வாருங்கள். உங்கள் கோபம் எங்கேயோ போய்விட்டிருப்பதைக் காண்பீர்கள். ஏனெனில் நீங்கள் வேகமாக ஓடினால் உங்கள் மூச்சு மாறுகிறது. உங்கள் சுவாசம் மாறினால் உங்கள் எண்ண அமைப்பு பழைய நிலையிலேயே இருக்க முடியாது - அதுவும் மாறியாக வேண்டி இருக்கிறது.

ஓடக்கூட தேவை இல்லை. உள்ளிலும் வெளியிலுமாக ஐந்து தடவை ஆழமாக சுவாசித்தாலும் போதும் - உங்களின் கோபம் இருந்த இடம் தெரியாமல் பறந்து போய்விட்டிருப்பதை காண்பீர்கள். கோபத்தை நேரடியாக தடுத்து நிறுத்துவது கடினம். உடலைமாற்றி, மூச்சை மாற்றி; பின் கோபத்தை மாற்றுவது அதிக எளிதானது. இது ஒரு அறிவியல்பூர்வ நிகழ்முறை. எனவேதான் பதஞ்சலி அறிவியல் பூர்வமானவர் என்கிறேன் நான்.

வேறு எவரும் அவரளவுக்கு அறிவியல் ரீதியாக இருந்ததில்லை. புத்தரிடம் நீங்கள் போனால் ''கோபத்தை விட்டுவிடு'' என்பார் அவர்.

பதஞ்சலியோ ஒருபோதும் அப்படி சொல்லமாட்டார். அவர் என்ன சொல்லுவார் என்றால், உங்களுக்கு கோபம் ஏற்பட்டால் அதன் பொருள், கோபம் ஏற்பட உதவுகிற ஒரு முறையில் நீங்கள் சுவாசித்துக் கொண்டிருக்கிறீர்கள். அவ்வளவே என்பார். ஆயின் சுவாச பாணி மாற்றப்படாதவரை கோபத்தை உங்களால் கைவிட முடியாது. நீங்கள் போராடவே செய்யலாம். ஆனால் அது உதவப் போவதில்லை. அல்லது அதற்கு மிக நீண்ட காலம் பிடிக்கலாம். இது அனாவசியம். எனவே நீங்கள் சுவாசிக்கும் பாணியை அவர் கவனிப்பார். உங்களின் சுவாச லயத்தைக் கவனிப்பார். ஒரு குறிப்பிட்ட சுவாச லயத்தில் நீங்கள் இருப்பீர்களானால் அதற்கேற்ற குறிப்பிட்ட ஒரு உடல் ஆசன நிலையிலும் நீங்கள் இருக்கிறீர்கள் என்று பொருள்.

மிகவும் பருண்மையானது உடல். மிகவும் நுண்மையானது மனம். நுண்மையிலிருந்து தொடங்காதீர்கள். ஏனெனில் அது அதிகக் கடினமாக இருக்கும். அது தெளிவற்றது - குழப்பம். அதை உங்களால் பற்றிக் கொள்ள முடியாது. உடம்பில் இருந்து தொடருங்கள். எனவேதான் பதஞ்சலி உடம்பின் ஆசனங்களில் தொடங்குகிறார்.

மனத்தின் ஒரு குறிப்பிட்ட மன நிலையுடன் நீங்கள் இருக்கும் போதெல்லாம் அதனுடன் தொடர்புடைய ஒரு குறிப்பிட்ட உடல்நிலையுடனும் தான் நீங்கள் இருக்கிறீர்கள் என்பதை நீங்கள் கவனிக்காமல் இருக்கலாம். அந்த அளவுக்கு வாழ்வின் மீது முழுக்கவனம் அற்றவர்களாக நாம் இருக்கிறோம். நீங்கள் கோபமாக இருக்கும்போது இளைப்பாறுதலாக உங்களால் உட்கார முடியுமா? முடியவே முடியாது. நீங்கள் கோபமாக இருந்தால் உங்கள் உடல்இருப்பு நிலைமாறும். நீங்கள் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தால் அப்போது அதற்கு ஏற்ப உங்கள் உடலின் இருப்புநிலை மாறும். நீங்கள் தூக்கக் கலக்கமாக இருந்தால் அப்பவும் உங்கள் உடல் இருப்புநிலை அதற்கேற்ப மாறும்.

முற்றிலும் அமைதியுடன் நீங்கள் இருந்தால் நீங்கள் புத்தரைப் போல் அமர்ந்திருப்பீர்கள்; புத்தரைப் போலவே நீங்கள் நடப்பீர்கள். புத்தரைப்போல் நீங்கள் நடந்தால் ஒருவித அமைதி உங்கள் இதயத்திற்குள் பரவிக் கலப்பது போல் நீங்கள் உணர்வீர்கள். உங்களின் புத்த நடைமூலம் ஒருவித அமைதிப்பாலம் உருவாக்கப்படுகிறது. ஒரு மரத்தடியில் பேசாமல் ஒரு புத்தரைப் போல் அமருங்கள். உடல் மட்டுமே வெறுமனே அமரட்டும். திடீரென உங்கள் சுவாசம் மாறிக்கொண் டிருப்பதை நீங்கள் காண்பீர்கள். அது அதிக இளைப்பாறுதலாக

இருக்கிறது. அதிக ஒத்திசைவுடையதாகி இருக்கிறது. சுவாசமானது ஒத்திசைவும் இளைப்பாறுதலும் உடையதாக இருக்கையில் மனதின் இறுக்கமும் தணிந்திருப்பதை நீங்கள் உணர்வீர்கள். குறைவான எண்ணங்களே அங்கு இருக்கும். மேகமூட்டம் குறைவாக இருக்கும். அதிக வெட்டவெளி, அதிக ஆகாயம் காணப்படும். உள்ளும் புறமும் ஒருவித அமைதி பாய்ந்து கொண்டிருப்பதை நீங்கள் உணர்வீர்கள்.

எனவேதான் பதஞ்சலி அறிவியல்பூர்வமானவர் என்கிறேன் நான். உடலின் ஆசனத்தை மாற்ற நீங்கள் விரும்பினால் உங்கள் உணவுப்பழக்கங்களை மாற்றுங்கள் என்பார் பதஞ்சலி. ஏனெனில் ஒவ்வொரு உணவுப்பழக்கமும் அதற்கேற்ற நுட்பமான உடல் ஆசன நிலைகளை உருவாக்குகிறது. நீங்கள் மாமிசம் உண்பவர் எனில் உங்களால் புத்தரைப்போல் அமரமுடியாது. நீங்கள் அசைவர் என்றால் உங்கள் ஆசனம் ஒருவிதமாக இருக்கும். நீங்கள் சைவ உணவினர் எனில் உங்கள் ஆசனம் வேறுவிதமாக இருக்கும். ஏனெனில் நீங்கள் உண்ணும் உணவைக்கொண்டே உங்கள் உடல் கட்டப்படுகிறது. இது தற்செயல் அல்ல. உடம்புக்குள் எதையெல்லாம் நீங்கள் நிரப்புகிறீர்களோ அதையே உடம்பு பிரதிபலிக்கும்.

எனவே பதஞ்சலியின் தாவரஉணவுக் கொள்கை என்பது ஒழுக்க ரீதியாதன கோட்பாடு அல்ல. அது ஒரு அறிவியல் முறை. நீங்கள் மாமிசம் சாப்பிடும்போது நீங்கள் உணவு உட்கொள்வதை மட்டும் செய்யவில்லை. அந்த மாமிசம் எந்த விலங்கில் இருந்து வந்ததோ அந்த விலங்கையும் உங்களுக்குள் குடிபுக அனுமதித்துக் கொண்டிருக்கிறீர்கள். அந்தக் கறி ஒரு குறிப்பிட்ட தன்மையுள்ள உடலின் பகுதி. அந்தக் கறி ஒரு குறிப்பிட்ட இயல்பூக்கப் பாணியின் ஒரு பகுதி. ஒருசில மணி நேரத்துக்கு முன்புதான் அந்த மாமிசம் ஒரு விலங்காக இருந்தது. எனவே அது அந்த விலங்கின் அனைத்துப் பதிவுகளையும் பழக்கங்களையும் தன்னில் கொண்டிருக்கிறது. நீங்கள் மாமிசம் உண்ணும்போது உங்களின் பல தன்மைகள் அதனால் பாதிக்கப்படும்.

மேலும் நீங்கள் உணர்ச்சி கொண்டவராக இருந்தால், குறிப்பிட்ட பண்டங்களை நீங்கள் உண்ணும் போதெல்லாம் குறிப்பிட்ட சில மாற்றங்கள் உடனடியாக வருவதை நீங்கள் உணர முடியும். சாராயத்தை நீங்கள் உட்கொண்டால் பின் நீங்கள் பழைய மாதிரி இருப்பதில்லை; உடனடியாகவே ஒரு புது ஆளுமை வந்துவிடுகிறது. ஒரு புது ஆளுமையை உருவாக்க சாராயத்தால் முடியாது. ஆனால் உங்களின் உடல்பாணியை அது மாற்றுகிறது. உடல் ரசாயனம் மாற்றப்

படுகிறது. உடலின் ரசாயன மாறுதலுடன் மனமும் அதன் பாணியை மாற்ற வேண்டியிருக்கிறது. ஆக மனமும் அதன் பாணியை மாற்றும் போது ஒரு புதிய ஆளுமை வெளிப்படுகிறது.

மிகவும் பழைய சீனத்து உவமைக்கதை ஒன்றை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒருமுறை மதுக்குப்பி தற்செயலாக ஒரு மேசைமீதிருந்து கீழே விழுந்துவிட்டதாம். ஒரு பூனை அதை தட்டிவிட்டிருக்கக்கூடும். புட்டி உடைந்தது. தரை முழுவதும் மது பரவியது. இரவானதும் மூன்று சுண்டெலிகள் அந்த மதுவை நக்கிக் குடித்தன. உடனடியாகவே ஒரு சுண்டெலி, ''இப்பவே நான் அரசனிடம் போகிறேன். அரண்மனைக்குப் போகிறேன். என்றது. போய் அவனைத் திருத்தப் போகிறேன்.'' அடுத்த எலி ''அரசர்களைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. நான் நேரடியாக புவிமுழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆளும் சக்கரவர்த்தியிடம் போகப்போகிறேன்'' என்றது. மூன்றாவது எலி ''உங்களுக்குப் பிடித்த எதை வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். நான் மாடிக்குப் போய் பூனையுடன் உடலுறவு கொள்ளப்போகிறேன்.'' என்று சொன்னது.

ஆளுமை முற்றிலுமாக மாறி இருக்கிறது. ஒரு பூனையுடன் உறவு கொள்வதை ஒரு சுண்டெலியால் சிந்தித்துப் பார்க்கவும் முடியுமா? ஆனால் அது முடிகிறது. ஒவ்வொரு நாளும் நிகழ்கிறது. நீங்கள் உட்கொள்வது எதுவாயினும் அது உங்களை மாற்றுகிறது. நீங்கள் குடிப்பது எதுவாயினும் அது உங்களை மாற்றுகிறது. ஏனெனில் உடல் என்பதுவே உங்களின் பெரிய பகுதி. தொண்ணூறு விழுக்காட்டுக்கு நீங்கள் உங்களின் உடம்பாகவே இருக்கிறீர்கள்.

பதஞ்சலி அறிவியல் ரீதியானவர் - ஏனென்றால் உணவு, உடல் இருப்புநிலை, நீங்கள் கண்விழிக்கும்முறை, காலையில் படுக்கையில் இருந்து நீங்கள் எழும் நேரம், இரவில் நீங்கள் தூங்கப்போகும் நேரம் - ஒவ்வொன்றையும் அவர் கவனத்தில் கொள்கிறார். எல்லாவற்றையுமே அவர் கவனிக்கிறார். ஏனெனில் அப்போதுதான், மேலான ஒன்றுக்கான ஒரு சூழலாக உங்களின் உடல் மாற முடியும்.

பின் உங்களின் சுவாசத்தை அவர் கூர்ந்து பார்க்கிறார். நீங்கள் சோகமாக இருந்தால் உங்கள் சுவாசம் ஒரு குறிப்பிட்ட கதியில் ஓடுகிறது. உடனே அதைக் குறித்துக் கொள்ளுங்கள். இதை முயன்று பாருங்கள். மிகவும் அழகான ஒரு பரிசோதனையை நீங்கள் செய்து பார்க்க முடியும். நீங்கள் சோகமாக இருக்கும் போதெல்லாம் உங்கள் சுவாசத்தையே கவனியுங்கள் - உள்சுவாசத்திற்கு எவ்வளவு நேரம் எடுக்கிறீர்கள், பின்

வெளிசுவாசத்திற்கு எவ்வளவு நேரம் எடுக்கிறீர்கள் என்பதைக் கவனியுங்கள். அதைமட்டும் குறித்துக் கொள்ளுங்கள். ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு ஐந்து...என மனத்துக்குள் எண்ணிக் கொள்ளுங்கள் எடுத்துக்காட்டாக ஐந்து எண்ணும்வரை உள்மூச்சு வாங்குகிறீர்கள். பின் பத்து எண்ணும்வரை வெளிமூச்சு விடுகிறீர்கள். நுட்பமாகக் கவனித்துப் பாருங்கள் - அப்போது அதன் விகிதாச்சாரத்தை நீங்கள் தெரிந்து கொள்வீர்கள். பின், நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும் போதெல்லாம் அந்த சோக விகிதத்தை - ஐந்து, பத்து என்றதை - முயன்று பாருங்கள், உடனடியாக உங்கள் மகிழ்ச்சி மறைந்துவிடும்.

இதற்கு நேர்மாறானதும் உண்மையே. நீங்கள் மகிழ்ச்சியாக உணரும்போதெல்லாம் எந்தக் கணக்கில் நீங்கள் சுவாசிக்கிறீர்கள் என்பதைக் குறித்துக் கொள்ளுங்கள். பின், நீங்கள் சோகமாக உணரும் போதெல்லாம் அந்தக் கணக்கில் செய்துபாருங்கள். உடனடியாக உங்கள் சோகம் மறைகிறது. ஏனெனில் வெற்றிடத்தில் மனம் நிலவ முடியாது. ஒரு அமைப்புக்குள்ளேயே அது நிலவுகிறது. ஆகவே சுவாசித்தலே மனத்துக்கான மிக ஆழமான அமைப்பாக இருக்கிறது.

மூச்சே எண்ணம். மூச்சு விடுவதை நீங்கள் நிறுத்திவிட்டால் உடனேயே எண்ணங்களும் நின்றுவிடுகின்றன. ஒரு கணம் இதை முயன்றுபாருங்கள். சுவாசிப்பதை நிறுத்துங்கள். உடனடியாக சிந்தனைப்போக்கில் ஒரு தடை ஏற்படுகிறது. அந்த ஓட்டம் உடைபடுகிறது. கண்ணுக்குப் புலப்படுகிற சுவாசச் செயலின் கண்ணுக்குப் புலப்படாத பகுதியே சிந்தனைச் செயல்.

பதஞ்சலி அறிவியல் பூர்வமானவர் என்று நான் கூறும்போது இதையே நான் குறிப்பிடுகிறேன். அவர் ஒரு கவிஞர் அல்லர். ''மாமிசம் உண்ணாதீர்'' என அவர் கூறுவாராயின் மாமிசம் உண்ணுவது வன்முறை என்பதால் அவ்வாறு அவர் கூறுவதில்லை. மாமிசம் உண்ணுவது தனக்கே கெடுதல் செய்துகொள்வது என்பதால்தான் அவ்வாறு கூறுகிறார். அகிம்சையைக் கடைப்பிடிப்பது அழகானது என்று கூறும் கவிஞர்கள் இருக்கிறார்கள். பதஞ்சலியோ அகிம்சையைக் கடைப்பிடிப்பது ஆரோக்கியமானது, அகிம்சையைக் கடைப்பிடிப்பது சுயநலமானது என்கிறார். மாமிசம் உண்ணாத போது வேறு யார் மீதோ நீங்கள் கருணை காட்டுகிறீர்கள் என்பதில்லை. உங்கள்மீதே நீங்கள் கருணை காட்டுகிறீர்கள்.

உங்கள்மீதும் முழுமையான மாற்றத்தின் மீதுமே அவரது அக்கறை. மாற்றத்தைக் குறித்து வெறுமனே சிந்தித்துக் கொண்டிருப்பதன் மூலம்

எதையும் உங்களால் மாற்ற முடியாது. அதற்கான சூழலை நீங்கள் உருவாக்க வேண்டி இருக்கிறது. உலகம் முழுதும் அன்பானது போதிக்கப்பட்டு வந்திருந்தும் எங்குமே அன்பு இல்லை. ஏனெனில் அதற்கான சூழ்நிலை நிலவவில்லை. நீங்கள் ஒரு மாமிச பட்சிணியாக இருந்தால் நீங்கள் எவ்வாறு அன்பானவராக இருக்கமுடியும்? நீங்கள் மாமிசம் சாப்பிட்டுக் கொண்டிருந்தால் அதில் வன்முறை இருக்கிறது. அத்தகைய ஆழமான வன்முறையுடன் நீங்கள் எப்படி அன்பாயிருக்க முடியும்? உங்களின் அன்பு வெறுமனே போலித்தனமானதாகவே இருக்கும். அல்லது வெறுப்பின் இன்னொரு வடிவமாக்வே கூட இருக்கலாம்.

பழைய இந்தியக் கதை ஒன்று இருக்கிறது: கிறித்தவ மதபோதகர் ஒருவர் ஓர் காட்டின் வழியாகப் போய்க் கொண்டிருந்தார். அவர் அன்பில் நம்பிக்கை உள்ளவர் என்பது வெளிப்படை. எனவே அவர் துப்பாக்கி எதையும் வைத்திருக்கவில்லை. திடீரென ஒரு சிங்கம் அவரை நெருங்குவதை கண்டார். உடனே பயந்துவிட்டார். பின்வருமாறு எண்ணத் தொடங்கினார்: ''இந்த நிலைமையில் அன்பின் நற்செய்தி பயன்படாது. ஒரு துப்பாக்கியைக் கொண்டு வந்திருந்தேன் என்றால் அது புத்திசாலித்தனம் ஆனதாக இருந்திருக்கும்.''

ஆனால் ஏதாவது செய்தாக வேண்டும்.ஏனெனில் இக்கட்டான ஒரு சூழ்நிலையில் அவர் இருக்கிறார். பின் அவருக்கு ஒரு விசயம் நினைவுக்கு வந்தது: நீங்கள் தப்பி ஓடினால் சிங்கம் உங்களைத் துரத்தும் என்றும், சில நிமிடங்களுக்குள்ளேயே நீங்கள் பிடிபட்டு பிணமாவீர்கள் என்றும் எங்கேயோ யாரோ கூறி இருந்ததை நினைவுகூர்ந்தார். ஆனால் சிங்கத்தின் கண்களுக்குள் நீங்கள் உற்றுப் பார்த்தால் தப்பிக்க ஒரு வாய்ப்பு இருக்கிறது. அதனால் சிங்கம் நிலைகுத்தி விடலாம், வசியத்துக்கு ஆட்பட்டு விடலாம், அதன் மனம் மாறி விடலாம். மேலும் பல சந்தர்ப்பங்களில் சிங்கங்கள் தம் மனத்தை மாற்றிக் கொண்ட கதைகளும் உள்ளன. அவை நழுவிப் பின்வாங்கி இருக்கின்றன.

எனவே அது முயன்று பார்க்கத் தகுதியான யோசனையாகவே இருந்தது. மேலும் தப்பி ஓடுவதிலும் எந்தப் பயனும் இல்லை. மதபோதகர் இமையாது நோக்கினார். சிங்கமும் நெருங்கி வந்தது. அதுவும் மதபோதகரின் கண்களுக்குள் உற்றுப்பார்க்கத் தொடங்கியது. ஐந்து நிமிடங்கள் அவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் ஊடுருவிப் பார்த்தபடி நின்று கொண்டிருந்தார்கள். பின் திடீரென மதபோதகர் ஒரு அற்புதத்தைக் கண்டார். திடீரென சிங்கம் தன் பாதங்களை சேர்த்து வைத்து அவற்றின் மீது குனிந்தது. தாழ்ந்து பணிந்து உருக்கமாகப் பிரார்த்திப்பதுபோல அது தோற்றமளித்தது.

எதிர்பார்த்ததைவிடவும் அதிகம் இது! அந்தச் சிங்கமும் செபிக்கத் தொடங்கிவிடும் என்னும் அளவுக்கு போதகரே எதிர்பார்க்கவில்லை. அவருக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. ஆனால் பின் அவர் நினைத்தார், ''இப்போது என்ன செய்வது? நான் செய்ய வேண்டியது என்ன?'' ஆனால் இதற்குள் சிங்கம் மட்டுமல்ல, அவரும் வசியப்படுத்தபட்டிருந்தார். எனவே அவர் நினைத்தார், ''சிங்கத்தைப் பின்பற்றுவதே நல்லது.''

அவரும் குனிந்து செபிக்கத் தொடங்கினார். மேலும் ஐந்து நிமிடங்கள் கழிந்தன. பின் சிங்கம் கண்களைத் திறந்து கேட்டது, ''மனிதா, நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? சாப்பிடுவதற்குமுன் கூற வேண்டிய செபத்தை நான் கூறிக்கொண்டிருக்கிறேன். நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' அந்த சிங்கம் மதநம்பிக்கை உடைய சிங்கம். மதக்கடமை தவறாத சிங்கம். ஆனால் அது எண்ணத்தில் மட்டுமே. நடப்பிலோ அது ஒரு சிங்கமாகவே இருந்தது. சிங்கமாகவே நடந்து கொள்ளப்போகிறது. அந்த மனிதனை அது கொன்று தின்னப்போகிறது. அதற்குமுன் கூற வேண்டிய நன்றியறிதல் செபத்தைத்தான் அது கூறிக்கொண்டிருந்தது.

மனிதரின், மனிதகுலம் முழுவதன் மொத்த சூழ்நிலையும் இதுவே- எண்ணங்களில் மட்டுமே மதத்தன்மை. நடைமுறையில் மனிதர் விலங்காகவே இருக்கிறார். எண்ணங்களை நாம் தொற்றி நிற்கக்கூடாது. அதற்குப்பதில் எண்ணங்கள் மறைவதற்கான சூழ்நிலையை உருவாக்க வேண்டும். அதுவரை எப்பவுமே இப்படித்தான் நடக்கும்.

அன்புசெய்வது நல்லது என்று பதஞ்சலி கூறுவதில்லை. மாறாக அன்பு மலர முடிவதற்கான சூழலை உருவாக்க அவர் உங்களுக்கு உதவுவார். எனவேதான் அவர் அறிவியல் பூர்வமானவர் என்கிறேன் நான். ஒவ்வொரு படியாக அவரை நீங்கள் பின்பற்றினால், இதற்குமுன் நீங்கள் கருதி இருக்கவும் முடியாத - கற்பனை செய்திருக்கவும் முடியாத அநேக மலர்ச்சிகளை உங்களில் நீங்கள் காண்பீர்கள். கனவிலும் நினைத்துப் பார்க்க முடியாத மலர்ச்சிகளை நீங்கள் காண்பீர்கள். உங்கள் உணவை நீங்கள் மாற்றினால், உங்கள் உடல் ஆசனங்களை நீங்கள் மாற்றினால், உங்கள் உறக்க பாணியை நீங்கள் மாற்றினால், உங்களின் சாதாரணமான / வழக்கமான பழக்கவழக்கங்களை நீங்கள் மாற்றினால், உங்களுக்குள் ஒரு புதிய மனிதர் எழுவதை நீங்கள் காண்பீர்கள். பின் வெவ்வேறு மாறுதல்கள் சாத்தியம். ஒரு மாறுதலுக்குப்பின் இன்னொரு மாறுதல் சாத்தியம் ஆகிறது. படிப்படியாக அதிகமதிக சாத்தியங்கள் வெளிப்படுகின்றன. எனவேதான் அவர் தர்க்க பூர்வமானவர் என்கிறேன்

நான். அவர் ஒரு தர்க்க ரீதியான தத்துவவாதி அல்லர். தர்க்க ரீதியான நடைமுறை மனிதர் அவர்.

**இரண்டாவது கேள்வி:**

**ஒரு மேலைச் சிந்தனையாளர் சந்தேகிக்கப்பட முடிகிற எல்லாவற்றையும் சந்தேகிக்கத் தொடங்கினார் என்றும் ஆனால் தன்னை அவரால் சந்தேகிக்க முடியவில்லை என்றும் நேற்று நீங்கள் சொன்னீர்கள். இறைமையை நோக்கிய மலர்ச்சியில் இது ஒரு மாபெரும் சாதனை என்றும் சொன்னீர்கள். அது எப்படி?**

உயர் பிரக்ஞையை நோக்கி நீங்கள் இயங்கத் தொடங்குகிறீர்கள் என்றால், சந்தேகத்துக்கு இடமற்ற ஒன்றை நீங்கள் பெற்றிருக்க வேண்டும் என்று பொருள். அதுவே விசுவாசம் என்பதன் பொருள். நீங்கள் முழுமையாக நம்பக் கூடியதும், சந்தேகப்பட விரும்பினாலும் சந்தேகப் பட முடியாததும் ஆன (குறைந்தது) ஒரே ஒரு அம்சமாவது உங்களிடம் இருக்கிறது. எனவேதான் நான் சொன்னேன், தன் தர்க்க விசாரணை மூலமாக தெஸ்கார்தே பின்வரும் முடிவான நிலைபாட்டுக்கு வந்தார் என்று: ''நம்மையே நம்மால் சந்தேகிக்க முடியாது. நான் இருக்கிறேன் என்பதை என்னால் சந்தேகிக்க முடியாது. ஏனெனில் 'நான் சந்தேகிக்கிறேன்' என்று சொல்லவும்கூட நான் என்பது இருந்தாக வேண்டும். 'நான் சந்தேகிக்கிறேன்' என்ற துணிபுரையே நான் இருக்கிறேன் என்பதையே நிரூபிக்கிறது.''

தெஸ்கார்தேயின் பிரபலமான மேற்கோள் வாசகமாகிய ''நான் சிந்திக்கிறேன், எனவே நான் இருக்கிறேன்'' என்பதை நீங்கள் கண்டிப்பாக கேள்விப்பட்டிருப்பீர்கள். சந்தேகிப்பதே சிந்திப்பதாகும். ஆயின், 'நான் சந்தேகிக்கிறேன், எனவே நான் இருக்கிறேன்.' ஆனால் இது ஒரு வாசல் - தொடக்கப்புள்ளி மட்டுமே. ஆனால் தெஸ்கார்தே ஒருபோதும் இதற்குமேல் செல்லவில்லை. திரும்பவும் அவர் திரும்பிவிட்டார். கதவுவரை வந்தபின்பும்கூட நீங்கள் திரும்பிப் போய்விட முடியும். ஒரு மையத்தை, சந்தேகத்துக்கிடமற்ற மையத்தை கண்டுகொள்வதிலேயே அவர் நிறைவுற்றார். அத்துடனேயே தன் தத்துவத்தை உருவாக்கத் தொடங்கிவிட்டார் அவர். எனவே முன்பு அவர் மறுத்ததை எல்லாம் பின்வாசல் வழியாக உள்ளே இழுத்துக் கொண்டு வந்தார்: ''நான் இருக்கிறேன். எனவே என்னைப் படைத்தவர் ஒருவரும் இருக்க வேண்டும்.'' எனவே கடவுள், அடுத்து சொர்க்கம், நரகம், பாவம், புண்ணியம் என கிறித்தவ இறையியல் முழுவதையும் புழக்கடை வழியாக உள்ளே கொண்டு வருமளவு போய்விட்டார்.

இதை ஒரு தத்துவ விசாரணையாக அவர் பயன்படுத்தினார். அவர் ஒரு யோகி அல்லர். உண்மையாகவே தன் ஜீவனை தேடியவர் அல்லர் அவர். ஒரு கோட்பாட்டையே அவர் தேடினார். ஆனால் அதனை வாசலாக நீங்கள் பயன்படுத்த முடியும். வாசல் என்றால் அதை நீங்கள் கடந்துசெல்ல வேண்டி இருக்கிறது. அப்பால் போக வேண்டி இருக்கிறது. தாண்டிச் செல்ல வேண்டி இருக்கிறது. அதனை அனுபவித்து வெளிவர வேண்டி இருக்கிறது. அதை நீங்கள் தொற்றிக் கொண்டிருக்கக் கூடாது. அதை நீங்கள் தொற்றிக் கொண்டால் பின் எந்த ஒரு வாசலும் அடைக்கப்பட்டதாகிவிடும்.

குறைந்த பட்சம் என்னை நான் சந்தேகிக்க முடியாது என்பதை உணர்தலும்கூட நல்லதே. அடுத்த சரியான நடவடிக்கை என்பது பின்வருமாறு இருக்கும்: ''என்னை என்னால் சந்தேகிக்க முடியாது என்றால், நான் இருக்கிறேன் என நான் உணர்ந்தால் பின் நான் யாராக இருக்கிறேன் என்பதை நான் அறிந்தாக வேண்டும்.'' இப்படிச் சிந்தித்தால் அது ஒரு சரியான விசாரணை ஆகிறது. இந்நிலையில் நீங்கள் சமயத்துக்குள் இயங்குகிறீர்கள். ஏனெனில் நான் யார்?'' என்று நீங்கள் கேட்கும்போது ஒரு அடிப்படையான கேள்வியை நீங்கள் கேட்டிருக்கிறீர்கள். இது தத்துவக் கேள்வி அல்ல. இருத்தலியல் கேள்வி. நீங்கள் யார் ஆக இருக்கிறீர்கள் என்பதற்கு வேறு எவரும் பதிலளிக்க முடியாது. வேறு யாரும் ஒரு தயாரான பதிலை உங்களுக்கு வழங்க முடியாது. நீங்களே தான் தேடியாக வேண்டும். உங்களுக்குள் நீங்களேதான் தோண்டியாக வேண்டும்

மேலும் முன்சென்று ''நான் யார்?'' என்று நீங்கள் கேட்காவிட்டால் பின் நான் இருக்கிறேன் என்பது மட்டுமே பெரிய பலன் தந்துவிடாது. மேலும், இது ஒரு கேள்வியும் அல்ல; இது ஒரு தேடல் - தொடர்ச்சியான தேடல். கேள்வியானது உங்களை தத்துவத்துக்குள் இட்டுச் செல்லலாம். தேடலோ உங்களைச் சமயத்துக்குள் இட்டுச் செல்கிறது. எனவே நீங்கள் யாரென உங்களுக்கே தெரியாது என நீங்கள் உணர்ந்தால் பின் வேறு எவரிடமும் போய் ''நான் யார்?'' என்று கேட்காதீர்கள். உங்களுக்குப் பதிலளிக்க எவராலும் முடியாது. உங்களுக்கு உள்ளேயே நீங்கள் மறைந்திருக்கிறீர்கள். நீங்கள் இருக்கிற அந்தப் பரிமாணம் வரைக்கும் உங்களை நீங்களே ஊடுருவி, எதிர்கொண்டாக வேண்டி உள்ளது.

வித்தியாசமான ஒரு பயணம் இது. உள்நோக்கிய பயணம் இது. நமது பயணங்கள் எல்லாம் வெளி நோக்கியவையே. வேறு ஒருவரை அடைவதற்கு நாம் பாலங்கள் அமைக்கிறோம். தேடல் என்று

வரும்போது மற்றவரை அடைவதற்கான பாலங்கள் அனைத்தையும் நீங்கள் தகர்க்க வேண்டி இருக்கிறது. வெளியில் நீங்கள் செய்திருக்கும் அனைத்தையும் துறக்க வேண்டி இருக்கிறது. உள்ளுக்குள்ளேயே புதியதாக ஒன்றைத் தொடங்க வேண்டி இருக்கிறது. இது கடினமானதாகவே இருக்கும். அதற்குக் காரணம், புறத்துடன், சேர்ந்து இறுகி கெட்டிதட்டிப் போனவராக நீங்கள் ஆகியிருக்கிறீர்கள். எப்போதுமே மற்றவர்களைப் பற்றியே நீங்கள் நினைக்கிறீர்கள். உங்களைப் பற்றி ஒருபோதும் நீங்கள் சிந்தித்துப் பார்ப்பதில்லை.

இது விநோதமே: எவருமே தன்னைக் குறித்து எண்ணிப் பார்ப்பதில்லை. மற்றவர்களைக் குறித்தே எண்ணுகிறார். அப்படியே சில சமயங்களில் உங்களைப்பற்றி நீங்கள் நினைத்துப் பார்த்தாலும், அப்போதும் அது மற்றவர்களுடன் உறவுடையதாகவே இருக்கிறது. ஒருபோதும் அது தனித்ததாயில்லை. உங்களைப்பற்றி மட்டுமே ஆனதாக அது இருப்பதில்லை. ஏனெனில் உங்களைப்பற்றி மட்டுமே நீங்கள் சிந்திக்கும் தருணத்தில், சிந்தித்தல் என்பது கைவிடப்பட வேண்டி இருக்கும். ஏனெனில் எதைக்குறித்து நீங்கள் சிந்திக்க முடியும்? மற்றவர்களைப் பற்றி உங்களால் சிந்திக்க முடியும். சிந்தித்தல் என்றாலே ஒன்றைப் 'பற்றி 'தான். உங்களையே பற்றி உங்களால் எதைச் சிந்திக்க முடியும்? சிந்திப்பதை நீங்கள் கைவிட வேண்டி இருக்கும். உள்ளுக்குள் நீங்கள் பார்க்க வேண்டி இருக்கும். எனவே தேவை சிந்தித்தல் அல்ல. பார்த்தல், காணல், அவதானித்தல், சாட்சியாயிருத்தல் என்பதே தேவை. மொத்த நிகழ்முறையும் மாறும். தன்னையே தான் பார்க்க வேண்டி இருக்கிறது.

சந்தேகிப்பது நல்லது. சந்தேகித்தால், தொடர்ச்சியாக நீங்கள் சந்தேகித்துக்கொண்டே வந்தால், நீங்கள் சந்தேகிக்கவே முடியாத கற்பாறை போன்ற ஒரே ஒரு நிகழ்வு மிச்சப்படும். அதுவே உங்களின் இருத்தல். பின் ஒரு புதிய தேடல் எழும். அது ஒரு கேள்வி அல்ல.'' ''நான் யார்'' என்றே நீங்கள் கேட்க வேண்டி இருக்கும்.

ரமண மகரிஷி தன் வாழ்நாள் முழுதும் தன் சீடர்களுக்கும் ஒரே ஒரு உத்தியை மட்டுமே கொடுத்துக் கொண்டிருந்தார். அவர் கூறுவார், ''பேசாமல் உட்காருங்கள். கண்களை மூடுங்கள். 'நான் யார், நான் யார்' என்று கேட்டுக்கொண்டே இருங்கள். அதை ஒரு மந்திரமாகப் பயன்படுத்துங்கள்.'' என்பார். ஆனால் அது ஒரு மந்திரம் அல்ல. மந்திரம் போன்ற செத்துப்போன சொற்களாக நீங்கள் பயன்படுத்துவதற் கல்ல அவை. அகத்தை ஊடுருவுவதாக அது ஆக வேண்டும்.

அதைக் கேட்டுக்கொண்டே போங்கள். நீங்கள் ஆன்மா என்றும், நீங்கள் சுயம் என்றும், நீங்கள் இறைமை என்றும் பல சமயங்களிலும் உங்கள் மனம் பலவிதமாகப் பதிலளிக்கும். ஆனால் இந்தப் பதில்களை கவனிக்காதீர்கள். இவை எல்லாம் இரவல் பதில்கள். இவற்றை எல்லாம் நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். அவற்றைப் பொருட்படுத்தாதீர்கள். நீங்கள் யார் என்பதை நீங்களாகவே அறிய வராதவரை மற்ற பதில்களை பொருட்படுத்தாதீர்கள். மேலும் தொடர்ச்சியாக மனத்தை ஒருபுறம் ஒதுக்கிக்கொண்டே போவீர்களானால் ஒருநாள் பெருவெடிப்பு நிகழ்கிறது. மனம் வெடித்துச் சிதறுகிறது. அத்துடன் எல்லா இரவல் அறிவும் உங்களிடமிருந்து மறைந்தொழிகிறது. மேலும் அப்போதுதான் முதல்முறையாக உங்களை நீங்கள் நேருக்குநேர் சந்திக்கிறீர்கள். உங்களுக்குள்ளே பார்க்கிறீர்கள். இதுவே தொடக்கம். இதுவே வழி. இதுவே தேடல்.

நீங்கள் யார் என்ற கேள்வியை கேளுங்கள். எளிதாகப் பெறப்படும் மலிவான பதில்களைத் தொற்றிக்கொண்டிருக்காதீர்கள் - மலிவான பதில்களுடன் திருப்தி அடைந்துவிடாதீர்கள். மற்றவர்கள் தரும் எல்லா பதில்களும் மலிவானவையே. உண்மையான பதில் உங்களுக்குள் இருந்தே வெளிவர முடியும். உண்மையான மலர் மரத்திலிருந்து மட்டுமே வெளிவரமுடியும் என்பதைப் போன்றதே இது. வெளியில் இருந்து அதை நீங்கள் பொருத்த முடியாது. அல்லது நீங்கள் பொருத்தலாம். ஆனால் அது காகிதப் பூவாகவே இருக்கும். மற்றவர்களை அது ஏமாற்றிவிடும். ஆனால் மரத்தை அதனால் ஏமாற்றமுடியாது. ''என் கிளையில் தொங்கிக் கொண்டிருக்கும் இது வெறும் காகிதப்பூதான். மேலும் இது வெறும் பாரம் மட்டுமே. இது ஒரு மலர்ச்சி அல்ல - மகிழ்ச்சி அல்ல. இது வெறும் சுமைதான்.'' அதனை மரம் கொண்டாட முடியாது. மரத்தால் அதனை வரவேற்க முடியாது.

வேர்களில் இருந்து வருகிற ஒன்றையே, தன் உள் உயிர்ப்பில் இருந்து - உள்ளார்ந்த மையத்தில் இருந்து - வருகிற ஒன்றையே மரம் வரவேற்க முடியும். மேலும், மரத்தின் உள்ளார்ந்த மையத்திலிருந்து வருகிறபோது மலர் மரத்தின் ஆன்மாவாக ஆகிறது. மேலும் மலரின் மூலம் மரம் தன் ஆடலை, பாடலை வெளிப்படுத்துகிறது. அதன் முழு வாழ்க்கையுமே அர்த்தம் நிறைந்ததாக ஆகிறது. அதைப்போலவே பதிலும் உங்களுக்குள் இருந்து, உங்கள் வேர்களில் இருந்து வரும்போதுதான். நீங்கள் ஆடிப்பாடுவீர்கள்; அப்போதுதான் உங்கள் வாழ்க்கை முழுவதும் அர்த்தமுள்ள தாகும்.

பதிலானது வெளியில் இருந்து தரப்படுமானால் அது ஒரு குறியாக, உயிரற்ற அடையாளமாக மட்டுமே இருக்கும். உள்ளிருந்து அது வருமானால் அது ஒரு குறியாக இராது. குறிப்பிடத்தக்கதாக / தனிச்சிறப்புடையதாக இருக்கும். குறி, குறிப்பிடத்தக்கது - இந்த இரண்டு சொற்களையும் நினைவில் கொள்ளுங்கள். குறி / குறிப்பு என்பது வெளியில் இருந்து வழங்க முடிவது. குறிப்பிடத்தக்க தன்மை / தனிச்சிறப்புடைய தன்மை என்பது உள்ளிருந்து மட்டுமே மலர முடிவது. குறியீடுகள், கருத்துகள், சொற்கள் ஆகியவற்றைக் கொண்டு தத்துவம் செயல்படுகிறது. குறிப்பிடத்தக்க தன்மையின்மீது சமயம் தொழில் படுகிறது. சொற்கள், குறிகள், அடையாளங்கள் ஆகியவற்றுடன் அதற்குத் தொடர்பில்லை.

ஆனால் அது உங்களுக்கு ஒரு சிரமமான பயணமாகவே இருக்கப் போகிறது. ஏனெனில் உண்மையில் யாராலும் உதவ முடியாது. அதைவிட எல்லா துணையாளர்களும் ஒருவகையில் தடையாளர்களாகவே இருக்கிறார்கள். யாராவது ஒருவர் அளவுக்குமீறி உங்களுக்கு வழிகாட்டி பதிலளிப்பாரானால் அவர் உங்களின் எதிரியே ஆவார். பதஞ்சலி உங்களுக்குப் பதில்தரப் போவதில்லை. பாதையைமட்டுமே அவர் உங்களுக்குக் சுட்டிக் காட்டுவார். எங்கிருந்து உங்களின் சுயமான பதில் எழுமோ, எங்கிருந்து உங்களின் பதிலை நீங்களே எதிர்கொள்ள முடியுமோ அங்கு போவதற்கான வழியை மட்டுமே அவர் சுட்டிக் காட்டுவார்.

மாபெரும் குருமார்கள் வழிகளை மட்டுமே தந்திருக்கிறார்கள். விடையை அவர்கள் தந்ததில்லை. தத்துவர்களே விடைகளை வழங்குகிறார்கள். ஆனால் பதஞ்சலி, யேசு, புத்தர் போன்றோர் விடைகளைத் தரவில்லை. நீங்கள் விடைகளைக் கேட்கிறீர்கள். அவர்களே வழிகளைத் தருகிறார்கள். உத்திகளையே வழங்குகிறார்கள். உங்கள் சொந்த முயற்சியின் மூலமே, உங்கள் துன்பத்தின்மூலமே, உங்கள் தீவிர ஈடுபாட்டின் மூலமே, உங்கள் தவத்தின் மூலமே, உங்களுக்குள் இருந்தே உங்களுக்கான விடையை நீங்கள் உருவாக்க வேண்டி இருக்கிறது. பதில் மட்டுமே வரமுடியும். அது குறிப்பிடத்தக்க தாக ஆக முடியும். அதன்மூலமே உங்களின் நிறைவேற்றம்.

**மூன்றாவது கேள்வி:**

***''சொற்களின்மூலம் வேறு யாருக்கும் உணர்த்த முடியாததை புத்தர் இறுதியாக மகா காசியபருக்கு உணர்த்தினார்'' - இது அறிவின் எந்த வகைப்பிரிவில் வருகிறது: நேரடி அறிவா,***

**ஊக அறிவா, அல்லது ஞானியின் வாய்மொழி அறிவா? அப்படி அவர் உணர்த்திய செய்தி என்ன?**

முதலில்: ''அந்தச் செய்தி என்ன?'' என்று கேட்கிறீர்கள். புத்தரே அதனை வார்த்தைகளால் உணர்த்த முடியவில்லை என்றால் என்னாலும் அதனை வார்த்தைகளால் உணர்த்த முடியாது. அது இயலாத ஒன்று.

உங்களுக்கு உவமைக்கதை ஒன்று கூறுவேன். முல்லா நசுருதீனிடம் ஒரு சீடன் வந்தான். அவன் முல்லாவிடம், ''உங்களிடம் ஒரு ரகசியம் - பரம ரகசியம் - இருக்கிறது, மறைபொருளின் எல்லா கதவுகளையும் திறக்க முடிகிற திறவுகோல் உங்களிடம் இருக்கிறது என்று கேள்விப்பட்டேன் என்றான்.'' நகருதீன் சொன்னார், ''ஆம், என்னிடம் இருக்கிறது. ஆனால் அதற்கென்ன இப்போது? ஏன் அதைப்பற்றிக் கேட்கிறாய்?'' என்றார். அம்மனிதன் அவர் கால்களில் நெடுஞ்சான் கிடையாக விழுந்தான். அவன் சொன்னான், ''உங்களைத்தான் தேடிக் கொண்டிருக்கிறேன் குருவே. அந்தத் திறவுகோல் அந்த ரகசியம் - உங்களிடம் இருந்தால் அதை எனக்குக் கூறுங்கள்.''

நசுருதீன் சொன்னார், ''அது அப்பேர்ப்பட்ட ரகசியம் என்றால் அதை அவ்வளவு எளிதில் சொல்லிவிட முடியாது என்பதையும் நீ புரிந்திருக்க வேண்டும். நீ காத்திருக்க வேண்டி வரும்'' என்றார். ''எவ்வளவுகாலத்துக்கு ?'' என்று கேட்டான் சீடன். நசுருதீன் சொன்னார், ''அதுவும் திட்டவட்டமானதல்ல. அது உன் பொருமையைப் பொறுத்தது. மூன்று ஆண்டுகளும் ஆகலாம் அல்லது முப்பது ஆண்டுகளும் ஆகலாம்.'' சீடன் காத்திருந்தான். மூன்று ஆண்டுகளுக்குப் பின் மறுபடியும் அவன் கேட்டான், ''மறுபடியும் நீ கேட்டால் மேலும் 30 ஆண்டுகள் பிடிக்கும். எனவே பேசாமல் காத்திரு. அது ஒரு சாமானிய விசயமல்ல. அதுவே அறுதி ரகசியம்'' என்றார் முல்லா.

முப்பது ஆண்டுகள் கழிந்தன. சீடன் சொன்னான், ''குருவே, இப்போது என் வாழ்க்கை முழுவதுமே வீணாகிவிட்டது. எனக்கு எதுவும் கிடைக்க வில்லை. இப்போதாவது எனக்கு அந்த ரகசியத்தை தாருங்கள். ''நகருதீன் சொன்னார்,'' அதற்கு ஒரு நிபந்தனை. அதை நீ ஒரு ரகசியமாக வைத்துக் காப்பாய் என்றும் யாரிடமும் அதை நீ வெளிப்படுத்த மாட்டாய் என்றும் எனக்கு நீ வாக்குறுதி தரவேண்டி இருக்கும்.'' அதற்கு அம்மனிதன், ''நான் சாகுமட்டும் அது ஒரு ரகசியமாகவே இருக்கும் என்று உங்களுக்கு நான் உறுதி கூறுகிறேன். அதை யாரிடமும் நான் குறிப்பிடவும் மாட்டேன். என்றான்.

நசுருதீன் சொன்னார், ''நன்றி.இதையேதான் என் குருவும்

கேட்டார். இதுவே என் குருவுக்கு நான் தந்த வாக்குறுதி. ஆனால் நீயே அதை உன் இறுதிவரை ரகசியமாக காப்பாற்ற முடியுமானால் என்னால் மட்டும் அந்த ரகசியத்தை இறுதிவரை காப்பாற்ற முடியாது என்றா நினைக்கிறாய்?'' என்றார்.

புத்தர் மவுனமாக இருந்தாரானால் நானும் அதைக்குறித்து மவுனமாக இருந்துவிட முடியும். சொல்லால் சொல்லிவிட முடியாத ஒன்று இருக்கிறது. அது ஒரு செய்தி அல்ல. ஏனெனில் செய்திகளை எப்போதும் சொல்லிவிட முடியும். ஆயின் அவை சொல்லப்பட்ட முடியாதவை என்றால் அவை செய்திகளாகவும் இருக்கமுடியாது. சொல்லப்படுகிற, சொல்லப்பட வேண்டிய, சொல்லப்படமுடிகிற ஒன்றே செய்தி. செய்தி என்பது எப்போதும் சொல்லால் ஆனதே.

புத்தரிடம் எந்தச் செய்தியும் இல்லை. எனவேதான் அவரால் அதை சொல்ல முடியவில்லை. அங்கே பத்தாயிரம் சீடர்கள் இருந்தார்கள். மகா காசியபர் மட்டுமே அதைப் பெற்றுக்கொண்டார். ஏனெனில் புத்தரின் மவுனத்தை அவரால் மட்டுமே புரிந்துகொள்ள முடிந்தது. அதுவே ரகசியத்தின் ரகசியம். மவுனத்தை அவரால் விளங்கிக் கொள்ள முடிந்தது.

ஒருநாள் காலையில் புத்தர் தன் மரத்தடியில் மவுனமாக வீற்றிருந்தார். உண்மையில் ஒரு பேருரை ஆற்றுவதற்காகவே அன்றைக்கு அங்கு அவர் அமர்ந்திருந்தார். அதைக் கேட்பதற்கே எல்லாரும் அங்கு கூடிக்காத்துக் கொண்டிருந்தார்கள். அவரோ நீடித்த மவுனத்தில் இருந்தார். சீடர்கள் மென்மேலும் அமைதி குலைந்தவர்கள் ஆனார்கள். அதற்குமுன் ஒருபோதும் அப்படி நடந்ததில்லை. முன்பெல்லாம் அவர் வருவார்,பேசுவார், போய் விடுவார்; ஆனால் அன்றோ அரைமணி நேரம் கடந்துவிட்டது. சூரியன் உதித்துவிட்டது. அதன் கூடிவரும் வெப்பத்தை, யாவரும் உணர்ந்தார்கள். வெளிப்பார்வைக்கு அங்கு அமைதி நிலவியது. ஆனால் உள்ளுக்குள் ஒவ்வொருவரும் அசவுகரியமாக உணர்ந்தார்கள். சளசளத்துக் கொண்டிருந்தார்கள். ''இன்றைக்கு ஏன் புத்தர் மவுனமாகி விட்டார்?'' என்று தமக்குள்ளே கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

அவரோ தன் மரத்தடியில் தன் கையில் ஒரு மலருடன் அமர்ந்திருக்கிறார். அவர் பேசுவதைக் கேட்கக் கூடிஇருந்த பத்தாயிரம் சீடர்கள் அவரைச் சூழ்ந்து இருப்பதை அறியாதவர்போல அந்த மலரையே அவர் பார்த்துக் கொண்டிருக்கிறார். அவர்கள் மிகமிக தொலைவில் இருந்த சிற்றூர்களில் இருந்தெல்லாம் வந்திருந்தார்கள். நாடு முழுவதிலும் இருந்து வந்து குழுமி இருந்தார்கள்.

கடைசியாக ஒருவர் ''ஏன் நீங்கள் பேசாமல் இருக்கிறீர்கள்? நீங்கள் பேசுவதைக் கேட்க நாங்கள் காத்துக் கொண்டிருக்கிறோம்'' என்று துணிந்து கேட்டு விடுகிறார். அதற்கு புத்தர் ''நான் பேசிக் கொண்டுதான் இருக்கிறேன். இந்த அரைமணி நேரமாக நான் பேசிக் கொண்டுதான் இருந்தேன்'' என்று பதில் சொன்னதாக எழுதப் பட்டுள்ளது.

இதுவோ மிகவும் சுய- முரண்பாடானதாகும். இது அபத்தமானது என்பது வெளிப்படை. அவர் மவுனமாகத்தான் இருந்தார். எதையுமே பேசாமல்தான் இருந்தார். ஆனால் ''நீங்கள் பேசுவது அபத்தம்'' என்று புத்தரிடம் சொல்வது சாத்தியமில்லை. எனவே மறுபடியும் அமைதியானார்கள் சீடர்கள். இப்போதோ இன்னும் அதிகமாய் குழம்பிப்போனார்கள்.

அப்போது திடீரென மகா காசியபர் என்னும் சீடர் சிரிக்கத் தொடங்கினார். அவரை அருகில் அழைத்தார் புத்தர். அவர் கையில் மலரைத் தந்து, ''சொல்ல முடியக் கூடியதை எல்லாம் மற்றவர்களுக்கு நான் சொல்லி விட்டேன். சொல்லப்பட முடியாததையோ உனக்கு நான் தந்திருக்கிறேன்.'' என்று சொன்னார். பூவைத்தான் அவரிடம் அவர் தந்தார். ஆனால் அந்த மலர் ஒரு குறியீடு மட்டுமே. மலருடன் குறிப் பிடத்தகுந்த ஒன்றையும் சேர்த்து அவர் அளித்திருக்கிறார். இந்த மலர் என்பது ஒரு குறியீடுதான். ஆனால் வார்த்தைகளால் உணர்த்த இயலாத வேறொன் றையும் அதனுடன் சேர்த்தே அவர் உணர்த்தி இருக்கிறார்.

சொற்களால் உணர்த்த இயலாத சில உணர்வுகளை நீங்கள் அறிவீர்கள். காதலில் நீங்கள் ஆழ்ந்திருக்கும்போது நீங்கள் என்ன செய்கிறீர்கள்? ''நான் உன்னை நேசிக்கிறேன், நான் உன்னைக் காதலிக்கிறேன்'' என்று வெறுமனே சொல்லிக்கொண்டே போவது அர்த்தமற்றது என்றே நீங்கள் உணர்வீர்கள். மேலும் அதை நீங்கள் அதிகப்படியாகச் சொன்னால் மற்றவர் அதனால் சலிப்படைந்து விடு வார். மேலும் நீங்கள் அதை திரும்பத்திரும்ப சொல்லிக்கொண்டே போனால் நீங்கள் ஒரு கிளிப்பிள்ளை என்றே மற்றவர் நினைப்பார். அன்பு என்றால் என்ன என்பதை அறியாதவராகவே உங்களை அவர் கருதுவார்.

காதலை நீங்கள் உணரும்போது நீங்கள் காதலிப்பதாக வாய் விட்டுக் கூறுவதும் பொருளற்றதே. ஏதாவது ஒன்றை நீங்கள் செய்ய வேண்டி இருக்கிறது - குறிப்பிடத்தகுந்த முக்கியத்துவமுடைய ஒன்றை செயலில் காட்ட வேண்டி இரக்கிறது. அது ஒரு முத்தமாக இருக்கலாம்.

அது ஒரு தழுவலாக இருக்காலம். மற்றவரின் கையை உங்கள் கைக்குள் அனைத்துக்கொள்வதாகக்கூட அது இருக்கலாம். வேறு எதையும் நீங்கள் செய்யாது இருக்கலாம். ஆனாலும் இதில் ஒரு குறிப்பிடத்தக்க தன்மை இருக்கிறது. வார்த்தைகளால் தெரியப்படுத்திவிட முடியாத ஏதோ ஒன்றை நீங்கள் தெரியப்படுத்திக்கொண்டிருக்கிறீர்கள்.

சொற்களால் உணர்த்த முடியாத ஒன்றைப் புத்தர் உணர்த்தினார். மலரை அவர் தந்தார். அது ஒரு பரிசு. அந்தப் பரிசு கண்ணுக்குப் புலனாவது. கண்ணுக்குப் புலனாகாத ஒன்றும் அந்தப் பரிசுடன் சேர்ந்து கைமாறுகிறது.

உங்கள் நண்பரின் கரத்தை உங்களின் கரங்களுக்குள் நீங்கள் அனைத்துக் கொள்ளும்போது அது கண்ணுக்குப் புலப்படுவதாக இருக்கிறது. வெறுமனே உங்கள் நண்பரின் கரத்தை உங்களின் கரங்களுக்குள் பற்றிக் கொள்வது என்பது பெரிதாக எந்த உணர்வையும் தருவதில்லை. ஆனால் அதனுடன் வேறொன்றும் சேர்ந்து கடத்தப் படுகிறது. ஒரு ஆற்றலும் அதனுடன் சேர்ந்து பரிமாறப்படுகிறது. ஒருவித ஆற்றல், ஒருவித உணர்வு; சொற்கள் வெளிப்படுத்த முடியாத அளவுக்கு ஆழமான ஒன்று கைமாறிக் கொண்டிருக்கிறது. இது ஒரு அடையாளம். கை என்பது ஒரு குறியீடு மட்டுமே. குறிப்பிடத் தக்கதோ கண்ணுக்குப் புலப்படுவதில்லை. அது கடந்து செல்வது. அது ஒரு செய்தி அல்ல. அது ஒரு பரிசு. அது ஒரு அருள்.

புத்தர் தன்னையே தந்திருக்கிறார். அவர் எந்தச் செய்தி செய்தியும் வழங்கவில்லை. தன்னையே மகாகாசியபருக்குள் ஊற்றிவிட்டிருக்கிறார். இரண்டு காரணங்களுக்காக மகாகாசியபர் இதைப் பெறும் தகுதி யுடையவர் ஆனார். ஒன்று, புத்தர் அமைதியாக இருந்த போது மகா காசியபரும் முழு அமைதியில் தங்கி இருந்தார். மற்றவர்களும் வெளிப்பார்வைக்கு அமைதியாகவே தெரிந்தார்கள். ஆனால் அவர்கள் அமைதியாக இருக்கவில்லை. ''ஏன் புத்தர் பேசாமல் இருக்கிறார்'' என்று தொடர்ச்சியாக அவர்கள் யோசித்துக் கொண்டிருந்தார்கள். ஒருவரை ஒருவர் திரும்பிப் பார்த்துக் கொண்டும் சைகைகள் செய்துகொண்டும் இருந்தார்கள்: ''இன்று புத்தருக்கு என்ன நேர்ந்துவிட்டது? அவருக்கு மூளை திரிந்துவிட்டதா? இதுவரை ஒருபோதும் அவர் இப்படி இருந்ததில்லையே. என்று.

யாருமே அமைதியாக இருக்கவில்லை. அந்தப் பத்தாயிரம் பிட்சுகளும் கூடியிருந்த மாபெரும் சபையிலே மகா காசியபர் மட்டுமே அமைதியாக இருந்தார். அவர் மனம் சலனம் அடையவில்லை. எதையும்

அவர் எண்ணவில்லை. புத்தர் மலரைப் பார்த்துக் கொண்டிருந்தபோது மகாகாசியபர் புத்தரைப் பார்த்துக் கொண்டிருந்தார். மேலும் புத்தரைக் காட்டிலும் மேலான மலரை நீங்கள் காணமுடியாது. மனித உணர்வின் மிக உயர்ந்த மலர்ச்சியே புத்தர். ஆக புத்தர் தொடர்ந்து மலரைப் பார்த்துக் கொண்டிருந்தார். காசியபரோ தொடர்ந்து புத்தரை பார்த்துக் கொண்டிருந்தார். இரண்டு மனிதர்கள் மட்டுமே எதையும் எண்ணாமல் இருந்தார்கள். புத்தர் எதையும் எண்ணவில்லை. அவர் வெறுமனே பார்த்துக்கொண்டிருந்தார். அப்படியே மகாகாசியபரும் எதையும் எண்ணவில்லை. அவரும் வெறுமனேபார்த்துக் கொண்டிருந்தார். பெற தகுதியானவராக அவரை ஆக்கிய முதல் விசயம் இதுதான்.

இரண்டாவது விசயம், அவர் சிரித்தார் என்பது. அமைதியானது கொண்டாட்டமாக ஆக முடியாவிட்டால், அமைதியானது சிரிப்பாக ஆகமுடியாவிட்டால், அமைதியானது நடனமாக ஆகமுடியாவிட்டால், அமைதியானது ஆனந்தமாக ஆக முடியாவிட்டால் பின் அது நோய்க் கூறாகவே ஆகும். பின் அது சோகமாகவே ஆகும். பின் அது நோயாகவே மாறும். அந்த அமைதியானது உயிருள்ளதாக இராது. இறந்ததாகவே இருக்கும்.

சவம் ஆவதன் மூலமே நீங்கள் அமைதியாகிவிடவும் முடியும். ஆனால் அந்நிலையில் நீங்கள் புத்தரின் அருளைப் பெறமாட்டீர்கள். அந்நிலையில் இறைமை உங்களுக்குள் இறங்க முடியாது. இறைமைக்குத் தேவை இரு காரியங்கள்: ஒன்று, மோனம். மற்றது, கொண்டாட்டம் உயிர்ப்பு. ஆனந்த அமைதி, உயிருள்ள அமைதி. ஆகவே அந்தக் கணத்தில் அவர் இரண்டுமாக இருந்தார். அவர் அமைதியில் இருந் தார். அத்துடன், மற்ற ஒவ்வொருவரும் தீவிரத்தன்மையில் இருந்த போது அவர் மட்டுமேசிரித்தார். புத்தர் தன்னையே அவருள் பொழிந்து விட்டார். அது ஒரு செய்திப் பொழிவு அல்ல.

இந்த இரண்டு நிலைகளையும் அடையுங்கள். அப்போதுதான் நான் என்னை உங்களுக்குள் ஊற்ற முடியும். அமைதியாய் இருங்கள். மேலும் அந்த அமைதியை ஒரு சோக மாக ஆக்காதீர்கள். அதை ஒரு சிரிப்பாகவும் நடனமாகவும் இருக்கவிடுங்கள். அந்த அமைதியானது குழந்தைத்தன்மையோடு கூடியதாக இருக்கட்டும். ஆற்றல் நிரம்பி வழிவதாக இருக்கட்டும். உயிர்த்துடிப்புள்ளதாக, பரவசம் மிக்கதாக இருக்கட்டும். அது செத்துப்போன சவமாக இருக்கவேண்டாம். அப்போது மட்டுமே மகா காசியபருக்கு புத்தர் செய்ததை உங்களுக்கும் செய்ய முடியும்.

என்றாவது ஒருநாள், எவராவது ஒருவர் மகாகாசியபராக ஆகவேண்டும் என்பதே என் முழு முயற்சியும் ஆகும். ஆனால் அது செய்திப் பரிமாற்றம் அல்ல.

**நான்காவது கேள்வி:**

***பெரும்பாலான மறைநூல்களில் ஏராளமான இடைச் செருகல்கள் செய்யப்பட்டுள்ளன என்று பலதடவைகள் நீங்கள் கூறி இருக்கிறீர்கள். பதஞ்சலியின் யோக சூத்திரமும் இந்தக் குறைபாட்டுக்கு ஆளாகி உள்ளதா? அப்படியானால் அதை நீங்கள் எப்படிக் கையாள்கிறீர்கள்?***

இல்லை. பதஞ்சலியின் யோக சூத்திரங்கள் முற்றிலும் தூய்மை கெடாமல் உள்ளன. எவரும் ஒருபோதும் அதில் எவ்வித இடைச்செருகலும் செய்ததில்லை. அதைச் செய்ய முடியாததற்கு காரணங்கள் உள்ளன.முதலாவது, பதஞ்சலியின் யோக சூத்திரங்கள் ஒரு பொதுஜன சாத்திரம் /இலக்கியம்அல்ல.ஒரு கீதையோ, ஒரு ராமாயணமோ ஒரு பைபிளோ அல்ல.சாமானியரான மக்கள் கூட்டம் ஒருபோதும் அதில் ஆர்வம் காட்டியதில்லை. பொதுமக்கள் ஒன்றில் ஆர்வம் காட்டினால் அதை அவர்கள் அசுத்தப்படுத்தி விடுகிறார்கள். அது அப்படி ஆகித்தான் தீரும். ஏனெனில் அப்போது குறிப்பிட்ட சாத்திரம் அவர்களின் மட்டத்துக்கு கீழிறங்க வேண்டி இருக்கிறது பதஞ்சலியின் யோக சூத்திரங்கள் நிபுத்துவம் உடையவர்களுக்கு மட்டுமே ஆன நூலாகவே இருந்து வந்திருக்கிறது. தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சிலரே அதில் அக்கறை கொள்வார்கள். எவரானாலும் அதில் அக்கறை கொண்டுவிடமுடியாது. மேலும் அப்படியே ஒரு வேளை தற்செயலாக உங்கள் கையில் பதஞ்சலியின் யோக சூத்திரங்கள் கிடைக்க நேர்ந்தாலும் ஒருசில பக்கங்களை மட்டுமேஉங்களால் வாசிக்கமுடியும். அதன் பிறகு தூக்கி எறிந்து விடுவீர்கள். அது உங்களுக்கானது அல்ல. அது ஒரு கதை அல்ல நாடகம் அல்ல. உருவகக் கதை அல்ல. அது ஒரு தூய அறிவியல் ஆய்வு நூல். ஒரு சிலருக்கே ஆனது.

மேலும் அது எழுதப்பட்டிருக்கிற விதம் எப்படிப்பட்டது என்றால் அதற்கு தகுதியாக - ஆயத்தமாக இல்லாதவர்கள் தன்னைப் போல அதற்கும் தம் புறமுதுகு காட்டிவிடுவார்கள். இதைப்போன்ற நடைமுறை இந்த நூற்றாண்டில் குருட்ஜீப்பின் விசயத்திலும் நடந்துள்ளது. தொடர்ந்து முப்பது ஆண்டுகளாக அவர் ஒரு நூலை விடாமல் தயாரித்துக் கொண்டிருந்தார். குருட்ஜீப்புக்கு இணையான திறமை உள்ள எவரும் அப்பணியை மூன்று நாட்களில் முடித்துவிட

முடியும். மூன்று நாள்கள் என்பது கூடத் தேவைக்குமேல் அதிகமான காலம்தான். லாவோசு இதை சாதித்திருக்கிறார்.மூன்றே நாட்களில் தாவா தே ச்சிங் முழுவதையும் அவர் எழுதி முடித்து விட்டார். குருட்ஜீப்பும் தன் நூலை மூன்று நாள்களில் முடித்திருக்க முடியும். அதில் எந்த சிரமமும் இல்லை. ஆனால் முப்பது ஆண்டுகள் அவர் தன் முதல் நூலை எழுதிக் கொண்டிருந்தார். அவர் அதை எப்படிச் செய்தார்? ஒரு அத்தியாயத்தை எழுதுவார். பின் தன் சீடர்கள் முன் அதைப் படிக்க விடுவார். அந்த அத்தியாயத்தை சீடர்கள் கவனித்துக் கொண்டிருப்பார்கள். சீடர்களை அவர் கவனித்துக் கொண்டிருப்பார். அவர்களுக்கு அது புரியும்படி இருந்தால் அதை அவர் மாற்றிவிடுவார். அதுதான் அவருடைய அளவுகோல். அவர்களுக்கு புரிகிற மாதிரி இருந்தால் அதை அவர் மாற்றி எழுதுவார். அதை அவர்கள் விளங்கிக் கொள்கிறார்கள் என்று கண்டால் அது தவறானது. இப்படி தொடர்ச்சியாக முப்பது ஆண்டுகள் ஒவ்வொரு அத்தியாயமும் ஆயிரத்து ஒரு தடவைகள் வாசித்துக் காட்டப்பட்டது. திருத்தி எழுதப்பபட்டது. ஒவ்வொரு தடவையும் அவர் கவனித்துக் கொண்டிருந்தார். அந்த நூலை புரிந்து கொள்வது முற்றிலும் இயலாது என்னும் நிலை வந்ததும், எவரும் அதைப் படித்துப் புரிந்து கொள்ள முடியாத அளவுக்கு அது ஆனதும்...

மிகவும் புத்திசாலியான மனிதர்கூட குறைந்தது ஏழு தடவைகள் அந்நூலை வாசிக்க வேண்டி இருக்கும். பிறகுதான் அர்த்தக் கீற்றுகள் காட்சிகள் வெளிப்படத் தொடங்கும். அப்போதும் அது கீற்றுகளாகவே இருக்கும். மேலும் அதிகமாய் ஊருடுருவிக் காண அவர் விரும்பினால் அதில் சொல்லப்பட்டிருப்பவற்றை எல்லாம் அவர் நடைமுறைப்படுத்திப் பார்க்க வேண்டி இருக்கும். நடைமுறையின் மூலமே அர்த்தங்கள் மேலும் தெளிவாக ஆகும். இவ்வகையில் அவர் எழுதி இருப்பதை முழுவது மாகப் புரிந்து கொள்ளும் நிலையை அடைய குறைந்தபட்சம் ஒருவரின் முழு ஆயுளே தேவைப்படும்.

இப்படிப்பட்ட நூலில் இடைச்செருகல் செய்ய முடியாது. உண்மையில் அவரது முதல் நூலை முழுமையாகக் கற்றவர்கள் மிகச் சிலரே என்று சொல்லப்படுகிறது. அது கடினம் தான். ஆயிரம் பக்கங்கள் கொண்ட நூல் அது. எனவே முதல் பதிப்பு வெளியிடப்பட்ட போது அதை ஒரு ஒப்பந்த விதியுடன் அவர் வெளியிட்டார். முகவுரைப் பகுதியான நூறு பக்கங்கள் மட்டுமே பிரித்துப் படிக்கும்படி வெட்டப்பட்டிருந்தது. மற்ற பக்கங்கள் அனைத்தும் வெட்டப்படவில்லை. அவை திறக்க முடியாதபடி விடப்பட்டிருந்தன. நூறு பக்கங்கள் மட்டுமே வெட்டப்பட்டன. மேலும் புத்தகத்தின் மேல் ஒரு குறிப்பும் தரப்பட்டது.

அதாவது ''முதல் நூறு பக்கங்களைப் படித்தபின்பும் மேற்கொண்டும் படிக்க நீங்கள் கருதினால் மற்ற பக்கங்களை பிரித்துக் கொள்ளவும். இல்லாவிட்டால் நூல் வெளியீட்டாளருக்குத் திருப்பி அனுப்பி உங்கள் பணத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்''.

இன்று உயிரோடிருக்கிறவர்களில் அந்த நூல் முழுவதையும் படித்தவர்கள் மிகச் சிலரே என்று சொல்லப்படுகிறது. உங்களுக்கு பெரும் சலிப்பு-கடுப்பு ஏற்படுத்தும் ஒரு நடையிலேயே அது எழுதப்பட்டிருக்கிறது.இருபது - இருபத்தைந்து மக்கள் வாசித்தாலே போதும், அந்த மனிதர் ஒரு பைத்திக்காரராக தோன்றுகிறார்.

இவை சூத்திரங்கள். பதஞ்சலியின் சூத்திரங்கள் ஒவ்வொன்றும் ஒரு விதையின் அளவுக்குச் செறிவாக்கப்பட்டிருக்கிறது. என்னிடம் ஒருவர், ''பதஞ்சலி சூத்திரங்களாக சுருக்கி இருக்கிறார்...'' ஆனால் அந்த சூத்திரங்களின் மீது நீங்கள் இவ்வளவு விரிவாகப் பேசுகிறீர்களே'' என்று கேட்டார். நான் பேசத்தான் வேண்டி இருக்கிறது. ஏனெனில் அவர் ஒரு மரத்தை ஒரு விதையாகக் குறுக்கி உள்ளார். எனவே நானும் விதையை மறுபடியும் ஒரு மரமாக விரிக்க வேண்டி உள்ளது.

ஒவ்வொரு சூத்திரமும் சுருக்கப்பட்டுள்ளது. முற்றிலுமாக சுருக்கப்பட்டுள்ளது. அதற்குள் நீங்கள் எதுவும் செய்ய முடியாது. மேலும் யாருக்கும் அதில் ஆர்வமும் இல்லை. புத்தகத்தை எப்போதுமே தூய்மைகெடாமல் வைக்க உள்ள முறைகளில் இது ஒன்று. மேலும் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வரை இந்த நூல் எழுதப்படவுமில்லை. சீடர்களால் அது மனமும் செய்யப்பட்டே வந்தது. ஞாபகம் மூலமே ஒருவரிடமிருந்து மற்றவருக்கு அது கையளிக்கப்பட்டு வந்தது. அது எழுதப்படவில்லை எனவே அதில் எவரும் எதுவும் செய்துவிட முடியவில்லை. அது ஒரு புனித நினைவாகப் போற்றிப் பாதுகாக்கப் பட்டது. மேலும் அந்நூல் எழுதப்பட்டபோதும், எதையாவது அதில் நீங்கள் சேர்த்தாலும் உடனடியாகக் கண்டு பிடிக்க முடிகிற விதத்திலேயே அது எழுதப்பட்டது.

பதஞ்சலிக்கு நிகரான பண்பாற்றல் கொண்ட ஒருவர் முயன்றால் ஒழிய அப்படி எதுவும் செய்ய முடியாது. சற்றே நினைத்துப் பாருங்கள். ஐன்ஸ்டீனின் சூத்திரம் ஒன்று உங்கள் வசம் இருந்தால் அதை வைத்து நீங்கள் என்ன செய்ய முடியும்? எதை நீங்கள் செய்தாலும் உடனடியாகப் பிடிபட்டு விடுவீர்கள். ஐன்ஸ்டீனைப் போன்ற ஒரு மனம் அதில் ஏதேனும் விளையாடிவிட்டால் ஒழிய உங்களால் எதுவும் செய்ய முடியாது. சூத்திரமானது முழுமை பெற்றதாக இருக்கிறது. எதையும் அதில் இனி

சேர்க்கமுடியாது. எதையும் அதிலிருந்து நீக்கவும் முடியாது. தன்னளவில் அது ஒரு முழுமையான அளவாக இருக்கிறது. அதில் நீங்கள் எதைச் செய்தாலும் கண்டுபிடிக்கப்பட்டு விடுவீர்கள்.

இவைகள் விதைபோல் வீரியமுள்ள சூத்திரங்கள். ஒரே ஒரு சொல்லை அதில் நீங்கள் சேர்த்தாலும் யோகப் பாதையில் இயங்கிக் கொண்டிருக்கும் எவரும் உடனடியாக அது தவறானது என அறிவித்துவிட முடியும்.

உங்களுக்கு ஒரு சிறு எடுத்துக்காட்டு தருகிறேன். அது இந்த நூற்றாண்டிலேயே நடந்தது. இந்தியாவின் மாபெரும் கவிஞர்களில் ரவீந்திரநாத தாகூர் ஒருவர். அவர் தன் நூலான கீதாஞ்சலியை தானே வங்காளத்தில் இருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். அவரே அதை மொழி பெயர்த்தார். பின் அந்த மொழிபெயர்ப்பு சரியாயுள்ளதா இல்லையா என்று சற்றே தயங்கினார். எனவே மகாத்மா காந்தியின் நண்பர்களில் ஒருவரும் அவருடைய சீடர்களில் ஒருவருமாகிய சி.எப்.ஆண்ட்ரூசிடம் அதைத் தந்து ''இதை வாசித்துப் பாருங்கள். மொழிபெயர்ப்பு எப்படி வந்திருக்கிறது என்று பாருங்கள்'' என்று கேட்டார். சி.எப்.ஆண்ட்ரூஸ் கவிஞர் அல்ல. அவர் ஒரு ஆங்கிலேயர். சிறந்த படிப்பாளி. மொழியையும் இலக்கணத்தையும் எல்லாவற்றையும் கரைத்துக் குடித்தவர். ஆனால் அவர் ஒரு கவிஞர் அல்ல.

எனவே நான்கு இடங்களில் - நான்கு கட்டங்களில் குறிப்பிட்ட சொற்களை மாற்றுமாறு ரவீந்திர நாதருக்கு அவர் யோசனை சொன்னார். ''அவை இலக்கண ரீதியாகப் பிழையானவை. ஆங்கிலேயர்கள் அவற்றை விளங்கிக்கொள்ள மாட்டார்கள்.'' எனவே ஆண்ட்ரூஸ் சொன்ன இடங்களை அவர் சொன்னபடியே மாற்றினார் ரவீந்திரநாதர். தன் மொழி பெயர்ப்பில் மொத்தத்தில் நான்கே சொற்களைத்தான் அவர் மாற்றினார். பிறகு லண்டனுக்கு சென்றார். முதன்முதலாக ஒரு கவிஞர்கள் கூட்டத்தில்... அவர் காலத்தில் வாழ்ந்த ஆங்கிலக் கவிஞர்களில் ஒருவரான யீட்ஸ் என்பார் அந்தக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார். முதன்முறையாக அங்குதான் அந்த மொழிபெயர்ப்பு வாசிக்கப்பட்டது.

மொழிபெயர்ப்பு முழுமையும் வாசிக்கப்பட்டபோது ஒவ்வொருவரும் கவனித்தார்கள். ''நீங்கள் ஏதாவது திருத்தம் கூறுகிறீர்களா? ஏனெனில் இது ஒரு மொழிபெயர்ப்பு மட்டுமே. மேலும் ஆங்கிலம் என் தாய்மொழி அல்ல என்று கேட்டார்.

ஆயின் கவிதையை மொழியெர்ப்பது மிகவும் கடினமான ஒரு காரியம்தான். ரவீந்திர நாதருக்கு இணையான சிறந்த கவிஞரான யீட்ஸ் சொன்னார், ''நான்கே நான்கு இடங்களில்தான் ஏதோ தவறு

தென்படுகிறது.'' சரியாக அந்த நான்கு இடங்கள் என்பவை, ஆண்ட்ரூஸ் திருத்தச் சொல்லித் திருத்திய அதே இடங்களாகவே இருந்தன!

ரவீந்திரரால் அதை நம்ப முடியவில்லை. அவர் கேட்டார், ''எப்படி? அதை நீங்கள் எப்படி கண்டுபிடிக்க முடிந்தது? ஏனெனில் அந்த நான்கு சொற்கள்தான் நான் மொழிபெயர்க்காத சொற்கள். ஆண்ட்ரூஸ் தான் அந்தச் சொற்களைக் கூறினார். நானும் அப்படியே போட்டுவிட்டேன்.''

அதற்கு யீட்ஸ் சொன்னார், ''முழுக் கவிதையும் ஒரு நீரோட்டம்போல் உள்ளது. இந்த நான்கு சொற்கள் மட்டுமே கற்களைப்போல் மேலே துருத்திக்கொண்டு உள்ளன. இதனால் ஓட்டம் தடைபடுகிறது. அந்த இடத்தில் மொழி பெயர்த்தது வேறு யாரோ என்றே தோன்றிவிடுகிறது.உங்கள் மொழி இலக்கண ரீதியாக இல்லாதிருக்கலாம். உங்கள் மொழி நூறுசதவீதம் சரியானதாக இல்லாதிருக்கலாம். அப்படி இருக்கவும் முடியாது. அதை எம்மால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனாலும் அது நூறு சதவீதம் கவிதை. இந்த நான்கு சொற்களும் ஒரு பள்ளி வாத்தியாரிடமிருந்தே வந்துள்ளன. இலக்கணம் சரியாக இருக்கிறது. ஆனால் கவிதை தவறாகப் போய்விட்டது.'' என்றார்.

பதஞ்சலியில் நீங்கள் ஒன்றும் செய்ய முடியாது. யோகப் பயிற்சியில் ஈடுபட்டிருக்கும் எவரும் உடனடியாக அதைக் கண்டுபிடித்துவிடுவார் - எதுவும் தெரியாத யாரோ ஒருவர் குறிப்பிட்ட ஓரிடத்தில் இடைச் செருகல் செய்துவிட்டார் என கண்டுபிடித்துவிடுவார். இன்னமும் சுத்தம் கெடாத நூல்கள், இன்றுவரை தமது தூய்மையைத் தக்க வைத்துக்கொண்டுள்ள நூல்கள் மிகச் சிலவே. இது அவற்றில் ஒன்று. எதுவுமே மாற்றப்படவில்லை; ஒரே ஒரு சொல்லில்கூட மாற்றம் எதுவும் சேர்க்கப்படவுமில்லை. எப்படி இருக்கவேண்டும் என்று பதஞ்சலி உளம்கொண்டாரோ அப்படியே அது இருக்கிறது.

இது ஒரு புறவயமான கலைப்படைப்பாகும். புறவயமான கலைப்படைப்பு என்று நான் கூறும்போது ஒரு குறிப்பிட்ட விசயத்தை நான் பொருள்படுத்துகிறேன். எல்லாவிதமான முன்னெச்சரிக்கையும் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. இந்தச் சூத்திரங்கள் இயற்றப்பட்ட, சுருக்கப்பட்ட போது அவை நாசமாக்கப்பட முடியாத படிக்கு ஒவ்வொரு முன்னெச்சரிக்கையும் மேற்கொள்ளப்பட்டிருந்தது. அந்நியமான எதுவும் அயலான அம்சம் எதுவும் ஒரு அபசுரமாக ஆகாத வகையில் அவை கட்டமைக்கப்பட்டுள்ளன. ஆனாலும் பதஞ்சலிக்கு ஈடானு ஒருவர் முயன்றால் அவரால் அதைச் செய்துவிட முடியும் என்றும் நான் கூறுவேன்.

ஆனால் பதஞ்சலியைப் போன்ற ஒருவர் அத்தகைய ஒரு முயற்சியை ஒருபோதும் செய்யமாட்டார். அவரினும் கீழான மனங்களே எப்போதும் இடைச்செருகலுக்கு முயலும். மேலும் கீழ்நிலை மனங்கள் அதைச் செய்ய முயன்றாலும்கூட அது பொதுமக்கள் நுகர்வுக்கானதாக ஆகும்போது மட்டுமே அந்த இடைச்செருகல்கள் நிறைந்த படைப்பு அப்படியே தொடரவும் முடியும். பொதுமக்கள் விழிப்புடன் இருப்பதில்லை. இருக்கவும் முடியாது. ஏதோ ஒன்று இடறுகிறது என்பதை யீட்சால் மட்டுமே உணர்ந்து கொள்ள முடியும். அதே கூட்டத்தில் மேலும் பலர் இருந்தார்கள். ஆனால் அவர்களில் யாரும் உணரவில்லை.

இது ஒரு ரகசிய சமய மரபாகும், ரகசிய பாரம்பரியம் ஆகும். மேலும் புத்தகம் எழுதப்பட்டிருந்தாலும்கூட புத்தக வடிவம் நம்பகமானது என்று கருதப்படவில்லை. புத்தகத்தில் இருந்தல்லாமல் தம் குருவிடமிருந்து நேரடியாகவே பதஞ்சலியின் சூத்திரங்களை பெற்றிருக்கிறவர்களில் சிலர் இப்பவும் உயிரோடிருக்கிறார்கள். அந்த மரபு இன்னமும் உயிருடனேயே இருக்கிறது. இனியும் அது தொடரும். ஏனெனில் புத்தகங்களைச் சார்ந்திருக்க இயலாது. சில சமயங்களில் புத்தகங்கள் தொலைந்துவிட முடியும். பல காரியங்கள் புத்தகங்களில் தவறாகப் போய்விடமுடியும்.

எனவே ஒரு ரகசிய மரபு நிலவுகிறது. அந்த மரபு தொடர்ந்து நிலைநிறுத்தப்பட்டு வந்திருக்கிறது. மேலும் தம் குருவிடம் வாய்மொழிமூலம் அறிந்தவர்கள் புத்தக வடிவில் ஏதேனும் தவறாகி உள்ளதா அல்லது ஏதாவது மாற்றப்பட்டுள்ளதா என்பதை சோதித்துப் பார்த்துக்கொண்டுதான் வருகிறார்கள்.

மற்ற வகை மறைநூல்களில் இந்த மரபு பேணப்படவில்லை. பைபிளில் ஏராளமான இடைச்செருகல்கள் உள்ளன. எந்த அளவுக்கு என்றால் யேசு திரும்பி வந்தால் இடையில் என்ன நேர்ந்தது, எப்படி இந்த சொற்கள் உள்ளே வந்தன என்பதை அவரால் புரிந்துகொள்ளவே முடியாது. ஏனெனில் யேசு இறந்து இருநூறு ஆண்டுகள்....இருநூறு ஆண்டுகள் கழித்தே பைபிளானது முதல்முறையாக ஏட்டில் பதிவுசெய்யப்பட்டது. அந்த இருநூறு ஆண்டுகளில் பல விசயங்கள் மறைந்துவிட்டன. அவரது சீடர்களேகூட கதையை ஆளுக்கொரு விதமாகவே கூறி இருக்கிறார்கள்.

புத்தர் இறந்தார். அவர் இறந்து ஐநூறு ஆண்டுகளுக்குப் பிறகே அவரது பேச்சுக்கள் பதிவு செய்யப்பட்டன. பல சிந்தனைப்பள்ளிகள், பலவித சாத்திர நூல்கள் இருக்கின்றன. அவற்றில் எது சரி எது தவறு

என்பதை யாராலும் சொல்ல முடியாது. மேலும் புத்தர் பொதுமக்களிடமே பேசிக்கொண்டிருந்தார். எனவே பதஞ்சலியைப்போல அவர் சுருக்கவில்லை. பொதுமக்களிடமே, சாமானியமான பாமர மக்களிடமே அவர் பேசினார். மிகவும் விரிவாக எடுத்துரைத்தார். அந்த விரிவுரைகளில் பல விசயங்கள் செருகப்பட முடியும். பல விசயங்கள் அகற்றப்படமுடியும். ஆனால் என்ன என்ன மாற்றங்கள் நடந்திருக்கிறது என்பதை யாரும் அறியப்போவதில்லை.

ஆனால் பதஞ்சலியோ பொதுமக்களிடம் பேசிக்கொண்டிருக்க வில்லை. தேர்ந்தெடுத்த மிகவும் சிலர் அடங்கிய ஒரு குழுவிடமே அவர் சொல்லிக் கொண்டிருந்தார். குருட்ஜீப்பும் அப்படித்தான். குருட்ஜீப் ஒருபோதும் பொதுமக்களிடம் பேசியதில்லை. அவரது சீடர்களில் இருந்தும் நன்கு சலித்தெடுத்த ஒரு குழுவே அவர் உரையை கவனிக்க முடிந்தது; அதுவும் பல நிபந்தனைகளுக்கு உட்பட்டே இருந்தது. எந்தச் சந்திப்பும் ஒருபோதும் முன்கூட்டி அறிவிக்கப்படவில்லை. இன்று இரவு எட்டரை மணிக்கு அவர் பேசப்போகிறார் என்றால் சுமார் எட்டு மணிக்குத்தான் 'எங்கேயோ குருட்ஜீப் பேசப் போகிறார்' என்ற அறிவிப்பு உங்களுக்குக் கிடைக்கும். உடனடியாக நீங்கள் அவ்விடத்தை அடைந்தாக வேண்டும். ஏனெனில் சரியாக எட்டரை மணிக்கு கதவுகள் அடைக்கப்பட்டுவிடும். இந்த முப்பது நிமிடங்களோ ஒருபோதும் போதுமான அவகாசமாக இருக்காது. மேலும் நீங்கள் அங்கு சென்று சேரும்போது அவர் அதை ரத்து செய்துவிட்டார் என்பதை நீங்கள் அறிய வரலாம். அப்படியானால் மறுநாள், மறுபடியும்....

ஒருதடவை ஏழு நாட்கள் தொடர்ச்சியாக அவர் ரத்து செய்துகொண்டே போனார். முதல் நாளில் நானூறு பேர்கள் வந்தார்கள். கடைசிநாளில் பதினான்கு பேர் மட்டுமே வந்தார்கள். படிப்படியாக அவர்கள் ஊக்கம் தளர்ந்து போனார்கள். இனி அவர் பேசுவார் என்பது நடக்காத காரியம் என்று தோன்றியது. கடைசி நாளில் பதினான்கு பேர் மட்டுமே மிச்சமாயினர்...அவர்களைப் பார்த்துவிட்டு அவர் சொன்னார், ''இப்போதுதான் சரியான எண்ணிக்கையிலான பேர் மிஞ்சியுள்ளனர். நீங்கள் ஏழுநாள்களாகக் காத்திருக்க முடிந்தது. நீங்கள் சோர்வடைய வில்லை. எனவே இப்போது நீங்கள் ஆதாயம் அடைந்திருக்கிறீர்கள். இப்போது நான் பேசுவேன். மேலும் இந்த சொற்பொழிவுத் தொடரை இந்தப் பதினான்கு பேர்மட்டுமே கேட்க முடியும். நான் பேசத் தொடங்கிவிட்டேன் என்பது இனி எவருக்கும் அறிவிக்கப்பட மாட்டாது.''

இத்தகைய வேலை வித்தியாசமானது. மிகவும் மூடுண்ட ஒரு வட்டத்துக்குள்ளேயே பதஞ்சலி வேலை செய்தார். எனவேதான் அதிலிருந்து எந்த மதமும் எந்த நிறுவனமும் தோன்றவில்லை. பதஞ்சலியைப் பின்பற்றும் தனிப்பிரிவு இல்லை. அப்பேர்ப்பட்ட மகத்தான ஆற்றல்கொண்டவர். ஒரு சிறு குழுவுக்குள் தன்னை அடைத்துக் கொண்டவராகவே இருந்தார். மேலும் அவர் செயல்பட்ட விதமானது அவரது சொற்களின் தூய்மையைப் பேணிக்காப்பதாகவே இருந்தது; இந்த நிமிசம்வரை அது காக்கப்பட்டும் வந்திருக்கிறது.

**கடைசி கேள்வி:**

**உலகியல் வாழ்வின் இறுதிவிளைவு துன்பமே அன்றி வேறில்லை என்பதை முழுமையாக உணர்ந்திருந்தும்கூட உலகியல் பொருள்களிலும் பழக்கங்களிலும் மனித மனத்தைத் தொடர்ந்து இருக்க வைத்திருக்கிற அந்த அறியப்படாத சக்தியின் செயல்பாட்டைப்பற்றி தயவுசெய்து விளக்குவீர்களா?**

விழிப்புணர்வு என்பது முழுமையானது அல்ல. விழிப்புணர்வு என்பது அறிவார்த்தமானதுதான். ''எதை நான் செய்தாலும் அது என்னைத் துன்பத்துக்கே இட்டுச் செல்கிறது'' என்பது உங்களின் தர்க்கபூர்வ முடிவாகலாம். ஆனால் அது உங்களின் வாழ்வியல் அனுபவம் அல்ல. பகுத்தறிவு மட்டுமே என்றால் பின் இதில் பிரச்சனையே இருந்திருக்காது. ஆனால் நீங்கள் ''பகுத்தறிவு அல்லாதவர்'' ஆகவும் இருக்கிறீர்கள். உணர்வுள்ள மனம் மட்டுமே உங்களிடம் இருந்தால் அது சரிதான். ஆனால் நீங்கள் உணர்வற்ற மனத்தையும் பெற்றிருக்கிறீர்கள். ஒவ்வொரு நாளும் உங்களின் சொந்த முயற்சியாலேயே நீங்கள் அவலத்துக்குள் போய்க்கொண்டிருக்கிறீர்கள் என்பதை உணர்வு மனம் அறிகிறது. உங்களின் நரகத்தை நீங்களே உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் உணர்வற்ற மனமோ விழிப்பற்றது. மேலும், உணர்வற்ற மனம் உங்களின் உணர்வு மனத்தைவிட ஒன்பது மடங்கு பெரியது. அந்த உணர்வற்ற மனமே தன் சொந்தப் பழக்கங்களை விடாமல் தொடர்ந்து வலியுறுத்தி அதில் அழுந்திக்கொண்டே போகிறது.

இனிமேல் கோபப்படவே கூடாது, ஏனெனில் கோபம் என்பது உங்கள் உடலில் பாய்ச்சப்படும் நஞ்சே அன்றி வேறில்லை. அது உங்களுக்குத் துன்பமே தருகிறது என்று நீங்கள் தீர்மானிக்கிறீர்கள். ஆனால் அடுத்த தடவை உங்களை ஒருவர் அவமதிக்கும்போது, உணர்வற்ற மனம் உங்கள் உணர்வு மனத்தின் ஆய்வுமுடிவை அப்பால் தள்ளி வெடித்தெழும். மறுபடியும் கோபம் கொள்ளும். மேலும் அந்த உணர்வற்ற பகுதிக்கு உங்கள் உணர்வுமனத்தின் முடிவைப்பற்றி அறவே

தெரிந்திருப்பதில்லை. அந்த உணர்வற்ற பகுதியே செயலூக்கமுள்ள ஆற்றலாக உங்களில் தொடர்ந்து நீடித்துவருகிறது.

உணர்வுமனம் செயலூக்கம் உடையதாய் இல்லை. அது சிந்திக்க மட்டுமே செய்கிறது. அது ஒரு சிந்தனையாளர், செயல்படுபவர் வினைஆற்றுபவர் அல்ல. அப்படியானால் என்ன செய்வது? ஒன்றைத் தவறானது என்று உணர்வுடன் சிந்திப்பதன்மூலம் மட்டுமே அதை நீங்கள் தடுத்து நிறுத்திவிட முடிவதில்லை. ஒரு ஒழுங்குமுறையை நீங்கள் வகுத்து நடைமுறைப்படுத்த வேண்டி இருக்கிறது. அந்த ஒழுங்கு முறைமூலமே உணர்வுள்ள அறிவு ஒரு அம்புபோல் உணர்வற்ற பகுதிக்குள் ஊடுருவும்.

ஒழுங்குமுறைமூலம், யோகம் மூலம், நடைமுறைமூலம் உணர்வின் தீர்மானம் உணர்வற்ற மனத்தை அடைகிறது. அப்படி அது உணர்வற்ற மனத்தை அடைகையில் மட்டுமே அதனால் ஏதும் பயனுண்டு. இல்லையெனில் ஒன்றை நீங்கள் சிந்தித்துக் கொண்டே போவீர்கள். அதேசமயம் அதற்கு நேர் எதிரானதைத் தொடர்ந்து செய்துகொண்டே போவீர்கள்.

புனித அகஸ்தின் கூறுகிறார், ''நல்லவை எதையுமே நான் அறிவேன். அவற்றையே செய்ய வேண்டும் என்றே எப்போதும் நான் எண்ணுகிறேன். ஆனால் அதை செய்வதற்கான வாய்ப்பு வரும் போதெல்லாம் எப்போதும் நான் தீயவற்றையே செய்துவிடுகிறேன்'' இதுதான் மனிதரின் தர்மசங்கடம்-அவலநிலை.

உணர்வு மனத்தையும் உணர்வற்ற மனத்தையும் இணைப்பதற்கான பாதையே யோகம். இந்த ஒழுங்கிற்குள்-முறைக்குள் மேலும் ஆழமாய் நாம் போகும் போது இதை எப்படிச் செய்வது என்பதை நீங்கள் அறிந்தவர் ஆவீர்கள். இதைச் செய்தல் கூடும். எனவே உணர்வு மனத்தைச் சார்ந்து இராதீர்கள். அது செயலற்றது. உணர்வற்ற மனமே செயல்படுவது. உணர்வற்ற மனமாக மாற்றுங்கள். அப்போது மட்டுமே உங்கள் வாழ்க்கை ஒரு வித்தியாசமான அர்த்தத்தைப் பெற்றிருக்கும். அதுவரை நீங்கள் மிக அதிக அவலத்திலேயே உழல்வீர்கள்.

'எண்ணுவது ஒன்றை; செய்வது வேறொன்றை' என்பது ஓயாத ஒழுங்கீனத்தை உண்டாக்குகிறது. இதனால் படிப்படியாக நீங்கள் தன்னம்பிக்கையை இழப்பீர்கள். மெதுமெதுவாக நீங்கள் முற்றிலும் இயலாதவராக, வீரியம் அற்றவராக, எதையும் செய்ய முடியாதவராக உணர்வீர்கள். எதையும் உங்களால் சாதிக்க முடியாது. அப்போது ஒரு சுயநிந்தனை எழும். குற்ற உணர்வுள்ளவராக ஆவீர்கள். மேலும் குற்ற உணர்வு கொள்வது மட்டுமே பாவம்.

**12. இடையறாத அகமுயற்சியாலும் பற்றற்ற தன்மையாலும் அவற்றை நிறுத்துவது நடைமுறைக்கு கொண்டு வரப்படுகிறது.**

**13. இந்த இரண்டில் அப்பியாசம் எனப்படும் அகப்பயிற்சியானது தன்னில் உறுதியாக நிலைபெறு வதற்கான முயற்சியாகும்.**

**14. இடைவிடாமலும் பக்தி வணக்கத்தோடும் நீண்டகாலம் தொடர்ந்து கடைப்பிடிக்கப்பட்டால் அது உறுதியாக நிலைநாட்டப்பட்டதாகிறது.**

மனிதர் என்பவர் அவருடைய உணர்வுமனதால் மட்டுமே ஆனவர் அல்லர். உணர்வு மனத்தைக் காட்டிலும் ஒன்பது மடங்கு பெரிதான உணர்வற்ற மனம் என்னும் அடுக்கையும் அவர் கொண்டிருக்கிறார். அதுமட்டுமல்ல, சோமா எனப்படும் உடம்பையும் அவர்பெற்றிருக்கிறார். அதில்தான் இந்த மனம் நிலவுகிறது. உடல் என்பது முற்றாக, முழுமையாக உணர்வற்றது. அதன் செயல்பாடு மொத்தமும் ஏறக்குறைய அனிச்சைப்போக்கிலேயே நடக்கிறது. உடம்பின் மேலோட்டமான செயல்பாடுகள் மட்டுமே நம் இச்சைக்குட்பட்ட காரியங்கள். அதன் உள்ளார்ந்த ஆதாரங்கள் எல்லாம் அனிச்சையாகவே நடக்கின்றன. அவற்றைக்குறித்து உங்களால் எதுவும் செய்ய முடியாது. அதன்முன் உங்களின் மனோசக்தி வலுவற்றதாக இருக்கிறது.

தனக்குள் ஒருவர் பிரவேசிக்க முடிவதற்கு முன் மனித வாழ்வின் மேற்சொன்ன இந்தப் பாங்கினை புரிந்து கொண்டாக வேண்டி இருக்கிறது. மேலும் அந்தப் புரிதல் வெறும் அறிவுரீதிப் புரிதலாக மட்டும் இருந்துவிடக் கூடாது. இன்னும் ஆழமாக அது போகவேண்டும். உணர்வற்ற அடுக்குகளையும் அது ஊடுருவியாக வேண்டும். உடம்பையே அது ஊடுருவியாக வேண்டும்.

எனவேதான் அப்பியாசம் அதாவது இடையறாத அகப் பயிற்சி/ நடைமுறை என்பது முக்கியத்துவம் உடையதாகிறது. அப்பியாசம், வைராக்கியம் என்னும் இந்த இரண்டு சொற்களும் மிகவும் குறிப்பிடத் தக்கவை ஆகும். அப்பியாசம் இடையிறாத அகப்பயிற்சி என்று பொருள். வைராக்கியம்என்றால் பற்றற்ற தன்மை, ஆசையற்ற தன்மை என்று பொருள். பதஞ்சலியின் இனிவரும் சூத்திரங்கள் மிகவும் குறிப்பிடத் தக்க இந்த இரு கருத்தாக்கங்கள் தொடர்பானவையே. ஆயின்

சூத்திரங்களுக்குள் நாம் நுழைவதற்கு முன் ''மனித ஆளுமையின் வடிவமைப்பு முழுவதுமே அறிவு சார்ந்தது இல்லை''என்னும் உண்மையை உறுதியாகக் கிரகித்துக் கொள்ள வேண்டி இருக்கிறது.

ஆளுமை முழுவதுமே புத்தியுடையதாக இருந்தால் அப்பியாசத் துக்கு - ஓயாமல் திரும்பத்திரும்பச் செய்தாக வேண்டியிருக்கிற பயிற்சிக்கு - தேவையே இருக்காது. எதையுமே, அது அறிவார்ந்ததாகத் தெரிந்தால், மனத்தின் மூலமாக உடனடியாக உங்களால் புரிந்துகொள்ள முடியும். ஆனால் அத்தகைய புரிந்து கொள்தல் மட்டுமே போவதில்லை. கோபம் கெடுதலானது, நஞ்சு என்பதை எளிதில் நீங்கள் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் உங்களிடமிருந்து கோபம் விடைபெறுவதற்கு, மறைந்து போவதற்கு அந்தப்புரிதல் மட்டுமே போதுமானதாய் இல்லை. உங்களுக்குப் புரிந்து இருந்தும்கூட உங்களிடம் கோபகுணம் தொடர்கிறது. ஏனென்றால் உங்கள் உணர்வற்ற மனத்தின் பல அடுக்குகளிலும் கோபம் உறைந்துள்ளது. மனத்தில் மட்டுமல்ல, உங்கள் உடம்பிலும் கோபம் குடிகொண்டிருக்கிறது.

வெறும் மொழிரீதியிலான தகவல்தொடர்பை உடம்பால் புரிந்துகொள்ள முடியாது. அதை உங்கள் தலைமட்டுமே புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் உடம்போ அதனால் தாக்கம் பெறுவதில்லை. ஆனால் இந்தப் புரிந்துகொள்தல் உடம்பின் அடிப்படைகள் வரை சென்று சேராதவரை நீங்கள் அடிப்படை மாற்றம் பெற முடியாது. பழைய ஆளாகவேதான் தங்கிஇருப்பீர்கள். உங்கள் கருத்துகள் மாறிக்கொண்டே போகலாம். ஆனால் உங்கள் ஆளுமையானது விடாப்பிடியாகத் தொடரும். மேலும் அப்போது ஒரு புதிய சிக்கல் எழும்: முன் எப்போதையும்விட அதிக குழப்பத்துக்குள் நீங்கள் இருப்பீர்கள். ஏனெனில் இப்போது எது தவறு என்பதை உங்களால் பார்க்கமுடிகிறது. ஆனாலும் அதிலேயே நீங்கள் விடாப்பிடியாக தங்கி இருக்கிறீர்கள்; அதையே நீங்கள் செய்துகொண்டு போகிறீர்கள் - என்பதுதான் அந்தச் சிக்கல்.

இதில் ஒரு சுயநிந்தனையும் குற்ற உணர்வும் உருவாக்கப்படுகிறது. உங்களையே நீங்கள் வெறுக்கத் தொடங்குகிறீர்கள். உங்களை ஒரு பாவி என நினைக்கத் தொடங்குகிறீர்கள். மேலும் உங்கள் புரிதல் அதிகமாக ஆக உங்களை நீங்களே கண்டனம் செய்வதும் அதிகரிக்கிறது. ஏனெனில் உங்களை நீங்களே மாற்றிக் கொள்வது என்பது எவ்வளவு கடினமானது, ஏறக்குறைய அசாத்தியமானது என்பதை நீங்கள் காண்கிறீர்கள்.

அறிவுரீதியான புரிதலில் யோகத்துக்கு நம்பிக்கை இல்லை. உடல்ரீதியான புரிதலையே - முழுமையான புரிதலையே அது நம்புகிறது. இவ்வகைப்புரிதலில் உங்களின் முழுமையும் ஈடுபடுகிறது. உங்கள் தலைக்குள் மட்டுமல்ல நீங்கள் மாறுவது. மாறாக உங்கள் இருத்தலின்ஜீவனின் அடி ஆழத்திலுள்ள மூலதாரங்களும் மாறுகின்றன.

'அவை எப்படி மாற முடியும்? ஒரு குறிப்பிட்ட பயிற்சியை செயலை ஓயாமல் திரும்பத்திரும்ப செய்துவந்தால் அது அணிச்சைச் செயலாகிறது. ஒரு குறிப்பிட்ட நடைமுறையை இடையறாது நீங்கள் செய்து வந்தால் - தொடர்ச்சியாக அதைத் திரும்பத்திரும்ப செய்து வந்தாலே - படிப்படியாக அது உணர்வு மனத்தில் இருந்து வீழ்கிறது. உணர்வற்ற மனத்தை அடைந்து அதன் பகுதியாக மாறுகிறது. ஒரு தடவை உணர்வற்ற மனத்தின் பகுதியாக அது ஆனதுமே அந்த ஆழமான ஆதாரத்திலிருந்து அது செயல்படத் தொடங்குகிறது.

தொடர்ச்சியாக எதை நீங்கள் திரும்பத் திரும்பச் செய்துகொண்டு போனாலும் அது உணர்வற்ற மனமாக ஆகிவிடமுடியும். எடுத்துக் காட்டாக, உங்கள் பெயரை உங்களின் குழந்தைப் பருவ முதலே இடைவிடாமல் திரும்பத்திரும்ப பயிற்சிசெய்து வந்திருக்கிறீர்கள். எனவே இப்போது அது உங்களின் உணர்வு மனத்தின் பகுதியாக இல்லை. உணர்வற்ற மனத்தின் பகுதியாக ஆகி இருக்கிறது. ஒரு நூறு பேருடன் சேர்ந்து ஒரு அறையில் நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கலாம். அப்போது ஒருவர் வந்து''ராம்! இங்கே ராம் என்பவர் இருக்கிறாரா?'' என்று கூப்பிடுகிறார். அந்தப் பெயருடன் சம்பந்தப்பட்டிராத தொண்ணூற்று ஒன்பதுபேர் தொடர்ந்தும தூங்கிக் கொண்டு இருப்பார்கள். அவர்கள் தூக்கம்கலைய மாட்டார்கள். ஆனால் 'ராம்' என்னும் பெயரை உடையவர் திடுக்கிட்டுக் கேட்பார், ''யார் என்னைக் கூப்பிடுவது? ஏன் என் தூக்கத்தைக் கெடுக்கிறாய்?'' என்று.

தன் பெயர் ராம் என்பதை தூக்கத்திலும்கூட அவர் அறிந்திருக்கிறார். அவ்வளவு ஆழத்துக்கு இந்தப் பெயர் எவ்வாறு சென்றடைந்தது? ஓயாத பயிற்சியினாலேயேதான். ஒவ்வொரும் அவரது பெயரைத் திரும்பத் திரும்ப கூப்பிட்டுக்கொண்டே இருக்கிறார்கள். ஒவ்வொருவரும் கேட்கும் போதும் அவரும் தன்னை அப்பெயரால் அறிமுகப்படுத்திக்கொண்டே இருக்கிறார். இது தொடர்ச்சியாக புழங்குகிறது. இப்போது அது உணர்வு மனத்தில் இல்லை. உணர்வற்ற மனத்தைச் சேர்ந்திருக்கிறது.

மொழி, உங்களின் தாய்மொழி, உணர்வற்ற மனதின் ஒரு பகுதியாக ஆகிறது. அதற்குப் பிறகு நீங்கள் கற்றுக்கொள்ளும் எதுவும் ஒருபோதும் அந்தளவுக்கு உணர்வற்றதாக இராது. அது உணர்வுள்ளதாகவே நீடிக்கும். எனவேதான் உங்கள் உணர்வற்ற மனத்திலுள்ள மொழி உங்களின் உணர்வுள்ள மனத்திலுள்ள மொழியைத் தொடர்ந்து பாதித்து வருகிறது.

ஒரு ஜெர்மானியன் ஆங்கிலம் பேசினால் அது ஒருவிதமாக இருக்கிறது. ஒரு பிரஞ்சுக்காரன் ஆங்கிலம் பேசினால் அது வேறுவிதமாக இருக்கிறது. ஒரு இந்தியன் ஆங்கிலம் பேசினால் அது இன்னொரு விதமாக இருக்கிறது. இந்த வேறுபாடு ஆங்கிலத்தில் இல்லை. அதைப் பேசுவோரின் மிகவும் உள்ளார்ந்த மன அமைப்புகளில் இருக்கிறது. ஒரு பிரஞ்சுக்காரனின் மன அமைப்பு - உணர்வற்ற மனத்தின் அமைப்பு - ஒருவிதமாய் இருக்கிறது. அதுவே செல்வாக்கு செலுத்துகிறது. எனவே பிற்பாடு நீங்கள் எதை எதைக் கற்றுக்கொண்டாலும் அதுவெல்லாம் உங்கள் தாய்மொழியின் தாக்கம் பெற்றதாகவே இருக்கும். மேலும் நீங்கள் உணர்வற்ற மனத்துக்குள் வந்து விட்டால் அங்கு உங்களின் தாய்மொழி மட்டுமே ஊடுருவமுடியும்.

ஒரு மராத்தியர் ஒருவர் என் நண்பராக இருந்தார். அவர் இருபது ஆண்டுகளுக்குமேல் ஜெர்மனியில் வசித்து வந்தார். இருபது ஆண்டுகளாக அவர் ஜெர்மன் மொழியையே பயன்படுத்தி வந்தார். தன் சொந்த தாய்மொழியான மராத்தியை அவர் முற்றிலுமாக மறந்துவிட்டார். மராத்தியில் அவரால் பேச முடியாது. மராத்தியை அவரால் படிக்க முடியாது. அது பயன்படுத்தப்படாததால் உணர்வு மனத்திலிருந்து அம்மொழி முற்றிலுமாக மறக்கப்பட்டுவிட்டது.

ஒருசமயம் அவருக்கு நோய்கண்டது. அப்போது சிலநேரங்களில் அவர் உணர்விழந்து போவார். அவர் உணர்வுஅற்றவரான போதெல்லாம் முற்றிலும் வேறுபட்ட ஒரு ஆளுமை அவரிலிருந்து வெளிப்படும். வித்தியாசமான ஒரு முறையில் அவர் நடந்துகொள்ளத் தொடங்குவார். தான் உணர்வற்றிருக்கும் போது அவர் ஜெர்மானியச் சொற்களை அல்ல, மராத்திச் சொற்களையே உச்சரிப்பார். அவர் உணர்விழந்த நிலையில் இருக்கும்போது மராத்திமொழிச்சொற்களை உச்சரிப்பார். மேலும் அந்த நிலையிலிருந்து மீண்டு உணர்வுநிலைக்குத் திரும்பியவுடன் சில நிமிடங்களுக்கு அவரால் ஜெர்மன் மொழியைப் புரிந்து கொள்ள முடிவதில்லை.

குழந்தைப் பருவத்தில் தரப்படும் இடையறாத பயிற்சியானது மிக ஆழமாகச் செல்கிறது. ஏனெனில் உண்மையில் உணர்வுமனம் என்பது

குழந்தைக்கு இருப்பதில்லை. அதன் பெருமளவான உணர்வற்றபகுதி மேல்பரப்பிலேயே இருக்கிறது. எல்லாமே உணர்வற்ற மனதிலேயே பதிகிறது. குழந்தை பயிலப் பயில, அது படிக்கப் படிக்க உணர்வுமனம் ஒரு கெட்டியான அடுக்காக ஆகும் - அதன்பின் உணர்வற்ற மனதுக்குள்ளே ஊடுருவிப் படிவதும் பதிவதும் குறைந்து கொண்டே போகும்.

உங்கள் படிப்பில் ஏறக்குறைய ஐம்பது சதவீதத்தை உங்களின் ஏழு வயதிலேயே நீங்கள் முடித்துவிடுகிறீர்கள் என்று உளவியலாளர்கள் கூறுகின்றனர். உங்கள் வாழ்வில் நீங்கள் மொத்தமாக அறிந்து கொள்வதில் பாதியளவை உங்களின் ஏழாம் ஆண்டிலேயே பெரும்பாலும் நீங்கள் அறிந்துகொண்டுவிடுகிறீர்கள். உங்கள் கல்வியில் பாதிப்பாகம் முடிந்துவிடுகிறது. மேலும் இந்தப் பாதியே மீதிக்கும் சேர்த்து அடித்தளமாகப் போகிறது. இனிக்கற்கும் எல்லாமே அந்த அடித்தளத்தின் மீது வெறுமனே ஏற்றப்படும் சரக்குகளே. அடியாழத்து அமைப்போ குழந்தைப்பருவத்தில் பெற்ற நிலையிலேயே நீடித்திருக்கும்.

எனவேதான் நவீன உளவியல், நவீன உளவியல் பகுப்பாய்வு, உளவியல் மருத்துவம் யாவும் உங்கள் குழந்தைப் பருவத்துக்குள் ஊடுருவ முயல்கின்றன. ஏனெனில் மனரீதியாக நீங்கள் நோய் வாய்ப்பட்டிருந்தால், அதற்கான மூலகாரணத்தை இப்போதைய நிலையில் அல்ல, உங்கள் குழந்தைப் பருவத்திலேயே காண வேண்டி இருக்கிறது. உங்களின் குழந்தைப்பருவத்திலேயே அதற்கான வடிவமைப்பைக் கண்டுகொள்ள வேண்டி இருக்கிறது. ஒருமுறையேனும் அந்த ஆழ்ந்த வடிவமைப்பு இனம்காணப்பட்ட பின்பே ஏதாவது செய்யப்படமுடியும், நீங்கள் தன்மைமாற்றம் பெற முடியும்

ஆனால் அதை ஊடுருவுவது எவ்வாறு? யோகத்தில் ஒரு முறை இருக்கிறது. அந்த முறை அப்பியாசம் எனப்படுகிறது. அப்பியாசம் என்றால் ஒரு விசயத்தை இடையறாது, திரும்பத் திரும்பப் பயிற்சி செய்தல் என்று பொருள். திரும்பத்திரும்ப ஓயாத பயிற்சியின் மூலம் ஒரு செய்தி உணர்வற்ற மனத்தின் பகுதியாவது ஏன்? இதற்குச் சில காரணங்கள் உள்ளன.

ஒன்றை நீங்கள் கற்றுக்கொள்ள விரும்பினால் அதை நீங்கள் ஓயாமல் திரும்பச் செய்ய வேண்டி இருக்கும். ஏன்? ஒரு கவிதையை ஒரு தடவை மட்டுமே நீங்கள் வாசித்தால் இங்குமங்குமாகச் சில சொற்கள் மட்டுமே உங்களுக்கு நினைவில் நிற்கலாம். ஆனால் இரண்டு தடவைகள், மூன்று தடவைகள், இன்னும் அதிக தடவைகள் அதை நீங்கள்

படித்தால் அதன் பின் நீங்கள் வரிகளை, பத்திகளை நினைவுகூற முடியும். அதை ஒரு நூறுதடவை நீங்கள் மனம் பின் அதை, முழுமை யாக உங்களால் நினைவுகூற முடியும். இன்னும் அதிகமாய் அதை நீங்கள் திரும்பத் திரும்ப மனனம் செய்தால் பின் அது உங்களின் நினைவில் பல்லாண்டுகள் தொடரலாம், விடாது தங்கி இருக்கலாம். அதை உங்களால் மறக்கமுடியாமலும் போகலாம்.

என்ன நடக்கிறது? ஒரு குறிப்பிட்ட விசயத்தை நீங்கள் திரும்பத் திரும்ப ஓதும்போது எவ்வளவு அதிகத்தடவைகள் ஓதுவீர்களோ அவ்வளவு அதிகமாய் மூளையின் அணுக்களில் அது பதிவாகிறது. ஓயாது ஓதுதல் என்றால் ஓயாது அறைந்து இறங்குதல் ஆகிறது. பின் அது பதிந்துவிடுகிறது; உங்கள் மூளை அணுக்களின் பகுதியாக ஆகிறது. மேலும் அது எந்த அளவுக்கு உங்களின் மூளை அணுக்களின் பகுதியாக ஆகிறதோ அந்த அளவுக்கு உணர்வுமனத்தின் தலையீட்டின் தேவை குறைகிறது. இனி உங்கள் உணர்வுமனம் வேறுவிசயத்துக்கும் செல்ல முடியும். இனி அது தேவை இல்லை.

எனவே எவற்றையெல்லாம் நீங்கள் ஆழ்ந்து கற்கிறீர்களோ அவற்றில் எல்லாம் நீங்கள் உணர்வுடன் இருக்கத் தேவையில்லை. நீங்கள் காரோட்டப்பழகும் தொடக்கத்தில் அது ஒரு உணர்வுடன்கூடிய முயற்சியாகவே இருக்கிறது. எனவேதான் அது பெரிய தொந்தரவாக இருக்கிறது. ஏனெனில் தொடர்ச்சியாக நீங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டி இருக்கிறது. சாலை, போக்குவரத்து, இயந்திரம் இயங்கும் விதம், ஓட்டும் சக்கரம், முடுக்கி, நிறுத்திகள், இதுபோன்ற பாகங்கள், சாலை விதிகள்... என நீங்கள் கவனமாக இருக்க வேண்டிய எத்தனையோ விசயங்கள் உள்ளன. இடைவிடாமல் ஒவ்வொன்றைப் பற்றியும் நீங்கள் விழிப்பாக இருக்கவேண்டி இருக்கிறது. எனவே நீங்கள் அதில் அதீத அளவில் ஈடுபட்டிருக்கிறீர்கள். அது கடினமானதாக ஆகிறது. கடும் முயற்சியாக ஆகிறது.

ஆனால் போகப்போக எல்லாவற்றையும் முற்றிலுமாக நீங்கள் மறந்துவிட முடியும். நீங்கள் வாகனம் ஓட்டுவீர்கள். ஓட்டுவது என்பது உணர்வற்றதாக ஆகி இருக்கும். உங்கள் மனத்தை அதற்குள் நீங்கள் கொண்டு வரத் தேவை இராது. நீங்கள் விரும்பும் எதை வேண்டுமானாலும் நீங்கள் எண்ணிக்கொண்டே போகமுடியும். நீங்கள் விரும்பும் எந்த இடத்திலும் நீங்கள் சஞ்சரிக்கமுடியும். ஆனால் காரோ, உணர்வற்ற மனத்தால் ஓட்டப்படும். இப்போது உங்கள் உடம்பு அதைக் கற்றுவிட்டது. இப்போது முழு அமைப்பும் அதை அறிகிறது. உணர்வற்ற மனத்தின் பயிற்சியாக அது ஆகி இருக்கிறது.

ஒன்றைப்பற்றி நீங்கள் உணர்வுடன் இருக்கத் தேவையில்லாத அளவுக்கு அது உங்களுக்குள் ஆழமாகப் போகும்போதெல்லாம் அது உணர்வற்ற மனத்தில் ழ்ந்து படிகிறது. அப்படி அவ்விசயம் உணர்வற்ற மனத்தில் வீழ்ந்துபடிந்த பின் அது உங்கள் உயிரை, உங்கள் வாழ்வை, உங்கள் பண்பை மாற்றத் தொடங்குகிறது. மேலும் அந்த மாற்றம் இப்போது சிரமமின்றி நடக்கும் அதைக்குறித்து நீங்கள் அலட்டிக் கொள்ளத் தேவை இராது. உணர்வற்ற மனம் உங்களை இட்டுச் செல்லும் திசைகளில் எல்லாம் நீங்கள் இயல்பாக இயங்குவீர்கள்.

இடையறாத பயிற்சி என்பதில் மிகுந்த ஆய்வு செய்திருக்கிறது யோகம். இந்த ஓயாத பயிற்சி என்பது உங்கள் உணர்வற்ற மனத்தை செயல்பட வைப்பத்தற்குத் தான். அப்படி உணர்வற்றமனம் இயங்கத் தொடங்கும்போதெல்லாம் நீங்கள் எளிதாக உணர்கிறீர்கள். எந்தச் சிரமமும் தேவைப்படுவதில்லை. விசயங்கள் சுலபமாக ஆகின்றன. பழைய சாத்திரங்களில் பின்வருமாறு கூறப்படுகிறது: சாது என்பவர் நற்குணம் வாய்ந்தவர் அல்ல. ஏனெனில் அந்த உணர்வுகூட அதற்கு எதிர்க்குணம் இன்னும் இருப்பதைக் காட்டுகிறது. தீயதைச் செய்ய முடியாதவரே, அதைப்பற்றி கருதவும் முடியாதவரே சாது. நன்மைத்தனமானது உணர்வற்றமனமாக ஆகி இருக்கிறது. அது சுவாசத்தை போன்று ஆகி இருக்கிறது. அவர் எதைச் செய்யவிருந்தாலும் அது நல்லதாகவே இருக்கும். அது எந்த அளவுக்கு அவரது சீவனுக்குள் ஆழ்ந்து போயிருக்கிறது என்றால் அதற்கு எந்தச் சிரமமும் தேவைப்படுவதில்லை. அது அவரது வாழ்வேயாக ஆகி இருக்கிறது. எனவே ஒரு சாது என்றால் நல்ல மனிதர் என்று நீங்கள் சொல்ல முடியாது. நல்லது எது, கெட்டது எது என அறியாதவரே சாது. அவருக்குள் இனி எந்த மோதலும் இல்லை. நற்குணம் அவரில் மிகுந்த ஆழத்துக்கு ஊடுருவி இருப்பதால் அதைக்குறித்து அவர் எச்சரிக்கையாக இருக்கத் தேவையிருப்பதில்லை.

உங்கள் நற்குணம் பற்றிய உணர்வுடன் நீங்கள் இருந்தால் தீக்குணமும் அக்கம்பக்கமாக உங்களுக்குள் இன்னும் இருக்கவே செய்கிறது. அவை இரண்டுக்கும் இடையில் ஓயாத போராட்டமும் நடக்கிறது. மேலும் ஒவ்வொரு தடவையும் நீங்கள் செயல்பாட்டில் இறங்கவேண்டி வரும் போதெல்லாம் இரண்டில் ஒன்றை நீங்கள் தேர்ந்தெடுக்க வேண்டி இருக்கிறது: ''நான் நல்லதையே செய்ய வேண்டும். கெட்டதை நான் செய்யாதிருக்க வேண்டும்'' என்று. ஆயின் இந்தத் தேர்வு ஒரு ஆழ்ந்த குழப்பமாகவே போராட்டமாகவே இருக்கப் போகிறது. ஓயாத அக வன்முறையாகவே, உட்பூசலாகவே இருக்கப்

போகிறது. ஆயின் மோதல் இருக்கும் இடத்தில் நீங்கள் சரளமாக, இயல்பாக உணர முடியாது.

இப்போது நாம் சூத்திரத்துக்குள் நுழைவோம். மனத்தை நிறுத்துவதே யோகம். சரி. ஆனால் மனமும் அதன் விருத்திகளும் நிறுத்தப்பட்டது. எவ்வாறு?

> **இடையறாத அகமுயற்சியாலும் பற்றற்ற தன்மையாலும் அவற்றை நிறுத்துவது நடைமுறைக்குக் கொண்டுவரப்படுகிறது.**

மனம் அதன் அனைத்து மாற்றங்களோடும் மறையமுடிவது எப்படி என்பதற்கு இரண்டு வழிகள்: ஒன்று - அப்பியாசம் அதாவது இடையறாத அகப்பயிற்சி. இரண்டாவது - பற்றின்மை. பற்றின்மை என்பது சூழலை உருவாக்கும். அந்தச் சூழலில் பயன்படுத்த வேண்டிய உத்திதான் இடையறாத பயிற்சி. இவ்விரண்டையும் புரிந்துகொள்ள முயலுங்கள்.

நீங்கள் எதைஎதைச் செய்தாலும் அதை நீங்கள் செய்வது உங்களுக்கு சில ஆசைகள் இருப்பதால்தான். சில காரியங்களைச் செய்வதன்மூலம் மட்டுமே அந்த ஆசைகள் நிறைவேற்றப்படமுடியும். அந்த ஆசைகளை கைவிடாதவரை அந்தக் காரியங்களை நீங்கள் கைவிட முடிவதில்லை. அந்த நடவடிக்கைகளில், அந்தச் செயல்பாடுகளில் உங்களுக்கு ஒருவித உள்ளார்ந்த அவசியம் இருக்கிறது. மனித மனத்தின், அவனது குணத்தின் தருமசங்கடங்களில் ஒன்றுதான் இது அதாவது சில நடவடிக்கைகள் உங்களைத் துன்பத்துக்கு இட்டுச் செல்வதால் அவற்றை நீங்கள் நிறுத்திவிட விரும்பலாம்.

ஆனால் முதற்கண் அதில் நீங்கள் ஏன் ஈடுபடுகிறீர்கள்? உங்களுக்கு குறிப்பிட்ட விதமான ஆசைகள் உள்ளன. அந்த நடவடிக்கைகளில் ஈடுபடாமல் அந்த ஆசைகளை உங்களால் பூர்த்திசெய்துகொள்ள முடியாது. எனவேதான் அவற்றில் நீங்கள் ஈடுபடுகிறீர்கள். எனவே இதில் இரண்டு விசயங்கள் உள்ளன. ஒன்று, நீங்கள் குறிப்பிட்ட சில காரியங்களைச் செய்ய வேண்டி இருக்கிறது. எடுத்துக்காட்டாக, கோபம் ஏன் நீங்கள் கோபம் கொள்கிறீர்கள்? எங்கோ எப்படியோ யாரோ ஒரு தடங்கலை உருவாக்கும் போதுமட்டுமே உங்களுக்குக் கோபம் மூளுகிறது. நீங்கள் ஒன்றைச் சாதிக்க - அடையப் போய்க்கொண்டிருக்கிறீர்கள். அப்போது ஒருவர் அதற்கொரு தடையை ஏற்படுத்துகிறார். உங்கள் ஆசை தடுக்கப்படுகிறது. உங்களுக்குக் கோபம் வருகிறது.

ஒன்றைப் போய் அடைய, செய்ய, சாதிக்க வேண்டுமெனும் ஆசை உங்களுக்கு இருக்கிறது. உங்கள் ஆசைக்குக் குறுக்கே வருபவர் யாராயினும் அவர் உங்களின் எதிரியாகத் தோன்றுகிறார். அவரை நீங்கள் அழித்தொழிக்க விரும்புகிறீர்கள். இதுதான் கோபம் என்பதன்பொருள்: தடைகளை உடைக்க நீங்கள் விரும்புகிறீர்கள். ஆனால் கோபம் துன்பத்துக்கு இட்டுச் செல்கிறது. கோபம் ஒரு நோயாக ஆகிறது. எனவே கோபிக்கக்கூடாது என நீங்கள் விரும்புகிறீர்கள்.

ஆனால் இலக்குகளை அடையும் ஆசைகள் உங்களுக்கு இருந்தால் எவ்வாறு நீங்கள் கோபத்தைக் கைவிட முடியும்? ஆசைகளும் லட்சியங்களும் உங்களுக்கு இருந்தால் அப்போது அங்கு கோபமும் கண்டிப்பாக இருக்கும். ஏனெனில் வாழ்க்கை சிக்கல்மயமானது. இந்தப் பூமியில் நீங்கள்மட்டும் தனியாக இல்லை. கோடிக்கணக்கான மக்கள் தத்தமது ஆசைகளை நிறைவுசெய்வதற்காகப் பாடுபட்டுக்கொணடிருக் கிறார்கள். அவை ஒன்றையொன்று வெட்டிக்கொள்கின்றன. ஒன்று மற்றதன் பாதையில் குறுக்கிடுகின்றன. உங்களுக்கு ஆசைகள் இருந்தால் பின் அங்கு கோபமும் இருக்கவே செய்யும். நிராசை அங்கு இருக்கவே செய்யும். வன்முறை இருக்கவே செய்யும். மேலும் உங்கள் பாதையில் வரும் எவரையும் அழித்து விடவே உங்கள் மனம் எண்ணும்.

தடையை அழிக்கும் இந்த மனோபாவமே கோபம். ஆனால் கோபம் அவலத்தை உருவாக்குகிறது. எனவே நீங்கள் கோபப்படக் கூடாது என்று விரும்புகிறீர்கள். ஆனால் கோபப்படக்கூடாது என விரும்புவதுமட்டுமே பெரிதாக உதவி விடுவதில்லை. ஏனெனில் கோபம் என்பது அதைவிடப் பெரிய ஒரு அமைப்பின் பகுதியே - ஆசைப்படும் மனத்தின், இலக்குகளைக் கொண்டுள்ள மனத்தின், எங்கோ சென்று சேர விரும்பும் மனத்தின் ஒரு பகுதியே உங்களால் கோபத்தை கைவிடமுடியாது.

எனவே ஆசைப்படாதிருப்பதே முதல் விசயம். அப்போதே கோபம் வருவதற்கான சாத்தியத்தில் பாதி தீர்ந்துவிடுகிறது: அடிப்படை விழுந்துவிடுகிறது. ஆனால் அப்போதும் கோபம் மறைந்தாக வேண்டும் என்று அவசியமில்லை. ஏனெனில் கோடிக்கணக்கான ஆண்டுகளாக நீங்கள் கோபித்து வந்திருக்கிறீர்கள். அது மிகவும் ஆழமாக வேருன்றிய ஒரு பழக்கமாக ஆகிவிட்டிருக்கிறது.

ஆசைகளை நீங்கள் விட்டுவிடலாம். ஆனாலும் கோபம் விடாப்பிடியாக நீடிக்கவே செய்யும். அது அந்தளவுக்கு விசையானதாக

இருக்காது. ஆனாலும் அது நீடிக்கவே செய்யும். ஏனெனில் இப்போது அது ஒரு பழக்கமாக இருக்கிறது. அது உணர்வற்ற மனத்தின் பழக்கமாக ஆகி இருக்கிறது. பலப்பல பிறவிகளாக அதை நீங்கள் சுமந்துகொண்டு வந்திருக்கிறீர்கள். அது உங்களின் பாரம்பரியமாக ஆகி இருக்கிறது. அது உங்களின் உடல் அணுக்களில் இருக்கிறது. உடம்பு அதை எடுத்துக்கொண்டு விட்டது. இப்போது இது உடல்கூறாகவும் உடல் ரசயானமாகவும் ஆகி இருக்கிறது. உங்கள் ஆசைகளை கைவிடுதாலேயே உங்கள் உடல் தன் பாணியை மாற்றிக்கொண்டுவிடப் போவதில்லை. அந்தப் பாணி மிகவும் பழையது. இந்தப் பாணியையும் நீங்கள் மாற்ற வேண்டி இருக்கும்.

அந்த மாற்றத்துக்கு ஓயாத பயிற்சி தேவைப்படும். அக இயக்கத்தை மாற்றுவதற்கே ஓயாத பயிற்சி தேவைப்படும் - மொத்த உடல் - மன அமைப்பின் மறுசீரமைப்புத் தேவைப்படும். ஆனால் ஆசைப்படுவதை நீங்கள் கைவிட்டால் மட்டுமே இது சாத்தியமாகும்.

இதை இன்னொரு கோணத்திலிருந்து பாருங்கள். ஒரு மனிதர் என்னிடம் வந்து ''வருத்தமாக இருக்க எனக்கு விருப்பமில்லை. ஆனால் எப்போதுமே நான் சோகத்துடனும் சோர்வுடனுமே இருக்கிறேன். சில சமயங்களில் நான் ஏன் வருத்தத்துடன் இருக்கிறேன் என்பதற்கான காரணத்தைக்கூட என்னால் உணர முடியவில்லை. ஆனாலும் நான் வருத்தமாகவே இருக்கிறேன். கண்கூடான காரணம் எதுவும் இல்லை. இதுதான் காரணம் என்று சுட்டிக்காட்ட முடியும்படியான எதுவுமே இல்லை. சோகமாக காணப்படுவதே என் பாணியாக ஆகி விட்டிருக்கிறதோ என்று தோன்றுகிறது.'' மேலும் அவர் ''எப்போதாவது நான் மகிழ்ச்சியாக் இருந்ததாக எனக்கு நினைவில்லை. சோகமாக இருக்க நான் விரும்பவில்லை. அது ஒரு பாழும் சுமை. மகிழ்ச்சியே இல்லாத மனிதன் என்றால் அது நான்தான். எனவே அதை நான் கைவிடுவது எங்ஙனம்?'' என்றார்.

''சோகமாகத் தென்படுவதில் எதையாவது நீர் எதிர்பார்க்கிறீரா?'' என்று நான் அவரைக் கேட்டேன்.'' இதில் நான் எதிர்பார்ப்பதற்கு என்ன இருக்கிறது?'' என்றார் அவர். ஆனால் அப்படி ஒன்று அவருக்கு இருந்தது. அந்த ஆளை நான் நன்றாக அறிவேன். பல ஆண்டுகளாகவே அந்த ஆளை எனக்குத் தெரியும். ஆனால் சோகமாயிருப்பதில் தனக்கொரு ஆதாயம் இருக்கிறது என்பதை அவர் உணர்ந்திருக்க வில்லை. எனவே சோகத்தை அவர் விட்டுவிட விரும்புகிறார். ஆனால் ஏன் தன்னிடம் சோகம் இருக்கிறது என்பதை அவர் உணரவில்லை.

அவரால் தொடர்புபடுத்த முடியாத வேறு சில காரணங்களுக்காகவே அதை அவர் பேணி வந்திருக்கிறார்.

அவருக்கு அன்பு தேவை. ஆனால் அன்பாயிருப்ப தென்றால்...உங்களுக்கு அன்பு தேவை எனில் நீங்கள் அன்பானவராக இருப்பது தேவை. அன்பை நீங்கள் வேண்டினால் அன்பை நீங்களும் வழங்க வேண்டி இருக்கும். நீங்கள் பெறமுடிகிறதைவிட அதிகமான அன்பை நீங்கள் தரவேண்டி இருக்கும். ஆனால் அவர் ஒரு கருமி. அவரால் அன்பை வழங்க முடியாது. தருவது அவருக்கு இயலாத ஒன்று. எதையுமே அவரால் தரமுடியாது. ''தருவது'' என்ற வார்த்தையைக் கேட்டாலே தனக்குள் அவர் சுருங்கிவிடுவார். அவரால் எடுக்க மட்டுமே முடியும்; கொடுக்க முடியாது. கொடை விசயத்தில் அவர் அடைபட்டிருக்கிறார்.

ஆனால் அன்பு இல்லாவிட்டால் உங்களால் பூத்துக்குலுங்க முடியாது. அன்பு இல்லாவிட்டால் எந்த ஆனந்தத்தையும் உங்களால் அடைய முடியாது. நீங்கள் மகிழ்ச்சியாக இருக்க முடியாது. மேலும் நேசிக்கவும் முடியாது. ஏனெனில் நேசிப்பது என்பதே ஏதோ ஒன்றை கொடுப்பதுபோல் தோன்றுகிறது. அது ஒரு கொடை. உங்களிடம் இருப்பதை எல்லாம், உங்கள் சீவனையும் சேர்த்தே இதயத்தோடு கொடுத்துவிடுதலே அது. அவரால் அன்பை தரமுடியாது. அன்பை அவரால் பெறவும் முடியாது. பிறகு என்னதான் செய்வது? ஆனால் அவர் அன்புக்காக ஏங்குகிறார் - எல்லோரையும் போலவே. உணவைப்போலவே அன்பும் ஒரு அடிப்படைத் தேவை. உணவு இல்லாவிட்டால் உங்கள் உடம்பு இறக்கும். அன்பு இல்லாவிட்டால் உங்கள் உள்ளம் சுருங்கும். அது ஒரு உயிர்த்தேவை.

பின் அவர் ஒரு மாற்றை உருவாக்கி இருக்கிறார். அந்த மாற்றுதான் அனுதாபம். அன்பை அவர் தர முடியாது ஆகையால் அன்பை அவர் பெறவும் முடியாது. ஆனால் அனுதாபத்தை அவர் பெறமுடியும். அன்புக்கான மட்டமான மாற்று அனுதாபம். எனவே அவர் சோகமாக இருக்கிறார். அவர் சோகமாக தோன்றும்போது மக்கள் அவர்மேல் இரக்கம் காட்டுவார்கள். அவரிடம் யார் வந்தாலும் அவர்கள் அவர்மேல் பரிவு காட்டுவார்கள். ஏனெனில் எப்போது பார்த்தாலும் அவர் அழுது கொண்டும் புலம்பிக்கொண்டும் இருக்கிறார். அவரது மனநிலை மிகவும் பரிதாபத்துக்குரிய ஒரு மனிதனின் மனநிலையாகவே இருக்கிறது. ஆனால் அதில் அவர் சுகம் காண்கிறார்! அவர்மீது நீங்கள் பரிவு காட்டும் போதெல்லாம் அதில் சுகம் காண்கிறார் இதனால் இன்னும் அதிக

பரிதாபமானவராக ஆகிறார் ஏனெனில் எந்த அளவுக்கு அவர் அதிக அவலத்துடன் இருக்கிறாரோ அந்த அளவுக்கு அவருக்கு அதிக அனுதாபம் கிடைக்கிறது.

எனவே நான் அவரிடம் சொன்னேன், ''உமது சோகத்தில் உமக்கு ஒருவித ஆதாயம் இருக்கிறது. இந்த மொத்தபாணியையும் - சோகத்தையும் - கைவிட முடியாது. அது வேறு எங்கோ வேர்கொண்டிருக் கிறது. அனுதாபத்தைக் வேண்டாதீர்கள். ஆனால் அன்பை நீர் வழங்கத் தொடங்கும்போது மட்டுமே அனுதாபத்தை எதிர்பார்ப்பதை உம்மால் நிறுத்த முடியும். ஏனெனில் அது ஒரு மாற்றுதான். மேலும் ஒருதரம் அன்பை நீர் கொடுக்க தொடங்கிவிட்டால், அன்பு உமக்கு நிகழும். அதன்பின் நீர் மகிழ்ச்சியாய் இருப்பீர். அப்போது ஒரு வேறுபட்ட பாணி உருவாக்கப்படுகிறது.''

கார் நிறுத்துமிடம் ஒன்றுக்குள் ஒரு மனிதன் நுழைந்தான். அவன் மிகவும் கேலிக்குரிய ஒரு தோற்றத்தில் இருந்தான். அவன் எப்படி நடந்துவந்தான் என்பதே ஏறக்குறைய அசாத்தியமான விசயமாகத் தோன்றியது. ஏனெனில் ஒரு காரை ஓட்டி வருவதுபோன்ற பாவனையுடன் அவன் வளைந்து வந்தான். கண்ணுக்குத் தெரியாத ஒரு சக்கரத்தை அவன் கைகள் சுழற்றின. கண்ணுக்குத் தெரியாத ஒரு ஆக்ஸிலேட்டரை அவன் கால்கள் மிதித்தன. இந்தப் பாவனையுடன் அவன் நடந்து வந்தான். இது மிகவும் கடினம், மிகவும் அசாத்தியம். அங்கு ஒரு கும்பல் கூடிவிட்டது. இயலவே இயலாத ஒன்றை அவன் செய்துகொண்டிருந்தான். அவர்கள் நிறுத்தக ஊழியரைப் பார்த்து ''என்ன பிரச்சனை? இந்த மனிதன் ஏன் இப்படிச் செய்கிறான்?'' என்று கேட்டார்கள்.

ஊழியன் ''சத்தம்போட்டுப் பேசாதீர்கள். இந்த மனிதர் கடந்த காலத்தில் ஒரு கார் - பிரியர். மிகத்திறமையான ஓட்டுநர்களில் இவர் ஒருவர். கார் பந்தயத்தில் தேசிய அளவிலான பரிசைக்கூட இவர் வென்றிருக்கிறார். ஆனால் இப்போது ஏதோ மனக்கோளாறின் காரணமாக அவர் தடுக்கப்பட்டுவிட்டார். கார் ஓட்ட அவர் அனுமதிக்கப்படவில்லை. ஆனால் பழைய பழக்கம் மட்டும் விடவில்லை.'' என்றான்.

''இது உனக்குத் தெரியுந்திருப்பதால், 'உன்னிடம்தான் கார் இல்லையே. இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?' என்று ஏன் அவரிடம் நீ சொல்லக்கூடாது?'' என்று கூட்டத்தினர் கேட்டார்கள்.

அதற்கு அந்த ஆள் சொன்னான், ''அதனால் தான் 'சத்தமாகப் பேசாதீர்கள்' என்று சொன்னேன். என்னால் அவரிடம் சொல்லமுடியாது. ஏனென்றால் என்னால் அதை செய்ய முடியாது. ''உம்மிடம் கார் இல்லை' என்று கூற என்னால் முடியாது. இதோ, அவர் தன் காரை நிறுத்தப்போகிறார், பின் அதை நான் கழுவுவேன்.'' என்றான்.

அந்த ஒரு ரூபாய்க்கான எதிர்பார்ப்பு - அந்த ஆதாய நோக்கம் - இதில் இருக்கிறது. உங்கள் அவலத்திலும் உங்கள் வேதனையிலும் உங்கள் நோயிலும்கூட உங்களுக்குப் பல எதிர்பார்ப்புகள், உள்நோக்கங்கள் இருக்கின்றன. பின் நீங்கள் ''நாங்கள் விரும்பவில்லை. நாங்கள் கோபிப்பதை விரும்பவில்லை. இப்படி இருப்பதை, அப்படி இருப்பதை நாங்கள் விரும்பவில்லை'' என்று சொல்லிக்கொண்டே போகிறீர்கள். ஆனால் இவையெல்லாம் உங்களுக்கு எப்படி ஏற்பட்டன என்பதை நீங்கள் பார்க்காதவரை மொத்த பாணியையும் நீங்கள் காணாதவரை, எதையுமே மாற்ற முடியாது.

ஆசையே மனத்தின் மிக ஆழமான பாங்கு ஆகும். நீங்கள் இப்போது இருக்கும் நிலையில் இருப்பதற்குக் காரணம் உங்களுக்கு குறிப்பிட்ட சில ஆசைகள், ஆசைகளின் தொகுதி இருப்பதால்தான். ''முதல் விசயம் பற்றின்மை'' என்கிறார் பதஞ்சலி. எல்லா ஆசைகளையும் கைவிடுங்கள். பற்றிக் கொள்ளாதீர்கள். அடுத்தது, அப்பியாசம்.

உதாரணமாக ஒருவர் என்னிடம் வந்து ''என் உடம்பில் அதிக கொழுப்பு சேர்வதை நான் விரும்பவில்லை. ஆனால் நான் சாப்பிட்டுக் கொண்டே இருப்பேன். அதை நான் நிறுத்த விரும்புகிறேன். ஆனால் நான் சாப்பிட்டுக்கொண்டே இருப்பேன்.'' என்றார்.

இந்த விருப்பம் மேலோட்டமானது. அவர் ஏன் மென்மேலும் தின்றுகொண்டே இருக்கிறார் என்பதற்கு அவருக்குள்ளே ஒரு அமைப்பு - காரணி இருக்கிறது. அப்படியே சில நாள்களுக்கு அவர் நிறுத்தினாலும் பின் மறுபடியும் முன்னைவிட கூடுதல் ஆர்வத்துடன் அவர் சாப்பிடுகிறார். மேலும், சிலநாள்கள் பட்டினிகிடந்தால் ஏற்பட்ட எடை இழப்பைவிட இப்போது அதிக எடை கூடியவரானார். இதுவே வருசக் கணக்கில் தொடர்ச்சியாக நடந்து வந்திருக்கிறது. இது வெறும் குறைவாக உண்ணும் பிரச்சனையே அல்ல. ஏன் அவர் மிகுதியாக உண்ணுகிறார்? உடம்புக்கு அவ்வளவு தேவையில்லை. அப்படியானால் மனத்தில் எங்கோ உணவானது வேறெதற்கோ ஒரு மாற்றாக இருக்கிறது.

அவர் சாவத்தற்குப் பயப்படலாம். சாவதற்கு பயப்படுபவர்கள் அளவுக்கதிகமாகச் சாப்பிடுகிறார்கள். ஏனெனில் சாப்பிடுவதே

உயிர்பிழைத்தலின் அடிப்படையாகத் தோன்றுகிறது. எவ்வளவு அதிகமாய் உண்டீர்களோ அவ்வளவு அதிக காலம் உயிர்வாழ்வீர்கள். - இதுவே அவர்களின் மனத்தில் இருக்கும் கணக்கு. ஏனென்றால் சாப்பிடாவிட்டால் நீங்கள் இறந்துவிடுகிறீர்கள். எனவே சாப்பிடா திருப்பது சாவதற்கு சமம். அதிகம் சாப்பிடுவது அதிக நாள் வாழ்வதற்கு சமம். எனவே சாவைக்கண்டு நீங்கள் பயந்தால் நீங்கள் அதிகமாக உண்பீர்கள். அல்லது உங்களை யாரும் நேசிக்காவிட்டால் நீங்கள் நிறைய உண்பீர்கள்.

உணவானது அன்புக்குப் பதிலாக ஆக முடியும். ஏனெனில் ஆரம்பத்தில் குழந்தை உணவையும் அன்பையும் தொடர்புபடுத்தியே காண்கிறது. குழந்தை அறியவரும் முதல் விசயம் அம்மாதான். அம்மாவிடமிருந்து கிடைக்கும் உணவு, அம்மாவிடமிருந்து கிடைக்கும் அன்பு என்பதுதான். அன்பும் உணவும் ஒரே காலத்தில் அதன் உணர்வில் நுழைகின்றன. அம்மா அன்பாயிருக்கும் போதெல்லாம் அதிகப் பால் தருகிறாள். மகிழ்ச்சியுடன் தாய்ப்பால் ஊட்டுகிறாள். ஆனால் அம்மா கோபமாயிருக்கும் போதெல்லாம், அன்பு செலுத்தாத போதெல்லாம், முலைக்காம்பை பிடுங்கிக்கொண்டு விடுகிறாள்.

அம்மா அன்பாயிராத போது எல்லாம் உணவைப் பறித்தெடுத்துச் செல்கிறாள். அவள் அன்பாயிருக்கும் போதெல்லாம் உணவு ஊட்டுகிறாள். அன்பும் உணவும் ஒன்றே ஆகிறது.. மனத்தில், குழந்தையின் மனத்தில் அவை இரண்டும் தொடர்புடையவை ஆகின்றன. எனவே குழந்தை அதிக அன்பைப் பெறும் போதெல்லாம் அது தன் உணவைக் குறைக்கும். ஏனெனில் அன்பு மிகுதியால் உணவு தேவைப்படுவதில்லை. அன்பு கிடைக்காத போதெல்லாம் அது அதிகமாக உண்ணும். ஏனென்றால் ஒருவித சமநிலையைப் பேணுவது தேவையாகிறது. அன்பு அறவே கிடைக்காவிட்டால் பின் அது தன் வயிற்றை முழுமையாக நிரப்பிக் கொள்ளும்.

இரண்டுபேர் ஒருவரிடம் ஒருவர் அன்பாயிருக்கையில் அவர்கள் கொழுப்பை இழக்கிறார்கள் என்பதை அறிந்தால் . நீங்கள் வியப்படையலாம். எனவேதான் பெண்கள் மணமுடிக்கப்பட்டதுமே சதைபோட ஆரம்பிக்கிறார்கள். காதல் முடிந்துபோன பிறகு அவர்கள் சதைபோட ஆரம்பிக்கிறார்கள். ஏனெனில் இப்போது அது தேவை இல்லை. திருமணத்துடன் காதலும் காதலின் உலகமும், ஒருவகையில், முற்றுப்பெற்றுவிடுகிறது.

மணவிலக்கு மேலோங்கி இருக்கும் நாடுகளில் பெண்கள் சிறந்த வடிவழகுடன் விளங்குகிறார்கள். மணவிலக்கு மதிப்புப்பெற்றிராத

நாடுகளில் பெண்கள் தம் உடல் அமைப்பை, தோற்றத்தைப்பற்றி கவலையே படுவதில்லை. ஏனெனில் மணவிலக்கு சாத்தியம் என்றால் பிறகு பெண்கள் புதிய காதலர்களைக் கண்டுபிடிக்க வேண்டி இருக்கும். அப்போது அவர்கள் தம் தோற்றத்தைக் குறித்து கவனமாய் இருப்பார்கள். காதலுக்கான தேடல் உடல் தோற்றத்தைப் பேண உதவுகிறது. காதல் முடிந்துபோன கதையான பின், ஒரு வகையில் அது முற்றுப்பெற்றுவிடுகிறது. இனி உடம்பைப்பற்றி கவலைப்படத் தேவையில்லை; உடம்பைக் கவனிக்கத் தேவையில்லை.

எனவே இந்த மனிதர் சாவுக்குப் பயந்தவராயிருக்கலாம்; எவருடனும் ஆழமான, அந்நியோன்னிய அன்பு கொண்டிராதவராக இருக்கலாம். மறுபடியும், சாவு - அன்பு என்னும் இந்த இரண்டும் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையன. ஆழ்ந்த காதலில் நீங்கள் இருந்தால் சாவதற்கு நீங்கள் அஞ்சுவதில்லை. அன்பே மிகுந்த நிறைவளிப்பதாயிருப்பதால், வருங்காலத்தில் என்ன நேருமோ என்று நீங்கள் கவலைப்படுவதில்லை. அன்பே நிறைவளிப்பதாயிருக்கிறது. அந்நிலையில் சாவே வருமாயினும் அதை வரவேற்க முடியும். ஆனால் நீங்கள் காதலில் இராவிட்டால் பின் சாவு ஒரு பயத்தை ஏற்படுத்துகிறது. ஏனெனில் இன்னமும் நீங்கள் காதலித்திருக்கவில்லை; அதற்குள் சாவு நெருங்கிக் கொண்டிருக்கிறதே. சாவானது அனைத்துக்கும் முற்றுப்புள்ளி வைத்துவிடும். அதற்குமேல் அவகாசமோ வருங்காலமோ இராது.

அன்பு இல்லாவிட்டால் சாவுபயம் அதிகமாயிருக்கும். அன்பு இருந்தால் சாவுபயம் குறைவாய் இருக்கும். முழுமையான அன்பு இருந்தால் சாவு பயம் மறைந்துவிடுகிறது. இவை எல்லாம் உள்ளுக்குள் உறவுடையவை. மிகவும் எளிய விசயங்கள்கூட அவற்றினும் பெரிதான அமைப்புகளில் ஆழமாக வேர்கொண்டவையாக உள்ளன.

முல்லா நசுருதீன் தன் நாயுடன், தன் கால்நடை மருத்துவர் முன் நின்றுகொண்டு ''என் நாயின் வாலை வெட்டுங்கள்'' என்று வற்புறுத்திக் கொண்டிருந்தார். மருத்துவர் கேட்டார், ''எதற்காக நசுருதீன்? ஏனெனில் உன் நாயின் வாலை நான் வெட்டிவிட்டால் இந்த அழகான நாய் அசிங்கமான நாயாகிவிடும். பார்ப்பதற்கு அவலட்சணமாக தோன்றும். அப்படி இருக்க ஏன் இதை வலியுறுத்துகிறாய்?'' நசுருதீன் சொன்னார், ''இது உமக்கும் எனக்கும் மட்டும் தெரிந்ததாக இருக்கட்டும். வேறு யாரிடமும் இதைச் சொல்லிவிடாதீர்: ஏன் நாய்வாலை நறுக்கச் சொல்கிறேன் என்றால் விரைவில் என் மாமியார் வரப்போகிறாள். அப்போது என் வீட்டிலிருக்கும் எதுவும் அவளை வரவேற்பதன் அறிகுறியாக இருப்பதை நான் விரும்பவில்லை. அத்தகைய எல்லாவற்றையும் நான்

அகற்றிவிட்டேன் - இந்த நாயைத் தவிர. இது என் மாமியாரை வரவேற்க முடியும்.''

ஒரு நாய்வால் கூட எத்தனையோ உறவுகளின் மிகப்பெரிய அமைப்பின் பகுதியாக இருக்கிறது. தன் நாயின் மூலமாகக் கூட தன் மாமியாரை நசுருதீனால் வரவேற்க முடியாது என்றால் அவர் தன் மனையிடம் அன்பான உறவுடன் இருக்க முடியாது. அதற்கு வாய்ப்பே இல்லை. நீங்கள் உங்கள் மனைவியிடம் அன்புடன் இருந்தால் உங்கள் மாமியாரை நீங்கள் வரவேற்பீர்கள்; அவளிடமும் அன்பாக இருப்பீர்கள்.

மேல்பரப்பில் எளியவையான விசயங்கள் அடியாழத்தில் சிக்கலான விசயங்களில் வேர்கொண்டுள்ளன. எல்லாமே ஒன்றுக்கொன்று பரஸ்பரம் உறவுடையனதாயுள்ளன. எனவே ஒரு எண்ணத்தை மாற்றிக் கொள்வதன்மூலமே எதையுமே மாற்றிவிட முடிவதில்லை. சிக்கலான பெரிய அமைப்புக்குள் நீங்கள் சென்று அதை சிக்கறுத்து, மறுசீரமைத்து, புதிய ஒரு பாங்கை படைத்தால் மட்டுமே ஒரு புது வாழ்க்கை அதிலிருந்து உதயமாக முடியும். எனவே பற்றின்மை, ஒவ்வொன்றின் மீதும்/ எல்லாவற்றைக் குறித்தும் பற்றின்மை என்னும் இந்த இரண்டு விசயங்களையும் நடைமுறைப்படுத்த வேண்டி இருக்கிறது.

இதன் பொருள் நீங்கள் இன்பம் துய்ப்பதை நிறுத்திவிடுவீர்கள் என்பதல்ல. இந்த தவறான புரிதல் இருந்து வந்துள்ளது. யோகமானது பலப்பல தவறான வழிகளில் பெயர்த்துரைக்கப்பட்டு வந்துள்ளது. அவற்றில் ஒன்று பின்வருமாறு: உயிர் வாழ்க்கையை மறுத்துவிட வேண்டும் என யோகம் கூறுவதாகத் தோன்றுகிறது. ஏனெனில் பற்றின்மை என்றால் எதற்கும் நாம் ஆசைப்படக்கூடாது. எதற்கும் நாம் ஆசைப்படாவிட்டால், எதன் மீதும் நமக்கு பற்றில்லை என்றால், பின் நாம் ஒரு உயிரற்ற சவம்தானே.' இல்லை, அதுவல்ல பொருள்.

பற்றின்மை என்றால் எதனையும் சார்ந்திராதே என்று பொருள்; உன் வாழ்வையும் மகிழ்ச்சியையும், வேறொன்றைச் சார்ந்ததாக ஆக்கிவிடாதே என்று பொருள். முன்னுரிமை கொடுத்தல் என்பது சரியே. பற்றுவைத்தல் என்பது சரியாகாது. முன்னுரிமை சரியே என்று நான் கூறும்போது நீங்கள் தேர்ந்தெடுக்க முடியும் என்கிறேன். நீங்கள் தேர்ந்தெடுக்கவே வேண்டும். ஓரிடத்தில் பல பேர் இருந்தால் அவர்களில் ஒருவரையே நீங்கள் காதலிக்க வேண்டி இருக்கிறது. யாரையாவது ஒருவரை நீங்கள் தேர்ந்தெடுக்க வேண்டி இருக்கிறது. யாருடனாவது நீங்கள் நட்புக் கொண்டாக வேண்டி இருக்கிறது. யாருக்காவது முன்னுரிமை கொடுங்கள், ஆனால் பற்றுக்கொண்டு விடாதீர்கள்.

இரண்டுக்கும் என்ன வேறுபாடு? பற்றுக்கொண்டுவிட்டால் அது ஒரு பீடிப்பாக ஆகிறது. அவர் அங்கு இல்லாவிட்டால் நீங்கள் மகிழ்ச்சியாய் இருப்பதில்லை. அவரை நீங்கள் தவறவிட்டால், நீங்கள் துன்புறுகிறீர்கள். பற்று என்பது எத்தகைய ஒரு நோய் என்றால் அம்மனிதர் அங்கு இல்லாவிட்டால் நீங்கள் மகிழ்ச்சியாய் இருப்ப தில்லை. அவரை நீங்கள் தவறவிட்டால், நீங்கள் துன்புறுகிறீர்கள். இல்லாவிட்டால் நீங்கள் அவலத்தில் இருக்கிறீர்கள். அவர் அங்கு இருந்தால் நீங்கள் அலட்சியமாக - அசிரத்தையாக இருக்கிறீர்கள். அப்போது நன்றாக உள்ளது. அது இயல்பான நிலையென கொள்ளப் படுகிறது. அம்மனிதர் அங்கிருந்தால் எல்லாம் சரியே - அதற்குமேல் ஒன்றும்(தேவை) இல்லை. அம்மனிதர் அங்கு இல்லாவிட்டால் பின் நீங்கள் அவலத்தில் இருக்கிறீர்கள். இதுவே பற்றுவைத்தல்.

முன்னுரிமை தருவது என்பது இதற்கு முற்றிலும் நேர்மாறானது. மனிதர் அங்கு இல்லை என்றாலும் நீங்கள் நலமாகவே இருக்கிறீர்கள். அவர் இருந்தால் நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள். நன்றியுடையவர் களாக இருக்கிறீர்கள். அவர் உங்களுடன் இருப்பதை நீங்கள் கேள்விக் கிடமற்ற உங்களின் உரிமையாக எடுத்துக் கொள்வதில்லை. நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள், அதை நீங்கள் அனுபவிக்கிறீர்கள், கொண்டாடுகிறீர்கள். ஆனால் அம்மனிதர் அங்கு இல்லையென்றாலும் உங்களுக்குப் பிரச்சனை இல்லை. அவரை நீங்கள் கட்டாயப்படுத்துவ தில்லை. அவர்மேல் நீங்கள் வெறியாக, அவரால் பீடிக்கப்பட்டவராக இருப்பதில்லை. தனிமையிலும் இனிமையாக இருக்க உங்களால் முடிகிறது. அவர் இருந்தால் அதையே நீங்கள் விரும்பி தேர்ந்தெடுப் பீர்கள். ஆனால் அது ஒரு பீடிப்பு அல்ல.

முன்னுரிமை நல்லது. பற்று நோய்க்கூறானது. முன்னுரிமையுடன் வாழ்கிற மனிதர் ஆழ்ந்த மகிழ்ச்சியில் தன் வாழ்க்கையை வாழ்கிறார். அவரை நீங்கள் துன்புறுத்த முடியாது. அவரை மகிழ்ச்சியானவராக, மேலுமதிக மகிழ்ச்சியானவராக ஆக்கவே உங்களால் முடியுமே தவிர அவரைத் துன்புறுகிறவராக உங்களால் ஆக்க முடியாது. அப்படியே, பற்றுக்கொண்டு வாழும் ஒரு மனிதரை நீங்கள் மகிழ்ச்சியானவராக ஆக்கவும் முடியாது. மேலதிக துன்பமானவராக மட்டுமே அவரை உங்களால் ஆக்கமுடியும். உங்களுக்கும் இது தெரியும். நீங்களும் இதை நன்றாகவே அறிவீர்கள். உங்கள் நண்பர் இருக்கும்போது அதனால் நீங்கள் பெரிதாக மகிழ்வதில்லை. அவர் இல்லாதபோதோ அதைப் பெரிய இழப்பாக உணர்கிறீர்கள்.

ஒரு சில நாட்களுக்கு முன்புதான் ஒரு பெண் என்னிடம் வந்தாள். இரண்டு மாதங்களுக்கு முன்பும் அவள் தன் காதலனுடன் என்னைக் காண வந்திருந்தாள். அவர்கள் ஒருவருடன் ஒருவர் ஓயாமல் சண்டைபோட்டுக் கொண்டிருந்தார்கள். அந்தச் சண்டை ஒரு தொற்று நோயாகவே மாறிவிட்டிருந்தது. எனவே சில வாரங்களுக்கு அவர்களை பிரிந்திருக்கு மாறு சொன்னேன். சேர்ந்து வாழ்வது சாத்தியமே இல்லை என்றார்கள் அவர்கள். எனவே அவர்களைப் பிரித்து அனுப்பிவைத்தேன்.

கிறிஸ்துமஸ் அன்று அந்தப் பெண் இங்கு வந்தாள். அவள் சொன்னாள், ''இந்த இரண்டு மாதங்களாக என் காதலனை இழந்துவிட்டேன். எப்போது பார்த்தாலும் அவனையே நினைத்துக் கொண்டிருக்கிறேன். என் கனவுகளில்கூட அவன் வர ஆரம்பித்திருக்கி றான். இதற்குமுன் ஒருபோதும் இப்படி நடந்ததில்லை. நாங்கச் சேர்ந்திருந்தபோது அவனை ஒருபோதும் என் கனவுகளில் நான் கண்டதே இல்லை. என் கனவுகளில் வேறு ஆண்களுடன்தான் நான் காதல் புரிந்திருக்கிறேன். ஆனால் இப்போதோ ஓயாமல் என் காதலன்தான் என் கனவுகளில் வருகிறான். எனவே மறுபடியும் நாங்கள் இருவரும் சேர்ந்து வாழ அனுமதிகொடுங்கள்.''

அதற்கு அவளிடம் நான் சொன்னேன், ''எனக்கு ஒன்றும் பிரச்சனை இல்லை. நீங்கள் மறுபடியும் சேர்ந்து வாழ முடியும். ஆனால் இதை மட்டும் நினைவில் கொள்:- இரண்டு மாதங்களுக்கு முன்புவரைகூட நீங்கள் சேர்ந்துதான் வாழ்ந்தீர்கள். ஆனால் அப்போது நீங்கள் மகிழ்ச்சியாய் இல்லை.''

பற்றுக்கொள்ளுதல் ஒரு நோய். நீங்கள் சேர்ந்து இருக்கும் போதும், நீங்கள் மகிழ்ச்சியாய் இருப்பதில்லை. உங்களிடம் செல்வம் இருக்கும் போதும் நீங்கள் மகிழ்ச்சியாய் இருப்பதில்லை. நீங்கள் ஏழையாக இருந்தாலோ நீங்கள் துன்பத்தில் உழல்வீர்கள். நீங்கள் நலமாக இருக்கையில் அதற்காக ஒருபோதும் நீங்கள் நன்றியறிதலுடன் இருப்பதில்லை. நீங்கள் ஆரோக்கியமாக இருக்கும்போது இயற்கையிடம் ஒருபோதும் நீங்கள் நன்றியுடன் இருப்பதில்லை. ஆனால் நீங்கள் நோயில் இருக்கும்போதோ வாழ்க்கை முழுவதையும் உலகம் முழுவதையும் நீங்கள் சபிக்கிறீர்கள். எல்லாமே அர்த்தமற்றதாக இருக்கிறது. கடவுள் கூட அங்கு இருப்பதில்லை.

ஒரு சாதாரணத் தலைவலிகூட எல்லா கூட அங்கு கடவுளரையும் இல்லாமல் செய்வதற்குப் போதுமானது. ஆனால் நீங்கள் மகிழ்ச்சியாக

வும் நலமாகவும் இருக்கும்போது கோயிலுக்குப் போகவேண்டும் என்றோ, போய், ''நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன். நலமாக இருக்கிறேன். இவைகள் நான் சம்பாதித்தல்ல. இவையெல்லாம் நீர் அளித்த பரிசுகளே.'' என்று நன்றிசொல்ல வேண்டும் என்றோ தோன்றுவதே இல்லை.

முல்லா நசுருதீன் ஒருமுறை ஒரு ஆற்றில் விழுந்துவிட்டார். மூழ்கி சாகப்போகும் நிலையில் இருந்தார். அவர் மத நம்பிக்கை உள்ளவர் இல்லை. ஆனால் திடீரென, சாவின் விளிம்பில், அவர் உரக்கக் கத்தினார், ''அல்லா, கடவுளே, தயவு செய்து என்னைக் காப்பாற்றுங்கள். எனக்கு உதவுங்கள். இன்றுமுதல் நான் ஒழுங்காகத் தொழுவேன். வேதத்தில் எழுதி இருக்கிறபடி எல்லாம் நடந்துகொள்வேன்.''

''கடவுளே எனக்கு உதவு'' என்று அவர் சொல்லிக் கொண்டிருந்தபோது ஆற்றின்மீது தொங்கிக் கொண்டிருந்த ஒரு கிளையை அவர் பற்றிக் கொண்டார். அதை இறுகப் பிடித்துக் கொண்டு பாதுகாப்பாக நகர்ந்துகொண்டிருந்தார். அப்போது இளைப்பாறுதலாக உணர்ந்தார். ''இப்போது எல்லாம் சரியாயிற்று. இனி நான் கவலைப்படத் தேவையில்லை'' என்றார். மறுபடியும் கடவுளிடம் '' இனி நீரும் கவலைப்பட தேவையில்லை. இப்போது நான் பாதுகாப்பாக இருக்கிறேன்'' என்றார். திடீரென அக்கிளை முறிந்தது. மீண்டும் விழுந்துவிட்டார். உடனே''ஒரு சாதாரண ஜோக்கை கூட உம்மால் பொறுத்துக் கொள்ள முடியலையா?'' என்று சொன்னார்.

ஆனால் இப்படித்தான் நம் மனங்கள் இயங்குகின்றன. பற்றானது உங்களை அதிகமதிக அவலம் நிறைந்தவர்களாக ஆக்கும். முன்னுரிமை சுதந்திரமான தேர்ந்தெடுப்பு என்பது உங்களை அதிகமதிக ஆனந்தம் நிறைந்தவர்களாக ஆக்கும். பற்றுக் கொள்வதற்கு பதஞ்சலி எதிரானவர். தேர்ந்தெடுப்பதை அவர் எதிர்ப்பவர் அல்ல. ஒவ்வொருவரும் தேர்ந்தெடுக்கவே வேண்டி இருக்கிறது. நீங்கள் ஒரு உணவை விரும்பலாம். இன்னொன்று உங்களுக்குப் பிடிக்காமல் போகலாம். ஆனால் இது ஒரு தேர்ந்தெடுப்பு மட்டுமே. உங்களுக்குப் பிடித்த உணவுவகை கிடைக்காவிட்டால் அடுத்ததாக கிடைக்கிற உணவை நீங்கள் மகிழ்ச்சியுடன் தேர்ந்தெடுப்பீர்கள். ஏனெனில் முதல் விருப்பம் கிடைக்கவில்லை, அப்படியானால் கிடைப்பது எதுவோ அதையே ருசித்துண்ண வேண்டியுள்ளது என்பதை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். அதற்காக நீங்கள் அழுது புலம்புவதில்லை. வாழ்க்கை உங்களுக்கு எப்படி நேர்கிறதோ அப்படியே அதை நீங்கள் ஏற்றுக்கொள்வீர்கள்.

ஆனால் ஒவ்வொன்றின்மீதும் ஓயாமல் பற்றுக்கொள்ளும் மனிதன் ஒருபோதும் எதையும் அனுபவிப்பதில்லை. எப்போதும் தவறவிடுகிறான். அவனைப் பொறுத்தவரை வாழ்க்கை முழுவதுமே ஒரு தொடர்ச்சியான அவலமாக ஆகிறது. நீங்கள் பற்றற்றவராய் இருந்தால் நீங்கள் சுதந்திரமாய் இருக்கிறீர்கள். உங்களிடம் நிறைய ஆற்றல் இருக்கிறது. எதையும் நீங்கள் சார்ந்தில்லை. நீங்கள் சுயேச்சையாக இருக்கிறீர்கள். இந்த ஆற்றல் அகப்பயிற்சிக்கு முயற்சிக்கு திருப்பப்பட முடியும். அது ஒரு நடைமுறை ஆக முடியும். அப்பியாசம் ஆக முடியும். அப்பியாசம் என்றால் என்ன? பழைய பழக்கப்பட்டுப்போன பாணியை எதிர்த்துப் போரிடுவதே அப்பியாசம். ஒவ்வொரு மதமும் பல பயிற்சிகளை வகுத்துள்ளது. ஆனால் அவற்றுக்கு அடிப்படை பதஞ்சலியின் இந்த சூத்திரம்தான்.

எடுத்துக்காட்டாக நீங்கள் கோபம் கொள்ளும் போதெல்லாம் ஒரு பயிற்சியை மாறாமல் செய்வது என வைத்துக் கொள்ளுங்கள். கோபத்துக்குள் பிரவேசிக்கும் முன் ஐந்து தடவை ஆழ்ந்து சுவாசியுங்கள். ஒரு எளிய பயிற்சி. வெளிப்பார்வைக்கு, கோபத்துடன் எவ்வித தொடர்பும் அற்றதாய் தோன்றும் பயிற்சி. எவராவது இதைக் கேட்டு சிரிக்கக்கூட செய்யலாம். ''இது எப்படி உதவப் போகிறது?'' என்றுகூடக் கேட்கலாம். ஆனால் இது உதவுகிறது. கோபம் எழும்பிக் கொண்டிருக்கிறது என நீங்கள் உணரும் போதெல்லாம் அதை நீங்கள் வெளிப்படுத்திவிடும் முன்பாக ஐந்து தடவை ஆழமாக வெளிமூச்சு - உள்மூச்சு வாங்குங்கள்.

அது என்ன செய்யும்? அது பல வேலைகளைச் செய்யும். உணர்வற்றவராக நீங்கள் இருக்கும் போதுமட்டுமே கோபம் வரமுடியும். ஆனால் இது ஒரு உணர்வுள்ள முயற்சியாக உள்ளது. கோபத்தை வெளிப்படுத்தும்முன் உணர்வுடன் ஐந்துதடவை மூச்சை உள்ளும் வெளியும் இழுக்கிறீர்கள். இது உங்கள் மனத்தை உன்னிப்புடையதாக ஆக்கும். ஆகவே உன்னிப்பாக இருக்கும்போது கோபம் வரமுடியாது. இது உங்கள் மனத்தை விழிப்புடையதாக ஆக்குவது மட்டுமல்ல, உங்கள் உடம்பையும் அது விழிப்புடையதாக ஆக்கும். ஏனெனில் உடலில் அதிக உயிர்காற்று புகும்போது உடம்பு அதிக விழிப்பாக ஆகிறது. இந்த விழிப்பான கணத்தில், கோபம் மறைந்துவிட்டிருப்பதை திடீரென நீங்கள் உணர்வீர்கள்.

இரண்டாவதாக, உங்கள் மனமானது ஒரு பக்கத்தில் மட்டுமே முனைப்பாக இருக்க முடியும். ஏககாலத்தில் இரண்டு விசயங்களைப் பற்றி

சிந்திக்க மனதால் முடியாது. அது மனதுக்கு இயலாத ஒன்று. ஒன்றிலிருந்து மற்றதுக்கு வெகு லாவகமாக அது மாற்றிக்கொள்ள முடியும். ஆனால் ஒரே சமயத்தில் தன்னில் இரண்டு அம்சங்களை ஒன்றாக வைத்திருக்க மனத்தால் முடியாது. ஒரு சமயத்துக்கு ஒன்றுதான். மனத்தின் சன்னல் மிகவும் நடுக்கமானது. ஒரு நேரத்தில் ஒரே ஒரு விசயம்தான். கோபம் அங்கு இருந்தால், அது மட்டுமே இருக்கிறது. ஐந்து தடவைகள் நீங்கள் உள்மூச்சு வெளிமூச்சு வாங்கினால் திடீரென மனம் மூச்சுவிடுவதோடு மட்டும் இருக்கிறது. அதன் கவனம் திரும்பி இருக்கிறது. இப்போது அது வேறு ஒரு பாதையில் இயங்கிக் கொண்டிருக்கிறது. மேலும் மறுபடியும் நீங்கள் கோபிக்கத் திரும்பினாலும் பழைய மாதிரி உங்களால் கோபிக்க முடியாது. ஏனென்றால் அந்தக் கட்டம் கடந்துபோய்விட்டது.

குருட்ஜீப் கூறுகிறார், ''என் அப்பா இறந்து கொண்டிருந்தபோது அவர் என்னிடம் ஒன்றே ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக்கொள்ளச் சொன்னார். 'உனக்கு கோபம் மூளும் போதெல்லாம் இருபத்து நான்கு மணி நேரம் பொறு. அதற்குப்பின் நீ செய்ய விரும்பியதைச் செய். கொலையே செய்ய நினைத்தாலும் போய் செய். ஆனால் இருபத்து நான்கு மணிநேரம் மட்டும் பொறு.''

இருபத்து நான்கு மணிகள் என்பது மிகவும் அதிகம். இருபத்து நான்கு மணித்துளிகளே போதும். பொறுப்பதே உங்களை மாற்றுகிறது. கோபத்தை நோக்கிப் பாய்ந்து கொண்டிருக்கும் ஆற்றல் இப்போது ஒரு புதிய வழித் தடத்தை மேற்கொள்கிறது. ஆற்றல் ஒன்றே தான். அது கோபமாக ஆகமுடியும். அதுவே கருணையாக ஆகவும் முடியும். அதற்கொரு வாய்ப்பு மட்டும் கொடுங்கள்.

எனவேதான் பழைய சாத்திரங்கள் கூறுகின்றன, ''ஒரு நல்ல எண்ணம் உங்கள் மனத்தில் தோன்றினால் அதைத் தள்ளிப்போடாதீர்கள். உடனடியாக அதை செய்துவிடுங்கள். ஒரு தீய எண்ணம் உங்கள் மனத்தில் எழுந்தால் அதைத் தாமதப்படுத்துங்கள். உடனடியாக அதை செய்து விடாதீர்கள்.'' ஆனால் நாம் மிகுந்த தந்திரமுள்ளவர்களாக அல்லது 'புத்திசாலி'களாக இருக்கிறோம். என்று நினைத்துக் கொள்கிறோம். ஒரு நல்ல எண்ணம் வரும்போதெல்லாம் அதை நாம் தள்ளிப்போடுகிறோம்.

தன் நினைவுக்குறிப்புகளில் மார்க் ட்வைன் பின்வருமாறு எழுதி இருக்கிறார்: ஒரு மாதாகோவிலில் ஒரு பாதிரியின் பிரசங்கத்தை பத்து நிமிடங்களுக்கு அவர் கவனித்துக் கொண்டிருந்தார். அந்தப் பிரசங்கம்

வெகு அற்புதமாக இருந்தது. எனவே அவர்தன் மனத்தில் பின்வருமாறு நினைத்தார், ''இன்று நான் பத்து டாலரை காணிக்கையாக போடப் போகிறேன். பாதிரி அருமையாகப் பேசுகிறார். இந்தக் கோவிலுக்கு நாம் உதவியாக வேண்டும்!'' பிரசங்கம் முடிந்தபிறகு பத்து டாலரை நன்கொடையாகத் தரவேண்டும் என்று அவர் முடிவு செய்தார். மேலும் பத்து நிமிடங்கள் கழிந்தது. இப்போது பத்து டாலர்கள் மிகவும் பெரிய தொகை, ஐந்து டாலர் போதும் என்று அவர் எண்ணத் தொடங்கினார். மேலும் பத்து நிமிடங்கள் கழிந்தபின் ''இந்த மனிதனுக்கு ஐந்து டாலர்கூட அதிகம்'' என்று நினைத்தார்.

இப்போது அவர் பிரசங்கத்தைக் கவனித்துக்கொண்டு இருக்கவில்லை. அந்தப் பத்து டாலர்களைப்பற்றியே கவலைப்பட்டார். யாரிடமும் அவர் இதை சொல்லிவிடவில்லை. ஆனால் இது அதிகம் என்று தனக்குள் நிச்சயித்துக்கொண்டார். அவர் கூறுகிறார், ''பிரசங்கம் முடியும் தருவாயில் எதுவுமே தரப்போவதில்லை என நான் முடிவு செய்தேன். அதுமட்டுமல்ல, காணிக்கைத் தட்டுடன் அந்த மனிதர் என்முன் வந்தபோது அதிலிருந்து சில டாலர்களை எடுத்துக்கொண்டு கோவிலைவிட்டு ஓடிவிடலாமா என்று கூட யோசித்தேன்!''

மனம் இடைவிடாமல் மாறிக்கொண்டிருக்கிறது. ஒருபோதும் அது நிலைப்புடன் இருப்பதில்லை. அது ஒரு ஓட்டமாகவே இருக்கிறது. ஏதாவது மோசமானது வந்தால் கொஞ்ச நேரம் பொறுங்கள். மனத்தை உங்களால் நிலைப்படுத்த முடியாது. மனம் ஒரு பாய்ச்சலாக இருக்கிறது. கொஞ்சம் பொறுங்கள்! சற்றே காத்திருங்கள் - அப்போது அந்த மோசமான செயலை உங்களால் செய்ய முடியாமல் போகும். ஏதாவது நல்லது தோன்றினால் அதை நீங்கள் செய்யவும் விரும்பினால் உடனடியாக அதைச் செய்துவிடுங்கள். ஏனென்றால் மனம் மாறிக்கொண்டே இருக்கிறது. சில நிமிடங்கள் கழிந்துவிட்டால் உங்களால் அதைச் செய்ய முடியாமல் போகும். எனவே அது ஒரு அன்பான, நற்செயல் என்றால் அதைத் தாமதப்படுத்தாதீர்கள். அது வன்முறையான, அழிவு பயப்பதான ஒரு செயல் என்றால் கொஞ்ச நேரத்துக்கு அதைத் தள்ளிவையுங்கள்.

கோபம் வருகிறபோது ஐந்துதரம் மூச்சுவிடும் கால அளவுக்கேனும் அதைத் தாமதப்படுத்துங்கள். அப்போது அதை உங்களால் வெளிக் காட்ட முடியாது. இது ஒரு பயிற்சியாக ஆகும். ஒவ்வொரு தடவையும் கோபம் வருகிறபோது முதலில் ஐந்து தடவைகள் உள்ளும் வெளியும் மூச்சுவிடுங்கள். பின் நீங்கள் அதைத் தாராளமாக செய்யமுடியும். தொடர்ந்து பயிற்சி செய்யுங்கள். அது ஒரு பழக்கமாக ஆகிறது. இனி

அதை நீங்கள் நினைத்துப் பார்க்கவும் தேவையில்லை. கோபம் நுழையும் அக்கணமே உடனடியாக உங்கள் உடல் யந்திரம் தானே வேகமாக ஆழமாக மூச்சுவிடத் தொடங்குகிறது. சில ஆண்டுகள் கோபம் கொள்வது என்பது உங்களுக்கு முற்றிலும் இயலாததாகிப் போகும். உங்களால் கோபிக்க முடியாது போகும்.

எந்த ஒரு பயிற்சியும் எந்த ஒரு உணர்வுள்ள முயற்சியும் உங்கள் பழைய பாங்குகளை மாற்ற முடியும். ஆனால் இது உடனடியாகச் செய்து முடித்துவிட முடிகிற வேலை அல்ல. இதற்குக் காலம் பிடிக்கும் - ஏனெனில் உங்கள் பழக்கப் பாங்குகளை பலப்பல பிறவிகளாக நீங்கள் உருவாக்கி இருக்கிறீர்கள். ஒரு பிறவி முழுவதிலுமேகூட உங்களால் அதை மாற்ற முடியாது. ஒரு பிறவி என்பது மிக குறுகிய காலமே.

என் சந்நியாசிகள் என்னிடம் வந்து ''அது எப்போது நிகழும்?'' என்று கேட்கிறார்கள். ''விரைவில்' என்கிறேன் நான். ''விரைவில் என்று எதைச் சொல்கிறீர்கள்? ஏனெனில் பலவருசங்களாகவே நீங்கள் எங்களிடம் 'விரைவில்' என்றுதான் சொல்லிக்கொண்டு வருகிறீர்கள்'' என்கிறார்கள் அவர்கள்.

ஒரே ஒரு பிறவியிலே கூட அது நிகழ்கிறது - அப்படியென்றால் அது மிகவும் சீக்கிரமாக நடந்ததாக்வே பொருள். எப்போது அது நடந்தாலும் அதற்குரிய காலத்துக்கும் முன்பாகவே அது நிகழ்ந்திருக்கிறது என்றே ஆகும். ஏனெனில் இந்தப் பாங்கை பலபிறவிகளாக நீங்கள் படைத்து வந்திருக்கிறீர்கள். அதை அழிக்க வேண்டி உள்ளது. மறுபடியும் புதிதாக உருவாக்க வேண்டி உள்ளது. எனவே எந்தப் பிறவியில் நடந்தாலும் எத்தனை பிறவிகள் எடுத்தாலும் அது தாமதித்து நிகழ்ந்ததாகாது.

இடைவிடாத அகமுயற்சியாலும் பற்றற்ற தன்மையாலும் அவற்றை நிறுத்துவது நடைமுறைக்கு கொண்டுவரப்படுகிறது. இந்த இரண்டில் அப்பியாசம் எனப்படும் அகப்பயிற்சியானது தன்னில் உறுதியாக நிலைபெறுவதற்கான முயற்சியாகும்.

தன்னிலேயே மையப்படுத்தலே அப்பியாசத்தின் சாரம். உங்களுக்கு எது நிகழ்ந்தாலும் உடனடியாக நீங்கள் எதிர்வினை புரிந்துவிடக்கூடாது. முதலில் உங்களில் நீங்கள் மையம்கொள்ள வேண்டும். அந்த மையங்கொண்ட நிலையிலிருந்தே நீங்கள் சுற்றிலும் திரும்பிப்பார்த்து பின் முடிவெடுக்க வேண்டும்.

உங்களை ஒருவர் அவமதிக்கிறார். உடனே அந்த அவமதிப்பால் நீங்கள் இழுபடுகிறீர்கள். உங்கள் மையத்தை கலந்து ஆலோசிக்காம

லேயே நீங்கள் எதிர்வினைபுரியப் போய்விடுகிறீர்கள். ஒரே ஒரு கணநேரமாவது மையத்துக்கு திரும்பிவந்து பிறகு செயல்படுவதற்குப் பதிலாக உடனேயே நீங்கள் செயல்பட்டு விடுகிறீர்கள்.

அப்பியாசம் என்றால் அகப்பயிற்சி. உணர்வுள்ள முயற்சி என்றால் ''வெளியில் நான் போவதற்கு முன் உள்ளே நான் போயாக வேண்டும். முதல் இயக்கம் என் மையத்தை நோக்கியதாகவே இருக்க வேண்டும். முதலில் நான் என் மையத்தைத் தொடர்புகொண்டாக வேண்டும். அங்கே நிலைபெற்ற நிலையில் இருந்து நிலைமையை நான் பார்ப்பேன், பின்பே முடிவெடுப்பேன்'' என்பதாகும். ஆகவே இது ஒரு மாபெரும் நிகழ்வாகும். மிகப்பெரிய மாறுதலை உண்டாக்கும் நிகழ்முறையாகும். ஒரு தடவை உள்ளுக்குள் நீங்கள் மையம் கொண்டுவிட்டால் முழு விவகாரமும் முற்றிலும் வேறுவிதமாகக் காட்சியளிக்கிறது: கண்ணோட்டம் பார்வைக் கோணம் மாறி இருக்கிறது. இப்போது அது ஒரு அவமதிப்பு போலவே படாமல் போகலாம். அந்த மனிதன் ஒரு மூடன் அவ்வளவு தான் என்று தோன்றலாம். அல்லது உண்மையாகவே நீங்கள் மையம்கொண்டிருந்தால் அவர் கூறுவது சரியே என நீங்கள் அறியவரலாம். ''அது ஒரு அவமதிப்பு அல்ல. அவர் ஒன்றும் தவறாக சொல்லி விடவில்லை.'' என்றும் தெரியவரலாம்.

நான் ஒரு நிகழ்ச்சியைக் கேள்விப்பட்டேன். அது நடந்தது உண்மையா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. ஆனாலும் இந்தக் கதையை நான் கேட்டிருக்கிறேன்: ரிச்சர்ட் நிக்சனைப் பற்றி ஒரு செய்தித்தாள் தொடர்ந்து அவதூறாக, கேவலமாக எழுதிக்கொண்டிருந்தது. தொடர்ச்சியாக. எனவே ரிச்சர்ட் நிக்சன் அந்தப் பத்திரிகை ஆசிரியரிடம் போய், ''என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? என்னைப்பற்றி பொய்களை எழுதிக் கொண்டிருக்கிறீர்கள். அதுவும் பொய் என்று தெரிந்தே செய்துகொண்டிருக்கிறீர்கள்!'' என்றார். அதற்கு பதிப்பாசிரியர் ''ஆம், உங்களைப்பற்றி நாங்கள் சொல்லிக் கொண்டிருப்பது பொய்தான். அதை நாங்கள் அறிவோம். ஆனால் உங்களைப்பற்றிய உண்மைகளை நாங்கள் சொல்ல ஆரம்பித்தால் நீங்கள் இன்னும் அதிக தொந்தரவுக்கு உள்ளாவீர்கள்!'' என்று சொன்னார்.

எனவே யாராவது உங்களைப்பற்றி ஏதாவது சொல்லும்போது அவர் கூறுவது பொய்யாக இருக்கலாம். ஆனாலும் அதை மறுபடியும் ஒருபார்வை பாருங்கள். அவர் கூறுவது உண்மையாகவே நிசம் என்றால் அது இன்னும் மோசமான நிலைமை. அல்லது அவர் கூறுவதெல்லாம் உங்களுக்குப் பொருத்தமாக இருக்கலாம். ஆனால் நீங்கள் மையம் கொண்டிருந்தால் தான் உங்களையே நீங்கள் உணர்ச்சிவசப்படாமல் பார்க்க முடியும்.

இந்த இரண்டில் அப்பியாசம் என்னும் அகப்பயிற்சியானது தன்னில்தானே உறுதியாக நிலைநிற்பதற்கான முயற்சி என்கிறார் பதஞ்சலி. செயல்படத் தொடங்கும்முன் - அது எவ்விதச் செயல்பாடானா லும் சரி - உங்களுக்குள் பிரவேசியுங்கள். ஒரே ஒரு கண நேரமாகிலும் - முதலில் அங்கே நிலை பெறுங்கள். அப்போது உங்கள் செயல் முற்றிலும் வேறுவிதமாக இருக்கும். அதே பழைய உணர்வற்ற முறையிலேயே அது இருக்க முடியாது. அதில் ஒரு புதுமை இருக்கும். அதில் ஒரு உயிருள்ள எதிர்வினை இருக்கும். சும்மா முயன்றுபாருங்கள். ஒரு செயல்புரியப் போகிறீர்கள். அல்லது ஏதோ ஒன்றைச் செய்யப் போகிறீர்கள் என்று நீங்கள் உணரும் போதெல்லாம் முதலில் உள்ளுக்குள் நுழையுங்கள். ஏனெனில் இதுவரை நீங்கள் செய்து வந்திருப்பது எதுவாயினும் அதுவெல்லாம் யந்திரத்தனமாகவே, தானியங்கித்தனமாகவே ஆகி இருக்கிறது. செய்ததையே திரும்பத் திரும்பச் செய்யும் சுழற்சியான முறையிலேயே தொடர்ச்சியாக நீங்கள் செய்துகொண்டு போகிறீர்கள்.

ஒரு முப்பது நாட்களுக்கு நாட்குறிப்பு எழுதுங்கள். காலை முதல் மாலைவரை முப்பது நாட்களுக்கு எழுதினால் நீங்கள் செயல்படும் முறையை உங்களால் காண முடியும். ஒரு யந்திரம் போலவே நீங்கள் இயங்குகிறீர்கள். நீங்கள் ஒரு மனிதராகச் செயல்படுவதில்லை. உங்கள் எதிர்வினைகள் எல்லாம் இறந்தவையாக உள்ளன. நீங்கள் செய்வது எதுவாயினும் அதை முன்கூட்டிக் கணித்துவிட முடிவதாக உள்ளது. உங்கள் நாட்குறிப்பைக் கூர்ந்து கவனித்தால் அந்த மாறாத பாணியை உங்களால் கண்டுபிடித்துவிட முடியும். ஒவ்வொரு திங்களன்றும் நீங்கள் கோபம் கொள்கிறீர்கள். ஒவ்வொரு ஞாயிறன்றும் நீங்கள் மோகம் கொள்கிறீர்கள். ஒவ்வொரு சனிக்கிழமையிலும் நீங்கள் சண்டைபிடிக்கி றீர்கள். அல்லது காலையில் நீங்கள் நன்றாக உணர்கிறீர்கள். மதியத்தில் வெறுப்பாக உணர்கிறீர்கள். மாலையிலோ அகில உலகத்துக்கும் எதிராக இருக்கிறீர்கள். அந்தப் பாணியை நீங்கள் காணலாம். ஒரு தடவை அதனை நீங்கள் கண்டுகொண்டால் பின் நீங்கள் ஒரு மனித யந்திரம் போலவே செயல்பட்டுக்கொண்டிருப்பதை உங்களால் கவனிக்க முடியும். மேலும் யந்திரமாக இருப்பதே துன்பத்தின் காரணம். நீங்கள் உணர்வுள்ள ராக இருக்க வேண்டி உள்ளது. உயிரற்ற யந்திரமாக நீங்கள் இருக்கக்கூடாது.

''இப்போது மனிதர் இருக்கிற நிலையில் அவர் ஒரு யந்திரமாகவே இருக்கிறார்'' என்று குருட்ஜிப் கூறுவது வழக்கம். உணர்வுள்ளராக ஆனால் மட்டுமே நீங்கள் மனிதராக ஆகிறீர்கள். மேலும், தன்னில் நிலை பெறச் செய்யப்படும் இந்த ஓயாத முயற்சியே உங்களை உணர்வுள்ளவர் ஆக்கும். உயிரற்ற ஒரு யந்திரமாக இருப்பதிலிருந்து உங்களை

விடுவிக்கும். முன்கூட்டி கணிக்கப்பட முடியாதவராக உங்களை ஆக்கும். அதன்பிறகும் யாராவது ஒருவர் உங்களை அவமதிக்க முடியும். ஆனால் அப்போது அவர்களைப் பார்த்து நீங்கள் சிரித்துவிட்டுப்போக முடியும். இத்தகைய சூழலில் இதற்குமுன் ஒருபோதும் நீங்கள் சிரித்ததே இல்லையே. ஒருவர் உங்களை அவமதித்துவிடுகிறார். அவர்மீது நீங்கள் அன்பு கொள்ள முடியும். முன்போ என்றால் அப்படி நீங்கள் உணர்ந்திருக்கமாட்டீர்கள். ஒருவர் உங்களை அவமதித்து விடுகிறார். அவருக்கு நீங்கள் நன்றிகூற முடியும். புதிதாக ஒன்று உங்களுக்குள் பிறந்துகொண்டு இருக்கிறது. இப்போது உங்களுக்குள் ஒரு உணர்வுள்ள சீவனை நீங்கள் உருவாக்கிக்கொண்டு இருக்கிறீர்கள்.

ஆனால் செயல்பாட்டுக்குள் இறங்கும்முன் நீங்கள் செய்ய வேண்டிய முதல் காரியம்...ஏனென்றால் செயல்பாடு என்றாலே வெளிநோக்கி இயங்குவதே. ஆகும், மற்றவர்களை நோக்கி இயங்கு வதே ஆகும். தன்னில் இருந்து விலகிச் செல்வதே ஆகும். செயல்பாடு எல்லாமே தன்னிலிருந்த விலகிச் செல்வதுதான். எனவே அப்படி விலகிப்போவதற்கு முன்னால் உள்ளுக்குள் ஒரு பார்வை பாருங்கள். ஒரு தடவை தொடர்பு கொள்ளுங்கள். உங்கள் உள்ளார்ந்த சீவனுக்குள் அமிழ்ந்து முதலில் நிலை பெறுங்கள்.

செயல்படும் ஒவ்வொரு கணத்துக்கு முன்பும் ஒரு தியான கணம் இருக்கட்டும். இதுதான் அபிப்பியாசம் என்பது. நீங்கள் எதைச் செய்தாலும், அதைச் செய்வதற்கு முன், உங்கள் கண்களை மூடி அமைதியாக இருங்கள். உள்ளே போங்கள். உணர்ச்சிவசப்படதாவராக, பற்றற்றவராக ஆகுங்கள். அப்போதுதான் ஒரு பார்வையாளரைப்போல், தவறான அனுமானங்கள் இல்லாமல், நீங்கள் அதில் சம்பந்தப்படவில்லை என்பதுபோல், ஒரு சாட்சி மாத்திரமாக, நடுநிலையில் நின்று உங்களால் பார்க்க முடியும். இனி நீங்கள் வெளியேபோகலாம்!

ஒரு நாள் அதிகாலையில் முல்லா நசுருதீன் மனைவி முல்லாவிடம் ''இரவில் நீ தூங்கிக்கொண்டிருக்கும்போது நீ என்னை திட்டிக் கொண்டிருந்தாய். எனக்கெதிரான சொற்களை கூறிக்கொண்டிருந்தாய். என்மீது வசைபாடிக் கொண்டிருந்தாய். ஏன் அப்படிச் செய்தாய்? இதற்கு நீ விளக்கம் தந்தாக வேண்டும்.'' என்றாள். அதற்கு முல்லா நசுருதீன் ''ஆனால் நான் தூங்கிக்கொண்டிருந்தேன் என்று யார் சொன்னது? நான் அப்போது தூங்கி இருக்கவில்லை. நான் சொல்ல விரும்பிய வார்த்தைகளே அவை. பகலில் அவற்றை என்னால் சொல்ல முடியாது. அந்த அளவுக்கு தைரியம் எனக்கு கிடையாது.'' என்றார்.

உங்கள் கனவுகளில், உங்களின் விழிப்பு நிலையில் நீங்கள் தொடர்ச்சியாக எதையாவது செய்து கொண்டிருக்கிறீர்கள். ஆனால் அவற்றை நீங்கள் உணர்வுடன் செய்வதில்லை. அவற்றைச்செய்ய நிர்ப்பந்திக்கப்பட்டவரைப்போன்று அவற்றை செய்கிறீர்கள். உங்களின் கனவுகளில்கூட நீங்கள் சுதந்திரமாக இல்லை. இந்த ஓயாத யந்திர நடத்தையே அடிமைத்தளை ஆகும். எனவே தன்னில் தான் நிலைபெறுவது எவ்வாறு? அப்பியாசம் மூலமே தான்.

இதை சூஃபிக்கள் இடையறாது பயன்படுத்துகிறார்கள். அவர்கள் என்னென்ன செய்தாலும், சொன்னாலும், நின்றாலும், அமர்ந்தாலும் என்னென்ன செய்தாலும்....ஒரு சூஃபி மாணவர் நிற்கும்முன் அவர் அல்லாவின் பெயரைக் கூறுவார். முதலில் அவர் அல்லாவின்பெயரைக் கூறுவார், பின் அமர்வார். ஒரு செயலைச் செய்யும்முன் ''அல்லா!'' என்பார். உட்காருவதும் ஒரு செயல்தானே. எனவே உட்காரும்போது அவர் அல்லா!'' என்பார். நிற்கும்போது அவர் ''அல்லா!'' என்று சொல்லிக்கொண்டே எழுந்து நிற்பார். வாய்விட்டுச் சொல்ல வாய்ப்பில்லாவிட்டால் மனதுக்குள் சொல்லிக்கொள்வார். ஒவ்வொரு செயலும் அந்த நினைவுகூறலின் வழியாகவே செய்யப்படுகிறது. படிப்படியாக இந்த நினைவு அவருக்கும் செயலுக்கும் இடையில் ஒரு இடைவிடாத தடையாக, பிரிவினையாக, இடைவெளியாக ஆகிறது.

இந்த இடைவெளி மேலும் வளர வளர, தன் சொந்தச் செயலையே அதன் கர்த்தா தான்அல்ல என்பது போல் பார்க்கும் பாங்கு அவரில் வளரமுடிகிறது. அல்லாவின் பெயரை தொடர்ச்சியாக ஓதுவதால், மெதுமெதுவாக அல்லாவே கர்த்தா என அவர் பார்க்கத் தொடங்குகிறார். ''செயல்படுபவன் நானல்ல. நான் ஒரு கருவி அல்லது வாகனம் மட்டுமே.'' மேலும் இந்த இடைவெளி வளர வளர தீமையானது எல்லாம் உதிர்ந்து விழுகிறது. உங்களால் தீமைசெய்ய முடியாது. கர்த்தாவுக்கும் செயலுக்கும் இடையில் இடைவெளி இல்லாத போதுமட்டுமே உங்களால் தீமைபுரிய முடியும். அப்போது நன்மை தானாகப் பொங்கிப்பாயும்.

செயலுக்கும் செய்பவருக்கும் இடையிலான இடைவெளி எந்த அளவுக்கு அதிகரிக்கிறதோ அந்த அளவுக்கு நல்லது. அப்போது வாழ்க்கை முழுவதுமே ஒரு புண்ணிய காரியமாக ஆகிறது. உங்கள் உடம்பே ஒரு ஆலயம் ஆகிறது. உங்களை விழிப்புள்ளவர்களாக்கும் எதுவும், உங்களுக்குள் நிலைபெற்றவர்களாக உங்களை ஆக்கும் எதுவும் அப்பியாசமே ஆகும்.

இந்த இரண்டில் அப்பியாசம் எனப்படும் அகப்பயிற்சியானது தன்னில் உறுதியாக நிலைபெறுவதற்கான முயற்சியாகும். இடைவிடாமலும் பக்தி வணக்கத்தோடும் நீண்டகாலம் தொடர்ந்து கடைப்பிடிக்கப்பட்டால் அது உறுதியாக நிலைநாட்டப்பட்டதாகிறது.

இரண்டு விசயங்கள். ''நீண்ட காலத்துக்குத் தொடர்ச்சியான பயிற்சி.'' எவ்வளவு நீண்ட காலத்தக்கு? அது தனிநபரைப் பொறுத்தது. அது உங்களைப் பொறுத்தது. எவ்வளவு காலம் என்பது ஆளுக்கு ஆள் மாறுபடும். காலநீட்டம் என்பது செயல் தீவிரத்தைப் பொறுத்தது. தீவிரத்தன்மை முழுமையாக இருந்தால் மிகவிரைவிலேயே அது நிகழ முடியும். இக்கணமேகூட அது நிகழ்ந்துவிட முடியும். தீவிரத்தன்மை அவ்வளவு ஆழமாக இல்லை என்றால் நீண்ட காலம் ஆகும்.

ஜுனாயிது என்னும் சூஃபி மறைஞானியைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் காலையில் நடந்து கொண்டிருந்தார். தன் ஊருக்கு வெளியே சும்மா ஒரு நடை போய்க்கொண்டிருந்தார். ஒரு மனிதன் ஓடிவந்து ஜுனாயிதைக் கேட்டான், ''இந்த ராஜ்ஜியத்தின் தலைநகருக்கு நான்போய்ச்சேர விரும்புகிறேன். இன்னும் எவ்வளவு தூரம் நான் பயணம் செய்ய வேண்டும்? அதற்கு இன்னும் எவ்வளவு காலம் பிடிக்கும்.'' என்றான்.

ஜுனாயிது அந்த மனிதனையே பார்த்தார். அவனுக்கு அவர் பதில் சொல்லவில்லை. மறுபடியும் நடக்கத் தொடங்கினார். அந்த மனிதனும் அதே திசையிலேயே போய்க்கொண்டிருந்தான். எனவே அவரை அவன் பின்தொடர்ந்தான். ''பெரியவருக்குக் காது கேட்காது போல'' என்று அவன் நினைத்தான். எனவே இரண்டாவது தடவையாக இன்னும் சத்தமாக ''தலைநகரை அடைய எனக்கு எவ்வளவு காலம்பிடிக்கும் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்!'' என்று கேட்டாள்.

ஆனால் இப்பவும் ஜுனாயிது நடப்பதைத் தொடர்ந்தார். அந்த மனிதனுடன் இரண்டு கல் தொலைவு நடந்து சென்ற பின் அவனிடம் ஜுனாயிது சொன்னார், ''குறைந்தது பத்துமணிநேரம் நீ நடக்க வேண்டி இருக்கும்.'' அதற்கு அந்த மனிதன், ''இதை நீர் எனக்கு முதலிலேயே கூறியிருக்கலாமே!'' என்றான். ஜுனாயிது சொன்னார், ''அது எப்படி முடியும்? முதலில் உன் வேகத்தை நான் அறிந்திருக்க வேண்டும். அது உன் வேகத்தைப் பொறுத்தது. எனவே இந்த இரண்டு கல் தூரமும் உன் வேகம் என்ன என்பதை, நான் கவனித்து வந்தேன். அதன்பிறகுமட்டுமே நான் பதில் கூறமுடியும்.'' அது உங்களின் தீவிரத்தை, உங்களின் வேகத்தைப் பொறுத்தது.

முதல் விசயம், இடைநிறுத்தமின்றி நீண்ட காலத்துக்கு தொடர்ச்சியாகப் பயிற்சி செய்தல் ஆகும். இதை நினைவில் நிறுத்தியாக வேண்டும். இடையில் நிறுத்திவிட்டால் சிலநாட்களுக்குச் செய்து பின் கொஞ்ச நாட்களுக்கு அதை செய்யாமல்விட்டால் மொத்த முயற்சியும் வீணாகிறது. அதற்குப்பிறகு மறுபடியும் நீங்கள் தொடங்கும்போது அது மறுபடியும் முதலில் இருந்து துவங்குவதாகவே இருக்கிறது.

நீங்கள் தியானம் செய்து வருகிறீர்கள். பின் சில நாட்கள் வரை பிரச்சனை ஏதும் இல்லை என்கிறீர்கள். பிறகு சோம்பலாக உணர்கிறீர்கள். காலையில் தூக்கம் வருவதுபோல் உணர்கிறீர்கள். எனவே ''இதை நான் நிறுத்திவைக்கிறேன். நாளை இதைச் செய்துகொள்ள முடியும்'' என்கிறீர்கள். அப்படி ஒரே ஒரு நாள் தவறினாலும்கூட பலநாட்கள் வேலை செய்த விளைவை நீங்கள் இல்லாமல் செய்து விடுகிறீர்கள். ஏனெனில் இன்று நீங்கள் தியானம் செய்யவில்லை. ஆனால் வேறுபல காரியங்களைச் செய்துகொண்டிருப்பீர்கள். அந்த வேறுபல வேலைகள் உங்கள் பழைய பாங்கைச் சேர்ந்தவை. எனவே ஒரு தடுப்பு உருவாக்கப்படுகிறது. உங்களின் நேற்றும் நாளையும் துண்டாடப்படு கிறது. இன்று என்பது ஒரு தடுப்பாக, ஒரு வேறுபட்ட அடுக்காக ஆகி இருக்கிறது. தொடர்ச்சி இழக்கப்பட்டுவிட்டது. இனி நாளை நீங்கள் மறுபடியும் தொடங்கும்போது அது மீண்டும் முதலில் இருந்து தொடங்கியதாகவே இருக்கிறது. பலரும் இப்படித் தொடங்கி, நிறுத்தி, மறுபடியும் தொடங்குவதை நான் பார்க்கிறேன். சில மாதங்களில் முடிக்க முடியக்கூடிய வேலைக்கு அவர்கள் பல ஆண்டுகள் எடுத்துக் கொள்கிறார்கள்.

எனவே இதை நினைவில் கொள்ள வேண்டும். இடையில் நிறுத்தக் கூடாது. எவ்விதமான பயிற்சியை நீங்கள் தேர்ந்துகொண்டாலும் பின் அதை உங்கள் வாழ்நாள் முழுவதுக்குமாக கைக்கொள்ளுங்கள். தொடர்ந்து அதன்மீது அடித்து இறக்கிக்கொண்டே போங்கள். மனம் சொல்வதற்கு செவிகொடுக்காதீர்கள். மனம் உங்களைத் திசைதிருப்ப முயலும். மனம் ஒரு மாபாவி. எல்லாவிதமான சாக்குப்போக்குகளையும் அதனால் தரமுடியும். இன்று உங்களுக்குச் சுகமில்லை, தலைவலி எனவே இன்று தியானம் செய்யக்கூடவே கூடாது என்றும், இரவு நீங்கள் நன்றாக தூங்கமுடியவில்லை, மிகவும் களைத்துப்போய் இருக்கிறீர்கள், எனவே இன்று நீங்கள் ஓய்வெடுத்தாக வேண்டும் என்றும் சொல்லும். ஆனால் இவையெல்லாம் மனத்தின் சூழ்ச்சிகளே.

மனம் தன் சொந்த பழைய பாணியிலேயே தொடர்ந்து செல்ல விரும்புகிறது. ஏன் மனம் தன் பழைய பாணியைத் தொடர விரும்புகிறது?

ஏனென்றால் அப்பாதையில் செல்லத்தான் பெரிய தடை இல்லை. செல்வது அதிக எளிதாக உள்ளது. மேலும், யாருமே அதிக எளிதான வழியிலேயே வசதியான பாதையிலேயே செல்ல விரும்புவார். பழையதைப் பின்பற்றுவது மனத்துக்கு சுலபமாக உள்ளது, அவ்வளவே. புதியதோ கடினமாக உள்ளது.

புதியதான ஒவ்வொன்றையும் மனம் எதிர்த்து நிற்கிறது. நீங்கள் பயிற்சிஎடுத்தால் அப்பியாதும் செய்தால் - மனம் சொல்வதைக் கவனிக்காதீர்கள். பயிற்சி செய்துகொண்டே செல்லுங்கள். படிப்படியாக இந்த புதிய நடைமுறை மனத்தின் ஆழத்துக்கு செல்லும். மனமும் அதை எதிர்ப்பதை நிறுத்திவிடும். ஏனெனில் இப்போது அது அதற்கு அதிக எளிதானதாகி இருக்கிறது. இனி மனத்துக்கு அது ஒரு எளிதான இயக்கமாக இருக்கும். அது ஒரு இயல்பான ஓட்டமாக ஆகாதவரை இடையில் நிறுத்தாதீர்கள். சற்றே சோம்பல் கொள்வதால் ஒரு நீண்டகால முயற்சியை நீங்கள் நாசமாக்கிவிட முடியும். எனவே அதை இடையில் நிறுத்தக் கூடாது என்பது முக்கியம்.

இரண்டாவது, பக்திவணக்கத்துடன். ஒரு பயிற்சியை நீங்கள் யந்திரத்தனமாக, அதன்மேல் காதலின்றி பக்தியின்றி, அதைப்பற்றிய ஒரு புனித உணர்வின்றிச் செய்யவும் முடியும். அப்போது அதற்கு நீண்ட காலம் எடுக்கும். ஏனெனில் அன்பின்மூலம் விசயங்கள் உங்களுக்குள் எளிதாக ஊடுருவுகிறது. பக்தியின்மூலம் நீங்கள் திறந்து கொள்கிறீர்கள். அதிக வெளிப்படையாக ஆகிறீர்கள். எனவே விதைகள் அதிக ஆழத்துக்கு இறங்க முடியும்.

பக்தி இல்லாமலும் ஒரு செயலை நீங்கள் செய்ய முடியும். ஒரு கோயிலைப் பாருங்கள். அங்கு ஒரு புரோகிதரை நீங்கள் சம்பளத்துக்கு வைத்துக்கொள்ள முடியும். அவர் ஆண்டுக்கணக்கில் தொடர்ச்சியாக பிரார்த்தனைகள் செய்வார். அதனால் எந்தப் பலனும், எந்த நிறைவும் இருக்காது. விதிமுறைப்படியே அவர் செயல்படுகிறார். ஆனால் அவரது செயலில் பக்தி இல்லை. அவர் பக்தரைப்போல நடிக்கலாம். ஆனாலும் அவர் ஒரு பணியாளர் தான். அவருக்கு தன் ஊதியத்தில்தான் அக்கறை. பிரார்த்தனையில் அல்ல, பூசையில் அல்ல, சடங்குகளில் அல்ல. அதெல்லாம் செய்தாக வேண்டியது - ஒரு கடமை; காதல்அல்ல. எனவே அதை அவர் செய்கிறார். வருசக்கணக்கில் செய்வார். தன் ஆயுள் முழுவதுமே அவர் ஒரு வேலைக்காரப் புரோகிதராகவே - கூலிக்கார மனிதராகவே இருப்பார். முடிவில், எப்போதுமே வழிபாடுசெய்திராத மனிதர் சாவது போலவே அவரும் சாவார். கோயிலில் வழிபாடு செய்துகொண்டிருக்கையிலேயே அவர் உயிர் போகலாம். ஆனால்

என்றைக்கும் வழிபாடு செய்திராதவரைப்போலவே அவரும் சாவார். ஏனென்றால் அவரிடம் பக்தி இல்லை.

எனவே பக்தி இல்லாமல் பயிற்சியை - அப்பியாசத்தை செய்யாதீர்கள். ஏனெனில் அந்நிலையில் உங்கள் ஆற்றலை அனாவசியமாக வீணாக்கிக்கொண்டு இருக்கிறீர்கள். பக்தியும் அதில் இருந்தால் இன்னும் எவ்வளவோ அதிகமான பலன் அதிலிருந்து வரமுடியும். என்ன வேறுபாடு? கடமைக்கும் அன்புக்கும் இடையில் உள்ள வேறுபாடுதான். கடமை என்பது நீங்கள் செய்தாக வேண்டியது. அதை நீங்கள் ரசித்துச் செய்ய முடியாது. எப்படியாவது அதைத் தொடர்ந்து செய்துகொண்டு போக வேண்டும். சீக்கிரமாக அதை முடித்துத் தொலைக்க வேண்டும். அது ஒரு வெளிப்புற வேலை. இதுதான் உங்கள் மனோபாவம் என்றால் பின் அது எப்படி உங்களுக்குள் ஊடுருவ முடியும்?

அன்பு என்பதோ கடமை அல்ல. அதை நீங்கள் ரசித்துச் செய்கிறீர்கள். அதன் ஆனந்தத்துக்கு எல்லை இல்லை. அதை முடித்துவிட வேண்டும் எனும் அவசரம் இல்லை. எவ்வளவுக்கு அது விரிவாக நடைபெறுகிறதோ அவ்வளவுக்கு நல்லது. ஒருபோதும் அது போதும் என்று ஆவதில்லை. எப்போதுமே அது இன்னும் வேண்டும் இன்னும் வேண்டும் என்றே நீங்கள் உணர்வீர்கள். எப்போதுமே அது முற்றுப்பெறாததாகவே இருக்கும். இதுவே உங்களின் மனோபாவம் விசயங்கள் உங்களுக்குள் ஆழமாகப் போகின்றன. விதைகள் அடி மண்ணைச் சென்று அடைகின்றன. பக்தி என்றால் ஒரு குறிப்பிட்ட பயிற்சியுடன் - அப்பியாசத்துடன் - நீங்கள் காதல் கொண்டிருக்கிறீர்கள் என்று பொருள்.

பலரையும் நான் கவனிக்கிறேன். பலருடனும் நான் வேலை செய்கிறேன். இந்தப் பாகுபாடு மிகவும் தெளிவாகத் தெரிகிறது. தியானத்தை ஒரு உத்தியைப்போல் மட்டுமே பயிலுபவர்கள் ஆண்டுக்கணக்கில் செய்துகொண்டு போகிறார்கள். ஆனால் எந்த மாற்றமும் நிகழ்வதில்லை. உடம்புக்கு அது ஒரு சிறிது உதவலாம். அவர்கள் அதிக உடல் நலம் உடையவர்களாக விளங்கலாம். அவர்களின் உடல்கள் அதனால் சில நன்மைகளைப் பெறலாம். ஆனால் அப்போது அது ஒரு உடற்பயிற்சிதான். பின் அவர்கள் என்னிடம் வந்து ''ஒன்றுமே நடக்கவில்லையே'' என்கிறார்கள்.

ஒன்றுமே நடக்காது. ஏனென்றால் அவர்கள் செய்யும்முறை, அவர்களுக்கு வெளியிலேயே இருக்கிறது. அது ஒரு வேலைபோலவே இருக்கிறது. பதினொரு மணிக்கு அலுவலகத்துக்குப்போய் ஐந்து மணிக்கு

அதைவிட்டுக் கிளம்பிவிடுவதைப் போலவே உள்ளது. எவ்வித ஈடுபாடும் இல்லாமலே அவர்கள் தியான அரங்கத்துக்குப் போக முடியும். ஒரு மணிநேரம் தியானம் செய்துவிட்டுத் திரும்பிவிட முடியும் - எந்த ஈடுபாடும் இல்லாமலே. அது அவர்களின் இதயத்துக்குள் இல்லை.

இன்னொரு விதமான மக்கள் இருக்கிறார்கள். இவர்கள் தாம் செய்வதை அன்புடன் செய்கிறார்கள். ஏதோ ஒன்றைச் செய்வது என்னும் பிரச்னை அல்ல அது. அது அளவு ரீதியானது அல்ல. பண்பு ரீதியானது - எந்த அளவுக்கு நீங்கள் ஈடுபாடு உள்ளவர்களாக இருக்கிறீர்கள், எந்த அளவுக்கு ஆழமாக அதை நீங்கள் விரும்புகிறீர்கள், எந்த அளவுக்கு அதை நீங்கள் ரசித்துச் செய்கிறீர்கள் - குறிக்கோளை அல்ல, முடிவை அல்ல, பலனை அல்ல, அந்தப் பயிற்சியையே எந்த அளவுக்கு நீங்கள் ஈடுபாட்டுடன் செய்கிறீர்கள் என்பதே அது.

கடவுளின் பெயரைத் திரும்பத் திரும்பக் கூறுவதே - அல்லாவின் திருப்பெயரை ஓயாமல் ஓதுவதே ஆனந்தம்தான் என்கிறார்கள் சூஃபிக்கள். அதை அவர்கள் திரும்பத் திரும்ப சொல்லி ஆனந்திக்கிறார் கள். இப்படி இறைவன் பெயரை திரும்பத் திரும்ப சொல்வதுமட்டுமே அவர்கள் முழு வாழ்வுமாக ஆகிறது.

பெயரைமட்டும் நினைவில் இருத்தலே(நாம் ஸ்மரண்) போதும் என்கிறார் நானக். நீங்கள் சாப்பிடுகிறீர்கள். தூங்கப் போகிறீர்கள். குளியல் போடுகிறீர்கள். அப்போதெல்லாம் தொடர்ச்சியாக உங்கள் இதயம் நினைவு கொள்ளலில் நிரம்பி இருக்கிறது. 'ராம்' என்றோ அல்லா' என்றோ வேறெதையோ திரும்பத்திரும்ப சொல்லிக் கொண்டிருந்தால் கூடப் போதுமானது. ஆனால் ஒரு சொல்லாக அல்ல, பக்தியாக, அன் பாகச் சொல்ல வேண்டும்.

உங்கள் இருத்தல் முழுவதுமே அதனில் நிரம்பியதாக, அதனுடன் சேர்ந்து அதிர்வதாக உணர்கிறது. அது உங்களின் அடியாழ சுவாசமாக ஆகிறது. அது இல்லாமல் உங்களால் உயிர்வாழ முடிவதில்லை. படிப்படியாக அது ஒரு உள் ஒத்திசைவை, ஒரு இசையை உருவாக்கு கிறது. உங்கள் சீவன் முழுவதுமே ஒரு ஒத்திசைவில் லயிக்கத் தொடங்குகிறது. ஒரு பரவசம் பிறக்கிறது. ஒரு ஓங்கார(*humming*) உணர்வு, ஒரு இனிமை உங்களைச் சூழ்ந்து பரவுகிறது. படிப்படியாக இந்த இனிமையே உங்கள் இயற்கையாக ஆகிறது. அதன்பிறகு நீங்கள் எதை எதைச் சொன்னாலும் அதுவெல்லாம் அல்லாவின் திருப்பெயராக

ஆகிறது. நீங்கள் என்னென்ன சொன்னாலும் அது இறைமையை நினைவு கொள்வதாகவே ஆகிறது.

இடையில் நிறுத்தாத, பக்திவணக்கத்தோடுகூடிய எந்த ஒரு பயிற்சியும்...மேலை மனதுக்கு மிகவும் கடினமே. பயிற்சியை அவர்களால் புரிந்துகொள்ள முடிகிறது. பக்திவணக்கத்தை அவர்களால் புரிந்துகொள்ள முடிவதில்லை. அந்த மொழியை முற்றிலுமாக அவர்கள் மறந்துவிட்டார்கள். ஆனால் அந்த மொழி இல்லையெனில் பயிற்சி என்பது ஒன்றுமில்லை. மேலை சாதகர்கள் என்னிடம் வந்து ''நீங்கள் என்ன சொன்னாலும் அதை நாங்கள் செய்வோம்'' என்கிறார்கள். சொல்லப்பட்டது போலவே துல்லியமாகக் கடைப்பிடிக்கவும் செய்கிறார்கள். ஆனால் வேறெந்த உபாயம் அல்லது உத்தியின்மீது செயல்படும் போக்கிலேயே இதன்மீதும் அவர்கள் செயல்படுகிறார்கள். அதன்மீது அவர்கள் நேசம் கொள்வதில்லை. அதன்மீது அவர்கள் பித்துக்கொண்டு விடுவதில்லை. அதனுள் அவர்கள் கரைந்து காணாமல் போவதில்லை. அதைச் செய்து பார்க்கிறவர்களாகவே தங்கி இருக்கிறார்கள்.

அவர்கள்தான் அதிகாரி. வேறெந்த யந்திரசாதனத்தையும் இயக்கிப் பார்ப்பது போலவே இதையும் அவர்கள் செயல்படுத்திக்கொண்டு போகிறார்கள். பொத்தானை நீங்கள் அழுத்தியதும் காற்றாடி சுழல்வதுபோல் இதையும் அவர்கள் பார்க்கிறார்கள். பொத்தான்மீதோ காற்றாடி மீதோ எவ்வித் பக்திசிரத்தையும் கொள்ளத்தேவை இல்லையே. வாழ்க்கையில் உள்ள ஒவ்வொன்றையும் நீங்கள் இவ்விதமே செய்துகொண்டு போகிறீர்கள். ஆனால் அப்பியாசத்தை அந்த முறையில் நீங்கள் செய்ய முடியாது. உங்கள் பயிற்சியுடன், அப்பியாசத்துடன் மிக ஆழமான உறவுள்ளவராக நீங்கள் இருக்கவேண்டி இருக்கிறது. எந்த அளவுக்கெனில் அதில் நீங்கள் இரண்டாம்பட்சம் ஆகிறீர்கள். பயிற்சியே முதன்மையானது ஆகிறது. நீங்கள் நிழலாக ஆகிறீர்கள், பயிற்சியே நிஜமாக ஆகிறது. நீங்கள் பயிற்சி செய்யவில்லை, பயிற்சியே தானாக நடந்துகொண்டு இருக்கிறது. அதன் ஒரு பகுதியே நீங்கள், அதனுடன் சேர்ந்து அதிர்வுறும், துடிக்கும் ஒரு பகுதியே நீங்கள் என்று ஆகிறது. அப்படிப்பட்ட நிலையில் காலமே தேவையில்லாமல் போகலாம்.

ஆழமான பக்தி இருந்தால் உடனடியான பலன்கள் தொடர முடியும். ஒரு கண நேர பக்தியிலேயே பல பிறவிகளின் கருமத்தை நீங்கள் தொலைத்துவிடமுடியும். ஒரு ஆழ்ந்த பக்திக் கணத்தில் கடந்தகாலம் முழுவதிலுமிருந்தும் விடுபட்டவராக நீங்கள் ஆக முடியும்.

ஆனால் அந்த பக்தி வணக்கத்தை எப்படி விளக்குவது என்பது கடினமானது. நட்பு என்று ஒன்று இருக்கிறது. காதல் என்ற ஒன்றும் இருக்கிறது. இந்த நட்பும் காதலும் இணைந்த வித்தியாசமான தன்மையே பக்திவணக்கம் எனப்படுகிறது. நட்பும் காதலும் சமமானவர்களுக் கிடையிலேயே நிலவுகிறது. காதல் என்பது எதிரெதிர்பாலினருக் கிடையிலும் நட்பு என்பது ஒரே பாலினருக்கிடையிலும் நிலவினாலும் ஒரே தரத்தில் உள்ளன - இரண்டிலும் நீங்கள் சமமானவர்கள்.

பக்திவணக்கத்திற்கு நேர் எதிரானது கருணை. கருணை என்பது உயர்ந்த இடத்தில் இருந்து தாழ்ந்த இடத்தை நோக்கியதாக நிலவுகிறது. இமயத்திலிருந்து சமுத்திரத்தை நோக்கி ஒரு இறங்குவதைப் போன்றது கருணை. புத்தர் கருணை வடிவானவர். அவரிடம் யார் யார் வந்தாலும் அவரது கருணை அவர்கள்மீது வெள்ளமாகப் பொழிகிறது. பக்தி வணக்கம் என்பது கங்கை நதி பெருங்கடலில் இருந்து இமயமலை நோக்கி - கீழிருந்து மேல்நோக்கி பாய்ந்தாற் போன்றது.

காதல் என்பது சமமானவர்களுக்கு இடையிலானது. கருணை என்பது மேலிருந்து கீழ் நோக்கிப் பாய்வது. பக்தி என்பது கீழிருந்து மேல்நோக்கி ஏறுவது. கருணையும் பக்தியும் மறைந்துவிட்டுள்ளன. நட்பு மட்டுமே எஞ்சியுள்ளது. கருணையும் பக்தியும் இல்லாமல் அந்தரத்தில் செத்துத் தொங்கிக் கொண்டிருக்கிறது நட்பு. ஏனெனில் அதன் இரு துருவங்களும் இல்லாதிருக்கின்றன. ஆகவே அந்த இரு துருவங்களுக்கு இடையில் மட்டுமே நட்பு உயிருடன் நிலவமுடியும்.

நீங்கள் பக்தியுடன் இருந்தால் கூடிய சீக்கிரத்தில் கருணை உங்களை நோக்கி இறங்கத் தொடங்கும். நீங்கள் பக்தியில் இருந்தால் பின் ஏதோ ஒரு உயர்ந்த சிகரம் உங்களை நோக்கிப் பாயத் தொடங்கும். ஆனால் நீங்கள் பக்தியில் இல்லாவிட்டால் கருணை உங்கள்மீது இறங்கமுடியாது. அதற்கு நீங்கள் திறந்திருப்பதில்லை.

பயிற்சி அனைத்தும், அப்பியாசம் அனைத்தும் அடியவர் ஆவதற்கே. கடையராக ஆனால்தான் ஒப்பில்லாதது உங்களில் பாயமுடியும். யேசு கூறுவதுபோல ''வரிசையில் கடைசியாக நிற்பவர்கள் மட்டுமே என் தந்தையின் ராஜ்ஜியத்தில் முதலாமவராக ஆவர்.''

அடியார் ஆகுங்கள்...கடைசியர் ஆகுங்கள். நீங்கள் மிகவும் தாழ்ந்தவர்களாக இருக்கையில் திடீரென மிகவும் உயர்ந்ததை பெற்றுக் கொள்ளத் தகுதியானவர்களாக நீங்கள் இருக்கிறீர்கள். மேலும் அதலபாதாளத்தை நோக்கிமட்டுமே உயர்ந்த சிகரம் கவரப்படுகிறது.

ஏர்க்கப்படுகிறது. அது ஒரு காந்தமாகிறது. ''பக்தியுடன்'' என்றால் நீங்கள் கீழினும் கீழாக இருக்கிறீர்கள். எனவேதான் பௌத்தர்கள் பிச்சைக்காரர் களாக (பிட்சுக்களாக) இருப்பதைத் தேர்ந்து கொள்கிறார்கள்: சூஃபிகளும் பக்கிரிகளாக, பரதேசிகளாக, பிச்சைக்காரர்களாக இருப்பதையே தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். அத்துடன் இந்த கீழாக இருப்பவர்களில் தான் மிகவும் உயர்ந்த நிலை சம்பவித்திருக்கிறது என்பதையும் நாம் கண்டிருக்கிறோம்.

ஆனால் இது அவர்களின் தெரிவு. அவர்கள் தம்மை கடைசியில் இருத்தியிருக்கிறார்கள். அவர்கள் கடைசியராக இருக்கிறார்கள் - யாருடனும் போட்டியின்றி, சமவெளிபோல், கீழே ,எல்லாருக்கும் கீழே இருக்கிறார்கள்.

எனவேதான் பழைய சூஃபி மொழிகளில் ''கடவுளின் அடிமையாக ஆகுங்கள்'' என்று சொல்லி இருக்கிறது. வெறும் ஒரு அடிமையாக, அவரது நாமத்தை ஓதிக்கொண்டு, இடையறாமல் அவரை துதித்துக்கொண்டு எப்போதும் அவருக்கு நன்றி கூறிக்கொண்டு, அவர் உங்கள்மேல் பொழிந்துகொண்டு இருக்கும் அநேக ஆசீர்வாதங்களுக்கு எப்போதும் பாத்திரமாகிக்கொண்டு இருப்பதுபற்றி அவற்றில் சொல்லி இருக்கிறது.

இந்தப் பக்திவணக்கத்துடன் இடையறாத அப்பியாசம், பயிற்சி சேரவேண்டும். வைராக்கியம், அப்பியாசம் என்னும் இந்த இரண்டும் மனம் இல்லாமல் போவதற்கு உதவுகின்றன. அப்படி மனம் இல்லாமல் போகும்போதுதான் முதன்முறையாக நீங்கள் இருக்கிறீர்கள்; அப்போதுதான் உண்மையில் நீங்கள் எப்படி இருக்க வேண்டுமோ, எப்படி இருப்பது உங்களுக்கான நியதியோ அப்படி இருக்கிறீர்கள்.

முதல் கேள்வி:

**தன்னில் தான் வேர்கொண்டிருப்பதற்காக, பற்றின்மையின் - அதாவது ஆசை மறுப்பின் - முக்கியத்துவத்தை பதஞ்சலி வலியுறுத்தி இருக்கிறார். ஆனால் பற்றற்ற தன்மை என்பது உண்மையில் பயணத்தின் தொடக்கத்தில் வருகிறதா பயணமுடிவில் வருகிறதா?**

தொடக்கமும் முடிவும் இரு வெவ்வேறு விஷயங்கள் அல்ல. தொடக்கமே முடிவு. எனவே அவற்றைப் பிரிக்காதீர்கள். இருமை முறையில் சிந்திக்காதீர்கள். முடிவில் அமைதியாக இருக்க நீங்கள் விரும்பினால் தொடக்கத்திலிருந்தே நீங்கள் அமைதியாக இருக்க வேண்டி இருக்கும். தொடக்கத்தில் அமைதி ஒரு விதைபோன்று இருக்கும். முடிவில் அது ஒரு மரமாக ஆகும். விதையிலேயே மரம் மறைந்திருக்கிறது. எனவே தொடக்கம் என்பது விதை போன்றது தான்.

அறுதி இலக்கு எதுவாயினும் அது இங்கேயே - இப்போதே - உங்களுக்குள்ளேயே தொடக்கத்திலேயே மறைந்திருந்தாக வேண்டும். தொடக்கத்துக்குள் அது இருக்கவில்லை என்றால் முடிவிலும் அதை நீங்கள் அடைய முடியாது. ஒரு வேறுபாடு இருக்கும்தான் - தொடக்கத்தில் அது ஒரு விதையாக மட்டுமே இருக்க முடியும். முடிவிலோ அது முழு மலர்ச்சியாக இருக்கும். விதையாக இருக்கும் போது அதை உங்களால் கண்டுகொள்ள முடியாமல் போகலாம். ஆனால் நீங்கள் கண்டுகொண்டாலும் இல்லாவிட்டாலும் அது தொடக்கத்திலேயே இருக்கிறது. எனவே பயணத் தொடக்கத்திலேயே பற்றின்மை தேவைப்படுகிறது என்று பதஞ்சலி கூறுகிறார் என்றால் முடிவில் அது தேவைப்படாது என்று அவர் கூறுகிறார் என்பது பொருளல்ல.

பற்றின்மை என்பது தொடக்கத்தில் முயற்சியுடன் கூடியதாக இருக்கும். முடிவில் அது இயல்பானதாக ஆகும். தொடக்கத்தில் அதைக்குறித்த உணர்வுடன் நீங்கள் இருக்க வேண்டி இருக்கும்.

முடிவிலோ அதைக்குறித்த உணர்வுடன் இருக்கத் தேவை இருக்காது; அது உங்களின் இயற்கையாக இயக்கப்போக்காகவே ஆகி இருக்கும்.

தொடக்கத்தில் அதை நீங்கள் பயிற்சி செய்ய வேண்டி இருக்கிறது. இடையறாத விழிப்புணர்வு தேவைப்படும். உங்கள் கடந்த காலத்துடன், உங்கள் பற்றின் பாணிகளுடன் ஒரு போராட்டம் நடக்கும். ஒரு சண்டை நடக்கும். முடிவிலோ சண்டை இராது, வேறுவழி இராது, மாற்று வாய்ப்பு எதுவும் இராது. ஆசையின்மை எனும் பாதையில் நீங்கள் எளிதாகப் பாய்வீர்கள். அதுவே உங்கள் இயல்பாக ஆகி இருக்கும்.

ஆனால் முடிவு எதுவாயினும் தொடக்கத்தில் இருந்தே அதைப் பயிற்சி செய்து வரவேண்டி உள்ளது என்பதை மறந்துவிடாதீர்கள். முதல் அடிவைப்பே கடைசி அடிவைப்பும் ஆகும். எனவே முதல் அடிவைப்பைப் பற்றி நாம் மிகவும் கவனமாக இருக்க வேண்டி இருக்கிறது. முதல் அடி சரியான திசையில் இருந்தால்தான் இறுதி இலக்கு அடையப்படும். முதல் அடியில் நீங்கள் தவறிவிட்டால் எல்லாவற்றையும் நீங்கள் இழந்தவர் ஆவீர்கள்.

இந்தக் கேள்வி திரும்பத்திரும்ப உங்கள் மனத்தில் எழும். எனவே இதை ஆழமாகப் புரிந்துகொள்ளுங்கள். ஏனெனில் பதஞ்சலி கூறப்போகும் பல விசயங்களும் முடிவுகள் போன்றே தோன்றுகின்றன. அகிம்சை என்பது ஒரு இலக்கு முடிவு. அந்நிலையில் ஒருவர் மிகுந்த கருணை உள்ளவராக, ஆழமாக அன்பால் நிரம்பியவராக இருக்கிறார். எனவே இம்சை இருப்பதில்லை. வன்முறைக்கு வாய்ப்பே இல்லை. அன்பு அல்லது அகிம்சையே இலக்கு. அதை தொடக்கத்திலிருந்தே பயிற்சி செய்யும்படி கூறுவார் பதஞ்சலி.

இலக்கானது தொர்டக்கத்திலிருந்தே உங்கள் பார்வையில் இருக்க வேண்டும். பயணத்தின் முதல் அடிவைப்பானது இலக்குக்காக முற்றிலும் அர்ப்பணிக்கப்பட்டதாக, இல்க்கை நோக்கி எய்யப்பட்டதாக, இலக்கை நோக்கி இயங்குவதாக இருக்கவேண்டும். தொடக்கத்திலேயே முழு வளர்ச்சி பெற்றதாக அது இருக்க முடியாது; பதஞ்சலியும் அவ்வாறு எதிர்பார்ப்பதில்லை. ஆசையை முற்றும் துறந்தவராக நீங்கள் எடுத்த எடுப்பிலேயே ஆகிவிட முடியாது. ஆனால் உங்களால் அதற்கு முயற்சிசெய்ய முடியும். அந்த முயற்சியே உங்களுக்கு உதவும்.

பலதடவைகள் நீங்கள் தவறுவீர்கள். மறுபடியும் நீங்கள் பற்றுக் கொள்வீர்கள். மேலும் உங்கள் மனம் எப்படிப்பட்டது என்றால் பற்றின்மையின்மீதும்கூட நீங்கள் பற்றுக்கொண்டுவிடலாம். ஆனால் முயற்சி, உணர்வுள்ள முயற்சியானது படிப்படியாக உங்களை உன்னிப்பும் விழிப்பும் உள்ளவராக ஆக்கும். மேலும், பற்றினால் விளையும் அவலத்தை ஒரு தடவை நீங்கள் உணரத் தொடங்கிவிட்டாலே அதன்பின் அதிக முயற்சி தேவைப்படாது. ஏனெனில் எவரும் அவலத்தில் சீரழிய விரும்புவதில்லை. மகிழ்ச்சி இல்லாமலிருக்க யாரும் விரும்பமாட்டார்.

நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்பதே நமக்கு தெரியாததால்தான் நாம் மகிழ்வின்றி இருக்கிறோம். ஆனால் ஒவ்வொரு மனித உயிரும் மகிழ்ச்சிக்காக ஏங்குகிறது. யாருமே துன்பத்துக்காக ஏங்குவதில்லை. ஆயினும் ஒவ்வொருவரும் துன்பத்தை உருவாக்குவது, தாம் செய்து கொண்டிருப்பது என்ன என்பதையே அவர்கள் அறியாமலிருப்பதில்தான் அல்லது மகிழ்ச்சியை நோக்கிய ஆசைகளில் நாம் இயங்கிக் கொண்டிருக்கலாம். ஆனால் நம் மனத்தின் பாணியின் காரணமாக உண்மையில் நாம் துன்பத்தை நோக்கியே இயங்குகிறோம்.

வெகு தொடக்கத்தில் இருந்தே - ஒரு குழந்தை பிறந்து வளர்க்கப்படுவதில் இருந்தே - தவறான உத்திகள்தான் அதன் மனத்தில் புகட்டப்படுகின்றன. தவறான மனோபாவங்களே புகுத்தப்படுகின்றன. யாரும் அவனைக் கெட்டவனாக்க முயலவில்லை. ஆனால் அவனை சுற்றிலும் இருப்பவர்கள் எல்லாம் கெட்டவர்களாகவே இருக்கிறார்கள். அவர்கள் வேறு விதமாக இருக்கவும் முடியாது. அவர்களே கையாலாகாதவர்களாக இருக்கிறார்கள்.

பிறக்கும்போது ஒரு குழந்தை எவ்வித மனப்பதிவும் பாங்கும் இன்றியே பிறக்கிறது. மகிழ்சிக்கான ஆழ்ந்த ஆவல் மட்டுமே அதனிடம் இருக்கிறது. ஆனால் அதைச் சாதிப்பது எவ்வாறு என்பது அதற்குத் தெரிவதில்லை. எவ்வாறு என்பது தெரியாது. மகிழ்ச்சியே பெறவேண்டும் என்பதுமட்டும் அவனுக்குத் தெளிவாக தெரிகிறது. தன் வாழ்நாள் முழுவதும் அதற்காக அவன் போராடுவான். ஆனால் அதற்கான வழிமுறைகள், அதைச் சாதிக்கும் முறைகள், சாதிக்கக்கூடிய இடங்கள், அதைக் கண்டுள்ள தான் எங்கே போயாக வேண்டும் என்பவற்றை அவன் அறியமாட்டான். மகிழ்ச்சியைத் தேடிப்பிடிப்பது

எப்படி என்பதை சமுதாயமே அவனுக்குச் சொல்லிக் கொடுக்கிறது. ஆனால் அந்த சமுதாயமோ தவறான சமுதாயமாக இருக்கிறது.

ஒரு குழந்தை மகிழ்ச்சியை விரும்புகிறது. ஆனால் மகிழ்ச்சியாயிருப்பது எப்படி என்பதை அதற்கு கற்றுக்கொடுக்கும்விதம் நமக்குத் தெரிவதில்லை. நாம் அவனுக்கு சொல்லிக்கொடுப்பவை எல்லாம் துன்பத்தை நோக்கிய பாதையாகவே ஆகிறது. எடுத்துக்காட்டாக நல்லவனாயிரு என அவனுக்கு நாம் கற்பிக்கிறோம். இதை இதைச் செய், இதைஇதைச் செய்யாதே என அவனுக்கு நாம் சொல்லித்தருகிறோம். ஆனால் அது இயற்கையானதா, இயற்கைக்கு முரணானதா என்று ஒருபோதும் நாம் சிந்திப்பதில்லை. ''இதைச் செய், அதைச் செய்யாதே'' என்கிறோம் நாம். நாம் கூறும் 'நல்லது' என்பது இயற்கைக்கு எதிரானதாக இருக்கலாம். அப்படி நாம் போதிக்கும் நல்லவை இயற்கைக்கு முரணானவையாய் இருந்தால் ஒரு துன்பப் பாங்கையே அவனுள் நாம் உருவாக்கிக் கொண்டுள்ளோம்.

எடுத்துக்காட்டாக, குழந்தை கோபமாக இருக்கிறது, உடனே அவனிடம் நாம், ''கோபம் கொடியது. கோபப்படாதே'' என்கிறோம். ஆனால் கோபம் இயற்கையானது. மேலும் ''கோபிக்காதே'' என்று கூறுவதன் மூலமே கோபத்தை நாம் ஒழித்து விடுவதில்லை. மாறாக அதை அடக்கிவைக்கும்படி தான் குழந்தைக்கு நாம் கற்றுக் கொடுக்கிறோம். அடக்கிவைப்பது அவலத்துக்கே இட்டுச் செல்கிறது. ஏனெனில் அடக்கிவைத்ததெல்லாம் விஷமாக மாறுகிறது. உடலின் ரசாயனக் கட்டமைப்புக்குள்ளேயே அது ஏறிவிடுகிறது. அது நச்சுப் பொருளாகிறது. ஆகவே, ''கோபப்படாதே'' எனத் தொடர்ச்சியாக கற்பிக்கும்போது, தன் சொந்தஉடலை - மனத்தை விஷமாக்குவதற்கே அவனுக்கு நாம் கற்றுத்தந்து கொண்டிருக்கிறோம்.

ஒரு விசயத்தை அவனுக்கு நாம் கற்றுக் கொடுப்பதில்லை. அதுதான் கோபப்படமாமல் இருப்பது எவ்வாறு என்பது. கோபத்தை அடக்குவது எப்படி என்பதை மட்டுமே அவனுக்கு நாம் சொல்லித் தருகிறோம். அவனை நாம் கட்டாயப்படுத்த முடியும். ஏனெனில் அவன் நம்மை நம்பி - சார்ந்து இருக்கிறான். அவன் கையறு நிலையில் இருக்கிறான். அவன் நம்மைப் பின்பற்றியே ஆகவேண்டி இருக்கிறது. ''கோபப்படாதே'' என்று நாம் சொன்னால் உடனே அவன் புன்னகை புரிவான். அந்த புன்னகையோ போலியானது. உள்ளுக்குள் அவன் குமுறிக்

கொண்டிருப்பான், உள்ளுக்குள் அவன் கொந்தளித்துக் கொண்டிருப் பான். உள்ளுக்குள் அவன் எரிந்துகொண்டிருப்பான் வெளியே சிரித்துக் கொண்டிருக்கிறான்.

ஒரு சின்னக்குழந்தையை ஒரு வெளிவேஷக்காரனாக - ஒரு பாசாங்குக்காரனாக ஆக்கிக்கொண்டிருக்கிறோம் நாம். அவன் போலியான வகையில் பிளவுண்டவனாக ஆகிக்கொண்டிருக்கிறான். தன் புன்னகை பொய்யானது என்பதை அவன் அறிகிறான். ஆனால் நிசமானதை அடக்கி வைக்க வேண்டி இருக்கிறது. நிசமற்றதை வலிந்து ஏற்ற - ஏற்க வேண்டி இருக்கிறது. அவன் பிளவுபடுவான். படிப்படியாக அந்தப் பிளவு மிகவும் ஆழமாக ஆகும். இடைவெளி அதிக ஆழமாக ஆகும். இனி எப்போது அவன் சிரித்தாலும் அது போலிச் சிரிப்பாகத்தான் இருக்கும்.

மேலும் நிஜமாகக் கோபிக்க அவனுக்கு முடியாவிட்டால் பின்எதிலுமே அவனால் நிஜமாயிருக்க முடியாது. ஏனெனில் நிஜமானது கண்டனம் செய்யப்படுகிறது. தன் அன்பைக் காதலை அவனால் வெளிப்படுத்த முடியாது. தன் இன்பத்தை அவனால் வெளிக்காட்ட முடியாது. நிசமானதை வெளிப்படுத்துவதற்கு பயப்படுபவனாக அவன் ஆகியுள்ளான். யதார்த்தத்தின் ஒரு பகுதியை நீங்கள் கண்டித்தால் மொத்த யதார்த்தமும் கண்டனத்துக்குள்ளாகிறது. ஏனெனில் யதார்த்தத்தை பிரிக்க முடியாது. ஒரு குழந்தையையும் நீங்கள் கூறுபோட முடியாது.

ஒன்றுமட்டும் நிச்சயம். தன்னை யாரும் ஏற்றுக்கொள்ளவில்லை என்பதைக் குழந்தை புரிந்துகொள்கிறான். தான் இருக்கிற நிலையிலேயே தன்னை ஏற்றுக்கொள்வார் யாருமில்லை. நிசமானது எவ்வாறோ கெட்டதாக இருக்கிறது. எனவே அவன் போலியாக இருக்க வேண்டி இருக்கிறது. பொய்முகங்களை, முகமூடிகளை அவன் அணிந்துகொள்ள வேண்டி இருக்கிறது. ஒரு தடவை இதை அவன் கற்றுக்கொண்டுவிட்டால் வாழ்க்கை முழுவதுமே ஒரு தவறான பரிமாணத்திலேயே இயங்கும். ஆகவே தவறானது, போலியானது துன்பத்துக்குள் மட்டுமே இட்டுச் செல்ல முடியும். பொய்மை ஒருநாளும் மகிழ்ச்சிக்கு இட்டுச் சொல்ல முடியாது. மெய்யானதே, நிசமான உண்மை மட்டுமே உங்களைப் பரவசத்தை நோக்கி; அன்பு, ஆனந்தம், தியானம் போன்ற வாழ்வின் உன்னத அனுபவங்களை நோக்கி நடத்திச் செல்ல முடியும்.

ஒவ்வொருவரும் இந்த முறையிலேயே வளர்த்தெடுக்கப்படுகிறார். எனவே நீங்கள் மகிழ்ச்சிக்கு ஏங்குகிறீர்கள். ஆனால் நீங்கள் செய்வதையெல்லாம் துன்பத்தையே படைக்கிறது. தன்னைத்தானே ஏற்றுக்கொள்வதே மகிழ்ச்சியை நோக்கிய முதல் விசயமாகும். ஆனால் உங்களை நீங்கள் உள்ளபடியே ஏற்றுக்கொள்ளும்படி சமுதாயம் ஒருபோதும் சொல்லித்தருவதில்லை. உங்களை நீங்களே கண்டனம் செய்யுமாறும், உங்களைக்குறித்து குற்ற உணர்வு கொள்ளுமாறும் உங்களின் பல பாகங்களையும் வெட்டி எறியுமாறுமே சமுதாயம் உங்களுக்குப் போதிக்கிறது. அது உங்களை முறித்துப்போடுகிறது. அப்படி முடக்கப்பட்ட மனிதன் இலக்கைப்போய்ச் சேர முடிவதில்லை. நாமெல்லாருமே ஊனப்படுத்தப்பட்ட நிலையிலேயே இருக்கிறோம்.

பற்றுக்கொள்வதே துன்பம். ஆனால் தொடக்கத்தில் இருந்தே பற்றுக்கொள்ளுமாறு குழந்தைக்கு உபதேசிக்கப்படுகிறது. ''என்னை நேசி. நான் உன் அம்மா'' என்று தாய் குழந்தையிடம் கூறுவாள். தந்தை கூறுவார் ''என்னை நேசி. நானே உன் அப்பா.'' இது எப்படி இருக்கிறதென்றால் ஒருவர் அப்பாவாக அல்லது அம்மாவாக இருப்பதாலேயே மறுபேச்சின்றி அவர் அன்பு செய்யப்பட வேண்டியவராகிறார் என்பதுபோல் இருக்கிறது.

ஒரு தாயாக இருப்பது பெரிய விசயம் இல்லை. அல்லது ஒரு தந்தையாக இருப்பது பெரிய விசயம்இல்லை. ஒரு தந்தையாக இருப்பது என்றால் ஒரு மாபெரும் ஒழுங்குமுறையின் ஊடாக கடந்துசெல்வதாகும். அன்புசெய்யத்தக்கவராக அவர் ஆகவேண்டி இருக்கிறது. ஒரு தாயாக இருப்பது என்றால் வெறுமனே குழந்தை பெறுவது மட்டுமல்ல. தாயாக இருப்பது என்றால் ஒரு மிகப்பெரும் பயிற்சி, ஒரு மிகப்பெரும் அக ஒழுங்கு ஆகும். அன்பானவராக அவர் இருக்கவேண்டி இருக்கிறது.

தாய் அன்பானவளாக இருந்தால் குழந்தை அவள்மேல் பற்றுவைக்காமல் அவளிடம் அன்பாயிருக்கும். அதுமட்டுமல்ல, அன்பான ஒருவரை எங்கெங்கு கண்டாலும் அவரை அது நேசிக்கும். ஆனால் தாய்மார்கள் அன்பானவர்களாக இல்லை. தந்தையர்கள் அன்புடனில்லை. அன்பு என்பது ஒரு தன்மை என்னும் வகையில் ஒருபோதும் அவர்கள் சிந்தித்துப் பார்த்ததில்லை. அதை நீங்கள் உருவாக்க வேண்டி இருக்கிறது; அப்படி நீங்கள் ஆக வேண்டி இருக்கிறது.

முதலில் நீங்கள் வளர வேண்டி இருக்கிறது. அப்போது மட்டுமே மற்றவர்களில் நீங்கள் அன்பை உருவாக்க முடியும். வற்புறுத்தி அதைப் பெற முடியாது. அதை நீங்கள் கேட்டுப்பெற்றால் அது பற்றாக ஆக முடியும், அன்பாக இருக்க முடியாது. எனவே குழந்தை தாயை அவள் தனது தாய் என்பதற்காக நேசிக்கும். தாயோ தந்தையோ தான் அதன் குறிக்கோளாக ஆகிறார்கள். இவைகள் உறவுமுறைகள்; இது அன்பாகாது. பின் அவன் குடும்பத்தின்மேல் பற்றுள்ளவனாக ஆகிறான். ஆனால் குடும்பமோ ஒரு நாசகார சக்தியாகும். ஏனெனில் அண்டையிலுள்ள குடும்பம் தனித்ததாக இருக்கிறது. எனவே அதன்மீது குழந்தை அன்பாயிராது. ஏனெனில் நீங்கள் அந்தக் குடும்பத்துக்கு சொந்தமானவரில்லை. அடுத்தது உங்கள் சமூகம், உங்கள் நாடு...ஆனால் அண்டை நாடு எதிரியாகும்.

மனிதகுலம் முழுவதையும் உங்களால் நேசிக்க முடியாது. உங்கள் குடும்பமே மூலக்காரணம். அந்தக் குடும்பம் உங்களை ஒரு அன்பான மனிதராக ஆக்கியதில்லை. உங்களை அன்புசெய்யும் மனிதரை உங்களிடம் கொண்டுவந்து தந்ததுமில்லை. சில உறவுமுறைகளை அது நிர்பந்தமாகத் திணிக்கிறது. பற்று என்பது ஒரு உறவு முறையே. அன்பு என்பதுவோ ஒரு மனநிலை. ''அன்பானவனாயிரு'' என்று உங்களிடம் உங்கள் அப்பா கூற மாட்டார். ஏனெனில் நீங்கள் அன்பானவரா யிருந்தால் எல்லாரிடமும் நீங்கள் அன்பானவராயிருக்க முடியும். சிலசமயங்களில் உங்கள் அப்பாவைவிட உங்கள் அண்டையவர் அதிக அன்பானவராக இருக்கலாம். ஆனால் இதை - வேறுயாரோ தன்னைவிட அதிக அன்பானவராக இருக்க முடியும் என்பதை - அப்பாவால் அங்கீகரிக்க முடியாது. ஏனெனில் அவர் உங்களுடைய அப்பா. எனவே உறவுமுறையைத்தான் கற்பிக்கிறார்கள், அன்பை அல்ல.

இது என் நாடு. எனவேதான் இந்த நாட்டை நான் நேசித்தாக வேண்டும். 'நேசி' என்று மட்டுமே கற்றுத்தந்தால் பின் எந்த நாட்டையும் நான் நேசிக்க முடியும். ஆனால் அரசியல்வாதி அதற்கு எதிராக நிற்பான். ஏனென்றால் எந்த நாட்டையும் நான் நேசித்தால், இந்த பூமி முழுவதையும் நான் காதலித்தால், பின் என்னைப் போர்புரிய இழுத்துசெல்ல முடியாது. எனவே அரசியல்வாதிகள் இப்படித்தான் சொற்பொழிவாற்றுவார்கள். ''இந்த நாட்டை நேசி. இது உன் நாடு. இங்கு நீ பிறந்தாய். நீ இந்த நாட்டுக்குச் சொந்தமானவன்/ள். உனது வாழ்வு, உனது சாவு, எல்லாம் இந்த நாட்டுக்கே உரிமையானது.'' எனவே அதற்காக உங்களை அவன் பலியிடுகிறான்.

மொத்தச் சமுதாயமும் உங்களுக்குச் சொந்தங்களையும் பந்தபாசங்களையுமே சொல்லிக்கொடுக்கிறது, அன்பை அல்ல. அன்பு அபாயகரமானது. அது எல்லைகளை அறியாது. அதனால் இயங்க முடியும். அது சுதந்திரமானது. எனவே உங்கள் மனைவி உங்களிடம் ''என்னைக் காதலி. ஏனெனில் நான் உன் மனைவி'' எனப் போதிப்பாள். கணவன் மனைவியிடம் ''என்னையே நேசி. ஏனெனில் நானே உன் கணவன்'' என்று உபதேசிப்பான். ஆனால் யாருமே அன்பைக் கற்பிப்பதில்லை.

அன்பை மட்டுமே சொல்லித் தந்தால் பின் மனைவி ''அந்த அந்நிய மனிதர் உன்னைவிட அதிக அன்பராயிருக்கிறார்'' என்று கூற முடியும். உலகமானது உண்மையாகவே அன்புசெய்யச் சுதந்திரமுடையதாய் இருந்தால் பின் வெறும் ஒரு கணவனாக மட்டுமே இருப்பது எந்த பொருளையும் கொண்டிருக்க முடியாது. வெறும் ஒரு மனைவியாக மட்டும் இருப்பதில் எந்தப் பொருளும் இருக்க முடியாது. அப்போது அன்பு சுதந்திரமாகப் பாயும். ஆனால் அது ஆபத்தானது. சமுதாயத்தால் அதை அனுமதிக்க முடியாது. குடும்பம் அதை அனுமதிக்க முடியாது. மதங்கள் அதை அனுமதிக்க முடியாது. எனவே அன்பின் பெயரால் அவர்கள் பற்றையே பந்தபாசத்தையே போதிக்கிறார்கள். அதனால்தான் எல்லோரும் துன்பத்தில் இருக்கிறார்கள்.

'பற்றின்மை' என்று பதஞ்சலி கூறும்போது அவர் அன்புக்கு எதிராகக் கூறவில்லை. உண்மையில் அன்புக்காகவே அவர் நிற்கிறார். பற்றற்ற தன்மை என்றால் இயற்கையாக, அன்பாக, இயக்கமாக இருத்தல் என்று பொருள். அதற்கு மாறாக தொற்றிக்கொண்டு பந்தபாசத்துக்கு அடிமையாகிவிடக்கூடாது என்று பொருள். பழக்கத்துக்கு அடிமையாவதே பிரச்சனை. பின் அது ஒரு நோய்போல் ஆகிறது. உங்கள் சொந்தக் குழந்தையைத்தவிர வேறு எந்தக் குழந்தையையும் உங்களால் நேசிக்க முடிவதில்லை என்பதுவே பழக்கத்துக்கு அடிமையாவது அழுந்திக்கிடப்பது. அப்போது நீங்கள் அவலத்திலேயே இருப்பீர்கள். உங்கள் குழந்தை இறந்துவிடலாம். அதன்பின் உங்கள் அன்பு பாயமுடிவதற்கு வேறு சாத்தியமே இல்லை. உங்கள் குழந்தை சாகாதிருந்தால் அவன் வளர்வான். அவன் வளர வளர அதிகமதிக சுயேச்சையானவன் ஆவான். அப்போதும் துன்பம் உண்டாகும். ஒவ்வொரு தாயும் துன்புறுகிறாள், ஒவ்வொரு தகப்பனும் துன்புறுகிறான்.

அடுத்து குழந்தை பெரியவனாவான். ஏதாவது ஒரு பெண்ணிடம் அவன் காதல் கொள்வான். அப்போது அவன் அம்மா துன்புறுகிறாள்: ஒரு போட்டியாளர் நுழைந்துவிட்டார். ஆனால் பற்றின்காரணமாகவே இப்படித் தோன்றுகிறது. தாய் உண்மையாகவே குழந்தையை நேசித்தால் அவன் சுதந்திரமாக இருப்பதற்கே அவனுக்கு அவள் உதவுவாள். ஏனெனில் எந்தளவுக்கு நாம் மிகுந்த அன்பு செய்வோமோ அந்த அளவுக்கு நாம் மிகுந்த நிறைவு பெறுகிறோம் என்பதை அவள் அறிவாள். அந்நிலையில் அவளது மகன் ஒரு பெண்ணிடம் காதல் கொண்டால் அந்தத்தாய் மகிழவே செய்வாள். மகிழ்ச்சியால் அவள் கூத்தாடுவாள்.

அன்பு ஒருபோதும் உங்களுக்குத் துன்பத்தைக் கொடுப்பதில்லை. ஏனென்றால் ஒருவரை நீங்கள் நேசித்தால் அவர் மகிழ்ச்சியாக இருப்பதையும் நீங்கள் விரும்புவீர்கள். ஒருவரிடம் நீங்கள் சொந்தம் பாராட்டினால் அவரது மகிழ்ச்சியை நீங்கள் விரும்பமாட்டீர்கள். உங்களின் சுயநலத்தில் மட்டுமே நீங்கள் அக்கறைப்படுகிறீர்கள். உங்கள் சொந்த அகங்கார மையங்கொண்ட கோரிக்கைகளைப்பற்றி மட்டுமே அக்கறை கொள்கிறீர்கள்.

ஃப்ராய்டு பல விசயங்களைக் கண்டுபிடித்தார். அவற்றில் ஒன்று தாயில் அல்லது தந்தையில் உறைந்த - நிலைத்த - இறுகிய நிலை. மிகவும் ஆபத்தான தாய் யார் என்றால் தன்னையே மிக அதிகமாய் நேசிக்கும்படி நெருக்கும் தாய். எந்த அளவுக்கெனில் அவன் அவளிடமே நிலைத்துப்போய் வேறு யாரையும் நேசிக்க முடியாதவன் ஆவான். இத்தகைய இறுக்கங்களின் காரணமாகத் துன்புற்றுக் கொண்டிருக்கும் மக்கள் லட்சக்கணக்கானோர் இருக்கிறார்கள்.

பலரையும் நான் ஆராய முயன்றவரை....ஏறக்குறைய எல்லாக்கணவர்களும், குறைந்தது தொண்ணூற்று ஒன்பது சதவீதம்பேர் தம் மனைவியரில் தம் தாய்கள்ளயே காண முயல்கிறார்கள். ஆனால் உங்கள் மனைவியிடம் உங்கள் தாயை நீங்கள் கண்டுபிடிக்க முடியாது என்பது வெளிப்படை. ஆனால் தாயுடனான மிகவும் ஆழமான ஒரு நிலைப்புத்தன்மையால் அவர்கள் தம் மனைவியிடம் அதிருப்தி அடைகிறார்கள். ஏனெனில் அம்மனைவிகள் அவர்களுக்கு தம் தாய்போல் இல்லை. அப்படியே ஒவ்வொரு மனைவியும் தன் கணவனில் தன் தந்தையை தேடிக்கொண்டிருக்கிறாள். எந்தக் கணவனாலும் உங்கள் அப்பாவாக இருக்க முடியாது. தன்னைத் தன் தந்தைபோல் தன் கணவன் காப்பதில்லை என்று கண்டதும் அவள் அதிருப்தி அடைகிறாள்.

இவைகள் இறுகிப்போன பார்வைகள். பதஞ்சலியின் மொழியில் அவர் இதனை பற்றுகள் - பந்தங்கள் என்கிறார். ஃப்ராய்டு அவற்றை நிலைப்புகள் என்கிறார். வார்த்தைகள் மாறுகின்றன. ஆனால் அர்த்தம் ஒன்றுதான். எவரிடமும் நிலைத்துவிடாதீர்கள். இயங்கியபடி இருங்கள். பற்றின்மை என்றால் நீங்கள் ஓரிடத்தில் ஒட்டியில்லை என்று பொருள். பனிக்கட்டிகளைப்போல் இராதீர்கள். தண்ணீராய் இருங்கள். ஓடிக்கொண்டே இருங்கள். உறைந்துவிடாதீர்கள்.

ஒவ்வொரு பற்றும் பாசமும் ஒரு உறைந்த பொருளாக ஆகிறது; இறந்த விசயமாக ஆகிறது. அது உயிருடன் துடித்துக் கொண்டு இல்லை. அது ஓயாமல் இயங்கிக் கொண்டிருக்கும் பிரதிபலிப்பாக இல்லை. கணத்துக்குக் கணம் அது உயிருடன் இல்லை. அது நிலைத்திருக்கிறது. ஒருவரை நீங்கள் நேசிக்கிறீர்கள். அது அன்பானால் அடுத்த கணம் என்ன நடக்கப்போகிறது என்பதை உங்களால் முன்கூட்டிச் சொல்ல முடியாது. முன்கூட்டிச் சொல்வது முடியாதது. வானிலை போலவே மனநிலைகள் மாறுகின்றன. அடுத்த கணத்திலும் உங்கள் காதலர் உங்களைக் காதலிப்பார் என்று உங்களால் சொல்ல முடியாது. அடுத்த கணத்தில் அவர் காதலாக உணராமல் போகலாம். நீங்கள் எதிர்பார்க்க முடியாது.

அடுத்த கணமும் அவர் உங்களை நேசித்தால் அது நல்லதே. நீங்கள் நன்றி உடையவராய் இருக்கிறீர்கள். அடுத்த கணத்தில் அவர் அன்பாக இராவிட்டால் அதற்கு ஒன்றும் செய்யமுடியாது. நீங்கள் செயலற்றவராய் இருக்கிறீர்கள். அவர் அதற்கான மனநிலையில் இல்லை என்பதை நீங்கள் ஏற்றுக்கொண்டாக வேண்டும். இதில் அழுவதற்கு ஒன்றுமில்லை. அதற்கான மனநிலை இல்லை - அவ்வளவுதான்! அந்தச் சூழலை நீங்கள் ஏற்றுக்கொள்கிறீர்கள். காதலரை நடிக்குமாறு நீங்கள் நெருக்க முடியாது. ஏனென்றால் பாசாங்கு செய்வது அபாயகரமானது.

உங்கள்மீது நான் அன்பாக உணர்ந்தால் ''நான் உங்களை நேசிக்கிறேன்'' என்று கூறுகிறேன். ஆனால் அடுத்த கணமே ''இல்லை, இப்போது எனக்கு எதுவும் தோன்றவில்லை'' என்றும் நான் கூற முடியும். எனவே இரண்டு சாத்தியப்பாடுகள் மட்டுமே உள்ளன. ஒன்று, என் அன்பற்ற தற்போதைய மனநிலையை நீங்கள் ஏற்கிறீர்கள் அல்லது ''நீ என்னை நேசித்தாலோ நேசிக்காவிட்டாலோ குறைந்தபட்சம் என்னை நேசிப்பதுபோலக் காட்டிக் கொள்ளவாவது செய்'' என்று கட்டாயப்படுத்துகிறீர்கள். என்னை நீங்கள் கட்டாயப்படுத்தினால் பின் நான் போலியானவனாக மாறுகிறேன். அந்த உறவும் ஒரு பாசாங்காக,

வெளிவேசமாக ஆகிறது. இதன்பின் நாம் ஒருவருக்கொருவர் உண்மை யாக இருப்பதில்லை. ஆதனால் ஒருவருக்கொருவர் உண்மையாக இல்லாத இருவர் எப்படி அன்பாக இருக்க முடியும்? அவர்களின் உறவு உறைந்து போனதாகவே ஆகியிருக்கும்.

மனைவியும் கணவனும் உறைந்திருக்கிறார்கள், சவங்களைப் போலாகி இருக்கிறார்கள். எல்லாமே நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் ஒருவரை ஒருவர் பொருள்களை நடத்துவதுபோல் நடந்து கொள்கிறார்கள். நீங்கள் உங்கள் வீட்டுக்கு வருகிறீர்கள். உங்கள் மேசைநாற்காலி எந்த எதிர்வினையுமின்றி அப்படியே இருக்கிறது. ஏனென்றால் மரச்சாமானுக்கு உயிரில்லை.

உங்கள் வீடு அப்படியே இருக்கிறது. ஏனெனில் வீட்டுக்கு உயிர் கிடையாது. ஆனால் உங்கள் மனைவியும் அப்படியே இருக்கவேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்க முடியாது. ஏனெனில் அவளுக்கு உயிர் இருக்கிறது. அவள் ஒரு மனுஷி. மேலும், நீங்கள் வீட்டைவிட்டு கிளம்பியபோது இருந்தது போலவே இப்போதும் அவள் இருக்கவேண்டும் என்று நீங்கள் எதிர்பார்த்ததால் பின் அவளையும் ஒரு மரச்சாமான் போலவே ஒரு பொருள்போலவே இருக்கவேண்டுமென்று கட்டாயப்படுத்துகிறீர்கள் என்றாகும். உறவுடைய மனிதர்களை பொருள்களாகும்படி பற்று வற்புறுத்துகிறது. அன்போ மனிதர்களை அதிக சுதந்திரமுள்ளவர்களாக, அதிக சுயேச்சையானவர்களாக, அதிக உண்மையுள்ளவர்களாக ஆவதற்கு உதவுகிறது. ஆனால் உண்மை என்பது தொடர்ச்சியான இயக்கமாக மட்டுமே இருக்க முடியும். ஒருபோதும் அது உறைந்ததாக முடியாது.

பற்றுவேண்டாம் என்று பதஞ்சலி கூறும்போது உங்களின் அன்பைக் கொன்று விடுங்கள் என்று அவர் சொல்லவில்லை. அதற்கு மாறாக, ''உங்கள் அன்புக்கு நஞ்சூட்டும் யாவற்றையும், உங்கள் அன்பைக் கெடுக்கும் அனைத்துத் தடைகளையும் கொல்லுங்கள்'' என்றே அவர் கூறுகிறார். ஒரு யோகிமட்டுமே அன்பானவராக இருக்க முடியும். உலகியல் மனிதர் அன்பானவராக இருக்கமுடியாது. அவர் பற்றுள்ளவராகவே இருக்க முடியும்.

இதை நினைவில் கொள்ளுங்கள்: பற்று என்றால் நிலைப்பு. அதில் புதிதான எதையும் நீங்கள் சேர்த்துக் கொள்ள முடிவதில்லை. கடந்த காலத்தது மட்டுமே அதில் உள்ளது. எதையும் மாற்றிவிடக்கூடியதான

நிகழ்காலத்தை நீங்கள் அனுமதிப்பதில்லை. வருங்காலத்தையும் நீங்கள் அனுமதிப்பதில்லை. ஆனால் வாழ்க்கை என்றாலே மாறுதல்தான். சாவுதான் மாறாதது.

நீங்கள் பற்றற்றவராக இருந்தால் பின் கணத்துக்கு கணம் எந்த இறுக்கமும் இன்றி நீங்கள் இயங்குகிறீர்கள். ஒவ்வொரு கணமும் வாழ்க்கை புதுப்புது மகிழ்ச்சிகளை புதுப்புதுத் துன்பங்களைக் கொண்டுவரும். கரிய இரவுகளும் ஒளிமயமான பகல்களும் கலந்துவரும். ஆனால் நீங்கள் திறந்தே இருக்கிறீர்கள். உங்களிடம் ஒரு நிலைத்த மனம் இருப்பதில்லை. உங்களிடம் ஒரு நிலைத்த மனம் இல்லை என்றால் ஒரு துன்பகரமான சூழ்நிலைகூட உங்களுக்குத் துன்பம்தர முடியாது. ஏனெனில் அதனுடன் ஒப்பிடுவதற்கு உங்களிடம் எதுவும் இருப்பதில்லை. அதற்கெதிராக வேறொன்றை நீங்கள் எதிர்பார்த்திருக்க வில்லை. எனவே நீங்கள் நிராசையும் அடைவதில்லை.

உங்களின் எதிர்பார்ப்புகளால் - கோரிக்கைகளால் தான் நீங்கள் ஏமாந்து - நிராசையடைந்து போகிறீர்கள். நீங்கள் வீடு திரும்பியதும் உங்களை வரவேற்க வாசற்படியில் உங்கள் மனைவி நின்றுகொண்டு இருக்கவேண்டும் என்று நீங்கள் எண்ணுகிறீர்கள். அந்நிலையில் உங்களை வரவேற்க அவள் அங்கு நின்றுகொண்டு இல்லை என்றால் அதை உங்களால் ஏற்றுக்கொள்ள முடிவதில்லை. அது உங்களுக்கு ஏமாற்றத்தையும் துன்பத்தையும் தருகிறது. நீங்கள் வலியுறுத்துகிறீர்கள். அதன்மூலம் நீங்கள் வருத்தத்தையே உருவாக்குகிறீர்கள். மேலும் நீங்கள் பற்றிக்கொண்டு இருந்தால் மட்டுமே வற்புறுத்துவது என்பது சாத்தியம். உங்களுக்கு முற்றிலும் புதியவர்களிடம் நீங்கள் வற்புறுத்த முடிவதில்லை. எனவே சொந்தம் பாராட்டுவதுடனேயே வற்புறுத்தல் என்பது வருகிறது. எனவேதான் எல்லாச் சொந்த உறவுகளும் நரகமாக உள்ளன.

பற்றற்றிரு என்கிறார் பதஞ்சலி. அதன் பொருள் இயங்கியபடி இரு வாழ்க்கை கொணரும் எதையும் ஏற்றுக்கொள்பவராய் இரு என்பதாகும். கட்டாயப்படுத்தாதே, நிர்பந்தம் செய்யாதே. வாழ்க்கை என்பது உன்னை பின்பற்றப் போவதில்லை. உங்களுக்கு ஏற்ற வண்ணம் வாழ்க்கையை நீங்கள் வற்புறுத்த முடியாது. ஆற்றுநீரை எதிர்த்துத் தள்ளுவதைவிட ஆற்றுடன் இசைந்து போவது அதிக நல்லது. சும்மா அதனுடன் சேர்ந்து பாயுங்கள்! அதனால் மிகுந்த மகிழ்ச்சி சாத்தியம் ஆகிறது. ஏற்கனவே உங்களைச் சுற்றிலும் மிகுந்த மகிழ்ச்சி இருக்கிறது. ஆனால் உங்களால்

தான் அதை பார்க்க முடிவதில்லை. உங்கள் தவறான நிலைத்த கண்ணோட்டங்களே இதற்குக் காரணம்.

ஆனால் இந்தப் பற்றின்மையானது தொடக்கத்தில் ஒரு விதையாக மட்டுமே இருக்கும். முடிவில் பற்றின்மையானது ஆசையின்மை ஆகிறது. தொடக்கத்தில் பற்றின்மை என்றால் நிலைத்திராத தன்மை. முடிவிலோ பற்றின்மை என்றால் ஆசையற்ற தன்மை. தொடக்கத்தில் வற்புறுத்தல் இராது. முடிவிலோ ஆசையே இராது.

ஆனால் ஆசையற்ற இந்த முடிவான நிலையை அடைய நீங்கள் விரும்பினால் கோரிக்கையற்ற நிலையிலிருந்து தொடங்குகள். ஒரு இருபத்து நான்கு மணி நேரத்துக்காவது பதஞ்சலியின் இச்சூத்திரத்தை முயன்று பாருங்கள். இருபத்து நான்கு மணிநேரமாவது வாழ்க்கையுடன் இசைந்து இயங்குங்கள். எதையும் வலியுறுத்திக் கேட்காதீர்கள். வாழ்க்கை என்ன தருகிறதோ அதற்கு நன்றியுள்ளவர்களாக மட்டும் இருங்கள். ஒரு பிரார்த்தனைமயமான மனநிலையுடன் - எதையும் கேட்காமல், எதையும் கட்டாயப்படுத்தாமல், எதையும் எதிர்பார்க்காமல் - ஒரு இருபத்துநான்கு மணி நேரத்துக்கு மட்டும் இருங்கள் - அப்போது நீங்கள் ஒரு புதிய வாயிலைப் பெற்றிருப்பீர்கள். அந்த இருபத்து நான்கு மணிகளும் ஒரு புதிய சன்னலாக ஆகி இருக்கும். அப்போது நீங்கள் எவ்வளவு பரவசமுள்ளவராக ஆகமுடியும் என்பதை நீங்களே உணர்வீர்கள்.

ஆனால் தொடக்கத்தில் இருந்தே நீங்கள் விழிப்புடன் இருக்க வேண்டி இருக்கும். சாதகரைப் பொறுத்தவரை பற்றின்மை என்பது தானாக வரும் ஒரு நடைமுறை என்று எதிர்பார்க்க முடியாது.

இரண்டாவது கேள்வி:

**ஞான நிலைபேறு பெற்ற ஒருவர் தன்னை ஒரே ஒருவருக்கு மட்டுமே வெளிப்படுத்துவது என்பது ஏன்? எடுத்துக் காட்டாக புத்த பகவான் மகாகாசியபருக்கு மட்டுமே உணர்த்தினார். உண்மையில் ஒரே ஒரு சீடரே ஒளியைப் பெற்றுக்கொள்ளும் இந்த பௌத்த மரபு எட்டுத் தலைமுறை களாகத் தொடர்ந்துள்ளது. ஒரு கூட்டமே சேர்ந்தாற்போல் அதை பெற்றுக்கொள்ள வாய்ப்பில்லையா?**

இல்லை. அது ஒருபோதும் சாத்தியமில்லை. ஏனெனில் குழுவுக்கு பொதுவான ஆன்மா கிடையாது. கூட்டத்துக்கு என்று ஒரு சுயம் கிடையாது. தனி ஆள் மட்டுமே பெற்றுக்கொள்ள முடியும். பெற்றுக் கொள்பவராக முடியும். ஏனெனில் தனி ஆளுக்கு மட்டுமே இதயம் இருக்கிறது. குழு என்பது ஒரு ஆள் அல்ல.

நீங்கள் இங்கு இருக்கிறீர்கள். நான் பேசிக்கொண்டு இருக்கிறேன். ஆனால் நான் ஒரு கூட்டத்திடம் பேசிக்கொண்டில்லை. ஏனெனில் ஒரு கூட்டத்துடன் தொடர்பு கொள்வது என்பது இருக்கமுடியாது. ிங்கிருக்கும் ஒவ்வொரு தனிமனிதரிடமும் நான் பேசிக்கொண்டிருக்கி றேன். நீங்கள் ஒரு குழுவாகத் திரண்டிருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் ஒரு குழுவாக நான் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருக்கவில்லை. தனிமனிதர்களாகத்தான் நான் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருக்கி றீர்கள். உண்மையில் குழு என்பது இருப்பதில்லை. தனிமனிதர்கள் மட்டுமே இருக்கிறார்கள். 'குழு' என்பது ஒரு சொல்தான். அதற்கு யதார்த்தம் கிடையாது. அடிப்படை கிடையாது. கூட்டுத்தன்மைக்கு தரப்படும் ஒரு பெயர் அது. அவ்வளவுதான்.

ஒரு கூட்டத்தை நீங்கள் நேசிக்க முடியாது. ஒரு தேசத்தை நீங்கள் நேசிக்கமுடியாது. மனித குலத்தை உங்களால்நேசிக்கமுடியாது. ஆனால் தாம் மனித குலத்தையே நேசிப்பதாக கூறிக்கொள்ளும் மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்கள் தம்மைத்தாமே ஏமாற்றுக்கொள்கிறார்கள். ஏனெனில் மானுடம் என்று யாரும் எங்கும் இல்லை. தனி மனிதர்கள் மட்டுமே இருக்கிறார்கள். போய்த்தேடிப் பாருங்கள். மனிதகுலம் என்பதை எங்கேயும் நீங்கள் கண்டுபிடிக்க மாட்டீர்கள்.

உண்மையில் இந்த மனிதர்கள்தான் தாம் மனிதகுலத்தையே நேசிப்பதாக உரிமைபாராட்டுகிறார்கள். ஆனால் இவர்கள் தனி மனிதர்களை நேசிக்க முடிவதில்லை. தனிமனிதர்களிடம் அன்பு செலுத்தத் திறனில்லாதவர்கள் இவர்கள். எனவேதான் மகத்தான பெயர்கள் - மானுடம், தேசியம், பிரபஞ்சம்...அவர்களால் கடவுளைக் கூட நேசிக்க முடியலாம். ஆனால் ஒரு தனி மனிதரை அவர்களால் நேசிக்க முடியாது. ஏனெனில் தனிமனிதரை நேசிப்பது சிரமம், கடினம். அது ஒரு போராட்டம். உங்களையே நீங்கள் மாற்றிக்கொள்ள வேண்டி இருக்கிறது. மனித இனத்தை நேசிப்பதில் எந்த பிரச்சனையும் இல்லை. ஏனெனில் மனித இனம் என்று யாரும்இல்லை. நீங்கள்தான் தனியாக

இருக்கிறீர்கள். உண்மை, அழகு, அன்பு அல்லது இதுபோன்ற சிறப்புடைய எதுவும் எப்போதும் தனிநபருக்கே உரியது. தனிமனிதர்கள் மட்டுமே அவற்றைப் பெறுபவராக முடியும்.

புத்தர் தன் சீவனையே மகா காசியபருக்குள் பொழிந்து கொண்டிருந்தபோது அங்கு பத்தாயிரம் துறவிகள் இருந்தார்கள். ஆனால் அந்தக் கூட்டத்தால் இயலவில்லை. எந்தக் கூட்டத்துக்கும் இயலாது. ஏனெனில் உணர்வு என்பது தனிமனிதனுடையது. விழிப்பு என்பதும் தனிமனிதருடையது. புத்தரை ஏற்றுக்கொள்ள முடிவதற்கான சிகரத்துக்கு மகாகாசியபர் உயர்ந்தார். வேறு தனிமனிதர்களும் அந்த உயர்நிலைக்கு உயரமுடியும். ஆனால் குழுவால் முடியாது.

சமயம் என்பது அடிப்படையிலேயே தனிமனிதர் சார்ந்ததே. வேறுவிதமாக அது இருக்கவும் முடியாது. இதுதான் பொதுவுடைமைக் கும் (கம்யூனிசத்துக்கும்) சமயத்துக்கும் இடையிலான அடிப்படையான முரண்பாடுகளில் ஒன்றாகும். பொதுவுடைமைக் கொள்கையானது குழுக்கள், கூட்டங்கள், சமூகங்கள் என்கிற ரீதியிலேயே யோசிக்கிறது. சமயமோ தனிமனிதர், தான் என்னும் ரீதியில் எண்ணுகிறது. சமூகம் முழுவதையும் ஒட்டுமொத்தமாக மாற்றிவிட முடியும் என்று சமயம் நினைக்கிறது. சமூகம் முழுவதையும் ஒரேயடியாக மாற்றிவிட முடியாது. ஏனென்றால் சமூகத்துக்கு என ஒரு ஆன்மா இல்லை. அதை மாற்றுவது என்பது முடியாது. உண்மையைச் சொன்னால் சமுதாயம் என்று ஒன்றே இல்லை. தனிமனிதர்களே இருக்கிறார்கள்.

'தனிமனிதர்கள் என்று யாருமில்லை, சமுதாயம் மட்டுமே இருக்கிறது' என்கிறது பொதுவுடைமை. பொதுவுடைமையும் சமயமும் ஒன்றுக்கொன்று முற்றிலும் எதிரெதிரானவை. அந்த எதிர்ப்பு என்பது இதில்தான் - பொதுவுடைமை செல்வாக்கு பெற்றால் தனிமனித சுதந்திரம் மறைகிறது. அப்போதுமட்டுமே சமுதாயம் நிலவுகிறது. தனிமனிதர் என்பவர் நிலவுவதற்கு அங்கு அனுமதி இல்லை. முழுமையின் ஒரு பகுதியாக மட்டுமே, சக்கரத்தின் ஒரு பல் இணைப்பாக மட்டுமே அவர் இருக்க முடியும். தான் சுயமாக இருக்க அவர் அங்கு அனுமதிக்கப்படமுடியாது.

ஒரு சம்பவம் கேள்விப்பட்டேன். ஒரு மனிதர் தன் கிளி தொலைந்துவிட்டது என்று மாஸ்கோ காவல் நிலையத்தில் புகார் செய்தாராம். உடனே சம்பந்தப்பட்ட எழுத்தரிடம் போகுமாறு அவர்

வழிகாட்டப்பட்டார். எழுத்தர் எழுதிக்கொண்டார். பின், ''அந்தக் கிளி பேசக்கூடியதா, அது பேசுமா?'' என்று கேட்டார். உடனே வந்தவர் பயந்து போனார். சற்றே கலவரமடைந்தார். அசவுகரியமாக உணர்ந்தார். அவர் சொன்னார், ''ஆம், அது பேசும். ஆனால் அது என்னவிதமான அரசியல் அபிப்பிராயங்களைக் கூறினாலும் அவையெல்லாம் கண்டிப்பாக அதன் சொந்தக் கருத்துகளே!'' கிளி! இந்த மனிதன் ஏன் பயப்படுகிறான் என்றால் கிளி பேசும் அரசியல் கருத்துகள் அதை வளர்ப்பவரின் கருத்துகளாகத்தான் இருக்க வேண்டும். சொன்னதைத் திருப்பிச் சொல்லவே கிளி க்குத் தெரியும்.

தனித்துவம் இங்கு அனுமதிக்கப்படுவதில்லை. உங்கள் சொந்த அபிப்பிராயங்களை நீங்கள் வைத்திருக்க முடியாது. அபிப்பிராயங்கள் என்பவை அரசின், குழுமனத்தின் அக்கறைக்குரியவை. ஆகவே குழுமனம் என்பதே சாத்தியமான மிகவும் கீழ்நிலை வளர்ச்சியாகும். தனிமனிதர்களே உன்னதங்களை எட்ட முடிகிறது. எந்தக் குழுவும் ஒருபோதும் புத்தரைப் போலவோ யேசுவைப் போலவோ ஆனதில்லை. தனிமனித உன்னதங்கள் மட்டுமே உள்ளன.

புத்தர் தன் முழு வாழ்வின் அனுபவத்தையும் மகாகாசியபருக்கு கொடுத்துக் கொண்டிருக்கிறார். ஏனெனில் வேறுவழி இல்லை. எந்த ஒரு குழுவுக்கும் அது கொடுக்கப்பட முடியாது. அதற்குச் சாத்தியமே இல்லை. செய்தித் தொடர்பு, ஆன்மீகக் கூட்டுறவு - என்பன இரண்டு தனிமனிதர்களுக்கு இடையில் மட்டுமே நிலவ முடியும். அது ஒரு தனிப்பட்ட, மிகவும் தனிப்பட்ட நம்பிக்கையாகும். குழு என்பதோ தனிமனித சார்பற்றது. மேலும் குழுவால் பல காரியங்கள் செய்ய முடியும் என்பதையும் நினைவில் கொள்ளுங்கள்: குழுவுக்கு பித்தநிலை சாத்தியம். புத்தநிலை சாத்தியமில்லை. குழுவுக்கு பைத்தியம் பிடிக்க முடியும். ஆனால் ஒரு குழுவால் ஞானம்பெற முடியாது.

நிகழ்வானது எவ்வளவு தாழ்ந்த தரத்தில் இருக்கிறதோ அவ்வளவுக்கு குழு அதில் அதிகமாய் பங்கேற்க முடிகிறது. எனவே எல்லாவிதமான மாபாதகச் செயல்களையும் குழுவே செய்கிறது, தனிமனிதர்கள் செய்வதில்லை. தனிமனிதரால் சில பேரைக் கொலைசெய்ய முடியும். ஆனால் தனிநபரால் ''ஃபாசிஸ்ட்'' ஆக முடியாது. லட்சக்கணக்கானவர்களை அவரால் அழித்தொழிக்க முடியாது. பாசிசமோ லட்சக்கணக்கில் கொல்ல முடியும், அதுவும் மனதறிந்தே.

இரண்டாம் உலகப் போருக்குப் பின் போர்க் குற்றவாளிகள் அனைவரும் தாம் பொறுப்பாளிகள் இல்லை என்றே சாட்சியம் கூறினார்கள். மேலிருந்து அவர்களுக்கு ஆணையிடப்பட்டது. அந்த ஆணைகளுக்கு அவர்கள் கீழ்ப்படிந்தார்கள் - அவ்வளவுதான். குழுவின், கும்பலின் பகுதியாகவே அவர்கள் இருந்தார்கள். ஹிட்லரும் முசோலினியும்கூட தம் தனிப்பட்ட வாழ்வில் மிகவும் உணர்வு நுட்பம் உடையவர்களாகவே விளங்கினார்கள். ஹிட்லர் இசைகேட்பது வழக்கம். அவன் இசைப்பிரியன். சிலசமயங்களில் அவன் ஓவியம் வரைவதையும் வழக்கமாகக் கொண்டிருந்தான். ஓவியத்தை நேசித்தான். இது அசாத்தியமெனத் தோன்றுகிறது. இசையையும் ஓவியத்தையும் ஹிட்லர் நேசித்தான். அவ்வளவு நுணுக்கமானவனாக இருந்தான். அதேசமயம் எந்தஉறுத்தலும், எந்த மனச்சாட்சியும், எந்தச் சங்கடமும் இன்றி லட்சக்கணக்கான யூதர்களைக் கொன்று குவித்தான். அதற்கு அவன் ''பொறுப்பில்லை.''; ஒரு குழுவின் தலைவன் அவன், அவ்வளவுதான்.

ஒரு கும்பலோடு நீங்கள் சேர்ந்து இயங்கும்போது எந்தக் குற்றத்தையும் நீங்கள் செய்ய முடியும். ஏனென்றால் ''கும்பலே அதைச் செய்கிறது. நான் அதன் பகுதி மட்டுமே'' என்பதாக நீங்கள் உணர்கிறீர்கள். தனியாக என்றால் அதை செய்வதா வேண்டாமா என்று ஒரு முறைக்கு மூன்றுமுறை யோசிப்பீர்கள். கும்பலிலோ பொறுப்பு இல்லாமல் போகிறது. உங்களின் தனிமனித சிந்தனை மழுங்கிவிடுகிறது. உங்களின் விவேகம் காணாமல் போகிறது. உங்களின் விழிப்புணர்வு தொலைந்து போகிறது. நீங்கள் வெறுமனே ஒரு கும்பலின் பகுதியாக ஆகிறீர்கள். கும்பல்களுக்கு பைத்தியம் பிடிக்க முடியும். இதை ஒவ்வொரு நாடும் அறிந்துள்ளது. ஒவ்வொரு காலகட்டமும் அறிந்துள்ளது. அப்போது அவர்கள் எதை வேண்டுமானாலும் செய்ய முடியும். ஆனால் கும்பல்கள் ஞானநிலைபேறு பெற முடிந்ததாக எந்த நாடும் எந்தக் காலத்திலும் கேள்விப்பட்டதில்லை.

உணர்வின் உயர்ந்த நிலைகளை தனிநபர்கள் மட்டுமே சாதிக்க முடிகிறது. அதிகப் பொறுப்புணர்வு - அதிகத் தனிப்பட்ட பொறுப் புணர்வு, அதிக மனச்சாட்சி - உணரப்பட வேண்டியுள்ளது. நீங்களே பொறுப்பு என்பதை எந்தளவுக்கு அதிகமாக உணர்கிறீர்களோ - நீங்கள் அதிக விழிப்பாக இருக்க வேண்டும் என்பதை எந்த அளவுக்கு அதிகமாக உணர்கிறீர்களோ, அந்த அளவுக்கு அதிகமாய் நீங்கள் தனிமனிதராக ஆகிறீர்கள்.

புத்தர் தன் அமைதியான அனுபவத்தை, தன் அமைதியான சம்போதியை, தன் அமைதியான ஞானநிலைபேற்றை மகா காசியபருடன் பகிர்ந்துகொண்டது. ஏனென்றால் மகாகாசியபரும் ஒரு சிகரமாக, உன்னதமாக ஆகி இருந்தார். எனவே இரண்டு உயரங்களும் இப்போது சந்திக்க முடிகிறது. மேலும் இது எப்போதும் இப்படித்தான் இருக்கும். எனவே உயர்ந்த சிகரங்களை நீங்கள் எட்டிப் பிடிக்க விரும்பினால் குழு ரீதியாகச் சிந்திக்காதீர்கள்; உங்கள் சொந்த சுயத்தின் அளவில் சிந்தியுங் கள். தொடக்கத்தில் குழு உதவியாக இருக்க முடியும். ஆனால் நீங்கள் அதிகமாய் வளரவளர குழுவின் பயன் குறைந்துகொண்டே போகும்.

இதற்குமேல் குழுவினால் எந்த உதவியும் செய்ய முடியாது - நீங்கள் மட்டுமே தன்னந்தனியாக விடப்படுகிற - ஒரு கட்டம் வருகிறது. அப்படி நீங்கள் முற்றிலும் தனியாக இருக்கிறபோது உங்கள் ஏகாந்தத்தில் நீங்கள் வளரத் தொடங்குகிறீர்கள். முதல்முறையாக நீங்கள் உருக்கொள்கிறீர்கள் நீங்கள் ஒரு ஆன்மாவாக, சுயமாக ஆகிறீர்கள்.

மூன்றாவது கேள்வி:

**பயிற்சி என்பதும் உடல், மன அளவிலான ஒருவிதத் தளைதான். தளைப்படுத்தலின் மூலமே சமுதாயம் மனிதரை தன் அடிமையாக ஆக்குகிறது. அப்படியானால் பதஞ் சலியின் பயிற்சிமட்டும் எப்படி விடுதலைக்கான சாதனமாக ஆக முடியும்?**

உங்களை ஒரு அடிமையாகச் செய்வதற்காக, ஒரு கீழ்ப்படிதலுள்ள உறுப்பினராக ஆக்குவதற்காக சமுதாயம் உங்களைக் கட்டுப்படுத்துகிறது. எனவே இந்தக் கேள்வி சரியானதாகவே தோன்றுகிறது. தொடர்ச்சியாக மனத்தை மறுகட்டுமானம் செய்யும் செயல் எவ்வாறு உங்களை விடுதலை பெற்றவராக ஆக்க முடியும்? இருவிதமான தளைப்படுத்தல்களையும் போட்டு நீங்கள் குழப்பிக்கொள்வதால் மட்டுமே இந்தக் கேள்வி சரியானதுபோல் தோன்றுகிறது.

என்னிடம் நீங்கள் வந்திருக்கிறீர்கள். ஒரு பாதையின் வழியாக நீங்கள் பயணம் செய்து வந்திருக்கிறீர்கள். நீங்கள் திரும்பிச் செல்லும்போது அதே பாதை வழியாகவே மறுபடியும் நீங்கள் பயணம் செய்வீர்கள். மனம் கேட்கும், ''உன்னை இங்கே கொண்டுவந்த அதே பாதையே எப்படி உன்னை இங்கிருந்து திருப்பிக்கொண்டுபோக

முடியும்?'' என்று. பாதை அதேதான். ஆனால் உங்கள் திசையோ வேறு - நேர் எதிரானது. என்னிடம் நீங்கள் வந்தபோது நீங்கள் என்னை நோக்கி இருந்தீர்கள். திரும்பிப் போகும்போது எதிர்த்திசையை நோக்கி இருப்பீர்கள். பாதையோ அதேதான்.

உங்களை ஒரு கீழ்ப்படிதலுள்ள உறுப்பினராக, ஒரு அடிமையாக செய்வதற்காக சமுதாயம் உங்களை தளைப்படுத்துகிறது, கட்டிப் போடுகிறது. அது ஒரு பாதை. உங்களை விடுவித்துக் கொள்ளவும் அதே பாதையில்தான் பயணம் செய்ய வேண்டி உள்ளது. திசைமட்டுமே நேர் எதிராக இருக்கும். உங்களை ''தளை நீக்கம்'' செய்யவும் அதே முறையைத்தான் பயன்படுத்த வேண்டி இருக்கிறது.

ஒரு உவமைக்கதை எனக்கு நினைவு வருகிறது. ஒருமுறை புத்தர் தன் பிக்குகளிடம் வந்தார். அவர்களிடம் ஒரு பேருரை ஆற்றுவதற்காக அவர் வந்துகொண்டிருந்தார். தன் மரத்தடியில் அவர் அமர்ந்தார். அவர் கையில் ஒரு எனக்குட்டை இருந்தது. அவர் அதைப் பார்த்தார். மொத்தக் கூட்டமும் அவர் செய்யப்போவதைக் கவனித்தது. பின் அவர் அந்தக் கைக்குட்டையில் ஐந்து முடிச்சுகள் போட்டார். பின் கேட்டார், ''இப்போது இந்த துணியிலுள்ள முடிச்சுகளை அவிழ்க்க நான் செய்ய வேண்டியது என்ன? இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?'' எனவே இப்போது அவர் இரண்டு கேள்விகள் கேட்டார்: ஒன்று.''இப்போதுள்ள கைக்குட்டை முடிச்சுபோடாத போதிருந்த கைக்குட்டையிலிருந்து வேறுபட்டதா அல்லது இரண்டும் ஒன்றுதானா?''

ஒரு பிக்கு, ஒரு துறவி, சொல்கிறார், ''ஒரு விதத்தில் ஒன்றுதான். ஏனெனில் துணியின் தன்மை மாறுபடவில்லை. முடிச்சுகளோடும் கூட அது அதே துணியாகத்தான் உள்ளது. அதன் உள் இயல்பு மாறாமலே இருக்கிறது. ஆனால் இன்னொரு விதத்தில் அது மாறியுள்ளது. ஏனெனில் புதிதாக ஒன்று இப்போது அதன்மீது தோன்றியுள்ளது. முன்பு முடிச்சுகள் இல்லை. இப்போது இருக்கின்றன. எனவே மேலோட்டமாகப் பார்த்தால் அது மாறி உள்ளது. ஆழ்ந்து பார்த்தால் அது அப்படியேதான் உள்ளது.''

புத்தர் கூறுகிறார். ''மனித மனத்தின் நிலைமையும் இதுதான். அடியாழத்தில் அது முடிச்சு இல்லாததாகவே உள்ளது. அதன் தன்மை மாறாமலே உள்ளது.'' நீங்கள் ஒரு புத்தராக ஆகும்போது ஒரு விழிப்படைந்த ஞானியாக ஆகும்போது நீங்கள் ஒரு மாறுபட்ட உணர்வை பெற்றிருக்க மாட்டீர்கள். தன்மை அதே விதமாகவே

இருக்கும். இப்போது நீங்கள் ஒரு முடிச்சுள்ள துணிபோல இருக்கிறீர்கள், உங்கள் உணர்வில் சில முடிச்சுகள் விழுந்துள்ளன என்பதுதான் ஒரே வேறுபாடு.

புத்தர் கேட்ட இரண்டாவது கேள்வி, ''துணியின் முடிச்சை அவிழ்க்க நான் என்ன செய்ய வேண்டும்?'' இன்னொரு பிக்கு கூறுகிறார். ''முடிச்சுப்போட நீங்கள் என்ன செய்தீர்கள்? அதாவது எப்படி முடிச்சுப் போட்டீர்கள் என்பதை நாங்கள் அறியாதவரை எங்களால் எதுவும் சொல்ல முடியாது. எனவே அதற்கு நேர் எதிரான நடைமுறையைத்தான் கையாள வேண்டி இருக்கும். நீங்கள் முடிச்சுப்போட்ட முறையை முதலில் அறிந்தாக வேண்டும். ஏனெனில் மறுபடியும் அதே முறையை தலைகீழாக கையாண்டுதான் முடிச்சை அவிழ்க்க முடியும்.'' இதற்கு புத்தர் கூறுகிறார், ''இதுதான் இரண்டாவது செய்தி. நீங்கள் இந்த அடிமைத் தளைக்குள் எப்படி வந்து சேர்ந்தீர்கள் என்பதைப் புரிந்துகொண்டாக வேண்டி இருக்கிறது. உங்கள் தளையில் எப்படி கட்டுண்டீர்கள் - இதைப் புரிந்ததாக வேண்டி உள்ளது. ஏனெனில் அதே நிகழ்முறையை எதிர்வரிசைக் கிரமத்தில் செய்தலே உங்களை தளைநீக்கும்.''

பற்றுவைத்தல் என்பதே தளைப்படுத்தும் காரணி என்றால் பற்றறுத்தல் என்பதே தளைநீக்கும் காரணியாக ஆகும். எதிர்பார்ப்பானது உங்களை துன்பத்துக்கு இட்டுச் செல்கிறது என்றால் எதிர்பார்க்காமல் இருப்பது என்பதே உங்களுடைய துன்ப நீக்கத்துக்கு வழியாகும். கோபம் உங்களுக்குள் ஒரு நரகத்தை உருவாக்குகிறது என்றால், பின் கருணை உங்களுக்குள் ஒரு சொர்க்கத்தைப் படைக்கும். எனவே துன்பத்தின் நிகழ்முறை எதுவாயினும் அதற்கு எதிரான நிகழ்முறையே இன்பத்தின் நிகழ்முறையாகும். மனித உணர்வு இப்போதிருக்கிற முடிச்சேறிய நிலவரத்தை முற்றிலுமாகப் புரிந்துகொள்வதுவே தளைநீக்கம் என்பதன் பொருள். யோகத்தின் இந்த நிகழ்முறை முழு வதும், சிக்கலான முடிச்சுகளைப் புரிந்துகொண்டு பின் அவற்றை அவிழ்ப் பதைத் தவிர வேறில்லை; அவற்றை தளைநீக்கம் செய்வதைத் தவிர வேறில்லை. மறுபடியும் தளைக்குட்படுத்துவதல்ல என்பதை நினைவில் வையுங்கள்; தளை நீக்குதலே அது. எதிர்மறையான செயலே அது. அது மறுபடியும் தளைப்படுத்துதல் என்றால் மறுபடியும் நீங்கள் ஒரு அடிமையாக ஆவீர்கள் - ஒரு புதுவிதமான சிறைக்குள் இருக்கும் ஒரு புதிய விதமான அடிமையாகவே ஆவீர்கள். எனவே இந்த வேறுபாட்டை

நினைவில் கொள்ள வேண்டும்: இது தளைநீக்கல்: மறுபடியும் தளைப்படுத்தல் அல்ல.

இதன் காரணமாகப் பல பிரச்சனைகள் எழுந்திருக்கின்றன. நீங்கள் எது செய்தாலும் அது மறுபடியும் ஒரு தளையாக ஆகிவிடும் என்று கிருஷ்ணமூர்த்தி சொல்லிக்கொண்டே போகிறார். எனவே எதையும் செய்யாதீர்கள் என்கிறார். எதையாவது நீங்கள் செய்தால் அது மறுபடியும் ஒரு தளையாக ஆகிவிடும். நீங்கள் ஒரு மேம்பட்ட அடிமையாக ஆகலாம். ஆனாலும் நீங்கள் ஒரு அடிமையாகவே தங்கி இருப்பீர்கள். இப்படி அவர் சொல்வதைக் கேட்டு பலரும் எல்லாவித முயற்சிகளையும் நிறுத்திவிட்டார்கள். ஆனால் அது அவர்களை விடுதலை பெற்றவர்கள் ஆக்காது. அவர்கள் விடுபடவில்லை. தளை அப்படியே இருக்கிறது. அவர்கள் மறுதளைப்படுத்தப்படவில்லை. கிருஷ்ணமூர்த்தி சொல்வதை கேட்டு அவர்கள் நிறுத்திவிட்டார்கள். அவர்கள் மறுதளைப்படவில்லை. ஆனால் அவர்கள் தளைநீக்கம் செய்துகொள்ளவில்லை. அடிமை களாகவே அவர்கள் நீடிக்கிறார்கள்.

எனவே மீண்டும் தளைப்படுவதை நான் ஆதரிக்க்வில்லை. அப்படியே பதஞ்சலியும் மறுதளைப்படுவதை ஆதரிப்பதில்லை. தளைநீக்கத்தையே நான் கூறுகிறேன். பதஞ்சலியும் அதையே ஆதரிக்கிறார். மனத்தைப் புரிந்துகொள்ள மட்டும் செய்யுங்கள். அதன் நோய் எதுவாயினும் அந்த நோயைப் புரிந்து கொள்ளுங்கள். பின் எதிர் வரிசைக்கிரமத்தில் இயங்குங்கள்.

என்ன வேறுபாடு? ஒரு நேரடியான எடுத்துக்காட்டைப் பார்ப்போம். உங்களுக்குக் கோபம் வருகிறது. கோபம் ஒரு தளை. கோபத்தை நீங்கள் கற்றுக்கொண்டு விட்டீர்கள். அதுவும் ஒரு கல்விதான் என்றே உளவியலார் கூறகிறார்கள். அது ஒரு திட்டமிட்ட நிகழ்ச்சி. உங்கள் சமுதாயம் அதை உங்களுக்குப் போதிக்கிறது. ஒருபோதும் கோபமே கொள்ளாத சமுதாயங்கள் இப்பவும் இருக்கின்றன. அதன் உறுப்பினர்கள் கோபமே கொள்வதில்லை. எந்தவிதமான சண்டையை யும் போரையும் அறவே அறிந்திராத சமுகங்கள், சிறு இனக்குழு சமுகங்கள், இன்றைக்கும் உலகில் உள்ளன.

பிலிப்பைன்சில் ஒரு சிறிய, தொன்மையான இனக்குழு இருக்கிறது. மூவாயிரம் ஆண்டுகளாக அது எந்தப் போரையும் அறிந்ததில்லை. ஒரே

ஒரு கொலையைக்கூட, ஒரே ஒரு தற்கொலையைக்கூட கண்டதில்லை. அதற்கு என்ன நேர்ந்தது? அவர்கள் சமாதானத்தை மிகவும் நேசிக்கும் மக்களாக இருக்கிறார்கள். சாத்தியமான அதிகபட்ச மகிழ்ச்சியுள்ள மக்களாக இருக்கிறார்கள். வெகு தொடக்கத்தில் இருந்தே அவர்களின் சமூகம் ஒருபோதும் அவர்களின் கோபத்தைத் தடைசெய்ததில்லை. அந்த குலத்தில் நீங்கள் யாரையாவது கொன்றுவிட்டதாகக் கனவு கண்டால்கூட அவரிடம்போய் மன்னிப்புக் கேட்டாக வேண்டும் - அது வெறும் கனவுதான் என்றாலும்கூட. கனவில் ஒருவரிடம் நீங்கள் கோபம்கொண்டு சண்டைபிடித்தால் நீங்கள் தவறு செய்துவிட்டதாக மறுநாள் ஊர் முழுவதற்கும் நீங்கள் தெரிவித்தாக வேண்டும். அப்போது கிராமம் ஒன்றுகூடி ஊரின் ஞானவான்கள் உங்கள் கனவை ஆராய்ந்து செய்ய வேண்டியதென்ன என்று உங்களுக்குத் தெரிவிப்பார்கள். சிறு குழந்தைகள் கூட தெரிவிக்கும்!

அவர்களின் கனவு ஆராய்ச்சியை நான் படித்துப் பார்த்தேன். மிகவும் அறிவுக்கூர்மை வாய்ந்த மக்களில் அவர்கள் ஒருவர் என்பதாக எனக்குத் தோன்றுகிறது. ஒரு சிறு குழந்தை கனவு காண்கிறது. கனவில் அவன் தன் பக்கத்து வீட்டுப் பையன் மிகவும் சோகமாக இருப்பதாக காண்கிறான். தன் கனவை அவன் தன் அப்பாவிடம் காலையில் ''பக்கத்து வீட்டுப்பையன் மிகவும் சோகமாக இருப்பதாக கனவு கண்டேன்.'' என்று கூறுகிறான்.

அப்பா அதைக் குறித்துச் சிந்தித்துப் பார்க்கிறார். கண்களை மூடி தியானிக்கிறார். பிறகு கூறுகிறார், ''அவன் வருத்தமாக இருப்பதாக நீ கனவு கண்டாய் என்றால், ஏதோ ஒரு விதத்தில் அவனது வருத்தத்துக்கும் உனக்கும் தொடர்பு இருக்கிறது என்று அர்த்தம். அவன் வருத்தமாக இருப்பதாக வேறு யாரும் கனவு காணவில்லையே. எனவே உனக்குத் தெரிந்தோ தெரியாமலோ, அவனுக்கு வருத்தம் உண்டாகுமாறு எதையோ நீ செய்திருக்கிறாய். அல்லது இதுவரை அப்படி எதுவும் நீ செய்திருக்கவில்லை என்றால் இனிமேல் அதை நீ செய்யப் போகிறாய். எனவே இந்தக் கனவு வருங்காலத்தில் நடக்கப்போவதைப் பற்றி முன்னறிவிக்கிறது. எனவே நீ நிறைய பலகாரங்களையும் பரிசுகளையும் எடுத்துக்கொண்டு போ. அந்தப் பையனிடம் அவற்றைக் கொடுத்து அவனிடம் மன்னிப்புக் கேள். ஏற்கனவே செய்த தவறுக்காகவோ அல்லது இனி நீ செய்யப்போகும் தவறுக்காகவோ மன்னிப்புக்கேள்.'' என்றார்.

உடனே அந்தப் பையன் போகிறான். பழங்களையும், பலகாரங்களையும், பரிசுகளையும் கொடுக்கிறான். அவனிடம் மன்னிப்புக் கேட்கிறான். ஏனெனில் தன் கனவில் அந்தப் பையன் வருத்தமாய் இருக்க எப்படியோ அவன் பொறுப்பாளியாகிறான். வெகு தொடக்கத்தில் இருந்தே குழந்தைகள் இந்த முறையில் வளர்க்கப்படு கின்றனர். இந்த இனக்குழு மோதலோ, சண்டையோ,கொலையோ, தற்கொலையோ இல்லாமலே இருந்து வருவதில் ஆச்சரியம் என்ன! அவர்களால் அவற்றை நினைத்துக்கூட பார்க்கமுடியாது. வித்தியாசமான ஒரு மனம் அங்கு செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

வெறுப்போ கோபமோ இயற்கையானவை அல்ல என்று கூறுகிறார்கள் உளவியலாளர்கள். அன்பே இயற்கையானது. வெறுப்பும் கோபமும் உருவாக்கப்படுபவைதான். அன்புக்கு அவை தடைக்கற்களாய் இருக்கின்றன. அவற்றுக்காக உங்களை சமுதாயமே தளைப்படுத்துகிறது. தளைநீக்கம் என்றால், சமுதாயம் தான் செய்யக்கூடியதை செய்துவிட்டது. அதையே தொடர்ந்து கண்டனம் செய்துகொண்டு போவதால் பயனில்லை. இருக்கிற நிலைதானே அது. அதற்குச் சமுதாயமே பொறுப்பு என்று சும்மா சொல்வதாலேயே உங்களுக்கு உதவிகிடைத்து விடுவதில்லை. அது முடிந்துபோன கதை. இப்போது - இந்த நிமிசம் நீங்கள் என்ன செய்ய முடியும்? நீங்கள் தளை நீக்க முடியும். எனவே உங்கள் பிரச்சனைகள் எதுவாயினும் அதை ஆழமாகப் பாருங்கள். அதை ஊடுருவுங்கள். பகுத்தாயுங்கள். அதனால் நீங்கள் எப்படி தளைப் பட்டிருக்கிறீர்கள் என்பதைப் பாருங்கள்.

எடுத்துக்காட்டாக, ஒருபோதும் போட்டி உணர்வே கொள்ளாத சமூகங்கள் இருக்கின்றன. இந்தியாவில்கூட படிங்குடி மக்களிடையே போட்டி உணர்வு இல்லை. நம் அளவுகோலின்படி அவர்கள் அதிகம் முன்னேறமுடியாமல் இருக்கலாம் என்பது உண்மைதான். ஏனெனில் நமது முன்னேற்றமே போட்டியின் மூலம் மட்டுமே பெறப்பட்டதுதானே. அவர்களோ போட்டி உணர்வுடன் இல்லை. அவர்கள் போட்டித் தன்மையுடன் இல்லை என்பதால் அவர்களுக்குக் கோபம் வருவதில்லை. அவர்கள் பொறாமை கொள்வதில்லை. அவர்கள் வெறுப்பு உள்ளவர்களாக இல்லை. அவர்கள் வன்மம் நிறைந்தவர்களாய் இல்லை. அவர்கள் அதிகமாக எதிர்பார்ப்பதில்லை. வாழ்க்கை அவர்களுக்கு என்ன வழங்கினாலும் அதில் அவர்கள் மகிழ்ச்சியாகவும் அதற்கு நன்றியுடனும் இருக்கிறார்கள்.

உங்களுக்கோ வாழ்க்கை எவ்வளவு தந்தாலும்...ஒருபோதும் நீங்கள் நன்றியுணர்வு கொள்வதில்லை. எப்போதுமே நீங்கள் நிராசையுடனேயே இருப்பீர்கள். ஏனெனில் நீங்கள் எப்போதும் இன்னும் அதிகமாகவே கேட்க முடிகிறது. உங்கள் எதிர்பார்ப்புகளுக்கும் ஆசைகளுக்கும் முடிவே இல்லை. எனவே நீங்கள் அவலமாக உணர்ந்தால் அதற்குள் பாருங்கள், அதைப் பகுத்தாயுங்கள். அவலத்தை உருவாக்கும், தளையுண்டாக்கும் காரணிகள் என்னென்ன? இதில் புரிந்துகொள்வதற்கு கடினமானது எதுவுமில்லை. அவலத்தை நீங்கள் உருவாக்க முடிகிறது என்றால், அவலத்தை உருவாக்கும் அளவுக்கு நீங்கள் வல்லவர்கள் என்றால், அதை நீங்கள் புரிந்துகொள்வதிலும் எந்த சிரமமும் உங்களுக்கு இராது. அதை உங்களால் உருவாக்க முடிகிறது என்றால் அதை உங்களால் புரிந்துகொள்ளவும் முடியும்.

பதஞ்சலியின் மொத்த நிலைபாடும் இதுதான்: மனிதரின் துன்பத்துக்குள் உற்றுப்பார்க்கிறபோது அதற்கெல்லாம் மனிதரே பொறுப்பு என்பது விளங்குகிறது. அதை உருவாக்க அவர் ஏதோ செய்துகொண்டிருக்கிறார். அச் செய்கை அவருக்குப் பழக்கமாக ஆகியிருக்கிறது. எனவேதான் அவர் அதை செய்துகொண்டே போகிறார். அது திரும்பத்திரும்ப செய்வதாக, யந்திரத்தனமாக, தானியங்கித்தனமாக ஆகி உள்ளது. நீங்கள் விழிப்பானவராக ஆகிவிட்டால் நீங்கள் அதை விட்டுவிட்டு வெளியேறிவிட முடியும். '' இதற்கு நான் ஒத்துழைக்க மாட்டேன்'' என்று கூறிவிட உங்களால் முடியும். இப்போது உடல் - மனயந்திரம் வேலைசெய்யத் தொடங்கும்.

ஒருவர் உங்களை அவமதிக்கிறார், திட்டிவிட்டார். நீங்கள் அப்படியே சலனமற்று மௌனமாக நில்லுங்கள். உடனே உடல் - மனயந்திரம் இயங்கத் தொடங்கும்: கடந்த கால பாணியை அது கொண்டுவரும். கோபம் வரும். புகை எழும். பைத்தியமாகும் விளிம்பில் நிற்பதாக நீங்கள் உணர்வீர்கள். ஆனாலும் நீங்கள் நிலையாக நிற்கிறீர்கள். ஒத்துழைக்காதீர்கள். உடல் - மன யந்திரம் என்ன செய்கிறது என்பதை வெறுமனே பாருங்கள். உங்களுக்குள் - சக்கரங்களுக்குள் சக்கரங் கள் - இருப்பதை உணர்வீர்கள். ஆனால் அவை வீரியமற்று உள்ளன - ஏனெனில் நீங்கள் ஒத்துழைக்கவில்லை.

அல்லது அத்தகைய நிலைத்த நிலையில் இருப்பது உங்களுக்கு இயலவே இயலாது என நீங்கள் உணர்ந்தால் பின் ஒரு அறைக்குள் சென்று

கதவைத் தாளிடுங்கள். ஒரு தலையணையை எடுத்து முன்னால் வைத்து அதை அடியுங்கள். தலையணையிடம் கோபம் கொள்ளுங்கள். அதை அடிக்கும்போது அதன்மேல் கோபம் கொள்ளுங்கள். தலையணைமேல் உங்கள் வெறியைக் காட்டுங்கள். அதே சமயம் நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள், என்ன நிகழ்ந்து கொண்டுள்ளது, எப்படி பழைய பாணி தன்னை மறுபடியும் வெளிப்படுத்துகிறது என்பதை கவனித்தவாறு மட்டும் இருங்கள்.

நிலைத்த நிலையில் உங்களால் நிற்க முடியும் என்றால் அதுதான் சிறந்தது. அது கடினம் என நீங்கள் உணர்ந்தால், நீங்கள் இழுபட்டால், பின் ஒரு அறைக்குள் சென்று தலையணைமேல் கோபம் கொள்ளுங்கள். உங்கள் பைத்தியக்காரத்தனம் உங்களுக்கே முழுமையாகப் புலப்படும். தெள்ளத்தெளிவாக தெரியக்கூடியதாக ஊடுருவிப் பார்க்கத்தக்கதாக அது ஆகும். மேலும் தலையணை எதிர்வினை புரியப் போவதும் இல்லை. நீங்கள் மிக எளிதாகக் கவனிக்க முடியும். இதில் ஆபத்தும் இல்லை. பாதுகாப்புபற்றிய பிச்சனை இல்லை. நீங்கள் கவனிக்க முடியும்: மெதுவாகக் கோபம் எழுகிறது, பின் தணிகிறது.

இரண்டையும் கவனியுங்கள். அந்த மாறுதலின் லயத்தைக் கவனியுங்கள். உங்கள் கோபம் தீர்ந்ததும் அதற்குமேலும் தலையணையை அடிக்க வேண்டும் என உங்களுக்குத் தோன்றாது. அல்லது நீங்கள் சிரிக்கத் தொடங்கி இருப்பீர்கள் அல்லது கேலிக்குரிய நிலையில் இருப்பதாக உணர்வீர்கள். கண்களை மூடுங்கள். தரையில் அமருங்கள். நடந்தவற்றைக் குறித்து தியானியுங்கள். உங்களை அவமதித்த மனிதர்மேல் இன்னும் நீங்கள் கோபமாக உணர்கிறீர்களா? அல்லது அது அந்தத் தலையணையோடு போய்விட்டதா? உங்கள்மேல் ஒருவித அமைதி கவிழ்வதை உணர்வீர்கள். அத்துடன், சம்பந்தப்பட்ட மனிதர்மேல் இப்போது நீங்கள் கோபமாக உணரமாட்டீர்கள். மாறாக அவர்மீது உங்களுக்கு கருணைகூட ஏற்படலாம்.

ஒரு அமெரிக்கப் பையன் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு இங்கு இருந்தான். ஒரே ஒரு பிரச்சனையால், பீடிப்பால்தான் அவன் அமெரிக்காவில் இருந்து தப்பிஓடி வந்துவிட்டான். அது: தன் அப்பாவைக் கொலைசெய்ய வேண்டும் என்னும் எண்ணம் அவனுக்கு ஓயாமல் வந்து கொண்டிருந்தது. அந்த அப்பன் ஒரு அபாயகரமான

ஆசாமியாக இருந்திருக்க வேண்டும். இந்தப் பையனை மிகவும் கொடுமைப்படுத்தி - அடக்கி ஒடுக்கி இருக்க வேண்டும். தன் கனவுகளில் அவரைக் கொலைசெய்வது போல் எண்ணினான். பகல் கனவுகளிலும் தன் அப்பனை கொன்றுவிடுவது பற்றியே நினைத்துக் கொண்டிருந்தான். தன் தகப்பன் இல்லாத இடத்தில் இருப்போம் என்னும் ஒரே காரணத்துக்காகவே அவன் வீட்டை விட்டு ஓடிவந்துவிட்டான். இல்லாவிட்டால் என்று வேண்டுமானாலும் எது வேண்டுமானாலும் நிகழ முடியும். வெறி அங்கு இருக்கிறது. எந்தக் கணத்திலும் அது வெடித்துவிட முடியும்.

அவன் இங்கு என்னுடன் இருந்தான். நான் அவனிடம் ''அதை அடக்கி வைக்காதே'' என்றேன். அவனிடம் ஒருதலையணையைக் கொடுத்து ''இதுதான் உன் அப்பா. இப்போது இதை நீ விரும்பியவாறெல்லாம் செய்துகொள்'' என்றேன். முதலில் அவன் சிரிக்கத் தொடங்கினான். பைத்தியம் போல் சிரித்தான். ''இது கேலிக்கூத்தாகத் தோன்றுகிறது'' என்றான். நான் அவனிடம் சொன்னேன், ''அது அப்படிப்பட்டதாகவே இருக்கட்டும். உன் மனதில் இருப்பது வெளியில் வரட்டும்.'' பதினைந்து நாட்கள் தொடர்ச்சியாக அவன் அந்த தலையணையை அடித்துத் துவைத்துக் கொண்டிருந்தான். பதினாறாவது நாள் அவன் ஒரு கத்தியுடன் வந்தான். அது நான் அவனிடம் சொல்லாத ஒன்று. எனவே அவனிடம் நான் கேட்டேன், ''எதுக்கு இந்தக் கத்தி?''

அவன் சொன்னான், ''இப்போது என்னைத் தடுக்காதீர்கள். கொல்லவிடுங்கள். இப்போது அந்தத் தலையணை என்னைப் பொறுத்தவரை வெறும் தலையணை அல்ல. அது உண்மையாகவே என் அப்பனாக ஆகிவிட்டது.'' அன்றைக்கு அவன் தன் அப்பாவைக் கொன்றான். பின் அழத் தொடங்கினான். அவன் கண்களில் கண்ணீர் வடிந்தது. அவன் ஆத்திரம் தணிந்தது. இளைப்பாறுதலாக ஆனான். அவன் என்னிடம் சொன்னான், ''இப்போது என் அப்பாமேல் எனக்கு மிகுந்த அன்பு, மிகுந்த பரிவு ஏற்படுவதாக உணர்கிறேன். எனவே இப்போது நான் திரும்பிச் செல்ல அனுமதி கொடுங்கள்'' என்றான்.

இப்போது அவன் திரும்பவும் வந்திருக்கிறான். அந்த உறவு முற்றிலும் மாறி இருக்கிறது. என்ன நிகழ்ந்துள்ளது? ஒரு யந்திரத்தனமான பீடிப்பு வெளியேறிவிட்டது.

ஏதாவது பழைய பாணி உங்கள் மனதை பிடித்து அல்லல்படுத்தும்போது உங்களால் நிலையாக நிற்கமுடிந்தால் நல்லதே. உங்களால் முடியாவிட்டால் பின் ஒரு நாடகபாணியில் அதை நிகழ அனுமதியுங்கள். ஆனால் தனியாகச் செய்யுங்கள்.. வேறு யாரையும் சேர்த்துக்கொள்ள வேண்டாம். ஏனெனில் உங்கள் பாணியை அரங்கேற்றும் போதெல்லாம் அதை இன்னொருவருடன் சேர்ந்து செய்தால் அது புதிய எதிர்வினைகளை உருவாக்கி அது ஒரு நச்சுச் சுழலாகிவிடும்.

உங்கள் மனப்பாங்கைக் குறித்து விழிப்பாக இருப்பதுவே மிகவும் முக்கியமான அம்சம். நீங்கள் மவுனமாக நின்றுகொண்டிருந்தாலும் சரி உங்கள் வெறுப்பையும் கோபத்தையும் அடித்து வெளியேற்றிக் கொண்டிருந்தாலும் சரி - விழிப்பாயிருப்பதே அடிப்படையான விசயம். எப்படி அதன் முறுக்கு அவிழ்கிறது என்பதைக் கவனிப்பதே முக்கியம். அந்த உத்தியை - பாங்கை உங்களால் பார்க்க முடிந்தால் அதை நீங்கள் கட்டவிழ்த்துவிட முடியும்.

யோகத்திலுள்ள படிகள் எல்லாமே கட்டவிழ்ப்பதற்கானவை தான். நீங்கள் செய்து வந்திருக்கிற ஒன்றை விடுவிப்பதற்குத்தான். அவை எதிர்மறையானவை. புதிதாக எதையும் உருவாக்க வேண்டுவதில்லை. தவறானதை அழிப்பது மட்டுமே வேண்டியது. சரியானதோ ஏற்கனவே அங்கே இருக்கிறது. நேர்மறையாக எதுவும் செய்ய வேண்டியதில்லை. எதிர்மறையாகத்தான் சிலவற்றைச் செய்யவேண்டி உள்ளது. நேர்மறையானது அங்கே மறைந்திருக்கிறது. ஒரு ஓடை ஒரு பாறையின் அடியில் மறைந்திருப்பது போலவே அது மறைந்திருக்கிறது. ஓடையை நீங்கள் உருவாக்கத் தேவை இல்லை. அது ஏற்கனவே அங்கே இருக்கிறது. முட்டிக்கொண்டு இருக்கிறது. விடுபட விரும்புகிறது. விடுபட்டுப் பாய்ந்தோட விரும்புகிறது. அங்கு ஒரு பாறை இருக்கிறது. பாறையை இல்லாமல் செய்தாக வேண்டும். பாறை அகற்றப்பட்டதுமே ஓடை பாயத்தொடங்குகிறது.

ஆனந்தம், பரவசம், மகிழ்ச்சி, அல்லது வேறு எந்தப் பெயரில் அதை நீங்கள் அழைத்தாலும், அது ஏற்கனவே உங்களுக்குள் பாய்ந்து கொண்டுள்ளது. சில பாறைகள் மட்டுமே அத்துடன் உள்ளன. அந்தப் பாறைகள் சமுதாயம் ஏற்படுத்திய தளைகளாக தடைகளாக உள்ளன.

அவற்றை அகற்றுங்கள். பற்றுக்கொள்ளுதலே தடை என நீங்கள் உணர்ந்தால் பற்றின்மைக்கான முயற்சிகளைச் செய்யுங்கள். கோபமே அந்தத் தடை என நீங்கள் உணர்ந்தால் பின் கோபமற்ற நிலைக்கான முயற்சிகளை செய்யுங்கள். பேராசையே தடை என நீங்கள் உணர்ந்தால் பின் பேராசை இன்மைக்கான முயற்சிகளைச் செய்யுங்கள். நேர் எதிரானதைச் செய்யுங்கள். பேராஸ்சயை அடக்காதீர்கள். நேர் எதிரானதையே செய்யுங்கள். பேராசை அல்லாத ஒன்றையே செய்யுங்கள். கோபத்தை அடக்கிக்கொண்டிருக்காதீர்கள். கோபம் அல்லாத ஒன்றைச் செய்யுங்கள்.

ஜப்பானில் ஒருவருக்குக் கோபம் ஏற்பட்டால் அவர்கள் ஒரு மரபு ரீதியான வழிமுறையை வைத்திருக்கிறார்கள். யாருக்காவது கோபம் ஏற்பட்டால் உடனடியாக அவர் கோபமல்லாத ஏதாவது ஒரு செயலை செய்தாக வேண்டும். அப்போது, இதுவரை கோபத்துக்குள் சென்று கொண்டிருந்த அதே ஆற்றலானது இப்போது கோபமின்மைக்குச் செல்கிறது. ஆற்றல் நடுநிலையானது. ஒருவர்மேல் உங்களுக்குக் கோபம் வந்தால், அவரை நீங்கள் அறையவிரும்பினால், அவருக்கு ஒரு பூவைக்கொடுத்து, என்ன நிகழ்கிறது என்பதை பாருங்கள்.

அவர் முகத்தில் அறைய விரும்பினீர்கள். அப்படி ஏதாவது ஒன்றை செய்ய விரும்பினீர்கள் - இது கோபம். அவருக்கு ஒரு பூவைத் தந்து உங்களுக்குள் என்ன நடக்கிறது என்பஎதை மட்டும் கவனியுங்கள். கோபம் அல்லாத ஒன்றை நீங்கள் செய்கிறீர்கள். உங்கள் கையை இயக்கப் பயன்பட இருந்த அதே ஆற்றல்தான் இப்பவும் உங்கள் கையை இயக்குகிறது. அவரைத் தாக்கப் பயன்பட இருந்த அதே ஆற்றல்தான் இப்போது பூகொடுக்க பயன்படுகிறது. ஆனால் தன்மை மாறி இருக்கிறது. நீங்கள் குறிப்பிடத்தக்க ஒன்றைச் செய்துள்ளீர்கள். ஆற்றல் நடு நிலையானது. எதையாவது ஒன்றை நீங்கள் செய்யாவிடில் நீங்கள் அடக்கி வைக்கிறீர்கள். ஆகவே அடக்கி வைப்பதே நஞ்சு. ஏதாவது ஒன்றை செய்யுங்கள் - ஆனால் நேர் எதிரானதைச் செய்யுங்கள். இது ஒரு புதிய தளை அல்ல. பழைய தளையை நீக்கவே இது. பழசு மறைந்ததும், முடிச்சுகள் மறைந்ததும் அதன்பின் எதையும் செய்ய நீங்கள் கவலைப்படத் தேவையில்லை. பின் நீங்கள் தன்னியல்பாக ரியங்க முடியும்.

**கடைசி கேள்வி:**

**ஆன்மீகப் பயிற்சிக் காலம் இருபது முப்பது ஆண்டுகள் ஆகும், ஏன் பல பிறவிகள் கூட ஆகலாம், அப்போதும் அது குறுகிய காலம்தான் என்று நீங்கள் சொன்னீர்கள். ஆனால் மேற்கத்தியமனம் உடனடிப் பலனை, கைமேல் பலனை எதிர்பார்ப்பது. பொறுமையற்றது. ரொம்பவுமே காரியவாத மானது. உடனடி விளைவுகளையே அது விரும்புகிறது. விதவிதமான மதப் பயிற்சிகளும், மற்ற புற்றீசல் கொள்கை களைப் போலவே மேற்கில் வந்து போய்விடுகின்றன. இந்நிலையில் மேற்கு மனத்துக்கு எப்படி யோக மார்க்கத்தை நீங்கள் அறிமுகப்படுத்தப் போகிறீர்கள்?**

மேற்கு மனத்தைப் பற்றியோ கிழக்கு மனத்தைப் பற்றியோ எனக்கு அக்கறையில்லை. இவை ஒரு மனத்தின் இரண்டு அம்சங்கள் மட்டுமே. மனத்தின்மீதே என் கரிசனம். மேலும் இந்த கிழக்கு - மேற்கு பாகுபாடு அவ்வளவு பொருள்நிறைந்ததும் அல்ல. இப்போது அது மதிப்புக்குரியதாகவும் இல்லை. மேற்கில் கிழக்கு மனங்களும் கிழக்கில் மேற்கு மனங்களும் உள்ளன. இப்போது மொத்த விசயமும் ஒரு குழப்பமாகி உள்ளது. கிழக்கும் இப்போது அவசரத்தில் உள்ளது. பழைய கிழக்கு அடியோடு மறைந்துவிட்டது.

ஒரு தாவோ கதை ஒன்று எனக்கு நினைவு வருகிறது. மூன்று தாவோவினர் ஒரு குகைக்குள் தியானம் செய்து வந்தார்கள். ஓராண்டு கழிந்தது. அவர்கள் அமைதியாக, அமர்ந்து, தியானித்து வந்தார்கள். ஒருநாள் ஒரு குதிரைக்காரன் அந்தவழியாகப் போனான். அதை அவர்கள் பார்த்தார்கள். மூன்று முனிவர்களில் ஒருவர் சொன்னார், ''அவன் சவாரி செய்த குதிரையின் நிறம் வெள்ளை.'' மற்ற இருவரும் மவுனமாக இருந்தனர். ஓராண்டு சென்ற பின்னர் இரண்டாவது முனி ''குதிரை கருப்பாகத்தான் இருந்தது, வெள்ளையாக அல்ல.'' என்று சொன்னார் மேலும் ஓராண்டு கடந்ததும் மூன்றாமவர் ''வாக்கு வாதங்கள் நடைபெறுமானால் நான் இங்கிருந்து போகிறேன். இங்கே பூசல் ஏற்படுவதாயிருந்தால் நான் புறப்படுகிறேன். நான் போகி றேன்! என் அமைதியை நீங்கள் குலைத்துக்கொண்டிருக்கிறீர்கள்!'' என்றார்.

குதிரை வெள்ளையாய் இருந்தால் என்ன, கருப்பாய் இருந்தால் என்ன? அதுவும் மூன்று ஆண்டுகள் கழித்து! ஆனால் இதுதான் கிழக்கின் போக்காக இருந்தது. காலம் இருக்கவில்லை. கிழக்குக்கு காலம்பற்றிய உணர்வே இருக்கவில்லை. கிழக்கு நித்தியத்தில் வாழ்ந்தது. காலம் கடக்காததுபோல் அது வாழ்ந்தது. எல்லாமே நிலைத்து இருந்தது.

ஆனால் அந்தக் கிழக்கு இப்போது இல்லை. எல்லாவற்றையும் மேற்கு களங்கப்படுத்திவிட்டது. கிழக்கு மறைந்துவிட்டது. மேலைக் கல்வி மூலம் எல்லாமே இப்போது மேலைமயம் ஆகி இருக்கிறது. தீவு போன்ற கொஞ்சம் மக்கள் மட்டுமே கீழைத்தன்மையுடன் இருக்கிறார்கள். அவர்கள் மேற்கிலும் இருக்க முடியும், அவர்கள் கிழக்கிலும் இருக்க முடியும். எவ்வகையிலும் அவர்கள் கிழக்கோடு மட்டும் தொடர்புடையவர்களாக இல்லை. மாறாக உலகம் முழுவதுமே, பூமி முழுவதுமே, மேலைமயமாகி இருக்கிறது.

யோகம் கூறுகிறது, - அது கூறுவது உங்களுக்குள் மிகவும் ஆழமாக ஊடுருவட்டும், ஏனெனில் அது மிகுந்த அர்த்தமுள்ளது:- எந்த அளவுக்கு நீங்கள் பொறுமையற்றவர்களாக இருக்கிறீர்களோ அந்த அளவுக்கு உங்கள் அடிப்படை மாற்றத்துக்கு அதிக காலம் தேவைப்படும் என்கிறது யோகம். எவ்வளவு அதிகமாய் நீங்கள் அவசரப்படுவீர்களோ அந்த அளவுக்கு உங்கள் மாற்றம் தாமதமாகும். பதட்டம் ஏற்படுத்தும் பெருங்குழப்பத்தால் தாமதமே விளைவாகும்.

பதற்றம் குறைவாக இருந்தால் விளைவுகள் முன்னதாக அமையும். எல்லையற்ற பொறுமையுடன் நீங்கள் இருந்தால் அக்கணமே அடிப்படைமாற்றம் நிகழமுடியும். காலாகாலத்துக்கும் காத்திருக்க நீங்கள் தயராகயிருந்தால் அடுத்த கணம்வரைகூட நீங்கள் காத்திருக்க நேராமல் போகலாம். இக்கணமே அது நேர முடியும். ஏனெனில் இது கால அளவைப் பொறுத்த காரியம் அல்ல, உங்கள் மனத்தின் தன்மையைப் பொறுத்த விசயம்.

எல்லையற்ற பொறுமை. வெறுமனே விளைவுகளைத் தேடி ஓடாமல் இருப்பதே உங்களுக்கு அதிக ஆழத்தைக் கொடுக்கிறது. அவசரம் உங்களை மேலோட்டமானவராக ஆக்குகிறது. நீங்கள் இருக்கும் அவசரத்தில் உங்களால் ஆழமாகப் போக முடிவதில்லை. இந்த

கணத்தில் உங்கள் கவனம் இங்கே இல்லை. அடுத்த கணம் என்ன நடக்கப்போகிறது என்பதிலேயே உங்களுக்கு ஆர்வம். பலனிலேயே உங்களுக்கு அக்கறை. உங்களையே முந்திக்கொண்டு போகிறீர்கள் நீங்கள். உங்கள் போக்கு பைத்தியக்காரத்தனமானது. நீங்கள் நிறைய தூரத்துக்கு ஓடலாம். நிறையப் பயணம் செய்யலாம். ஆனாலும் எங்கும் சென்று சேரமாட்டீர்கள். ஏனெனில் நீங்கள் சென்று சேர வேண்டிய இலக்கு இங்கேயேதான் இருக்கிறது. அதனுள் நீங்கள் படிந்துவிட வேண்டும்; எங்கும் ஓட வேண்டியதில்லை. ஆயின் நீங்கள் முழுமையான பொறுமையுடன் இருந்தால் மட்டுமே அப்படி படிவது சாத்தியமாகும்.

உங்களுக்கு ஒரு ஸென் கதையைக் கூறுகிறேன். ஒரு ஸென் துறவி ஒரு காட்டின் வழியாகப் போய்க்கொண்டிருக்கிறார். ஒரு புலி அவரைப் பின்தொடர்ந்து வருவதை திடீரென அவர் உணர்கிறார். எனவே அவர் ஓடத் தொடங்குகிறார். ஆனால் அவரது ஓட்டமும் ஸென் வகை ஓட்டமாகவே இருக்கிறது. அவர் பதறவில்லை. அவர் தன்னிலை தவறவில்லை. அவரது ஓட்டமும் மென்மையாக, ஒரு சீரான வேகத்திலேயே இருக்கிறது. அதை அவர் ரசித்துச் செய்கிறார். மேலும், ''புலி அதைச் செய்வதில் மகிழ்ச்சி அடையும்போது நான் மட்டும் ஏன் மகிழ்ச்சி அடையக் கூடாது?'' என்றும் அவர் தன் மனதில் நினைத்தாராம்.

புலி அவரை துரத்திக்கொண்டிருக்கிறது. பிறகு அவர் ஒரு குத்துப்பாறையின் அருகில் வந்து சேர்கிறார். புலியிடமிருந்து தப்பித்துக்கொள்ள ஒரு மரத்தின் கிளையைப் பிடித்துத் தொங்குகிறார். பின் அவர் கீழே பார்க்கிறார். பள்ளத்தாக்கில் ஒரு சிங்கம் நின்றுகொண்டு அவர் விழுவார் என்று பார்த்துக் கொண்டிருக்கிறது. இதற்குள் புலி நெருங்கிவிட்டது. ஒரு மலை உச்சியில் இருந்த மரத்தின் ஒரு கிளையில் அவர் தொங்கிக்கொண்டிருக்கிறார். கீழே ஒரு சிங்கம் அவருக்காக காத்துக் கொண்டிருக்கிறது.

அவர் சிரிக்கிறார். பின்னும் பார்க்கிறார், இரண்டு சுண்டெலிகள் அந்த கிளையை கடித்துக் கொண்டிருக்கின்றன...ஒன்று கருப்பு, மற்றது வெள்ளை. அவர் உரக்கச் சிரிக்கிறார். பிறகு, ''இதுதான் வாழ்க்கை. இரண்டு எலிகளும் இரவும் பகலும், கருப்பு எலியும் வெள்ளை எலியும் வாழ்க்கையைத் தின்று கொண்டிருக்கின்றன. மேலும் நான் எங்கே

போனாலும் அங்கெல்லாம் சாவு எனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. இதுதான் வாழ்க்கை!'' என்கிறார். அக்கணமே அவர் ஒரு சத்தோரியை - அதாவது ஞானநிலைபேற்றின் முதல் சுவையை - அடைகிறார் எனப்படுகிறது. இதுதான் வாழ்க்கை! இதில் வருத்தப்பட, அலட்டிக்கொள்ள ஒன்றுமில்லை. இப்படித்தான் நிகழ்ச்சிகள் நடக்கின்றன. நீங்கள் போகும் இடமெல்லாம் சாவு காத்துக் கொண்டிருக்கிறது. அல்லது நீங்கள் எங்கும் போகாதிருந்தாலும் கூட இரவும் பகலும் உங்கள் வாழ்வை சாப்பிட்டுக்கொண்டிருக்கின்றன. எனவே அவர் சத்தம்போட்டுச் சிரிக்கிறார்.

பின் அவர் சுற்றிலும் பார்க்கிறார். ஏனென்றால் இப்போது அது உறுதியாகிவிட்டது. இனிக் கவலை இல்லை. மரணம் நிச்சயம் என்னும்போது எதற்குக் கவலைப்படுவது? நிச்சயமற்ற நிலையில்தான் கவலை இருக்கிறது. எல்லாமே நிச்சயமாக ஆகிறபோது கவலை இருப்பதில்லை. இப்போது அது விதியாக ஆகி உள்ளது. எனவே இந்த மிகச்சில கணங்களை மகிழ்ச்சியாகக் கழிப்பது எப்படி என்று பார்க்கிறார் அவர். கிளையின் பக்கத்தில் சில ஸ்டிராபெர்ரிப் பழங்கள் தொங்கு வதை அவர் அறிய வருகிறார். எனவே சில பழங்களைப்பறித்து சாப்பிடுகிறார். அவைதான் அவரது வாழ்க்கையிலேயே அவர் உண்ட கனிகளில் எல்லாம் மிகச் சுவையான கனிகள் ஆக இருக்கின்றன. அவற்றை அவர் ருசித்து ரசித்து உண்கிறார். அக்கணமே அவர் ஞானநிலைபேறு அடைந்தாராம்.

அவர் ஒரு புத்தராகிவிட்டார். ஏனெனில் சாவு அவ்வளவு பக்கத்தில் இருந்தபோதும்கூட அவர் பதட்டம் அடையவே இல்லை. அவரால் ஒரு காட்டுக்கனியை ருசிபார்க்க முடிகிறது! அது இனிப்பாகத் தெரிகிறது! அதன் சுவை அருமையாக இருக்கிறது! அதற்காக கடவுளுக்கு நன்றி கூறுகிறார். அந்தக் கணத்திலேயே அவர் உட்பட புலி, சிங்கம், கிளை எல்லாமே மறைந்து விட்டதாகச் சொல்லப்படுகிறது. பிபரபஞ்சத்தில் அவர் ஐக்கியமாகிவிட்டார். பிரபஞ்சமாகவே ஆகிவிட்டார்.

இதுதான் பொறுமை. பூரணமான பொறுமை! நீங்கள் எங்கிருந்தாலும் அந்தக் கணத்தை சுவைத்து அனுபவியுங்கள். எதிர்காலத்தைக் கேட்காதீர்கள். மனம் எதிர்காலத்திற்குப் பாயக்கூடாது. நிகழ்ந்து கொண்டிருக்கும் கணமே போதும். தற்பொழுதே போதும். நீங்கள் நிறைவாக இருக்கிறீர்கள். அப்போது எங்கும் போகத்தேவை

இல்லை. நீங்கள் எங்கிருந்தாலும் அந்த நிலையில் இருந்தபடியே பெருங்கடலுக்குள் நீங்கள் ஆழ்ந்து விடுவீர்கள். பிரபஞ்சத்துடன் ஒன்றாக நீங்கள் ஆகிவிடுவீர்கள்.

ஆனால் இங்கேயே இப்போதே இருப்பதில் மனத்துக்கு ஆர்வம் இருப்பதில்லை. எங்கேயோ எப்போதோ பெறப்போகும் சில விளைவுகளின்மீதே மனம் ஆர்வம் காட்டுகிறது. எனவே ஒருவகையில், அப்படிப்பட்ட மனத்துக்கு, நவீன மனத்துக்கு இக்கேள்வி பொருத்தமானதே. மேலை மனம் என்பதைவிட நவீன மனம் என்று அழைப்பது அதிகச் சரியானதாகும். நவீன மனமானது ஓயாமல் வருங்காலத்தால், விளைவால் பீடிக்கப்பட்டதாய் உள்ளது. நிகழ்கின்ற இடம் மற்றும் காலத்தில் அதற்கு விருப்பமில்லை.

இப்படிப்பட்ட மனத்துக்கு எப்படி யோகம் கற்றுத்தர முடியும்? இத்தகைய மனத்துக்கு யோகத்தை கற்பிக்க முடியும். ஏனென்றால் வருங்காலத்தை நோக்கிய இந்தப் போக்கு எங்கும் கொண்டுபோய்ச் சேர்ப்பதில்லை. வருங்காலத்தை மையப்படுத்தும் இந்த முனைப்பானது நவீன மனத்துக்கு ஓயாத துன்பத்தையே உண்டாக்கிக் கொண்டிருக்கிறது. நாம் ஒரு நரகத்தையே உருவாக்கி உள்ளோம். அதுவும் அதி பயங்கரமான நரகம். இனி மனிதர் இந்த பூமியில் இருந்து முற்றிலுமாக மறைந்து போக வேண்டும். அல்லது அவன் தன்னைத் தானே அடியோடு மாற்றிக் கொள்ள வேண்டும். மனித இனம் முழுமையாக இறந்துபோக வேண்டும் (ஏனெனில் இந்த நரகத்தை இதற்குமேலும் தொடர்ந்து கொண்டுபோக முடியாது), அல்லது நாம் ஒரு பண்பு மாற்றத்தின் ஊடாக பயணப்பட வேண்டி இருக்கும்.

எனவே நவீன மனத்துக்கு மிகவும் பயனுள்ளதும் அர்த்தமுள்ளதுமாக யோகம் ஆக முடியும். ஏனெனில் யோகம் உங்களைக் காப்பாற்ற முடியும். மறுபடியும் இங்கு - இப்போது - இருப்பது எப்படி, இறந்தகாலத்தை - வருங்காலத்தை மறப்பது எப்படி என்பதை உங்களுக்குப் போதிக்க அதனால் முடியும். இக்கணமே நித்தியமாக ஆகும்படியான அவ்வளவு தீவிரத்துடன் நிகழ்ந்து கொண்டிருக்கும் இந்தக் கணத்தில் தங்கி இருப்பது எப்படி என்பதை உங்களுக்குப் போதிக்க அதனால் முடியும். இக்கணமே நித்தியமாக ஆகிறது.

பதஞ்சலி இன்னும் அதிக முக்கியத்துவம் கூடியவராக ஆக முடியும். இந்த நூற்றாண்டு முடிவுக்கு வரும் வேளையில் மனிதரின் தன்மை மாற்றத்துக்கான உத்திகள் இன்னும் அதிக முக்கியத்துவம் உடையவை யாக ஆகும். ஏற்கனவே அவை உலகமுழுவதும் பரவிவருகின்றன. அவற்றை நீங்கள் யோகம் என்றாலும் ஸென் என்றாலும்; அவற்றை நீங்கள் சூஃபிமுறைகள் என்று அழைத்தாலும் தாந்த்ரிக முறைகள் என்று அழைத்தாலும்; அவை இன்று உலகமுழுவதும் பரவியே வருகின்றன. பலப்பல வழிகளிலும் பழைய மரபு போதனைகள் அனைத்தும் மறுபடியும் புத்தெழுச்சி பெற்று வருகின்றன. ஏதோ ஒரு ஆழமான தேவை இருக்கிறது. உலகின் எந்தப் பகுதியில் இருப்பவர்களானாலும் சரி, அவர்களில் சிந்திக்கும் மனிதர்கள், கடந்தகாலத்தில் மனிதகுலம் எவ்வாறு அவ்வளவு பேரின்பத்துடன் - அவ்வளவு பரவசத்துடன் இருந்தது என்பதை மறுபடியும் கண்டுபிடிப்பதில் ஆர்வம் உள்ளவர்களாகி உள்ளார்கள். அவ்வளவு ஏழ்மையான நிலைமையிலும் எப்படி கடந்த காலத்தில் மனிதர்கள் அவ்வளவு வளமாக வாழ்ந்தார்கள், நாம் இவ்வளவு வசதியான சூழலிலும் ஏன் இவ்வளவு கேவலமாக இருக்கிறோம்?

இதுதான் விசித்திரம். நவீன காலத்தின விசித்திரம். பூமியில் முதல்முறையாக நாம் வளமான விஞ்ஞான சமுதாயங்களைப் படைத்திருக்கிறோம். ஆனால் அவைதான் மிகவும் அசிங்கமும் மிகவும் அவலமும் கொண்ட சமுதாயங்களாக உள்ளன. பழங்காலத்தில் அறிவியல் தொழில்நுட்பம் இருக்கவில்லை, பெருவளம் இருக்க வில்லை, வசதிவாய்ப்புகள் இருக்கவில்லை. ஆனால் மனிதகுலம் மிகுந்த ஆழமான, அமைதியான சூழலில் - மகிழ்ச்சியுடன் நன்றியறிதலுடன் வாழ்ந்துகொண்டிருந்தது. அப்புறம் என்ன நேர்ந்தது? எவரையும்விட நாம் அதிக மகிழ்ச்சியாக இருக்க முடியும். ஆனால் இருத்தலுடனான தொடர்பை நாம் இழந்துவிட்டுள்ளோம்.

ஆனால் அந்த இருத்தல் என்பது இங்கேயே இப்போதே இருக்கிறது. பொறுமையற்ற மனம் அதனுடன் தொடர்பு கொள்ள முடியாது. பொறுமையின்மை என்பது அமைதியற்ற, பைத்தியக்கார மனநிலை. நீங்கள் ஓடிக்கொண்டே இருக்கிறீர்கள். இலக்கைக்கு வந்து சேர்ந்தாலும் உங்களால் அங்கு நிற்க முடிவதில்லை. ஏனெனில் ஓட்டம் என்பது ஒரு பழக்கமாகவே ஆகி இருக்கிறது. இலக்கையே நீங்கள்

அடைந்தாலும் அதை நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள். ஏன் தவறவிடு வீர்கள் என்றால் உங்களால் நிற்க முடியாது. உங்களால் நிற்க முடிந்தால் இலக்கைத் தேடி அலைய வேண்டியதில்லை.

ஸென் குரு ஹுய்-ஹாய் பின்வருமாறு சொல்லி இருக்கிறார்: ''தேடுங்கள், இழந்துவிடுவீர்கள்; தேடாதீர்கள், உடனடியாக அடைவீர்கள். நில்லுங்கள், இங்கேயே இருக்கிறது; ஓடுங்கள், எங்கேயும் கிடைக்காது.''

*15. வைராக்கியத்தின் அல்லது ஆசையின்மையின் முதல்நிலை, உணர்வுடன்கூடிய முயற்சிமூலம், புலனின்பங்களுக்கான வேட்கையில் தான் மூழ்கித் திளைப்பதை நிறுத்திவிடுதலாகும்.*

*16.வைராக்கியத்தின் அல்லது ஆசையின்மையின் கடைசி நிலை, மூலாதார புருஷனின் உள்ளார்ந்த இயல்பை அறிவதன்மூலம், ஆசையை முற்றிலுமாக விட்டு விடுதலாகும்.*

**ப**யிற்சியும் வைராக்கியமும் அதாவது இடைவிடாத அகப்பயிற்சியும் ஆசையின்மையும் என்னும் இந்த இரண்டும்தான் பதஞ்சலி யோகத்தின் அடித்தளக் கற்களாகும். இடைவிடாத அகப்பயிற்சி, முயற்சி என்பது தேவைப்படுவது, ஏதோ ஒன்றைச் சாதித்தாக வேண்டும், அடைந்தாக வேண்டும் என்பதற்காக அல்ல. மாறாக தவறான பழக்கங்கள் இருப்பதால்தான் பயிற்சி தேவைப்படு கின்றது. இந்த போராட்டம் இயற்கைக்கு - இயல்புக்கு எதிரானது அல்ல; பழக்கங்களுக்கு எதிரானதே இந்தப் போராட்டம். ஒவ்வொரு நிமிடமும் உங்களுக்கு உள்ளே வரவும், அதனுடன் நீங்கள் ஒன்றுபடவும் கிடைக்கக் கூடியதாக இருக்கிறது இயற்கை. ஆனால் தவறான பழக்க முறைகளையே நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். அந்தப் பழக்கங்களே தடைகளை உருவாக்குகின்றன. இந்தப் பழக்கங்களை எதிர்த்துதான் போராட்டம். அவை ஒழிக்கப்படாதவரை, இயற்கை - உங்கள் உள்ளார்ந்த இயல்பு பாய்ந்தோட முடியாது, இயங்க முடியாது. தனக்கென விதிக்கப்பட்ட இலக்கைச் சென்று அடைய முடியாது.

எனவே நினைவில் கொள்ள வேண்டிய முதல் விசயம்: நம் போராட்டம் இயல்புக்கு எதிரானது அல்ல. தவறான வளர்ப்புக்கு, தவறான பழக்கவழக்கங்களுக்கு எதிரானதே இந்தப் போராட்டம். உங்கள் சுயத்துக்கு எதிராக நீங்கள் போராடவில்லை. உங்கள்மேல் பொறுத்தப்பட்டு, நிலைத்துவிட்டிருக்கிற ஒன்றுக்கு எதிராகவே நீங்கள் போராடுகிறீர்கள். இதை சரியாக புரிந்துகொள்ளவில்லை என்றால் பின் உங்கள் முயற்சி முழுவதும் தவறான திசையிலேயே போய்முடியும். உங்களுடனேயே நீங்கள் சண்டைபிடிக்கத் தொடங்கலாம். அப்படி

உங்களுடனேயே நீங்கள் சண்டைபிடிப்பதை ஒருதடவை நீங்கள் ஆரம்பித்து வைத்துவிட்டால் அந்தச் சண்டையில் நீங்கள் தோற்றுத்தான் போவீர்கள். ஒருபோதும் உங்களால் வெற்றிபெற முடியாது. வெல்லப் போவது யார், தோற்கப்போவது யார்? இரண்டுமே நீங்கள்தானே. சண்டைபிடிப்பவரும் யாருடன் அவர் சண்டையிடுகிறாரோ அந்த எதிரியும் ஒரே ஆள்தானே.

என் கைகள் இரண்டும் ஒன்றுடன் ஒன்று சண்டைபிடிக்கத் தொடங்கினால் வெல்லப்போவது யார்? உங்களுடனேயே நீங்கள் சண்டை பிடிக்கத் தொடங்கியதுமே நீங்கள் தோற்றுவிடுகிறீர்கள். ஆனால் எண்ணற்ற பேர்கள், தம் பெருமுயற்சியில், ஆன்மீக உண்மையை அடைவதற்கான தம் தேடலில், மேற்சொன்ன பிழைக்குள் சிக்கிக்கொள்கிறார்கள். இந்த தவறுக்கு அவர்களத் தாமே பலியாகி றார்கள். தங்களுடனேயே அவர்கள் சண்டையிடத் தொடங்குகிறார்கள். உங்களுக்கு எதிராக நீங்களே சண்டைபிடித்தால் நீங்கள் மென்மேலும் அதிகப் பைத்தியமாகியே செல்வீர்கள். மேலும் மேலும் அதிகமாய் பிரிவுபட்டு பிளவுபட்டுப் போவீர்கள். ஆளுமைப்பிளவுள்ளவராக ஆவீர்கள். மேற்கில் நடந்துகொண்டிருப்பது இதுதான்.

இதைப் போதித்தது கிறிஸ்து அல்ல, கிறிஸ்தவம்தான். தனக்கெதி ராக தானே போரிடுமாறு, தன்னையே கண்டனம் செய்யுமாறு, தன்னையே மறுத்துக்கொள்ளுமாறு கிறித்தவம் போதித்திருக்கிறது; கீழ்நிலைக்கும் மேல் நிலைக்கும் இடையில் ஒரு பெரும் பிரிவினையை கிறித்தவம் உருவாக்கி இருக்கிறது. கீழானது என்றும் மேலானது என்றும் உங்களுக்குள் எதுவும் இல்லை. ஆனால் தாழ்நிலை ஆன்மா, உயர்நிலை ஆன்மா என்றும் உடல், ஆன்மா என்றும் பிரித்துப் பேசுகிறது கிறித்தவம். ஆனால் ஏதோ ஒரு வகையில் கிறித்தவம் உங்களைப் பிரித்து வைத்து ஒரு சண்டையை உண்டாக்குகிறது. இந்தச் சண்டையோ முடிவின்றித் தொடரும். அது உங்களை எங்கும் கொண்டுபோய்ச் சேர்க்காது. சுய அழிவே இறுதி விளைவாக இருக்கமுடியும். ஆளுமைப் பிளவுண்ட குழப்பநிலையாகவே அது முடியும். இதுதான் மேற்கில் நடந்து கொண்டிருக்கிறது.

யோகம் ஒருபோதும் உங்களைப் பிரிப்பதில்லை. ஆனாலும் ஒரு சண்டை இருக்கிறது. இந்தச் சண்டை உங்களின் இயற்கைக்கு, இயல்புக்கு எதிரானது அல்ல. மாறாக இந்தச் சண்டை உங்கள் இயல்புக்கு ஆதரவானது. பல பழக்கங்களை நீங்கள் சேகரித்திருக்கிறீர்கள். அந்தப் பழக்கங்கள் உங்களின் பல பிறவிகளிலும் நீங்கள் பெற்றுள்ள தவறான

பதிவுகளே - முறைகளே ஆகும். அந்தத் தவறான பாணிகளின் காரணமாக உங்களின் இயற்கை தன் இயல்பான முறையில் இயங்க முடியவில்லை; தன்னிச்சையாகப் பாய்ந்து செல்ல முடியவில்லை; தனது இலக்கைச் சேர முடியவில்லை. இந்தப் பழக்கவழக்கங்களை ஒழிக்க வேண்டி இருக்கிறது. மேலும் இவைகள் வெறும் பழக்கங்கள் மட்டும்தான். அவை இயற்கையானவையாக உங்களுக்குத் தோன்று வதற்கு காரணம், அந்த அளவுக்கு அந்தப் பழக்கங்களுக்கு நீங்கள் அடிமையாகி இருப்பதால்தான். அவற்றுடன் உங்களை நீங்கள் அடையாளபடுத்திக் கொண்டிருக்கலாம். ஆனால் அவை அல்ல நீங்கள்.

இந்தப் பாகுபாட்டை தெளிவாக மனதில் இருத்த வேண்டி வேண்டி இருக்கிறது. இல்லாவிட்டால் நீங்கள் பதஞ்சலியைத் தவறாகப் பொருள்கொண்டுவிட முடியும். வெளியிலிருந்து உங்களுக்குள் வந்திருப்பதும், தவறானதுமான அனைத்தும் அழிக்கப்பட வேண்டும். அப்போதுதான் உங்களுக்குள் இருப்பது பரவமுடியும், மலர முடியும். அப்பியாசம் என்னும் இடையறாத அகப்பயிற்சியானது, பழக்கங்களுக்கு எதிராகச் செய்வதாகும்.

இரண்டாவது காரியம், இரண்டாவது அடித்தளக்கல், வைராக்கியம் என்னும் ஆசையின்மை ஆகும். இதுவும் உங்களைத் தவறான திசையில் செலுத்த முடியும்.இவை இறுதியான விதிகள் அல்ல, எளிய வழிகாட்டுதல்களே என்பதை நினைவில் கொள்ளுங்கள். இவை விதிகள் அல்ல என்று நான் கூறும்போது, கண்மூடித்தனமாகக் கடைப்பிடிக்க வேண்டியவை அல்ல என்னும் பொருளிலேயே கூறுகிறேன். அவற்றை - அவற்றின் பொருளை, முக்கியத்துவத்தைப் புரிந்துகொள்ள வேண்டி இருக்கிறது. மேலும் அந்த முக்கியத்துவத்தை நம் வாழ்வில் எடுத்துக்கொள்ளவும் வேண்டி இருக்கிறது.

ஒவ்வொருவருக்கும் இது ஒவ்வொருவிதமாகவே இருக்கப் போகிறது. எனவே இது ஒரு நிலையான விதி கிடையாது. இதை வறட்டுத்தனமாக நீங்கள் பின்பற்ற வேண்டியது இல்லை. அதன் முக்கியத்தை நீங்கள் புரிந்துகொண்டு உங்களில் அது வளர அனுமதிக்க வேண்டி இருக்கிறது. ஒவ்வொரு தனிநபரைப் பொறுத்தமட்டும் அந்த மலர்ச்சி வெவ்வேறு விதமாகத்தான் இருக்கும். எனவே இவை உயிரற்ற, வறட்டுக் கொள்கைகள் அல்ல. இவை எளிய வழிகாட்டுதல்களே. திசையை மட்டுமே இவை சுட்டிக்காட்டுகின்றன. விவரங்களை இவை வழங்குவதில்லை.

ஒருமுறை ஒரு அருங்காட்சியகத்தில் முல்லா நசுருதீன் வாயில் காவலராக வேலைபார்த்த கதை நினைவுக்கு வருகிறது. வேலைக்கு அமர்த்தப்பட்ட முதல் நாளன்று, தான் நடந்துகொள்ள வேண்டிய விதிமுறைகள் பற்றி அவர் கேட்டார். ''நான் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகள் என்னென்ன?'' என்றார். உடனே அவருக்கு விதிமுறைகள் அடங்கிய புத்தகம் தரப்பட்டது. வாயில்காவலர் பின்பற்றவேண்டிய விதிமுறைகள் அதில் இருந்தன. அவர் அவற்றை மனப்பாடம் செய்துகொண்டார். ஒரே ஒரு விவரத்தைக்கூட மறந்துவிடாதபடி முழு கவனமாக இருந்தார்.

முதல்நாள் அவர் பணியில் இருக்கும்போது முதல் பார்வையாளர் வந்தார். வந்தவரிடம் அவரது குடையை கதவின் அருகில் விட்டுவிட்டு வருமாறு முல்லா கூறினார். வந்தவர் மலைத்தார். ''ஆனால் என்னிடம்தான் குடை இல்லையே'' என்றார். அதற்கு நசுருதீன் சொன்னார், ''அப்படியானால் நீர் திரும்பிப்போய் ஒரு குடையை கொண்டுவாரும். ஏனென்றால் பார்வையாளர் தன் குடையை வெளியே வைத்துவிட்டு வராதவரை அவரை உள்ளே அனுமதிப்பது கூடாது. அப்படித்தான் சொல்கிறது விதிமுறை.'' என்றார்.

விதிமுறைகளால் பீடிக்கப்பட்டிருப்பவர்கள் நிறையபேர் இருக்கிறார்கள். அவர்கள் குருட்டுத்தனமாகப் பின்பற்றுகிறார்கள். உங்களுக்கு விதிமுறைகளை வழங்குவதில் பதஞ்சலிக்கு ஆர்வமில்லை. அவர் கூற வருவதெல்லாம் எளிய வழிகாட்டுதல்களே. அவை பின்பற்றுவதற்கல்ல, புரிந்துகொள்வதற்கே. அந்தப் புரிதலில் இருந்து பின்பற்றுதல் வரும். இதற்கு எதிராக நிகழமுடியாது - விதிகளைப் பின்பற்றுவதால் புரிதல் வந்துவிடாது. விதிகளை நீங்கள் புரிந்துகொண்டால் பின்பற்றுதல் தானே, ஒரு நிழல்போல் தொடரும்.

ஆசையின்மை என்பது ஒரு திசைவழி. அதை ஒரு விதிபோல் நீங்கள் பின்பற்றினால் பின் உங்கள் ஆசைகளை நீங்கள் ஒழிக்கத் தொடங்குவீர்கள். பலரும் அதைச் செய்திருக்கிறார்கள். கோடிக்கணக்கானவர்கள் இப்படி நடந்திருக்கிறார்கள். அவர்கள் தம் ஆசைகளை நசுக்கத் தொடங்குகிறார்கள். கணிதரீதியாக, தர்க்கரீதியாக இது சரிதான். ஆசையின்மையைச் சாதிக்க வேண்டுமானால் பின் அதற்கான மிகச் சிறந்த வழி எல்லா ஆசைகளையும் அழித்துவிடுவதுதான். அப்போது தான் நீங்கள் ஆசையின்றி இருப்பீர்கள்.

ஆனால் அப்போது நீங்கள் செத்துப் போயிருப்பீர்கள். விதியை நீங்கள் கறாராகக் கடைப்பிடித்திருக்கிறீர்கள். ஆனால் எல்லா ஆசைகளையும் நீங்கள் கொன்றுவிட்டால் உங்களையே நீங்கள் கொன்று விடுகிறீர்கள்; நீங்கள் தற்கொலை செய்துகொண்டு இருக்கிறீர்கள். ஏனென்றால் ஆசைகள் என்பவை வெறும் ஆசைகள் மட்டுமல்ல, அவை ஆற்றலின் இயக்கமும்கூட. ஆசையின்மையை அடைவது என்பது எதையும் கொல்லாமல் சாதிக்கப்பட வேண்டும். அதிக உயிர்ப்புடனும் அதிக ஆற்றலுடனுமே ஆசையின்மையை அடைய வேண்டும் - குறைவான உயிர்ப்புடனும் குறைந்த ஆற்றலுடனும் அல்ல.

எடுத்துக்காட்டாக உடம்பைப் பட்டினி போட்டால் காமத்தை எளிதாகக் கொன்றுவிட முடியும். ஏனெனில் காமமும் உணவும் ஆழ்ந்த உறவுடையவை. நீங்கள் உயிர்பிழைக் உணவு தேவை. தனிமனிதரின் உயிர் பிழைப்புக்கு உணவு தேவை. இனம் உயிர்பிழைக்க காமம் தேவை. இரண்டும் ஒருவிதத்தில் உணவுதான். உணவில்லாவிட்டால் உயிர் பிழைக்க முடியாது. காமம் இல்லாவிட்டால் இனம் உயிர்பிழைக்க முடியாது. ஆனால் தனிநபர்தான் முதன்மையானவர். ஏனெனில் தனிநபர் உயிர்வாழ முடியவில்லை என்றால் இனத்தைப்பற்றியே பேச்சுக்கே இடமில்லை.

எனவே நீங்கள் உங்கள் உடம்பைப் பட்டினிபோட்டால், உங்கள் உடம்புக்கு நீங்கள் மிகவும் குறைவான உணவே கொடுத்தால், நீங்கள் தரும் உணவால் உருவாக்கப்படும் ஆற்றல், உங்களின் தினசரி வழக்கமான வேலைகளிலேயே - நடப்பது, உட்காருவது, தூங்குவது இவற்றிலேயே தீர்ந்துபோகும். கூடுதல் ஆற்றல் சேகரமாகாதபோது, காமம் மறைந்துவிடும். ஏனெனில் தனி உயிர், கூடுதல் ஆற்றலை, தன் தனி உயிர்பிழைப்புக்குத் தேவையானதை விடவும் அதிகமாகச் சேகரித்தால் மட்டுமே காமம் இருக்க முடியும். அதன்பிறகு இனத்தின் பிழைப்பைப் பற்றி உடம்பானது யோசிக்க முடியும். நீங்கள் ஆபத்தில் இருக்கும்போது காமம் என்பதையே உடல் மறந்துவிடுகிறது.

என்வேதான் உண்ணா நோன்பு பெரிதும் விரும்பப்படுகிறது. ஏனெனில் நீங்கள் பட்டினிகிடந்தால் காமம் மறைகிறது. ஆனால் இது ஆசையின்மை ஆகாது. இது மென்மேலும் சவமாகி வருவதே ஆகும். இந்தியாவிலுள்ள ஜென் துறவிகள் இந்த நோக்கத்துக்காகவே தொடர்ச்சியாக நோன்பிருந்து வருகிறார்கள். ஏனெனில் நீங்கள் தொடர்ச்சியாகப் பட்டினி கிடந்தால், எப்போதுமே பற்றாக்குறை உணவையே எடுத்து வந்தால் காமம் மறைகிறது - வேறெதும்

செய்யாமலேயே. மனம் இதில் மாற்றமடைவதில்லை. அக ஆற்றலின் தன்மை மாற்றம் ஏற்படுவதில்லை. வெறும் பட்டினி கிடத்தலே உதவுகிறது.

இதன்பின் நீங்கள் பட்டினிக்குப் பழகிவிடுகிறீர்கள். மேலும் ஆண்டுக்கணக்கில் இதை நீங்கள் தொடர்ச்சியாகச் செய்து வந்தால் காமம் என்று ஒன்று இருக்கிறது என்பதையே நீங்கள் மறந்து விடுவீர்கள். ஆற்றல் எதுவும் உற்பத்தியாகாது. ஆற்றலானது காம மையத்தை நோக்கிப் போகாது. போவதற்கு ஆற்றல் இருந்தால்தானே! அந்த ஆள் ஒரு சவத்தை ஒத்தவனாகவே இருக்கிறான். அவனிடம் காமம் இருப்பதில்லை.

ஆனால் பதஞ்சலி கூறுவது இதை அல்ல. இது ஆசையற்ற நிலை அல்ல; ஆண்மையற்ற நிலை, ஆற்றலற்ற நிலை. உடலுக்கு உணவு கொடுங்கள்...முப்பது நாற்பது ஆண்டுகளாக உடலை நீங்கள் பட்டினி போட்டிருக்கலாம். ஆனாலும் உடம்புக்குச் சரியான உணவு கொடுங்கள், உடனடியாக காமம் மீண்டும் எழுகிறது. நீங்கள் மாறி இருக்கவில்லை. ஆற்றல் பாய்கிறவரை காமம் அங்கேயே மறைந்து காத்திருக்கிறது. ஆற்றல் பாயும்போதெல்லாம் அது மறுபடியும் உயிர்பெற்றதாகும்.

எனவே அளவுகோல் எது? அளவுகோலை நினைவில் கொள்ள வேண்டும். அதிக உயிர்ப்புடன் இருத்தல், அதிக ஆற்றல் நிரம்பியவர்களாக இருத்தல், வீரியமுள்ளவர்களாக் இருத்தல், அதேசமயம் ஆசையற்றவர்களாக ஆகிவிடுதல் - இதுவே அளவுகோல். அப்போது மட்டுமே,உங்களின் ஆசையின்மை உங்களை அதிக உயிரோட்டமுள்ளவராக ஆக்குகிறது. அப்போதுதான் நீங்கள் சரியான திசைவழியைப் பின்பற்றி இருக்கிறீர்கள். அது உங்களை ஒரு சவமாகவே ஆக்கிவிட்டது என்றால் நீங்கள் விதிமுறையைப் பின்பற்றி விட்டீர்கள் என்று பொருள். விதியைப் பின்பற்றுவது எளிதானது. ஏனெனில் அதற்குப் புத்தி தேவையில்லை. விதியைப் பின்பற்றுவது எளிது. ஏனெனில் அதற்கு எளிய சில குறுக்குவழிகளே போதும். உண்ணாதிருப்பது அத்தகைய ஒரு எளிய சூழ்ச்சி. இதற்குப் பெரிதாக வேறெதுவும் தேவை இல்லை. இதில் இருந்து எந்த ஞானமும் விளையப் போவதுமில்லை.

ஆகஸ்போர்டில் ஒரு பரிசோதனை நடந்தது. இளமையும் ஆரோக்கியமும் மிகுந்த இருபது மாணவர்கள் முப்பது நாள்களுக்கு

முழுப்பட்டினி போடப்பட்டார்கள். ஏழாவது எட்டாவது நாளுக்குப் பின் அவர்கள் இளம் பெண்களின் மீதான ஆர்வத்தை இழக்கத் தொடங்கினார்கள். நிர்வாணப் புகைப்படங்கள் அவர்களுக்கு தரப்பட்டன. அவர்கள் அவற்றை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. இந்த ஆர்வமின்மைஉடல்ரீதியாக மட்டுமல்ல, அவர்களின் மனங்களும் ஆர்வத்தை இழந்திருந்தன - இப்போதெல்லாம் மனத்தை மதிப்பிடவும் முறைகள் இருக்கின்றன.

ஒரு இளைஞன், ஆரோக்கியமான பையன் ஒரு இளம் பெண்ணின் ஆடையற்ற படத்தைப் பார்க்கிறபோது அவனது கண்ணின் மணிகள் பெரிதாக ஆகின்றன. நிர்வாண உருவத்தை உள்வாங்க அவை அதிகம் விரிகின்றன. அப்போது உங்கள் கண்மணிகளை உங்களால் கட்டுப்படுத்த முடியாது. அவை இயக்கு தசைகளைச் சேர்ந்தவை அல்ல. எனவே காமத்தில் உங்களுக்கு நாட்டம் இல்லை என்று நீங்கள் கூறலாம். ஆனால் நீங்கள் நாட்டமுள்ளவர்களாய் இருக்கிறீர்களா இல்லையா என்பதை ஒரு நிர்வாணப்படம் காட்டிவிடும். இதில் நீங்கள் உங்கள் இச்சைக்குட்பட்டு செய்யமுடிவது எதுவுமில்லை. உங்கள் கண்களின் பாப்பாக்களை உங்களால் கட்டுப்படுத்த முடியாது. சுவாரசியமான ஒன்று அவற்றிக்கு முன் காட்டப்படும்போது அவை விரிகின்றன. அதிகமாகத் திறக்கின்றன. அதிகமாக அள்ளிப்பருகுவதற்காக மூடிகள் அதிக அளவில் திறக்கின்றன. ஆடையற்ற ஆண்களின் மேல் பெண்கள் ஆர்வம் காட்டுவதில்லை. அவர்களுக்கு சிறு குழந்தைகள்மீதே ஆர்வம். எனவே ஒரு அழகிய குழந்தையின் படம் அவர்களிடம் தரப்படுமென்றால் அவர்களின் கண்கள் விரிகின்றன.

அவர்களுக்கு நாட்டம் இருக்கிறதா என்பதைக் காண எல்லாவிதமான முயற்சியும் செய்யப்பட்டது. எந்தவித நாட்டமும் இல்லை. மெதுவாக ஆர்வம் குறைந்துகொண்டே வந்தது. தம் கனவுகளில்கூட அவர்கள் இளம்பெண்களைப் பார்க்கவில்லை. காமக் கனவுகள் காணவில்லை. இரண்டாம் வாரத்தில், பதினான்கு அல்லது பதினைந்தாம் நாளில், அவர்கள் சுத்த சவங்களாகிவிட்டார்கள். மிகவும் அழகான பெண் அருகில் வந்தால்கூட அவர்கள் நிமிர்ந்து பார்க்கவில்லை. யாராவது ஒரு ஆபாசச் சிரிப்பை சொன்னால் அவர்கள் சிரிக்கவில்லை. முப்பது நாள்கள் அவர்கள் பட்டினி போடப்பட்டார்கள். முப்பதாவது நாளில் மொத்தக் குழுவும் காமத்தை இழந்துவிட்டிருந்தது. அவர்கள் மனதில், அவர்கள் உடலில் அறவே காமம் இல்லை.

பின் மறுபடியும் அவர்களுக்கு உணவு வழங்கப்பட்டது. முதல் நாளிலேயே அவர்கள் பழையபடி ஆகிவிட்டார்கள். இரண்டாம் நாளே ஈடுபாடு காட்ட ஆரம்பித்தார்கள். மூன்றாவது நாளிலேயே அந்த முப்பதுநாள் பட்டினியும் முழுமையாக மறைந்துவிட்டது. இப்போது அவர்கள் நாட்டம் கொண்டது மட்டுமல்ல, அளவுக்கதிகமாகவே ஆர்வம் காட்டினார்கள் - இந்த இடைவெளி அதைத் தூண்டிவிட்டது போலும். அடுத்த சில வாரங்களுக்கு அவர்கள் கட்டற்ற காமத்தை உணர்ந்தார்கள். பெண்களைத் தவிர வேறொன்றையும் நினைக்கவில்லை. உடம்புக்கு உணவு வந்ததும் மீண்டும் அவர்களுக்கு மகளிர் முக்கியமாகி விட்டார்கள்.

ஆனால் உலக முழுவதிலும் உள்ள பல நாடுகளிலும் இதுவே நடந்துவந்திருக்கிறது. மதங்கள் பலவும் இந்த உண்ணாவிரதத்தை பின்பற்றி வருகின்றன. உடனே காமத்தை கடந்துவிட்டதாக அந்த மனிதர்கள் நினைத்துக்கொள்ளத் தொடங்குகிறார்கள். காமத்தைக் கடந்து செல்ல உங்களால் முடியும். ஆனால் அதற்கு பட்டினி அல்ல வழி. அது ஒரு குறுக்குவழிதான். மேலும் ஒவ்வொரு விசயத்திலும் இதை நீங்கள் கையாளமுடியும்: நீங்கள் உண்ணா நோன்பிருந்தால் உங்களுக்குக் கோபம் குறைவாகவே வரும். மேலும் பட்டினிகிடப்பதற்கு நீங்கள் பழகிவிட்டால் உங்கள் வாழ்விலிருந்து பல விசயங்கள் தாமே உதிர்ந்துவிடும். ஏனெனில் அடித்தளம் விழுந்துவிட்டது. உணவுதான் அந்த அடித்தளம்.

உங்களிடம் அதிக ஆற்றல் இருக்கும்போது பல பரிமாணங்களிலும் நீங்கள் இயங்குகிறீர்கள். பொங்கிவழியும் ஆற்றலால் நீங்கள் நிரம்பி இருக்கும்போது உங்கள் அபரிமித சக்தி உங்களைப் பலப்பல ஆசைகளுக்கும் இட்டுச் செல்கிறது. ஆசைகள் என்பவை ஆற்றலுக்கான வடிகால்களே தவிர வேறு ஒன்றுமில்லை. எனவே இரண்டு வழிகள் சாத்தியம். ஒன்று: உங்கள் ஆசை மாறுகிறது, ஆற்றல் தங்கி இருக்கிறது. அல்லது: ஆற்றல் அகற்றப்படுகிறது, ஆசை தங்கி இருக்கிறது. ஆற்றலை மிக எளிதாக வெளியேற்றிவிட முடியும். அதற்கு ஒரு அறுவைச் செய்தால் போதும், காயடித்தால் போதும், காமம் மறைந்துவிடுகிறது. சில ஆர்மோன்களை உங்கள் உடம்பிலிருந்து அகற்றிவிட்டால் போதும். உண்ணாநோன்பும் அதையேதான் செய்கிறது. பட்டினியால் சில ஆர்மோன்கள் மறைந்துவிடுகின்றன. அதன்பின் நீங்கள் காமம் அற்றவராக ஆக முடியும்.

ஆனால் பதஞ்சலியின் குறிக்கோள் அதுவல்ல. ஆற்றல் தங்கி இருக்கவேண்டும், அதே சமயம் ஆசை மறைந்துவிடவேண்டும் என்றே பதஞ்சலி கூறுகிறார். ஆசை மறைந்து நீங்கள் ஆற்றலால் நிரம்பி இருக்கும்போது மட்டுமே, யோகம் குறிவைக்கும் அந்த ஆனந்த நிலையை நீங்கள் அடைய முடியும். செத்துப்போன மனிதன் தெய்வீகத்தை அடைய முடியாது. பொங்கி வழியும் ஆற்றலின்மூலமே அபரிமித ஆற்றலின்மூலமே, ஆற்றலின் பெருங்கடல்மூலம் மட்டுமே இறைமையை அடைய முடியும்.

ஆகவே இடைவிடாமல் நினைவில்கொள்ள வேண்டிய இரண்டாவது விசயம் இதுதான் - ஆற்றலை அழிக்காதீர்கள், ஆசையை அழியுங்கள். இது கடினமாகத்தான் இருக்கும், கடுமையாகத்தான் இருக்கும், பெருமுயற்சிக்குரியதாகத்தான் இருக்கும். ஏனென்றால் இதற்கு உங்கள் சீவனின் முழுமையான அடிப்படைமாற்றம் தேவைப்படுகிறது. பதஞ்சலி அதற்கே இருக்கிறார். எனவே அவர் வைராக்கியத்தை அதாவது ஆசையின்மையை இரண்டு கட்டங்களாகப் பிரிக்கிறார். இனி நாம் சூத்திரத்துக்குள் நுழைவோம்.

முதலாவது:

**வைராக்கியத்தின் அல்லது ஆசையின்மையின் முதல் நிலை, உணர்வுடன் கூடிய முயற்சிமூலம், புலன் இன்பங்களுக்கான வேட்கையில் தான் மூழ்கித் திளைப்பதை நிறுத்தி விடுதலாகும்.**

இதில் பல விசயங்கள் அடங்கி உள்ளன. அவற்றையெல்லாம் புரிந்துகொள்ள வேண்டி உள்ளது. ஒன்று, புலன் இன்பங்களில் திளைத்தல், ஏன் புலன் இன்பங்களை வேண்டுகிறீர்கள் நீங்கள்? மனம் ஏன் ஓயாமல் இன்பத் திளைப்பை எண்ணுகிறது. ஒரேவிதமான திளைப்பு முறைகளிலேயே ஏன் நீங்கள் மறுபடியும் மறுபடியும் ஈடுபடுகிறீர்கள்?

பதஞ்சலியும், முற்றும் உணர்ந்த மற்றுமுள்ள அனைவரும் கூறும் காரணம், உள்ளுக்குள் நீங்கள் ஆனந்தமயமாக இல்லை என்பதாகும். எனவேதான் ஓயாத சிற்றின்ப ஆசை. இன்ப நாட்டமுள்ள மனம் என்பதன் பொருள். இப்போது நீங்கள் இருக்கிற நிலையில், உங்களுக்குள் நீங்கள் மகிழ்ச்சியின்றி இருக்கிறீர்கள். எனவேதான் நீங்கள் மகிழ்ச்சியை எங்கேயோ தேடிக்கொண்டு போகிறீர்கள். மகிழ்ச்சியற்ற மனிதன்

ஆசைகளுக்குள் போயே தீரவேண்டும். ஆசைகளே, மகிழ்ச்சியற்ற மனம் மகிழ்ச்சியைத் தேடுவதற்கான வழியாகும். ஆனால் எங்கேயும் இந்த மனம் மகிழ்ச்சியைக் கண்டுகொள்ள முடியாது என்பதுதான் உண்மை. அதிகபட்சம் அதன் சில கீற்றுக்களைமட்டுமே அவன் காணமுடியும். அந்த கீற்றுகள் இன்பமெனத் தோற்றுகின்றன. இன்பம் என்பது மகிழ்ச்சியின் துணுக்குகளே. இந்த இன்பத் துளிகள் வெளியில் எங்கிருந்தோ வருவதாக இந்த இன்பம் தேடும் மனம் நினைப்பது தான் பிழை. எப்போதும் அது உள்ளிருந்தே வருகிறது.

இதைப் புரிந்துகொள்ள முயல்வோம். ஒருவரை நீங்கள் காதலிக்கிறீர்கள். காமத்தில் நீங்கள் ஈடுபடுகிறீர்கள். காமம் உங்களுக்கு கணநேர இன்பத்தைத் தருகிறது. ஒரே ஒரு கணம் நீங்கள் நெகிழ்கிறீர்கள். துன்பங்கள் அனைத்தும் மறைந்திருக்கின்றன. எல்லாவிதமான மன வேதனையும் இல்லாதொழிகிறது. ஒரே ஒரு கணம் நீங்கள் நிகழ் கணத்தில், நிகழ்களத்தில் இருக்கிறீர்கள். அனைத்தையும் நீங்கள் மறந்துவிட்டிருக்கிறீர்கள். ஒரு கண நேரம் இறந்தகாலம், வருங்காலம் இரண்டும் இருப்பதில்லை. இதனால் - கடந்தகாலம், எதிர்காலம் இரண்டும் இல்லாததால், ஒரே ஒரு கணம் நீங்கள் இங்கே - இப்போது இருப்பதால் உள்ளிருந்து உங்கள் ஆற்றல் பொழிகிறது. உங்கள் உள்மனம் இக்கணத்தில் பொழிகிறது, எனவே உங்களுக்கு ஒரு துளி இன்பம் கிடைக்கிறது.

ஆனால் அந்த துளி இன்பமும் உங்கள் துணைவரிடமிருந்தே வருகிறது. அந்தப் பெண்ணிடமிருந்தோ ஆணிடமிருந்தோதான் வருகிறது என்று நீங்கள் நினைக்கிறீர்கள். அது அந்த ஆணிடமிருந்தோ பெண்ணிடமிருந்தோ வரவில்லை. அது உங்களிடமிருந்தே வருகிறது! நிகழ்காலத்துக்குள் நீங்கள் வந்து சேர்வதற்கும், இறந்தகாலம் மற்றும் வருங்காலத்திலிருந்து நீங்கள் வெளியேறுவதற்கும் உதவிசெய்தது மட்டுமே அந்த மற்றவர். இக்கணத்தின் இப்போதைய தன்மைக்கு உங்களை கொண்டுவர மட்டுமே அந்த மற்றவர் உதவி இருக்கிறார்.

காமம் இல்லாமலே இந்த இப்போதைய நிலைக்கு நீங்கள் வரமுடியுமானால், காமமானது படிப்படியாக பயனற்றதாகிப் போகும், அது மறைந்துவிடும். அப்போது அது ஒரு ஆசையாக இருக்காது. அதற்குள் நீங்கள் போக விரும்பினால், ஒரு வேடிக்கைபோல் அதனுள் நீங்கள் போக முடியும்; ஆனால் அது ஒரு ஆசையாக இருக்காது.

அப்போது அது ஒரு வெறித்தனமான பீடிப்பாக இருக்காது. ஏனெனில் அப்போது நீங்கள் அதைச் சார்ந்து இருப்பதில்லை.

காலையில் சூரியன் உதயமாவதற்கு முன் ஒரு மரத்தடியில் அமருங்கள். சூரியன் எழுந்துவிட்டால் உங்கள் உடல் தொல்லையுறும். அப்போது உள்ளுக்குள் அமைதியாக இருப்பது கடினமாக ஆகும். எனவேதான் கிழக்குலகம் எப்போதும் சூரிய உதயத்துக்கு முன்பே தியானித்து வந்திருக்கிறது. அந்த நேரத்தை பிரம்மமுகூர்த்தம் அதாவது தெய்வீகப் பொழுது என்று அவர்கள் அழைத்திருக்கிறார்கள். அவர்கள் சொல்வது சரிதான். ஏனெனில் சூரியனின் ஏற்றத்துடன், ஆற்றல்களும் எழுகின்றன; ஏற்கனவே நீங்கள் உருவாக்கியுள்ள பழைய பாங்கிலேயே அவை பாயத் தொடங்குகின்றன.

அதிகாலையில், ஆதவன் இன்னும் வானத்துக்கு வந்திராத வேளையில், எல்லாமே அமைதியாக இருக்கும்போது, இயற்கை இன்னமும் ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருக்கிறது - மரங்கள் உறங்குகின்றன, பறவைகள் உறங்குகின்றன, உலகம் முழுவதும் உறங்குகிறது, உங்கள் உடம்பும் உள்ளுக்குள் உறங்கிக்கொண்டிருக்கிறது, அப்போது - ஒரு மரத்தடியில் உட்கார்வதற்கு நீங்கள் வருகிறீர்கள். எல்லா மௌனத்தில் இருக்கிறது. அப்போது அந்தக் கணத்தில் இருக்க முயலுங்கள். எதையும் செய்ய வேண்டாம். தியானம்கூடச் செய்ய வேண்டாம். எந்தச் சிரமமும் மேற்கொள்ள வேண்டாம். உங்கள் கண்களை மூடுங்கள். அமைதியில் இயற்கையின் இந்த அமைதியில் இருங்கள். திடீரென, காமத்தின்மூலம் உங்களுக்கு வந்திருக்கிற அந்தக் கணநேர இன்பம், அல்லது அதைவிட அதிகமான, ஆழமான இன்பஉணர்வு, திடீரென உங்களுக்கு ஏற்பட்டிருக்கும். திடீரென ஒரு ஆற்றல் வெள்ளம் உள்ளிருந்து பாய்வதை நீங்கள் உணர்வீர்கள். மேலும் இப்போது நீங்கள் ஏமாற்றப்பட முடியாது. ஏனெனில் வேறு யாரும் இல்லை. நிச்சயமாக அது, உங்களிடமிருந்து தான் வந்து கொண்டிருக் கிறது. நிச்சயமாக அது உள்ளிருந்துதான் பொழிந்து கொண்டிருக் கிறது. வேறுயாரும் அதை உங்களுக்குத் தந்து கொண்டிருக்கவில்லை. உங்களுக்கு நீங்களே தந்துகொண்டிருக்கிறீர்கள்.

ஆனால் அதற்கான சூழல் தேவைப்படுகிறது - ஒரு அமைதி, கிளர்ச்சியடையாத ஆற்றல், தேவைப்படுகிறது. நீங்கள் எதையும் செய்து கொண்டு இருக்கவில்லை. ஒரு மரத்தடியில் சும்மா அமர்ந்திருக்கிறீர்கள். அந்நிலையில் அக் கணப்பொழுதுப் பரவசத்தைப் பெற்றிருப்பீர்கள்.

ஆயின் உண்மையில் இது இன்பமல்ல, மகிழ்ச்சியே. ஏனெனில் இப்போது நீங்கள் சரியான மூலதாரத்தை, சரியான திசையைப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள. ஒருதடவை இதை நீங்கள் அறிந்துகொண்டால், பின் காமத்தின் வழியாக அதைப் பெறும்போது, மற்றவர் ஒரு கண்ணாடி மட்டுமே என்பதை உடனடியாக உணர்வீர்கள். அவரில்/அவளில் நீங்கள் வெறுமனே பிரதிபலித்தீர்கள். நீங்களும் மற்றவர்க்கு கண்ணாடியாக இருந்தீர்கள். நிகழ்கணத்தில் படிமானமாகச் சிந்திக்கும் மன நிலையிலிருந்து அகன்று சிந்திக்காத மனநிலையை அடைய, ஒருவருக்கொருவர் நீங்கள் உதவிக்கொண்டிருந்தீர்கள்.

மனம் எவ்வளவுக்கு எவ்வளவு சளசளப்பால் நிறைந்திருக்கிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு காமம் கவர்ச்சியாய் தெரிகிறது. மேற்கில் ஒரு அலைக்கழிப்பாக ஆகி இருக்கும் அளவுக்கு ஒருபோதும் கிழக்கை காமம் பீடித்ததில்லை. திரைப்படங்கள், கதைகள், நாவல்கள், கவிதை, பத்திரிகைகள் எல்லாமே காம மயமாக இருக்கிறது. ஒரு காமக் கவர்ச்சியை உருவாக்க முடியாமல் உங்களால் எதையும் விற்க முடிவதில்லை. ஒரு காரை நீங்கள் விற்க வேண்டுமானால் அதை ஒரு காமப் பொருளாக மட்டுமே உங்களால் விற்க முடியும். ஒரு பற்பசையை நீங்கள் விற்க விரும்பினால் அதையும் ஒரு காமக் கவர்ச்சியின் வழியாகமட்டுமே நீங்கள் விற்க முடிகிறது. காமக்கவர்ச்சி கலக்காமல் எதையுமே விற்கமுடியாது. சொல்லப்போனால் காமத்துக்கு மட்டுமே சந்தை இருக்கிறது, வேறெதற்கும் சந்தை இல்லை, இப்படிப்பட்ட தனிச்சிறப்பு இல்லை என்பதுபோல் தோன்றுகிறது.

ஒவ்வொரு சிறப்பும் காமத்தின்மூலமே வருகிறது. மனம் முழுவதுமே காமத்தால் பீடிக்கப்பட்டுள்ளது ஏன்? இதற்குமுன் ஒருபோதும் இப்படி நேர்ந்ததில்லையே, ஏன்? மனித வரலாற்றில் இது ஒரு புது விசயமாகும். இப்போது மேற்கானது எண்ணங்களில் முற்றிலுமான அழுந்திக் கிடக்கிறது என்பதே இதற்குக் காரணம். இங்கே - இப்போதே இருப்பதற்கான சாத்தியம் இல்லாமல் இருக்கிறது. அது - காமத்தில் தவிர. காமம் மட்டுமே ஒரே சாத்தியமாக எஞ்சி இருக்கிறது; இப்போது அதுவும் போய்க்கொண்டிருக்கிறது

நவீன மனிதனுக்கு இதுவும்கூட இயலாததாகி இருக்கிறது - உடலுறவில் ஈடுபட்டிருக்கும்போது வேறு எதை எதையோ அவனால் யோசிக்க முடிகிறது. உடலுறவில் ஈடுபட்டிருக்கும்போது கூட நீங்கள் வேறு விசயங்களை - உதாரணமாக உங்கள் வங்கிக்கணக்கை -

நினைத்துக்கொண்டிருக்க முடிகிறது, அல்லது அந்த நேரத்திலும் கூட ஒரு நண்பருடன் நீங்கள் பேசிக்கொண்டிருக்க முடிகிறது. அல்லது தொடர்ந்து வேறெங்கோ இருந்துகொண்டிருக்க முடிகிறது என்னுமளவுக்கு நீங்கள் ஆகிவிட்டபின் காமமும் தொலைந்துவிடும். இனி அது வெறுமனே சலிப்பூட்டுவதாக, ஏமாற்றம் தருவதாகவே இருக்கும். ஏனெனில் காமமல்ல விசயம். இதுதான் விசயம்: அதாவது காம ஆற்றல் மிகவும் வேகமாக இயங்குவதால் உங்கள் மனம் நின்றுவிடுகிறது. காமம் பொறுப்பேற்றுக் கொள்கிறது. ஆற்றல் வெகுவேகமாகப் பாய்வதால், வெகு உயிர்த்துடிப்புடன் பாய்வதால் உங்கள் வழக்கமான சிந்தனைப் பாங்குகள் நின்று விடுகின்றன.

ஒரு கதை கேள்விப்பட்டிருக்கிறேன். ஒருமுறை முல்லா நசுருதீன் ஒரு காட்டின் வழியாகப் போய்க்கொண்டிருந்தார். அவர் ஒரு மண்டைஓட்டைப் பார்த்தார். சும்மா தெரிந்துகொள்வதற்காக அதனிடம் ஒரு கேள்விகேட்டார். எப்போதுமே எதையும் அறிந்து கொள்வதில் அவர் ஆர்வமுடையவர். ''ஐயா, எது உங்களை இங்கே கொண்டு வந்தது?'' என்றார் உடனே அந்த மண்டைஓடு ''பேச்சுதான் என்னை இங்கே கொண்டு வந்தது, ஐயா'' என்றதும் முல்லா பிரமித்து விட்டார். அவரால் அதை நம்ப முடியவில்லை. ஆனால் அவர் அதை காதால் கேட்டாரே. எனவே அரசவைக்கு ஓடினார். ''நான் ஒரு அதிசயத்தைப் பார்த்தேன். ஒரு மண்டை ஓடு பேசுகிறது! நம்ம ஊருக்கு பக்கத்தில் இருக்கும் காட்டில்தான் அது கிடக்கிறது,'' என்றார்.

அரசனாலும் அதை நம்ப முடியவில்லை. ஆனாலும் அவனுக்கும் ஆர்வம் ஏற்பட்டது. சபையே மொத்தமாகக் கிளம்பியது. அவர்கள் காட்டுக்குள் போனார்கள். நசுருதீன் அந்த மண்டை ஓட்டின் அருகில் போய் மறுபடியும் அதே கேள்வியைக் கேட்டார், ''எது உங்களை இங்கே கொண்டு வந்தது, ஐயா?'' ஆனால் மண்டைஓடு மவுனமாக இருந்தது. அவர் திரும்பத்திரும்ப கேட்டார். ஆனால் மண்டைஓடோ வாயேதிறக்கவில்லை.

அரசன் சொன்னான், ''எனக்கு முதலிலேயே தெரியும், நசுருதீன். நீ ஒரு பொய்யன். ஆனாலும் இது ரொம்ப அதிகம். நீ செய்த குறும்புக்கு தக்க தண்டனையை நீ அனுபவித்தாக வேண்டும்'' - முல்லாவின் தலையை வெட்டி அதை அந்த மண்டை ஓட்டின் பக்கம் எறும்புகள் தின்னும்படி வீசிவிடும்படி தன் காவலாளிடம் ஆணையிட்டான் மன்னன்.

அரசன், அவனது பரிவாரம் எல்லாரும் போனபின் மண்டை ஓடு மறுபடியும் பேசத் தொடங்கி ''எது உங்களை இங்கே கொண்டு வந்தது, ஐயா?'' என்று கேட்டது. அதற்கு நசுருதீன், ''பேச்சுதான் என்னை இங்கே கொண்டு வந்தது ஐயா'' என்று பதில் சொன்னார்.

பேச்சுத்தான் இன்றைய நிலைமைக்கு மனிதரை கொண்டு வந்திருக்கிறது. ஓயாமல் சளசளக்கும் மனம் மகிழ்ச்சியை சிறிதும் அனுமதிக்காது. மகிழ்ச்சிக்கான எவ்வித வாய்ப்பையும் வழங்காது. ஏனெனில் அமைதியான மனம் மட்டுமே தன்னுள்ளே பார்க்க முடியும், அமைதியான மனத்தால் மட்டுமே தன்னுள் எப்போதும் ஊறிக் குமிழியிட்டுக் கொண்டிருக்கும் அமைதியை, ஆனந்தத்தை கேட்க முடியும். ஆனால் அது மிகவும் நுட்பமானது. எனவே மனம் இரைந்துகொண்டிருந்தால் அதை நீங்கள் கேட்க முடியாது.

காமத்தில் மட்டுமே அந்தச் சத்தம் சிலவேளைகளில் நிற்கிறது. அதுவும் சிலவேளைகளில்தான். காமத்திலும் நீங்கள் வாடிக்கையாகி விட்டால், திருமணமான கணவன் மனைவியர் போலாகி விட்டால், பின் அது ஒருபோதும் நிற்பதில்லை. முழுச் செயலும் தானியங்கித் தனமாக நடக்கிறது. மனமோ அதன் போக்கிலேயே போகிறது. அந்நிலையில் காமமும் சலித்து விடுகிறது.

கணநேர இன்பத்தையாவது, தரமுடிகிற எதுவும் கவருகிறது. அந்த இன்பம் வெளியில் இருந்து வருவது போல் தோன்றலாம். ஆனால் எப்போதுமே அது உள்ளிருந்தே வருகிறது. வெளிப்புறம் என்பது வெறுமனே ஒரு கண்ணாடிபோல் மட்டுமே இருக்க முடியும். உள்ளிருந்து ஊறும் மகிழ்ச்சி வெளியில் பிரதிபலிக்கப்படுகிற போது அது இன்பம் எனப்படுகிறது. இது பதஞ்சலியின் வரையறை: உள்ளிருந்து பெருக்கெடுக்கும் ஆனந்தம் வெளியில் எங்கிருந்தாவது பிரதிபலிக்கிறது. வெளிப்புறம் ஒரு கண்ணாடியாகச் செயல்படுகிறது. ஆகவே இந்த ஆனந்தம் வெளியிலிருந்தே வருகிறது என்று நீங்கள் நினைத்தால், அது இன்பம் எனப்படுகிறது. நாம் ஆனந்தத்தை தேடுகிறோம், இன்பத்தை தேடவில்லை. எனவே மகிழ்ச்சியின் கீற்றுகளையேனும் நாம் பெறமுடியாத வரை நம் இன்ப நாட்ட முயற்சிகளை நம்மால் நிறுத்த முடியாது. திளைப்பு என்றாலே இன்பத்திற்கான தேடுதல் தான்.

உணர்வுள்ள முயற்சி தேவைப்படுகிறது. இரண்டு காரணங்களுக்காக. ஒன்று: ஒரு கணநேரம் இன்பமாக நீங்கள் உணரும்

போதெல்லாம் அதை ஒரு தியானச் சூழ்நிலையாக உருமாற்றுங்கள். இன்பத்தை மகிழ்ச்சியை ஆனந்தத்தை அனுபவிப்பதாக நீங்கள் உணரும் போதெல்லாம் உங்கள் கண்களைமூடி உள்ளே பாருங்கள். எங்கிருந்து அது வருகிறது என்பதைப் பாருங்கள். இந்தக் கணத்தை இழக்காதீர்கள்: இது மிகவும் மதிப்புக்குரியது. அந்த நேரத்தில் நீங்கள் உணர்வுடன் இருக்காவிட்டால் அது வெளியில் இருந்து வருகிறது என்றே தொடர்ந் நீங்கள் நீங்கள் நினைக்க நேரும். அதுதான் உலகத்தின் பிழையான பார்வை.

நீங்கள் உணர்வுடன், தியானத்தன்மையுடன் இருந்தால், மெய்யான ஆதாரத்தை நீங்கள் தேடினால், அது உள்ளிருந்தே பாய்கிறது என்பதை, கூடிய சீக்கிரமே அறிய வருவீர்கள். எப்போதுமே அது உள்ளிருந்தே வருகிறது என்பதையும் ஏற்கனவே நீங்கள் பெற்றிருக்கும் ஒன்றே அது என்பதையும் நீங்கள் அறிந்ததுமே, புலனின்பத்தில் திளைத்தல் வீழ்ந்து விடுகிறது. இதுவே ஆசையின்மையை நோக்கிய முதல் படியாகும். இனி நீங்கள் தேடிக்கொண்டிருப்பதில்லை. ஏங்கிக் கொண்டிருப்பதில்லை ஆசைகளை நீங்கள் அழித்துக் கொண்டிருப்பதில்லை. ஆசைகளுடன் நீங்கள் போராடுவதில்லை. அதைவிடப்பெரிய ஒன்றை நீங்கள் கண்டுகொண்டு விட்டீர்கள், ஆசைகள் இனி அவ்வளவு முக்கியமாகப்படுவதில்லை. அவை வாடி உதிர்கின்றன.

இதை நினைவில் கொள்ளுங்கள்: ஆசைகள் கொல்லப்படுவதற்கோ அழிக்கப்படுவதற்கோ அல்ல. அவை தாமே வாடி உதிரக் கூடியவை. அவற்றை நீங்கள் புறக்கணித்தாலே போதுமானது. ஏனெனில் அதனினும் பெரிய ஊற்று உங்களிடம் இருக்கிறது. அதை நோக்கிக் காந்தம்போல் நீங்கள் ஈர்க்கப்படுகிறீர்கள். இப்போது உங்களின் முழு ஆற்றலும் உள்நோக்கி இயங்குகிறது. ஆசைகள் வெறுமனே புறக்கணிக்கப் படுகின்றன.

அவற்றுடன் நீங்கள் போராடவில்லை. அவற்றுடன் நீங்கள் போராடினால் ஒருபோதும் நீங்கள் வெல்லமாட்டீர்கள். உங்கள் கையில் சில வண்ணக்கற்கள் இருப்பதைப் போன்றதே இது. பின் திடீரென வைரங்களைப்பற்றி நீங்கள் அறிய வருகிறீர்கள். அவை அங்கே கிடக்கின்றன. உடனே அந்த வைரங்களுக்கு உங்கள் கையில் இடம் உண்டாக்கிக் கொள்வதற்காக வண்ணக்கற்களை நீங்கள் எறிந்து விடுகிறீர்கள். கற்களுடன் நீங்கள் போராடவில்லை. வைரங்கள்

இருக்கும்போது வண்ணக் கற்களை அப்படியே விட்டுவிடுகிறீர்கள் - அவ்வளவே.அவை தம் அர்த்தத்தை இழந்துவிட்டன.

ஆசைகள் தம் அர்த்தத்தை இழந்தாக வேண்டும். நீங்கள் மல்லுக்கட்டினால் அர்த்தம் இழக்கப்படுவதில்லை. மாறாக, சண்டைபிடிப்பதன் மூலம் அவற்றுக்கு நீங்கள் அதிக அர்த்தத்தைக்கூட வழங்கிவிடலாம். அப்போது அவை அதிக முக்கியமானவை ஆகின்றன. இதுவே நடந்துகொண்டிருக்கிறது. எந்த ஆசையுடன் ஒருவர் போராடுகிறாரோ அந்த ஆசையே அவரது மனத்தின் மையமான ஆசையாக ஆகிறது. காமத்துடன் நீங்கள் போரிட்டால் காமமே மையம் ஆகிறது. பின் தொடர்ச்சியாக அதில் நீங்கள் ஈடுபட்டிருப்பீர்கள். அதனால் நிரம்பி இருப்பீர்கள். அது ஒரு காயம்போல் ஆகிறது. நீங்கள் எங்கெங்கே நோக்கினாலும் அந்தக் காயமானது உடனடியாக துருத்தி நிற்கிறது; எதை எதை நீங்கள் பார்த்தாலும் அதுவெல்லாம் காம மயமாகவே ஆகிறது.

மனத்துக்கு ஒரு தொழில்நுட்பம் இருக்கிறது. அது ஒரு பழைய எஞ்சி நிற்கும் பிழைப்பு தொழில் நுட்பம். அதுதான் சண்டைபிடிப்பது அல்லது தப்பிஓடுவது. மனத்தின் வழிகள் இரண்டு; ஒன்று, ஒன்றுடன் நீங்கள் சண்டைபோட முடியும் அல்லது அதனிடமிருந்து நீங்கள் தப்பிஓட முடியும். நீங்கள் வலுவாக இருந்தால் சண்டை போடுகிறீர்கள். நீங்கள் பலவீனமாக இருந்தால் தப்பி ஓடமுடியும். தப்பி ஓடுகிறீர்கள்; ஓட்டமெடுக்கிறீர்கள். ஆனால் இரண்டு வழிகளிலும் எதிராளியே முக்கியம் ஆகிறது. எதிராளியே மையம் ஆகிறது. உலகத்துடன் நீங்கள் சண்டைபோடலாம் அல்லது உலகத்திடமிருந்து நீங்கள் தப்பி ஓடலாம். உலகத்திலேயே ஆசைகளுக்கு சாத்தியம் உள்ளது. நீங்கள் இமய மலைக்குப் போக முடியும். அதுவும் ஒரு போராட்டம்தான். பலவீன மானவரின் போராட்டம் அது.

ஒரு கதை கேட்டிருக்கிறேன்: ஒரு தடவை முல்லா நசுருதீன் ஒரு ஊரில் கடையில் சாமான் வாங்கிக் கொண்டிருந்தார். தன் கழுதையை தெருமுனையில் விட்டுவிட்டு சாமான் வாங்குவதற்காக ஒரு கடைக்குள் நுழைந்தார். திரும்பிவந்து பார்த்தபோது அவர் வெகுண்டார். யாரோ அவர் கழுதைமேல் அதன் உடல்பூராவும் சிவப்பு வண்ணம் பூசியிருந்தார்கள். எனவே அவர் வெகுண்டார். ''யார் இதை செய்தது? அவனை நான் கொல்லாமல் விடமாட்டேன்!'' என்று சொல்லி விசாரித்தார்

ஒரு சிறுவன் அங்கே நின்று கொண்டிருந்தான். ''ஒரு மனிதர்தான் இப்படி செய்தார். அவர் இப்போதுதான் மண்டபத்துக்குள் போனார்'' என்று சொன்னான். எனவே நசுருதீன் அங்கு விரைந்து சென்றார். கோபத்துடன், வெறியுடன் ஓடினார். ''யார் இதைச் செய்தது? யார் என் கழுதை மேல் வண்ணமடித்தது?'' என்று கேட்டார்.

ஒரு குண்டன், மிகவும் பலசாலியானவன் எழுந்து நின்று ''நான்தான் செய்தேன். அதுக்கென்ன இப்போ?'' என்றார். அதற்கு நசுருதீன் ''நன்றி ஐயா, மிகவும் அருமையான வேலை செய் திருக்கிறீர்கள். முதல் பூச்சு காய்ந்துவிட்டது என்பதை சொல்லத்தான் வந்தேன்.'' என்றார்.

நீங்கள் பலசாலியாக இருந்தால் நீங்கள் சண்டைபோடத் தயாராக இருக்கிறீர்கள். நீங்கள் பலவீனமாக இருந்தால் பின் தப்பிஓடத் தயாராக இருக்கிறீர்கள். ஆனால் இரண்டு உதாரணத்திலும் நீங்கள் கூடுதல் பலசாலியாக ஆவதில்லை. இரண்டு நிலவரத்திலும் எதிராளியே உங்கள் மனத்தின் மையமாக மாறி இருக்கிறது. சண்டைபோடல், தப்பிஓடுதல் என்றும் இரண்டு மனோபாவங்களே உள்ளன - ஆகவே இரண்டும் தவறானதே. ஏனென்றால் இரண்டின் மூலமாகவும் மனமே வலுவடைகிறது.

மூன்றாவது ஒரு சாத்தியப்பாடு இருக்கிறது என்கிறார் பதஞ்சலி. சண்டையும் போட வேண்டாம், தப்பியும் ஓடவேண்டாம். விழிப்பாக மட்டுமே இருங்கள். உணர்வுடன் மட்டுமே இருங்கள். எந்த நிலைமையிலும் சாட்சியாக மட்டும் இருங்கள். உணர்வுள்ள முயற்சி என்றால், ஒன்று: மகிழ்ச்சிக்கான அக ஆதாரத்தை தேடுதல். இரண்டு: பழைய பழக்க முறைகளுக்கு சாட்சியாயிருத்தல். அவற்றை எதிர்த்துக்கொண்டித்தல் அல்ல, அவற்றுக்கு சாட்சியாயிருத்தல்.

> **வைராக்கியத்தின் அல்லது ஆசையின்மையின் முதல் நிலை, உணர்வுடன்கூடிய பயிற்சிமூலம், புலனின்பங்களுக்கான வேட்கையில் தான் மூழ்கித் திளைப்பதை நிறுத்தி விடுதலாகும்.**

''உணர்வுடன் கூடிய முயற்சி'' என்பதே திறவுகோல் வாசகம். உணர்வு தேவைப்படுகிறது முயற்சியும் தேவைப்படுகிறது. முயற்சி உணர்வுடன் கூடியதாக இருக்க வேண்டும். ஏனெனில் உணர்வற்ற

முயற்சிகளும் இருக்க முடியும். சிற்சில ஆசைகளை நீங்கள் கைவிட்டிருப்பதை நீங்களே அறியாத வகையில் கைவிட முடிகிற ஒரு விதத்தில் நீங்கள் பயிற்றுவிக்கப்பட முடியும்.

எடுத்துக்காட்டாக நீங்கள் ஒரு சைவக் குடும்பத்தில் பிறந்திருந்தால் நீங்கள் மரக்கறி உணவையை சாப்பிட்டுக்கொண்டு இருப்பீர்கள். அசைவ உணவு என்னும் பேச்சுக்கே இடமிராது. அதை நீங்கள் ஒருபோதும் உணவுடன் கைவிட்டதில்லை. நீங்கள் வளர்க்கப்பட்ட விதத்திலேயே உணர்வு அற்றமுறையில் அது தானே கைவிடப்பட்டிருக்கிறது. ஆனால் இது உங்களுக்கு எந்த ஒருமையையும் வழங்கப் போவதில்லை. இது உங்களுக்கு எந்த ஆன்மீக பலத்தையும் கொடுக்கப் போவதில்லை. உணர்வுடன் ஒன்றை நீங்கள் செய்யாதவரை அது ஆதாயம் ஆவதில்லை.

பல சமுதாயங்கள் தம் குழந்தைகளின் வாழ்வில் சில தவறான தன்மைகள் நுழையவே முடியாதபடி அவர்களை வளர்க்க முயன்றுள்ளன. அவர்களுக்குள் அவை நுழையவும் செய்யாது. அதன்மூலம் நிஜமான ஆதாயமும் உண்டாவதில்லை. ஏனெனில் உணர்வைச் சம்பாதித்துக்கொள்வதே உண்மையான ஆதாயம் உணர்வையோ பிரயாசையின் மூலமே அடைந்துகொள்ள முடியும். சுயமுயற்சியின்றி ஏதேனும் ஒன்று உங்களைக் கட்டுப்படுத்தினால் அது ஒரு ஆதாயமே அல்ல.

இந்தியாவில் ஏராளமான சைவர்கள் இருக்கிறார்கள். சமணர்கள், பிராமனர்கள், போன்றோர் சைவ உணவினரே. அதன்மூலம் அவர்கள் அடைவது ஒன்றுமில்லை. ஏனெனில் ஒரு சமணக் குடும்பத்தில் பிறந்து விடுவதாலேயே, சைவ உணவினனாய் இருப்பது ஒன்றும் பெரிய விசயமில்லை. அது ஒரு உணர்வுடன்கூடிய முயற்சியாக இல்லை. அதற்காக நீங்கள் எதையும் செய்துவிடவில்லை. அப்படியே நீங்கள் ஒரு அசைவக் குடும்பத்தில் பிறந்திருந்தால் நீங்கள் மாமிச உணவை எடுத்துக்கொண்டிருப்பீர்கள்.

உணர்வுடன்கூடிய முயற்சி செய்யப்படாதவரை, நீங்கள் ஒருபோதும் உருப்படுவதில்லை. நீங்களாக ஒன்றைச் செய்ய வேண்டி இருக்கிறது. நீங்களே சுயமான ஒன்றைச் செய்கிறபோது நீங்கள் ஒன்றை ஆதாயமாக்குகிறீர்கள். உணர்வுடன்கூடிய முயற்சி இன்றி எதையும் ஆதாயமாக்கிக் கொள்ள முடியாது. என்பதை நினைவில் கொள்ளுங்கள். அறுதி உண்மைகளில் ஒன்று இது. உணர்வு பூர்வமாக இல்லாமல்

எதுவுமே சாதிக்கப்படுவதில்லை! நீங்கள் ஒரு செம்மையான புனிதர் ஆக ஆகலாம். ஆனால் உணர்வுமூலமாக நீங்கள் அப்படி ஆகியிராவிட்டால் அது வீணானது, பயனற்றது. அங்குலம் அங்குலமாக நீங்கள் போராடியாக வேண்டும். ஏனெனில் போராட்டத்தின் மூலம் அதிக உணர்வு தேவைப்படும். அப்படி அதிக உணர்வை நீங்கள் பயிலும்போது நீங்கள் அதிக உணர்வுடையவர் ஆகிறீர்கள். ஒரு கட்டம் வரும்போது நீங்கள் முழுஉணர்வு - தூய உணர்வு பெற்றவராக ஆகிறீர்கள்.

**முதல் கட்டம் இதுதான்:**

**உணர்வுடன்கூடிய முயற்சிமூலம், புலனின்பங்களுக்கான வேட்கையில் தான் மூழ்கித் திளைப்பதை நிறுத்தி விடுதலாகும்.**

*செய்ய வேண்டியது என்ன? நீங்கள் எவ்விதமான இன்பநிலையில் இருந்தாலும் - காமம், உணவு, பணம், அதிகாரம் என உங்களுக்கு இன்பத்தைத் தரக்கூடிய எந்த நிலையில் நீங்கள் இருந்தாலும் - அதன்மீது தியானியுங்கள். அது எங்கிருந்து வருகிறது என்பதைக் கண்டுபிடிக்க மாத்திரம் முயலுங்கள். நீங்கள்தான் ஆதாரமா அல்லது ஆதாரம் வெளியில் எங்காவது இருக்கிறதா? ஆதாரம் வெளியில் எங்காவது இருந்தால், பின் எவ்விதமான தன்மை மாற்றத்துக்கும் வாய்ப்பில்லை. ஏனென்றால் அந்த ஆதாரத்தைச் சார்ந்தே நீங்கள் இருப்பீர்கள்.*

*ஆனால் அதிர்ஷ்டவசமாக அந்த ஆதாரம் வெளியில் எங்கும் இல்லை. உங்களுக்குள்ளேயே அது இருக்கிறது. நீங்கள் தியானத்தால் அதை நீங்கள் கண்டுகொள்ள முடியும். உள்ளே இருந்து ஒவ்வொரு வினாடியும் அது தட்டிக் கொண்டிருக்கிறது; ''நான் இங்கே இருக்கிறேன்!'' என்கிறது. அது அங்கே இருந்து ஒவ்வொரு நொடியும் தட்டிக் கொண்டிருக்கும் உணர்வை ஒருதரம் நீங்கள் கண்டுகொண்டுவிட்டால் - வெளியில் நீங்கள் செய்வதெல்லாம், அது நிகழ்வதற்கான சூழலை உருவாக்குவது மட்டுமே. சூழ்நிலை இல்லாவிட்டாலும் அது நிகழ முடியும். அதன்பின் நீங்கள் யாரையும் சார்ந்திருக்கத் தேவையில்லை; உணவு, காமம், அதிகாரம் எதையும் சார்ந்திருக்கத் தேவையில்லை. உங்களுக்கு நீங்களே போதுமானவராக இருக்கிறீர்கள். இந்த உணர்வுக்கு, போதும் என்னும் உணர்வுக்கு, நீங்கள் வந்துவிட்டதுமே அனுபவித்தல் - அனுபவிப் பதற்கான மனம்,அனுபவிக்கும் மனம் - மறைந்துவிடுகிறது.*

இனி உணவை நீங்கள் ருசித்து உண்ணமாட்டீர்கள் என்பது அல்ல இதன் பொருள். இன்னுமதிகமாய் நீங்கள் ருசிக்க முடியும். ஆனால் இப்போது அது வேடிக்கையானதாக இருக்கிறது, விளையாட்டாக இருக்கிறது. அது ஒரு கொண்டாட்டமாகவே இருக்கிறது. ஆனாலும் அதை நீங்கள் சார்ந்து இருப்பதில்லை. ஆதாரம் அதுவல்ல. மேலும், இரண்டு பேர் - காதலர் இருவர் - தம் இன்பத்தின் மூலதாரம் மற்றவர் அல்ல என்பதை ஒருமுறை காண முடிந்ததுமே, ஒருவருடன் ஒருவர் சண்டை பிடிப்பதை அவர்கள் நிறுத்திவிடுவார்கள். அப்போதுதான் முதல்முறையாக அவர்கள் ஒருவரை ஒருவர் நேசிக்கத் தொடங்குகிறார்கள்.

மற்றபடி, வேறு எந்தவகையிலும் நீங்கள் சார்ந்திருக்கும் மற்றவரை உங்களால் நேசிக்கவே முடியாது. அவரை நீங்கள் வெறுப்பீர்கள். ஏனெனில் அவரை நீங்கள் சார்ந்திருக்க வேண்டி உள்ளது. அவர் இல்லாமல் உங்களால் மகிழ்ச்சியாக இருக்க முடிவதில்லை. எனவே அவரிடம்தான் திறவுகோல் இருக்கிறது. உங்கள் மகிழ்ச்சிக்கான திறவுகோலை தன் கையில் வைத்திருப்பவர் உங்களின் சிறைக்காவலரே ஆகிறார். மற்றவரிடமே சாவி இருக்கிறது என்று பார்ப்பதால்தான் காதலர்கள் பிணங்குகிறார்கள். ''என்னை மகிழ்ச்சியானவளாக அல்லது மகிழ்ச்சியில்லாதவளாகச் செய்துவிட அவனால் முடியும்'' என்று பார்க்கிறார்கள். நீங்களே ஊற்று, மற்றவர் அவரது சொந்த மகிழ்ச்சியின் ஊற்றாகவே இருக்கிறார் என்பதை நீங்கள் அறிய வந்ததுமே உங்கள் மகிழ்ச்சியை நீங்கள் பகிர்ந்து கொள்ள முடியும். அது வேறு விசயம். ஆனால் நீங்கள் சார்ந்தவர்களாய் இல்லை. உங்களால் பகிர்ந்து கொள்ள முடிகிறது. நீங்கள் சேர்ந்துகொண்டாட முடிகிறது. அன்பு - காதல் என்பதன் பொருளே அதுதான் - சேர்ந்து கொண்டாடுவது, சேர்ந்து பகிர்ந்து கொள்வது; ஒருவரை ஒருவர் விரட்டாமல் இருப்பது, ஒருவரை ஒருவர் சுரண்டாமல் இருப்பது - இதுதான் அன்பு - காதல்.

ஏனெனில் சுரண்டுவது அன்பாக இருக்க முடியாது. அந்நிலையில் நீங்கள் மற்றவரை ஒரு கருவியாகப் பயன்படுத்துகிறீர்கள். அப்படி யாரை ஒரு கருவியாக நீங்கள் பயன்படுத்தினாலும், அவர் உங்களை வெறுக்கவே செய்வார். காதலர்கள் ஒருவரை ஒருவர் பயன்படுத்திக் கொண்டும் சுரண்டிக்கொண்டும் இருப்பதாலேயே ஒருவரை ஒருவர் வெறுக்கிறார்கள். மிக ஆழமான பரவசமாக இருக்க வேண்டிய அன்பு - காதல் மிக ஆபாசமான நரகமாக ஆகிறது. ஆனால் உங்களின்

மகிழ்ச்சிக்கு நீங்களே ஆதாரம் என்பதை நீங்கள் ஒருமுறை அறிந்ததுமே, வேறுயாரும் ஆதாரமில்லை. என்று அறிந்ததுமே இனி நீங்கள் சுதந்திரமாக அன்பைப் பகிர்ந்து கொள்ள முடியும். இனி மற்றவர் உங்கள் எதிரி அல்ல. மிக நெருங்கிய எதிரிகூட அல்ல. முதல்முறையாக நட்பு எழுகிறது. எதையும் உங்களால் ரசிக்க முடிகிறது.

மேலும், நீங்கள் சுதந்திரமாக இருக்கும்போது மட்டுமே உங்களால் மகிழ்ச்சியாய் இருக்க முடியும். சுதந்திரமான மனிதரே ரசனையுள்ள மனிதராக முடியும். உணவின் மீது வெறியாக, உணவினால் பீடிக்கப்பட்டவராக இருப்பவரால் அதை ரசித்து ருசிக்க முடியாது. தன் வயிற்றை அவர் நிரப்பிக்கொள்ளலாம். ஆனால் அவரால் ஆனந்திக்க முடியாது. அவர் உண்பது ஒரு வன்முறை போன்றது. அது ஒருவித கொலைச் செயலே. உணவை அவர் சாகடித்துக் கொண்டிருக்கிறார். உணவை அவர் அழித்துக் கொண்டிருக்கிறார். தம் மகிழ்ச்சி மற்றவர்களைப் பொறுத்திருக்கிறது என உணரும் காதலர்கள் சண்டை பிடித்துக்கொண்டிருக்கிறார்கள், அடுத்தவரை ஆதிக்கம் செய்ய முயன்று கொண்டிருக்கிறார்கள், அடுத்தவரை சாகடிக்க முயன்றுகொண்டிருக்கிறார்கள். அடுத்தவரை நாசமாக்க முயன்று கொண்டிருக்கிறார்கள். ஆதாரம் நமக்குள்ளேதான் இருக்கிறது என்பதை நீங்கள் அறிகிறபோது ஒவ்வொன்றையும் உங்களால் அதிகமாய் ரசிக்க முடியும். பின் வாழ்க்கை முழுவதுமே ஒரு விளையாட்டு ஆகிறது. கணத்துக்கு கணம் முடிவின்றி நீங்கள் கொண்டாடிக்கொண்டே போகமுடியும்.

இதுதான் முதல் நிலை; முயற்சியுடன் கூடியது. உணர்வுடனும் முயற்சியுடனும் நீங்கள் ஆசையின்மையை அடைகிறீர்கள். இது முதல் கட்டமே என்கிறார் பதஞ்சலி. ஏனெனில் முயற்சி கூட நல்லதல்ல. உணர்வுடன் இருப்பது கூட நல்லதல்ல. ஏனெனில் ஏதோ ஒருவிதப் போராட்டம், மறைவான போராட்டம் இன்னும் இருக்கிறது என்பதே அதன் பொருளாகும்.

இரண்டாவதும் இறுதியானதுமான கட்டம்; வைராக்கியம் அல்லது ஆசையின்மையின் இறுதிநிலை:

> **மூலாதார புருஷனின் உள்ளார்ந்த இயல்பை அறிவதன் மூலம் ஆசையை முற்றிலுமாக விட்டுவிடுத லாகும்.**

முதலாவதாக, உங்களுக்கு ஏற்படும் எல்லா மகிழ்ச்சிக்கும் மூலாதாரமாக நீங்களே இருக்கிறீர்கள் என்பதை நீங்கள் அறிய வேண்டி இருக்கிறது. இரண்டாவதாக, உங்கள் உள்மனத்தின் முழு இயல்பையும் நீங்கள் அறிய வேண்டி இருக்கிறது. முதல் விசயம், நீங்களே ஆதாரம் என்பது. இரண்டாவது விசயம், ''இந்த ஆதாரம் என்ன?'' என்பது. முதலில், நீங்களே உங்கள் மகிழ்ச்சியின் ஆதாரம் என்றளவிலேயே போதுமானது. அடுத்து, இந்த ஆதாரம், இந்த புருஷன், இந்த உள்மனம் என்பது அதன் முழுமையில் என்ன என்பது: முழுசாக ''நான் யார்?''

ஒருமுறை இந்த மூலத்தை அதன் முழுமையில் அறிந்ததுமே நீங்கள் அனைத்தையும் அறிந்தவர் ஆகிறீர்கள். பின் மகிழ்ச்சிமட்டுமல்ல, மொத்தப் பிரபஞ்சமும் உங்களுக்குள்ளேயே, நிலவுவது அனைத்தும், உள்ளுக்குள்ளேயே நிலவுகிறது - மகிழ்ச்சி மட்டுமல்ல. அதன்பின் கடவுள் என்பது எங்கோ மேகத்தின் மேல் உட்கார்ந்துகொண்டிருப்பது அல்ல, அது உங்களுக்குள்ளேயே இருக்கிறது. அந்நிலையில் நீங்களே ஆதாரம்; அனைத்துக்கும் மூலாதாரம். அந்நிலையில் நீங்களே மையமாக இருக்கிறீர்கள்.

இருத்தலின் மையமாக நீங்கள் ஆனதுமே, இருத்தலின் மையம் நீங்களே என்பதை நீங்கள் அறிந்ததுமே, அனைத்து அவலமும் மறைந்துவிடுகிறது. ஆசையின்மை இப்போது இயல்பானதாக, சகஜமாக ஆகிறது. அதற்கென முயற்சியோ, பாடுபடுதலோ / கட்டுப்பாடோ தேவைப்படுவதில்லை. அது தானாக இருக்கிறது. இயல்பானதாக அது ஆகி இருக்கிறது. அதை நீங்கள் இழுத்துக்கொண்டோ தள்ளிக் கொண்டோ இல்லை. இழுக்கவும் தள்ளவும் கூடிய ஒரு 'நான்' இப்போது அங்கு இருப்பதில்லை.

இதை நினைவில் வையுங்கள்: போராட்டமே அகங்காரத்தை உருவாக்குகிறது. உலகத்தில் நீங்கள் போராடினால் அது ஒரு முரட்டு அகங்காரத்தைப் படைக்கிறது. ''நான் பணம்படைத்தவன், கௌரவ மானவன், அதிகாரம் வகிப்பவன்.'' என்பது போன்ற அகங்காரம். உள்ளுக்குள் நீங்கள் போராடினால் அது ஒரு நுட்பமான அகங்காரத்தை உருவாக்குகிறது: ''நான் சுத்தமானவன், நான் ஒரு புனிதன், நான் ஒரு ஞானி.'' என்பது போ்ன்ற அகங்காரம். ஆனால் போராட்டத்தில் 'நான்' என்ப்து தங்கியே இருக்கிறது. எனவே மிக நுட்பமான அகங்காரம் படைத்த பரிசுத்த அகங்காரம் படைத்தவர்கள் பலர் இருக்கிறார்கள்.

அவர்கள் இவ்வுலக மனிதர்களாக இல்லாமல் இருக்கலாம். அது உண்மைதான். அவர்கள் வேற்றுலக மனிதர்களாகவே இருக்கிறார்கள். ஆனாலும் அங்குப் போராட்டம் இருக்கிறது. அவர்கள் எதையோ சாதித்திருக்கிறார்கள். அந்த சாதனையானது 'நான்' இன் கடைசி நிழலை இன்னும் தன்னில் கொண்டிருக்கிறது.

பதஞ்சலியைப் பொறுத்தவரை ஆசையின்மைக்கான இரண்டாவது படி அல்லது இறுதிப்படி என்பது அகங்காரம் முழுமையாக மறைவதுதான். இயற்கைதான் இயங்கிக்கொண்டிருக்கிறது. ''நான்'' அல்ல; உணர்வுடன் கூடிய முயற்சி அல்ல. நீங்கள் உணர்வுடன் இருக்க மாட்டீர்கள் என்பதல்ல இதன்பொருள். மாறாக செம்மையான உணர்வுடன் நீங்கள் இருப்பீர்கள். ஆனால் அப்போது உணர்வுடன் இருப்பதற்கு எவ்வித முயற்சியும் தேவைப்படாது. சுய - உணர்வு இருக்காது; தூய உணர்வே இருக்கும். உங்களையும் இருத்தலையும் அவை இருக்கிறபடியே நீங்கள் ஏற்றுக் கொண்டிருக்கிறீர்கள்.

முழுமையான ஏற்பு - லாவோ சு இதையே 'தாவோ' , கடலை நோக்கி ஓடும் ஆற்றின் ஓட்டம் என்கிறார். அது எந்த முயற்சியும் செய்வதில்லை. கடலைச் சென்று அடைவதில் அதற்கு எந்த அவசரம் இல்லை. அது சென்றடையாவிட்டாலும் அதனால் அது ஏமாற்றம் அடையாது. அது சென்றடைய லட்சக்கணக்கான ஆண்டுகள் ஆனாலும் ஒன்றும் பாதகமில்லை - எல்லாம் நன்றாகவே இருக்கிறது. ஆறு ஓடுவது, ஓடுவதே அதன் இயல்பு என்பதால்தான். எந்தச் சிரமமும் அதில் இல்லை. அது ஓடிக்கொண்டே இருக்கிறது.

ஆசைகளை முதல்தடவையாக கணக்கில் கொண்டு கவனிக்கும்போது ஒரு முயற்சி - நுட்பமான முயற்சி - எழுகிறது. முதல் படியுமேகூட ஒரு நுட்பமான முயற்சிதான். ''என் மகிழ்ச்சி எங்கிருந்து வருகிறது?'' என்பதைக்குறித்து நீங்கள் விழிப்பாயிருக்க முயற்சிக்கத் தொடங்குகிறீர்கள். நீங்கள் ஏதாவது செய்தாக வேண்டி இருக்கிறது. அந்தச் செய்கையே அகங்காரத்தை உருவாக்குகிறது. எனவேதான் அது தொடக்கம் மட்டுமே என்கிறார் பதஞ்சலி. அது இறுதி அல்ல என்பதை நீங்கள் நினைவில் கொண்டாக வேண்டும் என்கிறார். இறுதியில் ஆசைகள் மறைந்துவிடுவது மட்டுமல்ல, நீங்களும் மறைந்து விடுகிறீர்கள். உள்ளார்ந்த ஜீவனே பாய்ந்து கொண்டிருக்கிறது.

இந்த தன்னியல்பான பாய்ச்சலே உச்சகட்ட பரவசமாகும். ஏனெனில் அதற்கு அவலம் ஏற்பட வாய்ப்பில்லை எதிர்பார்ப்பு மற்றும் கட்டாய கோரிக்கை மூலமே அவலம் வருகிறது. அங்கு எதிர்பார்க்க, கட்டாயப்படுத்த யாருமில்லை. எனவே என்ன நேர்ந்தாலும் நல்லதே. என்ன நிகழ்ந்தாலும் அது ஆசிர்வாதமே. வேறு எதனோடும் அதை ஒப்பிட முடியாது. அதுவே நிலவரம். மேலும் இறந்த காலத்தோடும் எதிர் காலத்தோடும் அதை ஒப்பிடுவது இல்லை ஆதலால் - ஒப்பிட அங்கு யாருமில்லை ஆதலால் - எதையும் உங்களால் துன்பமாக, வலியாக பார்க்க முடியாது. அத்தகைய ஒரு சூழலில் வேதனை ஏற்பட்டாலும் கூட அது வேதனையாக இருக்காது. இதைப் புரிந்துகொள்வது கடினமே. இருந்தாலும் இதைப் புரிந்தகொள்ள முயலுங்கள்.

யேசு சிலுவையில் அறையப்படுகிறார். யேசுவை மிகவும் சோகமான தோற்றத்துடன் கிறித்தவர்கள் வரைந்துள்ளார்கள். அவர் ஒருபோதும் சிரித்ததே இல்லை என்றுகூட அவர்கள் சொல்கிறார்கள். அவர்களின் ஆலயங்களில் எங்குபார்த்தாலும் யேசுவின் சோகமான உருவத்தையே வைத்திருக்கிறார்கள். இது மனிதத் தன்மையானதே. இதை நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது. ஏனெனில் சிலுவையில் அறையப்பட்ட ஒரு மனிதர் வேதனையுடனேயே இருந்திருக்க வேண்டும். உள்ளுக்குள் அவர் சோகமாகவே இருந்திருக்க வேண்டும். அவர் துன்பத்திலேயே இருந்திருக்க வேண்டும்.

எனவே நம் பாவங்களுக்காக யேசு துன்புற்றார் என்று கிறித்தவர்கள் சொல்லிக்கொண்டே போகிறார்கள். ஆனால் அவர் துன்புற்றார் என்பது முற்றிலும் தவறு! பதஞ்சலியையோ என்னையோ நீங்கள் கேட்டால், அது முற்றிலும் தவறான பார்வையே என்போம். யேசுவால் துன்புற முடியாது. யேசு துன்புறுவது என்பது சாத்தியமில்லை. அப்படி அவர் துன்புற்றால் பின் உங்களுக்கும் அவருக்கும் இடையில் எந்த வேறுபாடும் இல்லை.

வலி இருக்கும். ஆனால் அவர் துன்புற மாட்டார். இது புதிர்போலத் தோன்றலாம். ஆனால் இது புதிரல்ல. இது எளிமையானது. வலி இருக்கிறது. வெளியிலிருந்து நாம் பார்க்கிறபோது அவர் சிலுவையில் அறையப்பட்டிருக்கிறார். அவமதிக்கப்பட்டிருக்கிறார். அவரது உடல் சிதைக்கப்பட்டுள்ளது. வேதனை அங்கு இருக்கிறது. ஆனால் யேசு துன்புற முடியாது. ஏனெனில் யேசு சிலுவையில் அறையப்பட்ட அக்கணத்தில் அவர் எதையும் கேட்கவில்லை. எந்தக் கோரிக்கையும்

அவரிடம் இல்லை. ''இது தவறு. இப்படி நடப்பது கூடாது. எனக்கு முடிசூட்டப் வேண்டியதிருக்க என்னைச் சிலுவையில் அறைகிறீர்களே'' என்று கூற அவரால் முடியாது.

''முடிசூட்டப்பட வேண்டிய நான் சிலுவையில் அறையப்பட்டிருக்கிறேன்'' என்ற எண்ணம் அவர் மனத்தில் இருந்திருக்குமானால் அப்போது வேதனை, வலி இருந்திருக்கும். ''நான் அரசனாக முடிசூட்டப்படவேண்டும்'' என்னும் வருங்கால ஆசை அவர் மனதில் இல்லையென்றால், வருங்கால எதிர்பார்ப்பு எதுவும் இல்லை என்றால், போய்ச்சேர எந்த திட்டவட்ட இலக்கும் இல்லை என்றால், பின் அவர் தன்னை எங்கெங்கு எந்நிலையில் இருக்கக் காண்டாலும் அதுவே இலக்காகிறது. மேலும் அவரால் ஒப்பிட முடியாது. இது வேறுவிதமாக நிகழ முடியாது. இதுதான் அவருக்குத் தரப்பட்டிருக்கும் நிகழ்கணம். சிலுவைப்பாடே அரசகிரீடம்.

அவரால் துன்புற முடியாது. ஏனெனில் துன்புறுதல் என்றால் எதிர்த்தல் என்று பொருள். ஒன்றை நீங்கள் எதிர்த்தாக வேண்டும். அப்போது மட்டுமே நீங்கள் துன்புற முடியும். முயன்று பாருங்கள். உங்களைச் சிலுவையில் அறைவது கடினம். ஆனால் தினசரி வாழ்வில் நிறைய சிறு சிறு சிலவைப்பாடுகள் இருக்கின்றன. அவையே போதும்.

உங்கள் காலில் ஒரு வேதனை. அல்லது உங்களுக்கு தலைவலி. இதுவரை அதன் இயக்கப்போக்கை நீங்கள் கவனிக்காமல் இருந்திருக்க லாம். உங்களுக்குத் தலை வலிக்கிறது. விடாமல் அதை எதிர்த்துப் போராடிக்கொண்ட இருக்கிறீர்கள். அதை நீங்கள் விரும்பவில்லை. அதற்கு எதிராக நீங்கள் இருக்கிறீர்கள். நீங்கள் பாகுபாடு செய்கிறீர்கள். உங்கள் தலைக்குள் எங்கோ ஓரிடத்தில் நீங்கள் நின்று கொண்டிருக் கிறீர்கள். எனவே அங்கே தலைவலியும் இருக்கிறது. நீங்கள் தனியாக இருக்கிறீர்கள், தலைவலி தனியாக இருக்கிறது. அது அப்படி இருக்கக் கூடாது என்று நீங்கள் வலியுறுத்துகிறீர்கள். இதுவே உண்மையான பிரச்சனை.

சண்டைபோடுவதில்லை என்பதை ஒருதடவை முயன்றுபாருங்கள். தலைவலியுடன் சேர்ந்து செல்லுங்கள். தலைவலியாகவே ஆகி விடுங்கள்.'''இதுதான் நிலைமை. இந்த நிமிசத்தில் என் தலை இப்படி இருக்கிறது. இப்போது வேறெதற்கும் வாய்ப்பில்லை. வருங்காலத்தில் அது போய்விடலாம். ஆனால் இந்தக் கணத்தில் தலையில் வலி

இருக்கிறது'' என்று சொல்லுங்கள். எதிர்க்காதீர்கள். அதை நிகழ அனுமதியுங்கள். அதனுடன் ஒன்றாகுங்கள். உங்களைத் தனியாக உள்ளிழுத்துக் கொள்ளாதீர்கள். அதனுள் இயங்குங்கள். அப்போது திடீரென ஒரு புதுவிதமான மகிழ்ச்சி - இதுவரை நீங்கள் அறிந்திராத மகிழ்ச்சி - பொங்கும். எதிர்ப்பதற்கு யாரும் இல்லை என்றால் தலைவலிகூட வலியாக இருப்பதில்லை. சண்டைபிடிப்பதே வேதனையை உண்டாக்குகிறது. வேதனைக்கு எதிராக ஓயாமல் சண்டை பிடிப்பதே வேதனை என்பதன் பொருள் - அதுதான் நிசமான வேதனை.

யேசு ஏற்றுக் கொள்கிறார். இப்படித்தான் அவர் வாழ்க்கை சிலுவைக்கு வந்து சேர்ந்திருக்கிறது. இதுதான் விதி. இதைத்தான் கிழக்கில் எப்போதும் விதி, பாக்கியம், கிஸ்மத் என்று அழைத்து வந்திருக்கிறார்கள்.எனவே உங்கள் விதியுடன் வாதிடுவதில், அதனுடன் சண்டை பிடிப்பதில் எந்தப் பொருளுமில்லை, எந்தப் பயனுமில்லை. நீங்கள் ஒன்றும் செய்ய முடியாது. அது நடந்துகொண்டிருக்கிறது. ஒன்றே ஒன்றுதான் உங்களுக்குச் சாத்தியம் - அதனுடன் நீங்கள் சேர்ந்து இயங்க முடியும் அல்லது அதனுடன் நீங்கள் சண்டை பிடிக்க முடியும். அதனுடன் நீங்கள் சண்டையிட்டால் உங்கள் துன்பம் அதிகமாக ஆகிறது. அதனுடன் சேர்ந்து நீங்கள் இயங்கினால் உங்கள் வேதனை குறையும். அதனுடன் முழுமையாக உங்களால் இயங்க முடிந்தால் உங்கள் வேதனை மறைந்துவிடுகிறது. நீங்களே அந்த இயக்கமாக ஆகி இருக்கிறீர்கள்.

உங்களுக்குத் தலைவலி வரும்போது இதை நீங்கள் முயன்று பாருங்கள். உங்களுக்கு உடல்நலமில்லாமல் இருக்கும்போது இதை முயன்று பாருங்கள். உங்களுக்கு ஏதாவது வேதனை இருக்கும்போது இதை முயன்று பாருங்கள். ஒருமுறை, உங்களால் அதை அனுமதிக்க முடிந்தால், வாழ்வின் மிகவும் ஆழமான ரகசியங்களில் ஒன்றை நீங்கள் கண்டடைந்திருப்பீர்கள் - அதாவது வலியுடன் சேர்ந்து இயங்கினால் வலி மறைந்துவிடுகிறது. மேலும் வலியுடன் முழுமையாக இசைந்து இயங்கினால் வலியே இன்பமாக ஆகிறது.

ஆனால் இது தர்க்க ரீதியில் புரிந்துகொள்ள முடிகிற ஒன்று அல்ல. இதை அறிவுபூர்வமாக நீங்கள் விளங்கிக் கொள்ள முடியும். ஆனால் அது பயன்படாது. இருத்தல்பூர்வமாக முயன்று பாருங்கள். அன்றாட சூழ்நிலைகள் நிறைய உள்ளன. ஒவ்வொரு கணத்திலும் ஏதாவது ஒரு தவறு/ குறை இருக்கிறது. அதனுடன் சேர்ந்து இயங்குங்கள். அப்போது

மொத்தச் சூழ்நிலையையும் நீங்கள் எப்படி உருமாற்றுகிறீர்கள் என்பதைப் பாருங்கள். அந்த நிலைமாற்றத்தின் வழியாக நீங்கள் அதைக் கடந்து விடுகிறீர்கள்.

ஒரு புத்தரால் ஒருபோதும் வேதனையாக இருக்க முடியாது. அது அசாத்தியம். அகங்காரத்துக்கு மட்டுமே வேதனை இருக்க முடியும். வேதனை இருக்கிறது என்றால் அங்கு அவசியம் அகங்காரம் இருந்தாக வேண்டும். அகங்காரம் இருந்தால் உங்கள் இன்பங்களைக்கூட உங்களால் துன்பமாக மாற்றிவிட முடியும். அகங்காரம் இல்லாவிட்டால் உங்கள் துன்பங்களைக்கூட இன்பமாக நீங்கள் மாற்றிவிட முடியும். அகங்காரத்தில்தான் இருக்கிறது. சூட்சுமம்.

**வைராக்கியத்தின் அல்லது ஆசையின்மையின் கடைசிப்படி நிலை, மூலாதாரமான புருஷனின் உள்ளார்ந்த இயல்பை அறிவதன் மூலம், ஆசையை முற்றிலுமாக விட்டுவிடுதலாகும்.**

இது எப்படி நிகழ்கிறது? உங்களின் மிகவும் உள்ளார்ந்த மையத்தை, அங்கே உறையும் புருஷனை அறிவதன்மூலமே இது நிகழ்கிறது. அதை அறிவதன் மூலமே இது நிகழ்கிறது என்றே பதஞ்சலி கூறுகிறார் புத்தர் கூறுகிறார், லாவோ - சு கூறுகிறார். அதை அறிவதன்மூலமே ஆசைகள் அனைத்தும் மறைகின்றன.

இது புதிரானதே. ஆகவே தம்மைத் தாமே அறிந்து கொள்வதன் மூலமே ஆசைகள் அனைத்தும் மறைந்துவிடுவது என்பது எவ்வாறு நிகழ முடியும் என்று தர்க்க மனம் கேட்கவே செய்யும். அது நிகழ்கிறது எப்படியெனில் தம்மைத்தாம் அறியாததாலேயே ஆசைகள் அனைத்தும் எழுந்திருக்கின்றன. ஆசைகள் என்பவை சுயத்தைப் பற்றிய அறியாமையினாலேயே எழுபவை. . ஏன்? ஆசைகளின் வாயிலாக நீங்கள் தேடும் அனைத்தும் அங்கேயே உள்ளன. தன்னில் உள்ளன. தன்னில் மறைந்துள்ளன.தன்னை நீங்கள் அறிகிற போது ஆசைகள் மறைந்துவிடும்.

எடுத்துக்காட்டாக நீங்கள் அதிகாரத்தைப் பெற விரும்புகிறீர்கள். ஒவ்வொருவருமே அதிகாரத்துக்காக நிற்கிறார். அதிகாரமானது ஒவ்வொருவரிலும் பைத்தியக்காரத்தனத்தை உருவாக்குகிறது. ஒவ்வொருவரும் அதிகாரப்பித்துப் பிடித்தவர்களாக

இருக்கும்வகையிலேயே இதுவரையான மனித சமுதாயம் நிலவிவந்துள்ளது என்று தோன்றுகிறது.

குழந்தை பிறக்கிறது. குழந்தை உதவியற்ற நிலையில் இருக்கிறது. இதுதான் நீங்கள் எல்லாரும் உங்களுக்குள் எப்போதும் கொண்டிருக்கும் முதல் உணர்வாகும். குழந்தை பிறக்கிறது. அது உதவியற்ற நிலையில் இருக்கிறது. மற்றவரைச் சார்ந்திருக்கும் நிலையில் இருக்கும் குழந்தை அதிகாரத்தை விரும்புகிறது. இது இயற்கையே. ஏனெனில் மற்ற எல்லோரும் அதைவிட அதிக ஆற்றல் - அதிகாரம் உடையவர்களாகவே இருக்கிறார்கள். அம்மா அதிகாரம் மிக்கவளாக இருக்கிறாள். அப்பா அதிகாரம் மிக்கவராக இருக்கிறார். அண்ணன்மார் அதிகாரமுள்ளவராக இருக்கிறார்கள். எல்லாருமே அதிகாரம் நிறைந்தவராக இருக்கிறார்கள். குழந்தையோ முற்றிலும் பலமற்ற நிலையில் இருக்கிறது. எனவே ஆற்றலை - அதிகாரத்தைப் பெறுவது எப்படி - அதிகாரத்தில் வளர்வது எப்படி - ஆதிக்க நிலை பெறுவது எப்படி என்பதே அதன் முதல் ஆசையாக உதிக்கிறது. அந்தக் கணத்திலிருந்தே குழந்தை அரசியல் ஆகத் தொடங்குகிறது. ஆதிக்கம் செலுத்துவதற்கான தந்திரங்களைக் கற்கத் தொடங்குகிறது.

அதிகமாக அழுதால், அழுவதன்மூலம் தன்னால் ஆதிக்கம் செய்ய முடியும் என அது அறிய வருகிறது. அழுவதன்மூலமே முழு வீட்டையும் அதனால் ஆதிக்கம் செய்யமுடிகிறது. அழக் கற்கிறது. பெண்குழந்தைகள் வளர்ந்த பிறகும் இந்த தந்திரத்தைக் தொடர்கிறார்கள். அந்த ரகசியத்தை அவர்கள் கற்றுக்கொள்கிறார்கள்; பிறகு தொடர்ந்து செய்கிறார்கள். அவர்கள் அதைத் தொடரவே வேண்டும். ஏனெனில் அவர்கள் சொந்த பலம் இல்லாத நிலையிலேயே இருக்கிறார்கள். இது ஒரு அதிகார அரசியல்.

குழந்தை ஒரு தந்திரத்தை அறிகிறான். இனி அவனால் தொல்லை தர முடியும். எந்த அளவுக்கென்றால் அவனை நீங்கள் ஏற்றுக்கொண்டு அவனுடன் சமரசமாகிக்கொள்ள வேண்டி இருக்கிறது. இப்படியே தனக்கு தேவை அதிகாரமே அதிக அதிகாரமே என்று ஒவ்வொரு முறையும் அவன் ஆழமாக உணர்கிறான். அவன் கற்றுக்கொள்வான். பள்ளிக்குப் போவான். வளருவான். காதலிப்பான். ஆனால் எல்லாவற்றின் பின்னாலும் - அவனுடைய கல்வி, காதல், விளையாட்டு எல்லாவற்றிலும் - எவ்வாறு அதிக அதிகாரம் உள்ளவனாவது என்பதை அவன் கண்டுபிடிப்பான். கல்விமூலம் அவன் ஆதிக்கம் செலுத்த விரும்புவான்.

தான் ஆதிக்கம் செய்ய முடியும்படியாக வகுப்பில் முதல்மாணவனாக வருவது எவ்வாறு, தான் ஆதிக்கம் செய்ய முடிவதற்காக அதிகப் பணம் சம்பாதிப்பது எவ்வாறு, தன் செல்வாக்கையும் ஆதிக்கப் பரப்பையும் வளர்த்துக்கொண்டே போவது எவ்வாறு என்று பார்ப்பான். வாழ்க்கை முழுவதும் அவன் அதிகாரத்தையே தேடி நிற்பான்.

பலபிறவிகள் வெறுமனே வீணாகின்றன. அப்படியே உங்களுக்கு அதிகாரம் கிடைத்தாலும் அதைக்கொண்டு நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? குழந்தைப்பருவத்து ஆசை ஒன்று பூர்த்தியாகிறது, அவ்வளவுதானே? ஆகவே நீங்கள் ஒரு நெப்போலியனாகவோ ஹிட்லராகவோ ஆனதும் உங்கள் முயற்சி முழுவதும் பயனற்றது, வீண் என்பதை திடீரென அறிந்தவர் ஆகிறீர்கள். ஒரு குழந்தைப் பருவத்து ஆசை நிறைவேறியுள்ளது - அவ்வளவே. இனி என்ன செய்வது? இந்த அதிகாரத்தைக் கொண்டு என்ன செய்வது? ஆசை நிறைவேறினால் நீங்கள் நிராசை அடைகிறீர்கள். ஆனால் முழுமையாக அது நிறைவேறவும் முடியாது. ஏனென்றால் தான் உணர முடியும் அளவுக்கு எவரும் அவ்வளவு அதிகாரமுள்ளவராக இருக்க முடியாது. ''இத்தோடு போதும்'' என்பார் யாருமில்லை. உலகம் எந்த அளவுக்கு சிக்கலாக உள்ளது என்றால் ஒரு நெப்போலியன்கூட சில தருணங்களில் அதிகாரமற்றவனாகவே உணர்கிறான். முற்றான அதிகாரத்தை எவராலும் உணரமுடியது. எதுவுமே உங்களை முற்றிலுமாகத் திருப்திப்படுத்த முடியாது.

ஆனால் தன் சுயத்தை ஒருவர் அறிய வருகிறபோது முற்றான அதிகாரத்தின் மூலாதாரத்தை அவர் அறிந்து கொள்கிறார். அப்போதே அதிகாரத்துக்கான ஆசை மறைகிறது. ஏனென்றால் நீங்கள் ஏற்கனவே ஒரு ராஜாவாக இருக்கிறீர்கள். ஆனால் உங்களை ஒரு பிச்சைக்காரன் என்றே நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள். அத்துடன் மேலும் பெரிய பிச்சைக்காரன் ஆவதற்குப் போராடிக் கொண்டிருக்கிறீர்கள். உண்மை யில் ஏற்கனவே நீங்கள் ஒரு ராஜாவாக இருக்கிறீர்கள். உங்களுக்கு ஒன்றும் குறைச்சல் இல்லை என்பதை திடீரென உணர்கிறீர்கள். நீங்கள் சுயபலமற்றவர்களாக இல்லை; எல்லா ஆற்றல்களின் ஊற்றாகவும் நீங்களே இருக்கிறீர்கள். வாழ்வின் மூலாதாரமே நீங்கள்தான். குழந்தைப் பருவத்தில் இருந்த அந்த பலமற்ற உணர்வு மற்றவர்களால் உருவாக்கப்பட்டது. அது ஒரு நச்சு வட்டம். மற்றவர்களுக்குள் அவர்களைப் பெற்றவர்கள் உருவாக்கிவிட்டதால் அந்த மற்றவர்கள்

உங்களுக்குள் அதை உருவாக்கி விட்டுவிட்டார்கள். இப்படியே நெடுக அது தொடர்கிறது.

நீங்கள் அதிகாரமற்றவர்கள், பலமற்றவர்கள் என்னும் உணர்வை உங்களுக்குள் உங்கள் பெற்றோர்கள் உருவாக்கி இருக்கிறார்கள். ஏன்? ஏனென்றால் இதன்மூலம் மட்டுமே தாம் பலசாலிகள் என அவர்கள் உணர முடிகிறது. குழந்தைகளை நீங்கள் மிகவும் நேசிப்பதாக நினைத்துக் கொண்டிருக்கலாம். அது உண்மையெனத் தோன்றவில்லை. நீங்கள் அதிகாரத்தை விரும்புகிறீர்கள். உங்களுக்கு குழந்தைகள் பிறந்ததும் நீங்கள் தாய்தந்தையர் ஆனதும் நீங்கள் அதிகாரமுள்ள வர்களாக இருக்கிறீர்கள். யாரும் நீங்கள் சொல்வதை கவனிக்காமல் போகலாம். உலகத்தில் நீங்கள் ஒரு மதிப்பும் இல்லாதவராக இருக்கலாம். ஆனால் குறைந்தபட்சம் உங்கள் வீட்டின் எல்லைகளுக்குள் நீங்கள் அதிகாரமிக்கவராக இருக்கிறீர்கள். குறைந்தபட்சம் உங்கள் குழந்தைகளை நீங்கள் வதைக்கமுடியும்.

அப்பாக்களையும் அம்மாக்களையும் பாருங்கள்: அவர்கள் சித்திரவதை செய்கிறார்கள்! ''நீங்கள் வதைக்கிறீர்கள்'' என்று அவர்களிடம் நீங்கள் சொல்லவும் முடியாத ஒரு அன்பான விதத்தில் அவர்கள் வதைக்கிறார்கள். ''குழந்தைகளின் சொந்த நன்மைக்காவே,'' அவர்களை அவர்கள் கொடுமைப்படுத்திக் கொண்டிருக்கிறார்களாம்! குழந்தைகள் வளர்வதற்கு அவர்களுக்கு அவர்கள் உதவிக் கொண்டிருக்கிறார்களாம். அதில் தாம் அதிகாரம் பெற்றவர்களாக உணர்கிறார்கள். அதிகாரமுள்ளவர்களாக உணர்வதற்காகவே பலரும் ஆசிரியத் தொழிலுக்குப் போகிறார்கள் என்று உளவியலாளர்கள் கூறுகிறார்கள். ஏனெனில் முப்பது குழந்தைகள் உங்கள் பொறுப்பின்கீழ் இருக்கிறார்கள் என்றால் நீங்கள் ஒரு ராஜாவாகவே இருப்பீர்கள்.

அவுரங்கசீப்பை அவரது மகன் சிறைவைத்தான்.. தான் சிறையிடப்பட்டதும் அவர் ஒரு கடிதம் எழுதினாராம். அதில் அவர் ''ஒரே ஒரு ஆசையை நீ நிறைவேற்ற முடிந்தால் நன்றாய் இருக்கும். நான் மிகவும் மகிழ்ச்சி அடைவேன். ஒரு முப்பது குழந்தைகளை மட்டும் என்னிடம் அனுப்பிவை. என் சிறை வாசத்தின்போது அவர்களுக்கு நான் பாடம் சொல்லித்தர முடியும்.'' என்று எழுதினாராம்.

அதற்கு மகன் கூறினானாம், ''என் அப்பா எப்போதுமே ஒரு ராஜாவாகவே இருந்து வந்திருக்கிறார். அவரால் தன் ராஜ்ஜியத்தை இழக்க முடியவில்லை. எனவேதான் சிறைக்குள்கூட அவர் பாடம் கற்பிக்க அவருக்கு முப்பது குழந்தைகள் தேவைப்படுகிறார்கள்.''

ஒரு பள்ளியில் போய்ப் பாருங்கள்! ஆசிரியர் தன் நாற்காலியில் முழு அதிகாரத்துடன் அமர்ந்திருக்கிறார். அங்கே நிகழும் எல்லாவற்றுக்கும் அவர்தான் அதிகாரி! மக்கள் குழந்தைகளை விரும்புவது அவர்களை அவர்கள் நேசிப்பதற்காக அல்ல. ஏனெனில் அவர்கள் உண்மையிலேயே குழந்தைகளை நேசித்தால் உலகம் முற்றிலும் வேறுவிதமாக இருக்கும். நீங்கள் உங்கள் குழந்தையை நேசித்தால் இந்த உலகம் முற்றிலும் வித்தியாசமாக இருக்கும். அவன் பலவீனனாக் இருப்பதற்கு, பலவீனன்ாக உணர்வதற்கு அவனுக்கு நீங்கள் உதவமாட்டீர்கள். அவன் தன்னைப் பலசாலியாக உணரும்படியாக அவனுக்கு அதிக அன்பை அளிப்பீர்கள். அவனுக்கு நீங்கள் அன்பைக் கொடுத்தால் பின் ஒருபோதும் அவன் அதிகாரத்தைக் கேட்க மாட்டான். அவன் ஒரு அரசியல் தலைவராக ஆகமாட்டான். தேர்தல்களுக்கு அவன் போக மாட்டான். பணத்தைக் குவித்துக் கொள்ள அவன் முயல மாட்டான். அதன் பின்னால் வெறித்தனமாக அவன் அலைய மாட்டான். ஏனெனில் அது பயனற்றது என்பதை அவன் அறிகிறான் - ஏற்கனவே அவன் பலசாலியாக இருக்கிறான். அன்பே போதுமானது.

ஆனால் யாரும் அன்பைப் பொழிவதில்லை. எனவே அவன் அதன் மாற்றுகளையே உருவாக்குவான். உங்கள் ஆசைகள் அனைத்தும் - அவை அதிகாரம், பணம், பெருமை எது சார்ந்ததாயினும் - அவையெல்லாம் உங்கள் குழந்தைப்பருவத்தில் உங்களுக்கு என்ன கற்பிக்கப்பட்டுள்ளது என்பதையே காட்டுகின்றன. குறிப்பிட்ட விசயம் உங்கள் உயிர்க் கணினியில் பதியப்பட்டுள்ளது. உள்ளே திரும்பிப் பாராமல் அந்த பதிவையே நீங்கள் பின்பற்றிக்கொண்டிருக்கிறீர்கள். உண்மையில் நீங்கள் வேண்டும் கேட்கும் எல்லாமுமேஉள்ளேயே உள்ளது.

உங்கள் உயிர்க் கணினி குறுக்கிடாதவாறு அதை அமைதிப்படுத்துவதே பதஞ்சலியின் முழு முயற்சியும் ஆகும். அதுதான் தியானம் என்பது. சில கணங்களுக்காவது உங்கள் உயிர்க் கணினியை

சாந்தப்படுத்துவது, சளசளக்காத நிலையில் வைப்பது என்பதே தியானம். அப்போதுதான் நீங்கள் உள்ளே உங்கள் அடியாழத்தின் இயல்பை பார்க்கவும் கேட்கவும் முடியும். கணநேரக் காட்சிகூட உங்களை மாற்றிவிடப் போதுமானது ஏனெனில் அப்போது இந்த உயிர்க் கணினியால் உங்களை ஏமாற்ற முடியாது. இந்த உயிர்க் கணினி ''இதைச் செய், அதைச் செய்!'' என்று சொல்லிக்கொண்டே போகிறது. அது தொடர்ச்சியாக ''நீங்கள் அதிக அதிகாரம் பெற்றிருக்க வேண்டும், இல்லாவிட்டால் நீங்கள் ஒன்றுமில்லை'' என்று உங்களை சூழ்ச்சித்திறத்துடன் இயக்கி வருகிறது.

உங்களின் உள்ளே நீங்கள் பார்த்தால் நீங்கள் வேறு யாராகவும் இருக்கத் தேவையில்லை. யாராகவும் நீங்கள் இருக்க அவசியமில்லை. நீங்கள் இருக்கிற நிலையிலேயே ஏற்கனவே நீங்கள் ஏற்கப்பட்டிருக்கி றீர்கள். மொத்த பிரபஞ்சமும் உங்களை ஏற்கிறது; உங்களைக் குறித்து மகிழ்ச்சி கொள்கிறது. நீங்கள் ஒரு மலர்ச்சி - ஒரு தனி மனித மலர்ச்சி. மற்ற யாரிடமிருந்தும் வேறுபட்ட, தனிச்சிறப்பானவர். உங்களை கடவுள் வரவேற்கிறார். இல்லாவிட்டால் நீங்கள் இங்கு இருக்க முடியாது. நீங்கள் அங்கீகரிக்கப்பட்டதால் மட்டுமே நீங்கள் இங்கு இருக்கிறீர்கள். கடவுள் உங்களை நேசிப்பதால்தான், இருத்தல் உங்களை நேசிப்பதால்தான், இயற்கைக்கு நீங்கள் தேவைப்படுவதால்தான் நீங்கள் இங்கே இருக்கிறீர்கள். நீங்கள் இங்கே தேவைப்படுகிறீர்கள்.

உங்கள் உள்ளார்ந்த இயற்கையை நீங்கள் அறிந்து கொண்டதுமே...அதையே பதஞ்சலி 'புருஷன்' என்று அழைக்கிறார். புருஷன் என்றால் உள்ளே வசிப்பவர்..உடல் என்பது ஒரு வீடுதான். அதன் உள்ளே வசிப்பதே, உள்ளுரையும் உணர்வே புருஷன். இந்த உள்ளுறையும் உணர்வை நீங்கள் அறிந்து கொண்டாலே வேறெதும் தேவைப்படுவதில்லை. நீங்களே போதுமானவராக இருக்கிறீர்கள்; தேவைக்கும் அதிகமானவராகவே இருக்கிறீர்கள். இப்போது நீங்கள் இருக்கிற நிலையிலேயே நீங்கள் செம்மையாக இருக்கிறீர்கள். நீங்கள் முற்றிலும் ஏற்கப்படுகிறீர்கள், வரவேற்கப்படுகிறீர்கள். உங்களால் இயற்கையே ஆசீர்வதிக்கப்பட்டதாகிறது. ஆசைகள் மறைகின்றன. தன்னைப் பற்றிய அறியாமையின் பகுதியே ஆசைகள். தன்னறிவினால் அவை மறைகின்றன; அவை ஆவியாகின்றன.

ஒன்று: பயிற்சி அதாவது இடையறாத அகப் பயிற்சி; மிகவும் விழிப்புள்ளவர் ஆவதற்கான உணர்வுள்ள முயற்சி; பழக்கங்களால், யந்திரத்தனமான தானியங்கி போன்ற ஏற்பாடுகளால் ஆதிக்கம் செய்யப்படுவது குறைவதற்கான உணர்வுள்ள முயற்சி. மற்றது: வைராக்கியம் அதாவது ஆசையின்மை. இந்த இரண்டும் அடையப்பட்டதும் ஒருவர் யோகியாக மாறுகிறார். இந்த இரண்டும் அடையப்பட்டதும் ஒருவர் இலக்கை அடைந்திருக்கிறார்.

திரும்பவும் கூறுகிறேன்: இதற்காகச் சண்டைபிடிக்காதீர்கள். இவை எல்லாம் மிகவும் தன்னிச்சையாக நிகழ அனுமதியுங்கள். எதிர்மறையுடன் சண்டை போடாதீர்கள். மாறாக உடன்பாட்டை உருவாக்குங்கள். காமத்துடன், உணவுடன், எதனுடனும் சண்டை பிடிக்காதீர்கள். மாறாக உங்களுக்கு மகிழ்ச்சியை கொடுக்கும் அது எது, எங்கிருந்து அது வருகிறது என்பதைக் கண்டுபிடித்து, அந்தத் திசையில் செல்லுங்கள்; ஆசைகள் படிப்படியாக தாமே மறைந்து போகும்.

இரண்டாவது: அதிக உணர்வுள்ளவராக இருங்கள். என்ன நிகழ்ந்து கொண்டிருந்தாலும் அதிகமதிக உணர்வுடன் இருங்கள். அந்தக் கணத்தில் தங்கி இருங்கள். அந்தக் கணத்தை ஏற்றுக்கொள்ளுங்கள். வேறெதையும் கேட்காதீர்கள். அப்போது நீங்கள் அவலத்தை உருவாக்கமாட்டீர்கள். வேதனை இருந்தால் இருக்கட்டும். அதில் தங்கியிருந்து அதனுடன் இயங்குங்கள். ஒரே நிபந்தனை: விழிப்பில் நிலைத்திருங்கள். தெரிந்தே, கவனமாகவே அதனுள் செல்லுங்கள்; அதனுடன் சேர்ந்து பாயுங்கள். குறுக்கே திரும்பாதீர்கள்!

வலி மறைகையில் இன்பத்துக்கான ஆசையும் மறைகிறது. நீங்கள் துன்பத்தில் இல்லை என்றால் இன்பத் திளைப்பையும் நீங்கள் வேண்டுவதில்லை. துன்பம் இல்லாதபோது இன்பத் திளைப்பும் அர்த்தமற்றதாகிறது. எனவே அதிகமதிகமாய் உள் ஆழத்தில் வீழ்ந்துகொண்டே போகிறீர்கள். அதுவோ மிகவும் ஆனந்தமயமாக இருக்கிறது. எத்தகைய ஆழமான பரவசமாக அது இருக்கிறது. எத்தகைய ஆழமான பரவசமாக அது இருக்கிறது என்றால் அதன் ஒரு சிறு வெளிச்சம் கிடைத்தாலே முழு உலகமும் அர்த்தமற்றதாகிறது. அதன்பின் இந்த உலகம் வழங்கமுடியும் அனைத்தும் உபயோகமற்றதாகும்.

ஒரு போரிடும் மனோபாவமாகவும் இது இருக்கக் கூடாது. நீங்கள் ஒரு போர் வீரர் ஆகக்கூடாது. நீங்கள் ஒரு தியானி ஆக வேண்டும். நீங்கள் தியானித்துக் கொண்டிருந்தால் தானாகவே காரியங்கள் உங்களுக்கு நிகழும். அது உங்களை அடியோடு மாற்றிக்கொண்டே போகும். எதிர்த்துப் போரிடத் தொடங்கினால் நீங்கள் அமுக்கி வைக்கத் தொடங்கிவிடுகிறீர்கள். அமுக்கிவைப்பதோ உங்களை அதிகமதிக அவலத்துக்கு இட்டுச் செல்லும். நீங்கள் ஏமாற்ற முடியாது.

மற்றவர்களை மட்டுமல்ல தம்மையும் ஏமாற்றிக்கொண்டே போவோர் பலர் இருக்கிறார்கள். தாம் துன்பத்தில் இல்லை என அவர்கள் நினைக்கிறார்கள். தாம் துயரநிலையில் இல்லை என்று அவர்கள் சொல்லிக்கொண்டே போகிறார்கள். ஆனால் அவர்களின் வாழ்வாக முழுவதும் பரிதாபமாக இருக்கிறது. தாங்கள் அவலத்தில் இல்லை என்று அவர்கள் கூறும்போதே அவர்களின் முகங்கள், அவர்களின் கண்கள், அவர்களின் உள்ளம் எல்லாம் வேதனையுடனேயே இருக்கிறது.

உங்களுக்கு ஒரு சிறு உதாரணம் கூறி முடித்துவிடுகிறேன். ஒருமுறை இப்படி நடந்ததாக கேள்விப்பட்டிருக்கிறேன்: பன்னிரண்டு பெண்கள் பாவங்களைப் போக்கிக் கொள்ளும் நிலையத்தை அடைந்தார்கள். அதற்குப் பொறுப்பான தேவதூதன் அவர்களிடம், ''நீங்கள் பூமியில் வாழ்ந்தபோது உங்களில் எவராவது உங்கள் கணவர்களுக்கு துரோகம் செய்தீர்களா? தன் கணவனுக்குத் துரோகம் செய்தவர்கள் கையை உயர்த்துங்கள்'' என்றான். நாணத்துடன் தயங்கியபடி ஒவ்வொருவராக பதினொரு பெண்கள் தம் கைகளை உயர்த்தினார்கள். தேவதூதன் தொலைபேசியை எடுத்து அதில் பேசினான், ''யாரது, நரகமா? துரோகம் செய்த மனைவிமார் பன்னிரண்டு பேருக்கு இடம் இருக்கிறது? - அவர்களில் ஒருத்தி டமாரச் செவிடு!'' என்றான்.

நீங்கள் சொல்கிறீர்களா இல்லையா என்பது தேவையில்லை. உங்கள் முகமே, உங்கள் இருப்பே எல்லாவற்றையும் காட்டிவிடுகிறது. நீங்கள் பரிதாபத்துக்குரிய நிலையில் இருப்பதை நீங்கள் சொல்லாமல் போகலாம். ஆனால் அதை நீங்கள் சொல்லும் முறையே, நீங்கள் இருக்கும் முறையே நீங்கள் பரிதாபநிலையில் இருப்பதை காட்டிவிடுகிறது. உங்களால் ஏமாற்ற முடியாது. அதில் அர்த்தமும் இல்லை. ஏனெனில் எவரும் வேறு எவரையும் ஏமாற்ற முடியாது. உங்களை மட்டுமே நீங்கள் ஏமாற்றிக் கொள்ள முடியும்.

நீங்கள் இரங்கத்தக்க இழிந்த நிலையில் இருக்கிறீர்கள் என்றால் அதையெல்லாம் உண்டாக்கியது நீங்களேதான் என்பதை நினைவில் கொள்ளுங்கள். இது உங்கள் இதயத்தை ஆழமாக ஊடுருவட்டும். உங்களின் துன்பங்களை நீங்களே உருவாக்கி இருக்கிறீர்கள் என்பது அழகாக ஊடுருவட்டும் ஏனென்றால் இதுவே சூத்திரமாக திறவுகோலாக இருக்கப்போகிறது. உங்கள் துன்பங்களை நீங்களே உண்டாக்கினால் மட்டுமே அவற்றை நீங்கள் அழிக்க முடியும். வேறுயாராவது அவற்றை உருவாக்கி இருந்தால் நீங்கள் ஒன்றுமே செய்ய முடியாத நிலைமையில் இருப்பீர்கள். உங்கள் துன்பங்களை உருவாக்கியது நீங்கள்தான் என்பதால் நீங்களே அவற்றை அழிக்கவும் முடியும். தவறான பழக்கங்கள், தவறான மனப்பான்மைகள், ஆசைகள், அடிமைத்தனங்கள் இவைகளின் வழியாகவே அவற்றை நீங்கள் உருவாக்கி இருக்கிறீர்கள்.

இந்த வழிமுறையைக் கைவிடுங்கள்! புத்தம் புதிதாக பாருங்கள்! மனித உணர்வுக்குச் சாத்தியமாகும் அறுதி இன்பம் இந்தப் பிறவியிலேயே இருக்கிறது.

முதல் கேள்வி:

**உண்மையில் எங்களுடையதாக இருக்கிறதும், நீங்கள் கடந்துவிட்டிருக்கிறதுமான வாழ்வைக்குறித்து நாங்கள் மிகுந்த அறியாமையில் மூழ்கி இருக்கும்போது நீங்கள் அதை மிகவும் சரியாகவும் விரிவாகவும் விளக்குவது எவ்வாறு? இது விசித்திரமாக இல்லையா?**

இது விசித்திரமாகவே தோன்றுகிறது. ஆனால் அப்படி இல்லை. ஏனெனில் நீங்கள் கடந்துவிட்ட பிறகே அதை நீங்கள் புரிந்து கொள்ள முடியும். ஒரு குறிப்பிட்ட மனநிலையில் நீங்கள் இருக்கிறபோது அந்த மனநிலையை உங்களால் புரிந்துகொள்ளமுடியாது. அதில் நீங்கள்மிகவும் ஒன்றிப்போய் இருக்கிறீர்கள். அதனுடன் அதிகமாய் உங்களை அடையாளப்படுத்தி இருக்கிறீர்கள். புரிந்து கொள்வதற்கு இடைவெளி தேவைப்படுகிறது; தூரம் தேவைப்படுகிறது. ஆனால் உங்களிடம் அது இல்லை. அந்த மனநிலையை நீங்கள் கடக்கிறபோதுதான், அதை புரிந்துகொண்டவர்களாக ஆகிறீர்கள். ஏனெனில் அப்போதுதான் இடைவெளி இருக்கிறது. நீங்கள் ஏகாந்தமாக, விடுபட்டு நிற்கிறீர்கள். அப்போதுதான் உங்களால் அடையாளப்படுத்திக் கொள்ளாமல் பார்க்க முடியும். அப்போதுதான் முழுக்காட்சியும் கிடைக்கிறது.

நீங்கள் அன்பினுள் இருக்கிறபோது அதனை உங்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை. அதை நீங்கள் உணரலாம். ஆனால் அதை நீங்கள் புரிந்துகொள்ள முடிவதில்லை. அதனுள் நீங்கள் ஆழ்ந்துபோய் இருக்கிறீர்கள். புரிதலுக்கு ஏகாந்தம், விடுபட்ட ஏகாந்தம், தேவைப்படுகிறது. புரிதலுக்கு நீங்கள் ஒரு கவனிப்பவராக இருக்க வேண்டி இருக்கிறது. நீங்கள் ஒரு அன்பில் இருக்கிறபோது கவனிப்பவர் காணாமல் போகிறார். நீங்கள்செய்கையாளராக ஆகி இருக்கிறீர்கள். நீங்கள் ஒரு காதலராக அன்பராக இருக்கிறீர்கள். அந்நிலையில் நீங்கள் அதற்கு சாட்சியாக இருக்க முடியாது. அன்பை - காதலை நீங்கள் கடக்கிறபோது மட்டுமே; நீங்கள் ஞானநிலை அடைந்து அன்பை -

காதலை கடந்து போயிருக்கிறபோது மட்டுமே, உங்களால் அதைப் புரிந்துகொள்ள முடியும்.

குழந்தைப்பருவம் என்றால் என்ன என்பதை ஒரு குழந்தையால் புரிந்துகொள்ள முடியாது. குழந்தைப்பருவம் கடந்து, நீங்கள் அதை பின்னோக்கிப் பார்த்துதான் புரிந்துகொள்ள முடிகிறது. இளமை என்றால் என்ன என்பதை இளமைப்பருவத்தில் புரிந்தகொள்ள முடிவதில்லை. நீங்கள் முதுமை அடைந்து இளமைக்காலத்தைத் ஏகாந்தமாக, தொலைவானதாக திரும்பிப் பார்க்க முடிகிறவராக ஆகும்போதே உங்களால் அதைப் புரிந்துகொள்ள முடியும். எதைப் புரிந்துகொள்வ தாயினும் அதை கடந்துசெல்வதன் மூலமே அது புரிந்து கொள்ளப்படுகிறது. கடந்துபோதலே எல்லா புரிதலுக்கும் அடிப்படை யாகும். எனவேதான் இது தினமும் நிகழ்கிறது: சிக்கலில் இருக்கும் யாருக்காவது உங்களால் அறிவுரை, நல்ல அறிவுரை தரமுடிகிறது. அதே சிக்கலில் நீங்களே இருந்தால் அந்த நல்ல அறிவுரையை உங்களுக்கு நீங்களே வழங்கிக்கொள்ள முடிவதில்லை.

வேறு யாராவது துன்பத்தில் இருந்தால், அதைக் கவனிக்க, பார்க்க உங்களுக்கு இடம் இருக்கிறது. நீங்கள் சாட்சியாயிருக்க முடிகிறது. அவருக்கு நல்லுரை கூற உங்களால் முடிகிறது. அதே துன்பத்தில் நீங்கள் மாட்டிக்கொண்டால் உங்களால் அதை அவ்வளவு திறமையாகக் கையாள முடியாது. அப்போதும்கூட நீங்கள் விடுபட்ட நிலையில் இருந்தால் உங்களால் அது முடியும். அப்போதும்கூட நீங்கள் அந்தச் சிக்கலுக்குள் இல்லாதது போல், அதற்கு வெளியில், ஒரு குன்றின்மேல் நின்று கொண்டு கீழே பார்ப்பதுபோல் அந்தச் சிக்கலை பார்க்க முடிந்தால் உங்களால் அது முடியும்.

ஒரே ஒரு கணத்துக்காவது பிரச்சினைக்கு வெளியே நீங்கள் இருந்து ஒரு சாட்சியைப்போல் அதை நீங்கள் பார்க்க முடியுமானால் எந்தப் பிரச்சனையையும் தீர்த்துவிட முடியும். சாட்சியாயிருப்பதானது எல்லாவற்றுக்கும் தீர்வு காண்கிறது. ஆனால் எந்த நிலைமைக்குள்ளும் நீங்கள் ஆழ்ந்துபோய் இருந்தால் சாட்சியாக இருப்பது கடினம். நீங்கள் ரொம்பவும் அடையாளப்படுத்திக்கொண்டு இருக்கிறீர்கள். கோபத்தின்போது நீங்கள் முற்றிலும் கோபமாக ஆகிறீர்கள். பார்க்கவும், கிரகிக்கவும், கவனிக்கவும், தீர்மானிக்கவும் முடியும்படியாக பின்னால் யாரும் மிச்சம் இருப்பதில்லை. யாரும் மிச்சம் விடப்படுவதில்லை.

காமத்தின்போது நீங்கள் முற்றிலுமாக அதற்குள் ஈடுபடுகிறீர்கள். ஈடுபடாத ஒரு மையம் இப்போது இருப்பதில்லை.

தன்னைத்தானே கவனித்துக் கொண்டிருக்கும் மனிதர் இரண்டுபறவைகள் அமர்ந்திருக்கும் ஒரு மரத்தைப் போன்றவர் என்று உபநிடதங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு பறவை குதித்துக் கொண்டும், அனுபவித்துக்கொண்டும் தின்று கொண்டும் பாடிக் கொண்டும் இருக்கிறது. மற்ற பறவையோ மரத்தின் உச்சியில் அமர்ந்து பேசாமல் அந்த முதல் பறவையைப் பார்த்துக்கொண்டுமட்டுமே இருக்கிறது.

உச்சியில் ஒரு சாட்சியாயிருக்கும். சுயத்தை நீங்கள் பெற்றிருந்தால்; கீழே ஒரு பாத்திரமாக இருந்துகொண்டு நீங்கள் பங்கேற்று ஆடும், குதிக்கும், பாடும், பேசும், நினைக்கும் மற்றும் ஈடுபடும் நாடகத்தை அந்த சுயம் பார்த்துக்கொண்டே இருந்தால்; உங்களுக்கு உள் ஆழத்தில் இருக்கும் ஒன்று இந்த நாடகத்தை பார்த்துக்கொண்டே இருக்க முடிந்தால்; மேடையில் நடிகராக நடித்துக் கொண்டிருக்கும் அதே வேளையில் பார்வையாளராகவும் கீழே அமர்ந்து அதைப் பார்த்துக் கொண்டிருக்கும் ஒரு நிலையில் உங்களால் இருக்க முடிந்தால், நடிகர், பார்வையாளர் இருவராகவும், ஏக காலத்தில் நீங்கள் இருக்க முடிந்தால் - சாட்சியாயிருப்பது வந்து விட்டிருக்கிறது. அந்த சாட்சிநிலையானது உங்களை அறிவதற்கான, புரிந்துகொள்வதற்கான, ஞானத்திற்கான சாத்தியமும், திறமையும் உள்ளவராக உங்களை ஆக்கும்.

ஆக இது விசித்திரமானதாகவே தோன்றுகிறது. புத்தரிடம் நீங்கள் போனால் உங்கள் பிரச்சனைகளின் ஆழமான விவரங்களுக்குள் அவரால் போகமுடியும். அவரும் அந்த பிரச்சனைக்குள் இருப்பதால் அல்ல. அவர் அந்தப் பிரச்சனைக்குள் இல்லை என்பதால் மட்டுமே அவரால் உங்களை ஊடுருவ முடிகிறது. உங்களின் சூழ்நிலைமைக்குள் அவர் தன்னை வைத்துக் காணவும் அதே சமயம் ஒரு சாட்சியாக இருக்கவும் அவரால் முடிகிறது.

எனவே, உலகியலுக்குள் இருப்பவர்களால் உலகியலைப் புரிந்துகொள்ள முடியாது. அதைக் கடந்து போயிருக்கிறவர்கள் மட்டுமே அதைப் புரிந்துகொள்கிறார்கள். எனவே எதை எதை நீங்கள் புரிந்தகொள்ள விரும்பினாலும் அதை அதைக் கடந்து செல்லுங்கள். இது

விசித்திரமாகவே தோன்றுகிறது. எதை நீங்கள் அறிந்துகொள்ள விரும்பினாலும் அதற்கு அப்பால் போங்கள். அப்போது மட்டுமே அறிதல் நிகழும். ஒன்றுக்குள்ளே அதன் ஆளாகவே உலவிக்கொண்டிருந் தால் நிறையத் தகவல்களை நீங்கள் திரட்ட முடியலாம். ஆனால் நீங்கள் ஒரு ஞானியாக - விவேகியாக ஆகமாட்டீர்கள்.

கணத்துக்கு கணம் இதை நீங்கள் நடைமுறைப்படுத்த முடியும். இரண்டையுமே நீங்கள் செய்ய முடியும். ஏக காலத்தில் நடிகராகவும் பார்வையாளராகவும் இருக்க முடியும். நீங்கள் கோபமாக இருக்கையில் மனத்தை உங்களால் தடம்மாற்ற முடியும். இது ஒரு ஆழமான கலை. ஆனால் நீங்கள் முயன்றால் உங்களால் முடியும். உங்களால் தடம்மாற்ற முடியும்.

ஒருகணம் நீங்கள் கோபமாய் இருக்க முடியும். பின் அதிலிருந்து விடுவித்துக் கொள்ளுங்கள், கோபத்தைப்பாருங்கள். கண்ணாடியில் உங்கள் முகத்தைப் பார்ப்பதுபோல் பாருங்கள். நீங்கள் செய்து கொண்டிருப்பதை பாருங்கள். உங்களைச் சுற்றிலும் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதைப் பாருங்கள். மற்றவர்களுக்கு நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள் என்பதைப் பாருங்கள். அவர்கள் அதற்கு எவ்வாறு எதிர்வினை புரிகிறார்கள் என்பதைப் பாருங்கள். ஒரு கணம் பாருங்கள். பின் மறுபடியும் கோபப்படுங்கள். கோபத்துக்குள் செல்லுங்கள். பின் மறுபடியும் ஒரு பார்வையாளர் ஆகுங்கள். இதைச் செய்ய முடியும். ஆனால் அதற்கு மிக ஆழமான பயிற்சி தேவைப்படுகிறது.

இதை முயன்று பாருங்கள். சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது ஒருகணம் சாப்பிடப்படுபவராகுங்கள். ருசியுங்கள். உணவாகமாறுங்கள், உண்ணுதலாகவே, ஆகுங்கள். அதைப் பார்க்கமுடிகிற ஒருவர் இருப்பதையே மறந்துவிடுங்கள். போதுமான அளவு உள்ளே சென்று பின், ஒரு கணம் வெளியேறுங்கள். சாப்பிட்டுக்கொண்டே இருங்கள். ஆனால் அதை பார்க்கத் தொடங்குங்கள் - உணவை, உண்பவரை பாருங்கள். மேலே நின்றுகொண்டு மேலேயிருந்து அதைப் பாருங்கள்.

விரைவில் நீங்கள் இதில் திறமையானவராக ஆவீர்கள். பின் நடிகரிலிருந்து பார்வையாளருக்கு, பங்கேற்பவரிலிருந்து கண்காணிப்பாளருக்கு நீங்கள் மனத்தின் இணைப்பை மாற்ற முடியும். அப்போது உங்களுக்கு பின்வருவது தெரியவரும்: அதாவது

பங்கெடுப்பின் மூலம் எதுவும் அறியப்படுவதில்லை. கிரகித்தலின் மூலம் மட்டுமே விசயங்கள் வெளிப்படுகின்றன, அறியப்படுகின்றன. எனவேதான் உலகை விட்டு நீங்கியவர்களே உலகுக்கு வழிகாட்டிகளாக ஆகி இருக்கின்றனர். கடந்து அப்பால் சென்றவர்களே ஆசான்கள் ஆகி இருக்கின்றனர்.

பிராய்டு தன் சீடர்களுக்கு கூறுவது வழக்கம் ... அது மிகவும் கடினமே. ஏனெனில் பிராய்டின் சீடர்களாகிய உளவியல் பகுப்பாய்வர்கள் கடந்திருக்கும் மனிதர்கள் அல்லர். அவர்கள் உலகத்துக்குள் வாழ்கிறவர்களே. அவர்கள் வெறும் வல்லுநர்கள்தான். ஆனால் பிராய்டுகூட அவர்களுக்கு பின்வரும் யோசனையைக் கூறி இருக்கிறார்: ஒரு நோயாளியை - மனநோய்வாய்ப்பட்டவரை - பரிசீலிக்கும்போது, ''நீங்கள் விடுபட்ட நிலையில் இருங்கள் உணர்ச்சிரீதியாக ஈடுபாடுகொள்ளாதீர்கள். நீங்கள் அதில் ஈடுபட்டுவிட்டால் உங்கள் அறிவுரை வீணானதாகிறது. ஒரு பார்வையாளராக மட்டுமே இருங்கள்.'' என்று கூறுவது வழக்கம்.

இது மிகவும் குரூரமாகக்கூடத் தோன்றுகிறது. ஒருவர் தேம்பி அழுதுகொண்டு இருக்கிறார். நீங்களும் ஒரு மனிதப் பிறவிதான் என்பதால் உங்களுக்கு அந்த உணர்ச்சி எழ முடியும். ஆனால் பிராய்டு சொன்னார், ''ஒரு உளவியல் மருத்துவராக, ஒரு உளவியல்பகுப்பாய் வராக நீங்கள் பணிபுரிந்தால் நீங்கள் ஈடுபாடற்றவராகவே இருக்க வேண்டும். மனிதரை அவர் ஒரு பிரச்சனை மட்டுமே என்பதைப் போல் பார்க்க வேண்டும். அவரை ஒரு மனித ஜீவன் என்னும் முறையில் பார்க்காதீர்கள். அவரை ஒரு மனிதப் பிறவியாக நீங்கள் பார்த்தால் உடனடியாக அதில் நீங்கள் ஈடுபடுகிறீர்கள். ஒரு பங்கேற்பாளராக ஆகி இருக்கிறீர்கள். இனி உங்களால் அறிவுரைகூற முடியாது. பின் நீங்கள் கூறும் எதுவும் பாரபட்சம் உடையதாகும். அதன்பின் நீங்கள் அதற்கு வெளியே நிற்பதில்லை.

இது கடினமே. மிகவும் கடினம். எனவே பிராய்டியர்கள் அதை பல வழிகளில் செய்துகொண்டிருக்கிறார்கள். ஒரு பிராய்டிய உளவியல் நிபுணர், நோயாளியைர நேருக்குநேர்பார்க்க மாட்டார். ஏனெனில் ஒரு மனிதரை நீங்கள் நேருக்கு நேர்பார்க்கும் போது ஈடுபாடு கொள் ளாமல் இருப்பது மிகவும் கடினம். ஒருவரின் கண்களுக்குள் நீங்கள் பார்த்தாலே அவருக்குள் நீங்கள் நுழைந்து விடுகிறீர்கள் எனவே

பிராய்டிய உளவியல் நிபுணர் ஒரு திரையின் பின்புறம் அமர்ந்து கொள்கிறார். நோயாளி ஒரு படுக்கையில் சாய்ந்து கொள்கிறார்.

இதுவும் மிகவும் குறிப்பிடத்தக்கதே. ஏனென்றால் பிராய்டு பின்வரும் விசயத்தையும் பிற்பாடு புரிந்துகொண்டார்: ஒரு மனிதர் படுத்துக்கொண்டும் நீங்கள் அவரை நேராகப் பார்க்காமல் அவர் அருகில் நின்றுகொண்டு அல்லது உட்கார்ந்துகொண்டும் இருந்தால் அவரில் ஈடுபாடு கொள்ளும் சாத்தியம் குறைவு. ஏன்? படுத்திருக்கும் மனிதர், அறுவை சிகிச்சை மேசைமேல் கிடக்கும் மனிதர்போல் ஒரு பிரச்சனையாக ஆகிறார். அவரை நீங்கள் பகுத்துப் பார்க்க முடியும். சாதாரணமாக முறையில் இது நடைபெறுவதில்லை. ஒருவரை நீங்கள் சந்திக்கச் சென்றால் அவர் ஒரு நோயாளியாக இருந்தால் ஒழிய, மருத்துவமனையில் இருந்தால் ஒழிய, நீங்கள் உட்கார்ந்து கொண்டிருக்கும்போது அவர் படுத்துக்கொண்டு உங்களிடம் பேசமாட்டார்.

எனவே தன் நோயாளி ஒரு படுக்கையில் படுத்திருக்க வேண்டும் என்பதை பிராய்டு வலியுறுத்துகிறார். எனவே அம்மனிதர் ஒரு பாதிக்கப்பட்டவர் நோயாளி என்றே உளவியல் மருத்துவர் உணர்கிறார். அவருக்கு உதவி வேண்டும். உண்மையில் அவர் ஒரு மனிதர் அல்ல, அவர் ஒரு பிரச்சனை. அவரில் நீங்கள் ஈடுபாடு கொள்ளத் தேவையில்லை. நீங்கள் முகத்தை நீங்கள் பார்க்கக்கூடாது. நோயாளியை அவர் எதிர்கொள்ளக் கூடாது. அதற்காகத்தான் திரைக்குப் பின் மறைந்து கொள்கிறீர்கள். அவரை நீங்கள் கவனிக்கிறீர்கள். நோயாளியை தொடாதீர்கள் என்கிறார், பிராய்டு. ஏனென்றால் தொட்டால், பாதிக்கப்பட்டவரின் கரத்தை உங்கள் கரத்தில் நீங்கள் எடுத்துக் கொண்டால், நீங்கள் ஈடுபட்டுவிடும் சாத்தியம் ஏற்படலாம்.

இந்த முன்எச்சரிக்கைகள் எல்லாம் ஏன் தேவையாகிறது என்றால் உளவியல் ஆய்வர்கள் ஞானநிலை பேறுபெற்ற மனிதர்கள் அல்லர். ஆனால் நீங்கள் ஒரு புத்தரிடம் போனால் நீங்கள் படுத்திருக்கத் தேவை இல்லை. உங்களை மளைத்துக் கொள்ள ஒரு திரை தேவை இல்லை. உணர்வுள்ளவராக நீடிப்பதற்காக ஈடுபடாமல் இருப்பது புத்தருக்குத் தேவை இல்லை. அவரால் ஈடுபட முடியாது.எப்பேர்ப்பட்ட சூழ்நிலயையிலும் ஈடுபட்டுக்கொள்ளாமலே அவர் தங்கிஇருக்கிறார்.

உங்கள் மேல் அவர் கருணை கொள்ள முடியும். ஆனால் பரிவு கொள்ள மாட்டார். இதை நினைவில் கொள்ளுங்கள். கருணைக்கும்

பரிவுக்கும் இடையிலான வேறுபாட்டைப் புரிந்துகொள்ள முயலுங்கள். கருணை என்பது ஒரு உயர்நிலை ஆதாரத்தில் இருந்து வருகிறது. புத்தர் உங்களிடம் கருணையுடன் இருக்க முடியும். உங்களை - நீங்கள் சிரமத்தில் இருக்கும் நிலையை - அவர் புரிந்து கொள்கிறார். ஆனால் அவர் உங்களிடம் பரிவுகாட்டுவதில்லை. ஏனெனில் உங்கள் முட்டாள்தனத்தின் காரணமாகவே நீங்கள் சிக்கலில் இருக்கிறீர்கள் என்பதை அவர் அறிகிறார். உங்கள் மடமையின் காரணமாகவே நீங்கள் தொந்தரவில் இருக்கிறீர்கள்.

அவரிடம் கருணை இருக்கிறது. உங்கள் மடத்தனத்தில் இருந்து நீங்கள் வெளியேற உங்களுக்கு ஒவ்வொரு வகையிலும் உதவ அவர் முயல்வார். ஆனால் உங்கள் மடத்தனத்துக்காக அவர் அதன்மேல் இரக்கம் காட்டப் போவதில்லை. எனவே ஒரு வகையில் அவர் மிகவும் இதமாயிருப்பார். ஒருவகையில் அவர் மிகவும் பாராமுகமாய் இருப்பார். அவரது கருணையைப் பொறுத்த மட்டில் அவர் இதமாயிருப்பார். பரிவிரக்கம் என்று பார்த்தால் அவர் முற்றிலும் இதமின்றி இருப்பார்.

மேலும் சாதாரணமாக, நீங்கள் புத்தரிடம் போனால் அவர் இதமற்று - உணர்ச்சியற்று இருப்பதாகவே நீங்கள் உணர்வீர்கள். ஏனெனில் கருணையைப்பற்றி நீங்கள் அறியமாட்டீர்கள். கருணையின் இதத்தைப்பற்றியும் நீங்கள் அறிய மாட்டீர்கள். பரிவின் இதத்தை மட்டுமே நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். அவரோ பரிவுகாட்டுவதில்லை. அவர் இரக்கமற்றவராக, உணர்ச்சியற்றவராகத் தோன்றுகிறார். நீங்கள் அழுது புலம்பினால் அவர் உங்களுடன் சேர்ந்து அழுது புலம்பப் போவதில்லை. அவரும் கூடச் சேர்ந்து அழுதால் பின் அவரிடமிருந்து உங்களுக்கு உதவி கிடைக்க வாய்ப்பில்லை; அவரும் அதே நிலைமையிலேயே இருக்கிறார். ஆனால் அவர் அழமுடியாது. ஆனால் நீங்கள் புண்படுவீர்கள்: ''நான் அழுது அரற்றிக் கொண்டு இருக்கிறேன். அவரோ ஒரு சிலைபோல் இருக்கிறாரே. இதயம் இல்லாதவர்போல் இருக்கிறாரே'' என நினைப்பீர்கள். அவரால் உங்கள்மேல் அனுதாபம் கொள்ள முடியாது. ஒரேவிதமான மனங்கள்தாம் அனுதாபம் காட்டும். கருணை என்பது உயர்நிலை மூலத்திலிருந்து வருகிறது.

அவர் உங்களை நோக்க முடியும். அவருக்கு நீங்கள் ஊடுருவிக் காணத்தக்கவராக, முற்றிலும் நிர்வாணமானவராக இருக்கிறீர்கள். நீங்கள் அவதிப்படுவது ஏன் என்பதை அவர் அறிகிறர். அதற்கு நீங்களே காரணமாக இருக்கிறீர்கள். அந்தக் காரணத்தை உங்களுக்கு விளக்க அவர் முயல்வார். அவர் கூறுவதை உங்களால் கவனிக்க முடிந்தால் கவனிக்கிற அந்த செயலே உங்களுக்குப் பெருமளவில் உதவி இருக்கும்

இது விசித்திரமானதாகத் தோன்றுகிறது. ஆனால் அப்படி இல்லை. புத்தரும் உங்களைப்போலவே வாழ்ந்திருக்கிறார். இந்தப் பிறவியில் இல்லை என்றால் பின் முந்திய ஏதேதோ பிறவிகளில் இதே போராட்டங்களின் ஊடாகவே அவர் சென்றிருக்கிறார். உங்களைப்போலவே அவரும் மடத்தனமாக இருந்திருக்கிறார். உங்களைப் போலவே அவரும் துன்புற்றிருக்கிறார். உங்களைப் போலவே அவரும் போராடி இருக்கிறார். பலப்பல பிறவிகளாக அதேபாதையிலேயே அவர் இருந்தார். அனைத்து வேதனையையும் அனைத்து போராட்டத்தையும் முரண்பாட்டையும் அவலத்தையும் அவர் அறிந்துள்ளார். அவர் விழிப்புடனிருக்கிறார். உங்களைவிட கூடுதல் விழிப்புடன் இருக்கிறார். ஏனெனில் கடந்தகால பிறவிகள் அனைத்தும் அவருடையவை மட்டுமல்ல, உங்களுடையவையும்தான் - இப்போது அவர்கள் கண்முன் இருக்கின்றன. மனித மனம் அனுபவிக்க முடிகிற எல்லா பிரச்சனைகளையும் அவர் அனுபவித்திருக்கிறார். எனவே அவர் அறிந்திருக்கிறார். அவர் அத்துடன் அவற்றை கடந்தும் விட்டிருக்கிறார். எனவே காரணங்கள் எவை என்பதை இப்போது அவர் அறிந்துள்ளார். அத்துடன் அவற்றை எப்படிக் கடந்து மேற்செல்ல முடியும் என்பதையும் அவர் அறிந்துள்ளார்.

உங்கள் துன்பங்களுக்குக் காரணம் நீங்கள்தான் என்பதை உங்களுக்குப் புரியவைக்க எல்லாவகையிலும் அவர் உதவுவார். இது மிகவும் கடினம்தான். ''என் துன்பங்களுக்கு காரணம் நானே'' என்பதை புரிந்து கொள்வதுதான் மிகவும் கடினமான காரியமாகும். இது ஆழமாகத் தாக்குகிறது. நீங்கள் புண்பட்டதாக உணர்கிறீர்கள். வேறு ஒருவர்தான் காரணம் என்று சொல்லப்படும் போதெல்லாம் நீங்கள் நன்றாக உணர்கிறீர்கள். சொல்லும் அந்த ஆள் பரிவுள்ளவராகத் தெரிகிறார். ''நீங்கள் துன்புறுகிறீர்கள், பலியாகிறீர்கள்; மற்றவர்களே உங்களைச் சுரண்டிக் கொண்டிருக்கிறார்கள். மற்றவர்கள் உங்களுக்குச் சேதம் விளைத்துக் கொண்டிருக்கிறார்கள். மற்றவர்கள் வன்முறையாக நடந்து கொள்கிறார்கள். ''என்று அவர் சொன்னால் நீங்கள் நிறைவாக உணர்கிறீர்கள். ஆனால் இந்த நிறைவு நீடிக்கப் போவதில்லை. இது ஒரு தற்காலிகத் தேறுதல் தான். இது அபாயகரமானது. மிகுந்த தீங்கு விளைப்பது. ஏனெனில் உங்கள் துன்பத்தின் காரணத்துக்கு அவர் உதவிக் கொண்டிருக்கிறார்.

எனவே உங்களிடம் அனுதாபம் காட்டுவோர் உண்மையில் உங்களின் எதிரிகளே ஆவர். ஏனெனில் அவர்களின் பரிவு உங்களின்

துன்ப காரணத்தை வலுப்படுத்தவே உதவுகிறது. துன்பத்தின் தோற்றுவாயே வலுப்பெறுகிறது. உங்கள்மேல்தப்பில்லை, உலகம் முழுவதுமே தப்பு, வெளியில் எங்கிருந்தோதான் துன்பம் வருகிறது என்று நீங்கள் கருதுகிறீர்கள்.

ஒரு புத்தரிடம் நீங்கள் போனால், விழிப்படைந்த ஞானியிடம் நீங்கள் போனால், அவர் கடுமையாகவே நடந்துகொள்ள நேரும். ஏனெனில் நீங்கள்தான் காரணம் என்னும் நிஜத்தை காணும்படி உங்களை நெருக்குவார் அவர். ஆனால் உங்கள் நரகத்துக்கு நீங்களே காரணம் என்பதை ஒருமுறை நீங்கள் உணரத் தொடங்கினாலே அடிப்படைமாற்றம் ஏற்கனவே தொடங்கி இருக்கிறது. இதை நீங்கள் உணரும் கணமே பாதிவேலை முடிந்துவிட்டதாகிறது. ஏற்கனவே நீங்கள் பாதையில் இருக்கிறீர்கள்; ஏற்கனவே நீங்கள் பயணத்தில் இருக்கிறீர்கள். ஒரு மாபெரும் மாற்றம் உங்களில் ஏற்பட்டுள்ளது.

நீங்களே காரணம் என்பதை நீங்கள் புரிந்துகொண்டதுமே பகுதியளவு துன்பங்கள் உடனடியாக மறைந்துவிடும். ஏனெனில் இனி அவற்றுடன் நீங்கள் ஒத்துழைக்க முடியாது. துன்பங்களை உருவாக்கும் காரணத்தை வலுப்படுத்த உதவுமளவுக்கு இனி நீங்கள் முட்டாளாக இருக்கமாட்டீர்கள். உங்கள் ஒத்துழைப்பு முறிந்துவிடும். பழைய பழக்க தோஷத்தின் காரணமாக மட்டுமே இன்னும் கொஞ்சகாலத்துக்கு துன்பங்கள் தொடரும்.

ஒருமுறை, மறுபடியும் தெருவில் குடித்துவிட்டுக் கிடந்ததற்காக கைதுசெய்யப்பட்டு நீதிமன்றத்துக்கு கொண்டுவரப்பட்டார் முல்லா நசுருதீன். நீதிபதி கேட்டார், ''நசுருதீன், இதே குற்றத்துக்காக பல முறைகள் உன்னை இங்கு பார்த்திருப்பாக எனக்கு ஞாபகம் உன் குடிகாரப் பழக்கத்துக்கு ஏதாவது காரண விளக்கம் வைத்திருக்கிறாயா?'' நசுருதீன் சொன்னார், ''இருக்கிறது, எசமான் நான் திரும்பத்திரும்பக் குடிப்பதற்கு ஒரு விளக்கம் இருக்கிறது. திரும்பத் திரும்பத் தாகம் எடுப்பதுதான் அதற்குக் காரணம்''

நீங்கள் விழிப்பாகவே இந்தாலும் உங்கள் பழைய பழக்கப் பாணி இன்னும் கொஞ்ச தூரத்துக்கு அதே திசையிலேயே உங்களைத் தள்ளிச் செல்லும். ஆனாலும் நீண்டகாலத்துக்கு அதனால் நீடிக்க முடியாது. அதற்கான ஆற்றல் இனியும் அங்கு இருப்பதில்லை. ஒரு செத்த பாணியாகவே அது தொடரமுடியும். பின் படிப்படியாக அது உதிர்ந்து ஒழியும். ஏனெனில் ஒவ்வொரு நாளும் அதற்கு ஊட்டம்

தேவைப்படுகிறது; ஒவ்வொரு நாளும் அதை வலுப்படுத்துவது தேவைப்படுகிறது; உங்களின் தொடர்ச்சியான ஒத்துழைப்பு தேவைப்படுகிறது.

உங்கள் துன்பங்களுக்கு காரணம் நீங்கள்தான் என்பதில் நீங்கள் விழப்புள்ளவராக ஆனால் ஒத்துழைப்பு கைவிடப்படுகிறது. எனவே நான் உங்களுக்கு கூறுவதெல்லாம் பின்வரும் எளிய உண்மையைக் குறித்து உங்களை விழிப்புள்ளவராக செய்வதற்கு மட்டும்தான். அதாவது நீங்கள் எங்கெங்கு இருந்தாலும் நீங்கள் யாராக இருந்தாலும் அதற்கு காரணம் நீங்கள்தான். இதைக்குறித்து அவநம்பிக்கை அடையாதீர்கள். ஏனெனில் இது மிகவும் நம்பிக்கை அளிக்கும் செய்தியாகும். வேறு ஒருவர்தான் காரணம் என்றால்தான் பின் உங்களால் ஒன்றுமே செய்ய முடியாதுபோகும்.

இதனால்தான் மகாவீரர் கடவுளை மறுக்கிறார். கடவுள் இல்லை என்கிறார் மகாவீரர். ஏனெனில் கடவுள் இருந்தால் பின் நாம் செய்வதற்கு ஒன்றுமில்லை. எல்லாவற்றுக்கும் காரணம் அவர்தான் என்றால் பின் நம்மால் என்ன செய்ய முடியும்? அப்போது நான் கையாலாகாதவன் ஆகிறேன். அவரே உலகைப் படைத்திருக்கிறார். என்னையும் அவரே படைத்தார். அவர்தான் படைத்தவர் என்றால் அழிக்கவும் அவரால்தான் முடியும். நான் துன்பத்தில் இருந்தால் அதற்கு அவரே பொறுப்பு ஆவார். என்னால் ஏதும் செய்ய முடியாது.

எனவே கடவுள் இருந்தால் மனிதன் செயலற்றவன் ஆகிறான் என்கிறார் மகாவீரர். எனவே ''கடவுள் இருக்கிறார் என்பதை நான் நம்பவில்லை'' என்கிறார் அவர். அதற்கான காரணம் தத்துவமானதல்ல. அதற்கான காரணம் மிகவும் உளவியலானது. உங்களுக்கு பொறுப்பேற்பவர்களாக யாரையும் நீங்கள் ஆக்க முடியாது என்பதே அக்காரணம். கடவுள் இருக்கிறாரா இல்லயைா என்பது அல்ல கேள்வி.

''நீங்கள் எப்படியாக இருந்தாலும் அதற்கெல்லாம் காரணம் நீங்களே என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டுமென்றே நான் விரும்புகிறேன்'' என்கிறார் மகாவீரர். இது மிகவும் நம்பிக்கை அளிப்பதுதான். நீங்கள்தான் காரணம் என்றால் பின் அதை நீங்கள் மாற்றமுடியும். நரகத்தை உங்களால் உருவாக்கமுடிகிறது என்றால் சொர்க்கத்தையும் உங்களால் படைக்க முடியும். நீங்கள்தான் படைப்பாளி.

எனவே கையாலாகாதவராக உணராதீர்கள். உங்கள் வாழ்வுக்கு மற்றவர்களே பொறுப்பு என்ற நிலையை எவ்வளவு அதிகமாய் நீங்கள் உண்டாக்குவீர்களோ அவ்வளவு அதிகமாய் நீங்கள் ஒரு அடிமையாக இருக்கிறீர்கள். ''என் மனைவி எனக்கு கோபமூட்டுகிறாள்'' என்று நீங்கள் சொன்னால் நீங்கள் ஒரு அடிமையாகவே இருக்கிறீர்கள். உங்கள் கணவர் உங்களுக்கு தொந்தரவாக இருக்கிறார் என்று நீங்கள் சொன்னால் நீங்கள் ஒரு அடிமைதான். உங்கள் கணவர் தொந்தரவை உண்டாக்கிக் கொண்டிருந்தாலும் அந்தக் கணவனைத் தேர்ந்தெடுத்தது நீங்கள்தானே. நீங்கள் இந்த தொல்லையை - இந்த விதமான தொல்லையை விரும்பினீர்கள். அது நீங்கள் தேர்ந்தெடுத்ததுதான். உங்கள் மனைவி நகரத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தால் அத்தகையவளை தேர்ந்தெடுத்தது நீங்கள் தானே.

'' உங்கள் மனைவியை நீங்கள் அறிய வந்தது எப்படி? யார் அவளை உங்களுக்கு அறிமுகப்படுத்தியது?'' என்று முல்லா நசுருதீனிடம் யாரோ கேட்டார்கள். அவர் சொன்னார், ''தானே அது நடந்தது. யாரையும் நான் குறைகூற முடியாது.'' என்று.

யாரும் யாரையும் குறைகூற முடியாது. மேலும் அது தானே நடந்ததும் இல்லை. அது ஒரு தேர்வு. குறிப்பிட்ட விதமான ஆண் குறிப்பிட்ட விதமான பெண்ணையே தேர்ந்தெடுக்கிறான். அது தற்செயல் அல்ல. மேலும் குறிப்பிட்ட காரணங்களுக்காகவே அவன் தேர்ந்தெடுக்கிறான். இந்தப் பெண் இறந்துவிட்டாலும் இதேவிதமான பெண்ணையே மறுபடியும் அவன் தேர்ந்தெடுப்பான். இந்தப் பெண்ணை அவன் விலக்கிவிட்டால் அதே விதமான பெண்ணையே மறுபடியும் அவன் மணம்முடிப்பான்.

மனைவிகளை நீங்கள் மாற்றிக்கொண்டே போகமுடியும். ஆனால் கணவன் தான் மாறாதவரை உண்மையான மாற்றம் இருக்கமுடியாது. பெயர்கள் மட்டுமே மாறுகின்றன. ஏனெனில் இந்த மனிதனுக்கு ஒரு தெரிவு இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட முகத்தை அவன் விரும்புகிறான். ஒரு குறிப்பிட்ட மூக்கை அவன் விரும்புகிறான். குறிப்பிட்ட விதமான கண்களை அவன் விரும்புகிறான். குறிப்பிட்ட விதமான நடத்தையை அவன் விரும்புகிறான்.

மேலும் அது ஒரு சிக்கலான விசயமே. ஒரு குறிப்பிட்ட வடிவுள்ள மூக்கை நீங்கள் விரும்பினால் - ஏனெனில் மூக்கு என்பது வெறும் மூக்கு

மட்டுமல்ல. அதன்மீது கோபம் இருக்கிறது. அகங்காரம் இருக்கிறது அமைதி இருக்கிறது. சமாதானம் இருக்கிறது. அது பல விசயங்களை ஏந்தி இருக்கிறது. நீங்கள் ஒரு குறிப்பிட்ட விதமான மூக்கை விரும்பினால் உங்களைக் கோபமூட்ட முடிகிற ஒரு மனிதரை நீங்கள் விரும்புவர் ஆகலாம். அகங்காரம் நிறைந்தமனிதருக்கு வேறுவிதமான மூக்கு இருக்கிறது. அதுபார்வைக்கு அழகாக இருக்கலாம். உங்களைச் சுற்றிலும் ஒரு நரகத்தை உருவாக்கக் கூடிய ஒருவரையே நீங்கள் தேடிக்கொண்டிருக்கிறீர்கள் என்பது தான் அந்த மூக்கு உங்களுக்கு அழகாகத் தென்படுவதற்கு காரணம். கூடியவிரைவிலேயே நிகழ்ச்சிகள் பின்தொடர்கின்றன. அவற்றை உங்களால் தொடர்புபடுத்திப் பார்க்க முடியாமல் போகலாம். அவற்றை உங்களால் இணைக்க முடியாமல் போகலாம். வாழ்க்கை என்பது சிக்கலானது. அதில் நீங்கள் அளவுக்கு அதிகமாக ஈடுபட்டால் பின் உங்களால் தொடர்புபடுத்திகாண முடியாது. நீங்கள் அதைக் கடக்கிறபோதுதான் உங்களால் காண முடியும்.

இது, பம்பாய்க்கு நேர்மேலே ஒரு விமானத்தில் நீங்கள் பறந்துகொண்டிருப்பதை ஒத்தது. பம்பாய் முழுவதும் - அதன் மொத்த வடிவமைப்பும் தெரிகிறது. பம்பாயில் நீங்கள் வசிப்பவரானால், அதன் வீதிகளில் நீங்கள் போகிறபோது அந்த மொத்த தோற்றத்தையும் உங்களால் பார்க்க முடியாது. பம்பாய்க்குள் வாழ்கிறவர்களால் முழு பம்பாயையும் பார்க்க முடியாது. மேலே பறப்பவர்களால் மட்டுமே அதைப் பார்க்க முடியும். மொத்த வடிவமைப்பும் தோன்றுகிறது. எல்லாமே ஒரு அமைப்புக்குள் பொருந்துகின்றன. மனிதப் பிரச்சனைகளுக்கு அப்பால் போவதே கடந்துசெல்லுதல் என்பதன் பொருள். அப்போது உங்களால் ஊடுருவிப் பார்க்க முடிகிறது.

பல மனிதர்களை நான் ஊடுருவிப் பார்த்திருக்கிறேன். அவர்கள் எதைச் செய்து கொண்டிருந்தாலும் அதை தாம் செய்து கொண்டிருப்பதுபற்றிய கவனம் அவர்களுக்கு இருப்பதில்லை. விளைவுகள் வந்த பிறகு மட்டுமே அவர்கள் கவனிக்கிறார்கள். விதைகளை தொடர்ந்து மண்ணில் விதைத்துக்கொண்டே போகிறார்கள். அதைக்குறித்து அவர்கள் விழிப்பாக இல்லை. அறுவடை செய்யவேண்டி வரும்போது மட்டுமே அவர்கள் விழிப்புள்ளவர்கள் ஆவார்கள். மேலும் ஆரம்பத்தில் விதைத்ததும் தாங்களே, இப்போது அறுவடைசெய்வதும் தாங்களே என்பதை அவர்களால் இணைத்துப்பார்க்க முடிவதில்லை.

நீங்களே காரணம் என்பதை ஒருதரம் நீங்கள் புரிந்து கொண்டுவிட்டால் பாதையில் நீங்கள் பயணம் செய்திருக்கிறீர்கள்.

இப்போது பல விசயங்கள் சாத்தியம் ஆகின்றன. இனி உங்கள் வாழ்க்கை எனப்படும் பிரச்சனைகுறித்து நீங்கள் ஏதாவது செய்ய முடியும். அதை நீங்கள் மாற்ற முடியும். உங்களை நீங்கள் மாற்றுவதன்மூலமே அதை நீங்கள் மாற்ற முடியும்.

ஒருபெண் என்னைப் பார்க்க வந்தாள். அவள் மிகவும் பணக்காரக் குடும்பத்தை, மிகவும் நல்ல குடும்பத்தை, பண்பட்ட, கல்வி கலாச்சாரம் நிறைந்த குடும்பத்தைச் சேர்ந்தவள். ''நான் தியானிக்க தொடங்கினால் அது என் கணவருடனான என் உறவை எவ்வகையிலேனும் பாதிக்குமா?'' என்று அவள் கேட்டாள். அதற்கு நான் பதில் கூறும் முன்பாக அவளே சொன்னாள், ''அது பாதிக்காது என்பது எனக்குத் தெரியும். ஏனென்றால் அதிக நல்லவளாகவும் அதிக அமைதி யானவளாகவும் அதிக அன்பானவளாகவும் நான் ஆகிற போது - அது என் உறவை எவ்வாறு பாதிக்க முடியும்?''

ஆனால் நான் அவளிடம் சொன்னேன், ''நீ சொல்வது தவறு. உறவுமுறை பாதிக்கப்படவே போகிறது. நீ நல்லவளாக ஆனாலோ கெட்டவளாக ஆனாலோ அது முக்கியமில்லை. நீ மாறுகிறாய். ஜோடியில் ஒருவர் மாறுகிறார். அப்போது அந்த உறவு பாதிக்கப்படவே செய்யும். மேலும் இதுதான் அதிசயம்: நீமோசமானவளாக ஆனால் கூட உறவுமுறை அதிகமாகப் பாதிக்கப்படாது. நீ அதிக நல்லவளாக ஆனால் உறவுமுறை சீர்குலையவே போகிறது. ஏனெனில் ஜோடியில் ஒருவர் சீரழிந்து மோசமானவர் ஆனால் மற்றவர் ஒப்பீட்டளவில் தன்னை உயர்ந்தவராக உணர்கிறார். அது அவரது அகங்காரத்தை காயப்படுத்துவதில்லை. மாறாக அகங்காரத்துக்கு அது நிறைவளிப்பதாக இருக்கிறது.''

எனவே கணவன் குடிக்கத் தொடங்கினால் மனைவி நன்றாக உணர்கிறாள். ஏனென்றால் இப்போது அவள் ஒரு நீதி போதகராக ஆகிறாள். இப்போது அவள் அவனை அதிகமாக ஆதிக்கம்செய்கிறாள். இப்போது அவன் வீட்டுக்குள் நுழையும் போதெல்லாம் ஒரு குற்றவாளியைப் போன்றே நுழைகிறான். மேலும் அவன் குடிக்கிறான் என்பதாலேயே அவன் செய்யும் ஒவ்வொன்றும் தவறானது ஆகிறது. அதுவே போதுமானது. ஏனெனில் அந்த வாதத்தை எங்கிருந்ததும் மனைவி திரும்பத்திரும்ப இழுத்து வர முடிகிறது. எனவே எல்லாமே கண்டிக்கப்படுகிறது.

ஆனால் ஒரு கணவன் அல்லது மனைவி தியானத் தன்மை உள்ளவராக ஆனால் பின் இன்னும் ஆழமான பிரச்சனைகள் இருக்கும்.

ஏனென்றால் மற்றவரின் அகங்காரம் காயப்படும். ஒருவர் உயர்ந்தவராக ஆகிறார். அது நிகழ அனுமதிக்கக்கூடாது என்பதற்கு மற்றவர் எல்லாவகையிலும் முயல்வார். சாத்தியமான எல்லாத் தொல்லைகளையும் அவர் உருவாக்குவார். அப்படியே தியானம் நிகழ்ந்தாலும் அதை - அது நிகழ்ந்தது என்பதை - நம்பாதிருக்கவே அவர் முயற்சி செய்வாரர். இதுவரை அது நிகழவில்லையே என அவர் நிரூபிப்பார். ''நீயும் ஆண்டுக்கணக்கில் தியானம் செய்துவருகிறாய். எதுவுமே ஏற்பட்டதில்லை. அப்படியானால் அதனால் என்ன பயன்? பயனில்லை. இப்பவும் உனக்குக் கோபம் வருகிறது. இப்பவும் நீ இன்னின்னவற்றை செய்கிறாய். இப்பவும் நீ பழைய ஆளாகவே இருக்கிறாய்'' என்று அவர் சொல்லிக்கொண்டே போவார். எதுவுமே நிகழவில்லை என்பதை வலிந்து நிலையிறுத்தவே அவர் முயல்வார். தன்னைத்தானே தேற்றிக்கொள்வதுதான் இது.

ஆனால் உண்மையிலேயே ஒன்று நடந்திருந்தால், கணவனோ மனைவியோ நிசமாகவே மாறி இருந்தால், பின் இந்த உறவுமுறை தொடரமுடியாது. மற்றவரும் மாறத் தயாராக இல்லாதவரை அது அசாத்தியம். ஆகவே தன்னைத்தானே மாற்றிக்கொள்ளத் தயாராவது என்பதுதான் மிகவும் கடினமானது. ஏனெனில் அகங்காரத்தை அது துன்புறத்துகிறது. நீங்கள் இப்போது இருக்கிற விதம் தவறானது என்பதே அதன் பொருள். அப்போதுமட்டுமே மாறுவதற்கான தேவை இருக்கிறது.

எனவேதான் மாறியாக வேண்டும் என்று எவரும் ஒருபோதும் உணர்வதில்லை. ''மாறவேண்டியது உலகம் முழுதும்தான்; நானல்ல. நான் சரியானவன், முற்றிலும் சரியானவன். உலகம்தான் தவறானது. ஏனெனில் எனக்கு அது பொருத்தமாயில்லை.'' புத்தர்கள் அனைவரின் முயற்சிகள் அனைத்தும் மிகவும் எளியது: நீங்கள் எங்கெங்கு இருந்தாலும் நீங்கள் என்னவாக இருந்தாலும் அதற்கு நீங்களே காரணம் என்பதை நீங்கள் உணரும்படி செய்வதே அவர்களின் முயற்சியாக இருக்கிறது.

**இரண்டாவது கேள்வி:**

**யோகப்பாதையில் செல்லும் எத்தனையோ மனிதர்கள் ஏன் சண்டை, போராட்டம், விதிகளைக் கறாராக கடைப் பிடிப்பதில் மிகையான ஆர்வம், போர்வீரருக்கொத்த வழிமுறைகள் என்கிற மனப்பாங்கைக் கடைப்பிடிக்கிறார்கள்? ஒரு யோகியாக இருப்பதற்கு உண்மையாகவே இவைஎல்லாம் அவசியமா?**

இது முற்றிலும் அவசியமற்றது. அவசியமற்றது மட்டுமல்ல, யோகப்பாதையில் எல்லா விதமான தடைகளையும் இது உருவாக்குகிறது. போர்வீரரைப் போன்ற மனோபாவமே மிகப்பெரும் தடை. ஏனெனில் போரிடுவதற்கு அங்கு யாருமில்லை. உள்ளுக்குள் நீங்கள் ஏகாந்தமாக இருக்கிறீர்கள். நீங்கள் சண்டைபோடத் தொடங்குவதானால் உங்களை நீங்களே பிளந்து கொண்டு இருக்கிறீர்கள்.

இப்படி பிள்வுறுதலே, ஆளுமைப்பிளவே மிகப்பெரிய நோய். முழுப்போராட்டமும் பயன்படுவதில்லை. ஏனெனில் அது எங்கும் கொண்டு சேர்ப்பதில்லை. யாரும் வெற்றிபெற முடியாது. இரு தரப்புகளிலும் நீங்களே இருக்கிறீர்கள். எனவே அதிகபட்சமாக சொன்னால் நீங்கள் விளையாட முடியும். கண்ணாமூச்சி விளையாட்டு ஆட முடியும். சிலநேரங்களில் ஒரு தரப்பு வெல்கிறது. பிற நேரங்களில் மறுதரப்பு வெல்கிறது. பின் மறுபடியும் முதல் தரப்பு வெல்கிறது. இம்முறையில்தான் உங்களால் இயங்கமுடிகிறது. சிலநேரங்களில் நீங்கள் நல்லதரப்பு என்று அழைப்பது வெல்கிறது. ஆனால் தீய தரப்புடன் போரிடுவது மூலம் - தீயதின்மேல் வெற்றி கொள்வதுமூலம் நல்லதரப்பின் ஆற்றல் தீர்ந்துபோகிறது. தீயதரப்பு மறுபடியும் ஆற்றலைச் சேர்த்துக்கொள்கிறது. எனவே கூடியசீக்கிரம் தீய பகுதி மேலெழும். இது முடிவின்றித் தொடர முடியும்.

ஆனால் ஏன் இந்த போர்வீர மனோபாவம்/அணுகுமுறை ஏற்படுகிறது? பெரும்பாலான மக்கள் ஏன் சண்டைபிடிப்பதுடனேயே தொடங்குகிறார்கள்? முழுமையான மாற்றத்தைக் குறித்துச் சிந்திக்கிற கணத்திலிருந்தே அவர்கள் சண்டைபோடத் தொடங்கிவிடுகிறார்கள் என்பது ஏன்? ஏனெனில் வெற்றிபெறுவதற்கான ஒரே ஒரு முறைதான் உங்களுக்கு தெரிந்திருக்கிறது. அதுதான் சண்டைபோடுவது.

வெளிஉலகத்தில், வெளியிலிருக்கும் உலகத்தில் வெற்றி பெற ஒரு வழிதான் உள்ளது. அதுவே சண்டை. சண்டை பிடிப்பது. அடுத்தவரை அழிப்பதுமே அது. வெற்றிபெற்றவராவதற்கு வெளிஉலகத்தில் இருக்கும் ஒரே வழி இதுதான். மேலும் கோடிக்கணக்கான ஆண்டுகளாக நீங்கள் புற உலகிலேயே வாழ்ந்து வருகிறீர்கள்; சண்டை பிடித்தே வந்திருக்கிறீர்கள். நன்றாகச் சண்டை போடாத நேரங்களில் நீங்கள் தோற்றிருக்கிறீர்கள். ர ன்றாகச் சண்டை போட்ட சமயங்களில் வென்றிருக்கிறீர்கள். எனவே 'வன்மையாக போரிடு'' என்பது உடம்புக்குள்ளேயே எழுதப்பட்டுவிட்ட நிகழ்ச்சி நிரலாக ஆகி இருக்கிறது. வெற்றிபெறுவதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. அதுதான் கடுமையாகத் போரிடுவது.

உள்ளுக்குள் நீங்கள் போகும்போது அதே நிகழ்ச்சி நிரலையே நீங்கள் எடுத்துச் செல்கிறீர்கள். ஏனென்றால் இதனுடன் மட்டுமே நீங்கள் பரிச்சயப்படுகிறீர்கள். ஆனால் உள் உலகத்தில் நேர் மாறானதே நிலவரமாக இருக்கிறது: போரிட்டால் தோற்றுப் போவீர்கள். ஏனெனில் சண்டை பிடிப்பதற்கு அங்கு யாருமில்லை. உள் உலகைப் பொறுத்தவரை விட்டுக்கொடுத்தலே வெற்றிக்கு வழி. சரணாகதியே வெற்றிபெற்றவ ராகும் வழி. சண்டை பிடிப்பதல்ல. உள் இயல்பு பாயந்தோட அனும திப்பதே வெற்றிபெற வழி. ஆற்றனை பாய விடுங்கள், பிடித்துத் தள்ளா தீர்கள் என்பதே உள்ளுலகைப் பொறுத்தவரை வழி . இது நேர்மாறானது. ஆனால் வெளி உலகத்துடன் மட்டுமே நீங்கள் பழக்கபபட்டிருக்கிறீர்கள். எனவே ஆரம்பத்தில் அது அப்படித்தான் இருக்கும். உள்ளே போவோர் யாராயினும் அதே பழைய ஆயுதங்களையே, அதே மனோபாவங் களையே, அதே போராட் டத்தையே, அதே தற்காப்பையே தன்னுடன் தூக்கிச் செல்வார்.

மாக்கியவல்லி வெளி உலகத்துக்குப் பொருத்தமானவர். லாவோசு, பதஞ்சலி, புத்தர் போன்றோர் உள்ளுலகத்துக்கானவர்கள். அவர்கள் வேறுவிதமான விசயங்களைப் போதிக்கிறார்கள். தாக்குவதே சிறந்த தற்காப்பு என்கிறார் மாக்கியவல்லி: ''தாமதிக்காதே. எதிரி தாக்கும்வரை காத்திருக்காதே. ஏனென்றால் அப்போதே நீ இழக்க ஆரம்பித்து விடுகிறாய்.ஏற்கனவே நீ இழந்திருக்கிறாய், ஏனெனில் எதிரி தொடங்கிவிட்டான். ஏற்கனவே அவன் ஆதாயமடைந்துள்ளான். எனவே எப்போதுமே முதலில் நாமே தொடங்குவதே மேலானது. தற்காக்கும் நிலை ஏற்படும் வரை காத்திருக்காதே. எப்போதுமே வலியச் சண்டைக்குப் போகிறவனாயிரு. வேறு யாராவது உன்னைத் தாக்கத் தொடங்கும் முன்பாக நீ அவனை தாக்கத் தொடங்கிவிடு.

எந்த அளவுக்கு முடியுமோ அந்த அளவுக்கு மிகுந்த சூழ்ச்சியுடனும் வஞ்சகத்துடனும் சண்டையிடு. நாணயமற்றிரு. தந்திரமாயிரு. வம்புச் சண்டைக்கு போகிறவனாயிரு. ஏமாற்று. ஏனெனில் அது ஒன்றுதான் வழி'' இவைகள்தான் மாக்கியவல்லி முன்வைக்கும் உபாயங்கள். ஆனால் மாக்கியவல்லி ஒரு நேர்மையான மனிதர். எனவேதான் என்னென்ன தேவையோ அதையெல்லாம் அப்படியே தெரிவிக்கிறார்.

ஆனால் லாவோசு, பதஞ்சலி, அல்லது புத்தரை நீங்கள் கேட்டால் அவர்கள் ஒரு வித்தியாசமான வெற்றியை - அக வெற்றியைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். அங்கு சூழ்ச்சித்திறன் பயன்படாது. ஏய்ப்பு வேலை உதாவது. போராட்டம் பயன்படாது. அத்துமீறல் உதாவ்து. ஏனெனில் யாரை நீங்கள் ஏமாற்றப் போகிறீர்கள்? யாரை நீங்கள்

தோற்கடிக்கப்போகிறீர்கள்? அங்கே நீங்கள் தன்னந்தனியாக இருக்கிறீர்கள். வெளிஉலகில் ஒருபோதும் நீங்கள் தனியாக இருப்பதில்லை. மற்றவர்கள் அங்கே இருக்கிறீர்கள். அவர்களே எதிரிகள். உள் உலகில் நீங்கள் தனியாக இருக்கிறார்கள். அங்கு வேறு யாருமில்லை. பகைவர் யாருமில்லை. நண்பரும் இல்லை. முற்றிலும் புதிய ஒரு சூழ்நிலை அங்கு உங்களுக்கு இருக்கிறது. பழைய ஆயுதங்களை நீங்கள் ஏந்தி வருகிறீர்கள். ஆனால் அந்தப் பழைய ஆயுதங்களே உங்கள் தோல்விக்கு காரணமாக ஆகும். வெளி உலகில் இருந்து உள் உலகிற்கு, நீங்கள் மாறும்போது வெளியே நீங்கள் கற்றிருக்கிற அனைத்தையும் விட்டுவிடுங்கள். அவை உதவப் போவதில்லை.

''அமைதியாய் இருக்க, என்னையே அறிய நான் கற்றுக்கொள்ள வேண்டியது என்ன?'' என்று ரமண மகரிஷியிடம் ஒருவர் கேட்டார். அதற்கு ரமண மகரிஷி சொன்னாராம், ''உள்மனத்தை அடைவதற்கு எதையும் நீங்கள் கற்கவேண்டியதில்லை. கற்றதை மறக்க வேண்டியது தான் தேவை. கற்றது உதவாது. அது வெளியில் செல்லவே உதவுகிறது. அவற்றை நினைவிலிருந்து அகற்றுவதே உதவும்.''

நீங்கள் கற்றுக்கொண்டவை எல்லாவற்றையும் நினைவிலிருந்து அகற்றுங்கள், மறந்துவிடுங்கள், கைவிடுங்கள். அப்பாவியான தன்மையுடன் உள்ளே செல்லுங்கள். குழந்தைபோல், சூழ்ச்சியும் புத்திசாலித்தனமும் இன்றி, குழந்தைகளுக்கு இருப்பதுபோல விசுவாசத்துடனும் களங்கமற்ற மனதுடனும் உள்ளே போங்கள். யாரோ ஒருவர் உங்களைத் தாக்கப்போகிறார் என்னும் ரீதியில் எண்ணாதீர்கள். அப்படி அங்கு யாருமில்லை. எனவே பாதுகாப்பற்றவ ராக உணராதீர்கள். தற்காப்புக்கான எந்த ஏற்பாடுகளையும் செய்யாதீர்கள். அடியை வாங்கிக்கொள்பவராக, ஏற்கக்கூடியவராக, திறந்த தன்மை யுள்ள்வராக இருங்கள். அதுதான் சிரத்தை அல்லது விசுவாசம் என்பதன் பொருள்.

வெளிஉலகுக்கு சந்தேகம் தேவைப்படுகிறது. ஏனெனில் அங்கு மற்றவர் இருக்கிறார். அவர் உங்களை ஏய்க்கக் கருதி இருக்கலாம். எனவே நீங்கள் சந்தேகிக்க வேண்டி உள்ளது. ஐயப்படும் மனநிலையில் இருக்கவேண்டி இருக்கிறது. உள் உலகில் சந்தேகம், ஐயவாதம் தேவையில்லை. உங்களை ஏய்ப்பதற்கு அங்கு யாருமில்லை. நீங்கள் இருக்கிறபடியே அங்கு நீங்கள் தங்கிஇருக்க முடியும்.

எனவேதான் ஒவ்வொருவரும் இந்தப் போர்வீர மனோபாவத்தை தூக்கிப்பிடித்துக் கொண்டிருக்கிறார். ஆனால் அதற்குத் தேவையே

யில்லை. அது ஒரு தடை. மாபெரும் தடை. அதை வெளியே விட்டுவிடுங்கள். நினைவில்கொள்ள வேண்டிய ஒரு அம்சமாக இதை நீங்கள் ஆக்கிக் கொள்ள முடியும். வெளியில் தேவைப்படுவது எதுவாயினும் அது உள்ளுக்குள் ஒரு தடையாகவே ஆகும்.'' எதுவாயினும்'' என்பதை நிபந்தனையற்ற முறையிலேயே சொல்கிறேன். எனவே முயற்சிக்க வேண்டியது நேர்மாறான முறைதான்.

வெளியில் நடத்தும் அறிவியல் ஆய்வில் சந்தேகம் பயன்படுகிறது என்றால் உள்ளே நடத்தும் ஆன்மீகத் தேடலில் திடநம்பிக்கை பயன்படும். அதிகாரம், கௌரவம் முதலியவை நிறைந்த வெளி உலகில் ஆக்கிரமிப்புத் தன்மை உதவுகிறது என்றால் ஆக்கிரமிப்பு இல்லாத தன்மையே உள்ளுலகில் உதவும். சூழ்ச்சி செய்யும், கணக்குப்போடும் மனமே வெளியில் உதவுகிறது என்றால் அப்பாவித்தனமான, முன்கூட்டிக் கணிக்காத குழந்தைமனமே உள்ளுலகில் உதவும்.

இதை நினைவில் கொள்ளுங்கள்: வெளியில் உதவுவது எதுவாயினும் அதற்கு நேர் எதிரானதே உள்ளே உதவும். எனவே மாக்கியவல்லியின் 'இளவரச'னைப் படியுங்கள். வெளியுலக வெற்றிக்கு அதுவே வழி. பின் மாக்கியவல்லியின் 'இளவரசனை நேர் மாறாக ஆக்குங்கள், நீங்கள் உள்ளே போய்ச் சேர்ந்துவிட முடியும். மாக்கியவல்லியை தலைகீழாக்கினால் போதும் அவர் லாவோ - சு ஆகிவிடுவார். அவரை சிரசாசனம் பண்ண வைத்தால் போதும். மாக்கியவல்லி தலைகீழாக நின்றால் பதஞ்சலி ஆகிறார்.

எனவே அவரது 'இளவரசனைப் படியுங்கள். அது அழகானது. வெளியுலக வெற்றிக்கு தேவையான தெளிவான அறிக்கை அது. பின் லாவோ சுவின் 'தாவோ தே ச்சிங்' கையோ பதஞ்சலியின் யோக சூத்திரங்களையோ புத்தரின் தம்மபதத்தையோ யேசுவின் மலைப் பிரசங்கத்தையோ வாசியுங்கள். அவை நேர் முரணாக, நேர்மாறாக, நேர் எதிராக உள்ளன.

''தாழ்ச்சி உள்ளவர்களே ஆசீர்வதிக்கப்பட்டவர்கள், அவர்கள் பூமியைச் சொந்தமாக்கிக் கொள்வார்கள்'' என்கிறார் யேசு. தாழ்ச்சி உள்ளவர்கள், அப்பாவிகள், பலவீனமானவர்கள் - இவர்கள் எந்த விதத்திலும் பலம் இல்லாதவர்கள். ''எளியவர்கள் பாக்கியவான்கள். ஏனெனில் என் கடவுளின் அரசில் அவர்களே பிரவேசிப்பார்கள்.'' ஏசு தெளிவாகக் கூறுகிறார், ''இருதயத்தில் எளிமையானவர்கள்'' என்று அவர்கள் எதற்கும் உரிமைகோர முடியாது. உரிமைகொண்டாட அவர்களிடம் எதுவும் இல்லை. ''என்னிடம் இன்னது இருக்கிறது'' என்று

அவர்களால் கூற முடியாது. அவர்களிடம் எதுவும் உடைமையாக இருப்பதில்லை: அறிவு, செல்வம், அதிகாரம், பெருமை எதுவும் இருப்பதில்லை. அவர்களிடம் உடைமை எதுவும் இல்லை. அவர்கள் ஏழைகளாய் இருக்கிறார்கள். ''இது என்னுடையது'' என்று அவர்களால் கேட்க முடியாது.

''இது எனது, அது எனது'' என்று நாம் உரிமை கொண்டாடிக் கொண்டே போகிறோம். எவ்வளவு அதிகமாய் என்னால் உரிமை கொள்ள முடிகிறதோ அவ்வளவு அதிகமாய் ''நான்'' என்பதை நான் உணர்கிறேன். புற உலகில் உங்கள் மனத்தின் ஆட்சிப்பரப்பு எவ்வளவு பெரியதோ அவ்வளவு பெரியவராக நீங்கள் இருக்கிறீர்கள். அக உலகில் மனத்தின் ஆட்சிப்பரப்பு எவ்வவளவு குறைவோ அவ்வளவு பெரியவராக நீங்கள் இருக்கிறீர்கள். அந்தப் பிரதேசம் முற்றிலுமாக மறையும்போது, நீங்கள் ஒரு பூஜ்ஜியமாக ஆகி இருக்கிறபோது நீங்களே மாமனிதர். அப்போதே நீங்கள் வெற்றிபெற்றவராகிறீர்கள். அப்போது தான் வெற்றி ஏற்பட்டிருக்கிறது.

போராட்டம், சண்டை, விதிகளைக் கறாராக் கடைப்பிடிப்பதில் மிகையான ஆர்வம், ஒழுங்குமுறைகள், கணிப்புகள், திட்டமிடல் முதலிய போர்வீர மனோபாவங்களை இந்த மனம் தன்னுள் சுமந்துகொண்டிருக் கிறது. ஏனெனில் அவற்றையே நீங்கள் கற்றிருக்கி றீர்கள், வேறெதுவும் உங்களுக்கு தெரியாது. எனவேதான் ஒரு குரு அவசியம் ஆகிறார். இல்லாவிட்டால் உங்கள் சொந்த வழிகளிலேயே நீங்கள் போவீர்கள்; அவையோ அங்கு முற்றிலும் அபத்தமாகும்.

எனவேதான் தீட்சை தேவையாகிறது. தீட்சை என்பதன் பொருள், நீங்கள் ஒருபோதும் பயணித்திராத பாதையில் உங்களுக்கு ஒருவர் வழிகாட்ட முடியும் என்பதே; நீங்கள் இதுவரை முற்றிலும் அறிந்திராத ஒரு உலகை, ஒரு பரிணாமத்தைப் பற்றிய ஒரு கணநேரக் காட்சியை தன்வழியாக ஒருவர் வழங்கமுடியும் என்பதே. அதைப் பொறுத்தவரை நீங்கள் ஏறக்குறைய ஒரு பார்வையற்றவராகவே இருக்கிறீர்கள். அதை உங்களால் பார்க்க முடிவதில்லை. ஏனென்றால் தாம் எவற்றைப்பார்க்கக் கற்றுத்தரப்பட்டுள்ளதோ அவற்றைமட்டும் கண்களால் பார்க்க முடிகிறது.

நீங்கள் ஒருதையலக் கடைக்காரராக இருந்து, இங்கு நீங்கள் வந்திருந்தால் பின் நீங்கள் முகங்களைப் பார்க்க மாட்டீர்கள். உடைகளைப் பார்க்கிறீர்கள். முகங்களில் பெரிதாக ஒன்றுமில்லை. உடையைப் பார்ப்பதன் மூலமே ஒருவர் எப்படிப்பட்ட மனிதர் என்பதை நீங்கள் அறிகிறீர்கள். ஒரு மொழியை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள்.

நீங்கள் ஒரு செருப்பு செய்பவர் என்றால் உடையைக்கூட நீங்கள் ஏறிட்டுப் பார்க்கத் தேவையில்லை. செருப்புகளைப் பார்த்தாலே போதும். ஒரு செருப்புத் தொழிலாளி வீதியில் கீழே பார்த்துக்கொண்டே போகமுடியும். அந்நிலையிலேயே, கடந்து செல்பவர் யார் என்பதை அவர் அறிகிறார். செருப்பைப் பார்த்தே - அவர் பெரிய தலைவரா, கலைஞரா, நாடோடியா, ஹிப்பியா, பணக்காரனா, பண்பாடுள்ளவரா, படித்தவரா, படிக்காதவரா, கிராமத்து ஆளா - யார் என்பதை அவரால் அறிய முடியும். ஏனெனில் எல்லாக் குறிப்புகளையும் செருப்பே தருகிறது. அந்த மொழியை அவர் அறிந்திருக்கிறார். ஒரு மனிதர் வாழ்க்கையில் வெற்றி பெற்றிருந்தால் அவரது செருப்பு ஒருவிதமாக மின்னுகிறது. வாழக்கையில் அவர் தோற்றுப் போயிருந்தால் செருப்பும் நொந்துபோய் இருக்கிறது. அந்தச் செருப்பு நைந்துபோய், பேணப்படாமல் இருக்கிறது. இதைச் செருப்பு செய்பவர் அறிந்து கொள்கிறார். உங்கள் முகத்தை அவர் பார்க்க வேண்டியதில்லை. அவர் அறிய விரும்பும் அனைத்தையும் செருப்பே சொல்லிவிடும்.

ஒவ்வொன்றையும் நாம் கற்கிறோம். பின் அதில் நாம் நிலைத்து விடுகிறோம். பின் அதையே நாம் எங்கணும் காண்கிறோம். ஒன்றை நீங்கள் கற்றிருக்கிறீர்கள். அதைக் கற்பதற்காக பலபிறவிகளை நீங்கள் வீணாக்கி இருக்கிறீர்கள். அது இப்போது அழமாக வேறூன்றியுள்ளது; ஆழப்பதிந் துள்ளது; உங்கள் மூளை அணுக்களின் பகுதியாகவே அது ஆகி உள்ளது. எனவே உள்ளே நீங்கள் புகுந்தால் அங்கே வெறும் இருட்டே, வெறுமையே இருக்கிறது. எதையும் உங்களால் பார்க்க முடிவதில்லை. நீங்கள் அறிந்துள்ள உலகம் முழுவதும் மறைந்துவிட்டிருக்கிறது.

இது இப்படிப்பட்டது: உங்களுக்கு ஒரு மொழி மட்டும் தெரியும். திடீரென நீங்கள் உங்களின் மொழியை புரிந்துகொள்வார் யாரும் இல்லாத ஒரு தேசத்துக்குக் கொண்டுபோய் விடப்படுகிறீர்கள். அங்குள்ளவர் மொழியை உங்களாலும் புரிந்துகொள்ள முடியாது. அந்த மக்கள் பேசிக்கொண்டும் சளசளத்துக் கொண்டும் இருக்கிறார்கள். அப்போது அவர்கள் கிறுக்கர்கள் போலவே உங்களுக்குத் தோன்று வார்கள். அவர்கள் உளறிக்கொண்டிருப்பதைப் போலவே தோன்றுகிறது. உங்களுக்கு அது புரியாததால் அது மிகுந்த இரைச்சலாகவும் தோன்றுகிறது. தேவைக்குமேல் உரத்துப் பேசுகிறார்கள்போல் தோன்றுகிறது. உங்களால் அதைப் புரிந்துகொள்ள முடிந்தால் முழு நிலவரமும் மாறுகிறது. நீங்கள் அதன் பகுதியாக ஆகிறீர்கள். பின் அது பிதற்றல்போல் இருப்பதில்லை; அர்த்தமுள்ளதாக ஆகிறது.

உள்ளே நீங்கள் நுழையும்போது வெளியின் மொழியையே நீங்கள் அறிகிறீர்கள். உள்ளுக்குள் இருட்டு இருக்கிறது. உங்கள் கண்களால் பார்க்க முடிவதில்லை. உங்கள் காதுகளால் கேட்க முடிவதில்லை. உங்கள் கைகளால் உணர முடிவதில்லை. உங்களுக்கு ஒருவர் தேவைப்படுகிறார். உங்களுக்கு அதை அறிமுகப்படுத்த, உங்கள் கைகளை தன் கையில் பிடித்துக்கொண்டு; உங்களுக்குப் பரிச்சயமாகும் வரை - உங்களைச் சுற்றிலும் கொஞ்சம் ஒளியை, கொஞ்சம் அர்த்தத்தை, கொஞ்சம் முக்கியத்துவத்தை நீங்கள் உணரும்வரை, அறிய தொடங்கும்வரை - இதற்கு முன் அறிந்திராத பாதைக்குள் உங்களை நடத்திச் செல்ல ஒருவர் தேவைப்படுகிறார்.

முதல் தீட்சை - உங்களுக்குக் கிடைத்ததுமே விசயங்கள் நிகழத் தொடங்கும். ஆனால் முதல் தீட்சை என்பது கடினமான காரியமே. ஏனெனில் இது முற்றிலும் நேரெதிர் திசையிலான ஒரு திருப்பம். ஒரு முழுமையான திருப்பம். திடீரென உங்கள் உலகத்தின் அர்த்தம் மறைகிறது. ஒரு வினோத உலகத்துக்குள் நீங்கள் இருக்கிறீர்கள். எங்கே போவது, என்ன செய்வது, இந்தக் குழப்பத்தை என்ன பண்ணுவது என - எதையும் நீங்கள் புரிந்துகொள்வதில்லை. குரு என்றால் அறிந்திருக்கிற ஒருவர் என்று மட்டுமே பொருள். இந்தக் குழப்பம் - உட்குழப்பம் - என்பது அவரைப் பொறுத்தவரை குழப்பமே அல்ல. அது அவருக்கு ஒரு ஒழுங்காக, உலகமாக ஆகி இருக்கிறது. அதற்குள் அவரால் வழிநடத்த முடிகிறது.

தீட்சைபெறல் என்றால் இன்னொருவரின் கண்களின் வாயிலாக அக உலகை ஊடுருவி நோக்குதல் என்று பொருள். விசுவாசம் இல்லாவிட்டால் இது சாத்தியமில்லை. ஏனென்றால் உங்கள் கையைத் தொட நீங்கள் அனுமதிக்கமாட்டீர்கள். அறியாததற்குள் உங்களை இட்டுச்செல்ல எவரையும் நீங்கள் அனுமதிக்க மாட்டீர்கள். மேலும் அவர் உங்களுக்கு எந்த உத்திரவாதத்தையும் தர முடியாது. எந்த உத்திர வாதத்தாலும் எவ்விதப் பயனும் இல்லை. அவர் எதைக் கூறினாலும் திட நம்பிக்கையின் அடிப்படையில் அதை நீங்கள் எடுத்துக்கொள்ள வேண்டி உள்ளது.

பழைய நாட்களில், பதஞ்சலி தன் சூத்திரங்களை எழுதிய காலத்தில் விசுவாசம் வைப்பது மிகவும் எளிதாக இருந்தது. ஏனெனில் வெளிஉலகிலும், குறிப்பாக கீழை உலகில், அதிலும் சிறப்பாக இந்தியாவில், தீட்சை கொடுப்பதற்கான ஒரு வெளியுலகப் பாணியையே அவர்கள் உருவாக்கி இருந்தார்கள். எடுத்துக்காட்டாக தொழில்கள்,

வேலைகள் முதலியவை பரம்பரை வழியாக குடும்பங்களுக்கு சொந்தமாயிருந்தன. அப்பா குழந்தையைத் தொழிலுக்கு அறிமுகப்படுத்துவார். குழந்தை இயல்பாகவே தன் தந்தையை நம்புகிறான். தந்தை ஒரு உழவனாக, விவசாயியாக இருந்தால் மகனை பண்ணைக்கு கூட்டிச் செல்வார். பண்ணை வேலைகளில் அவனுக்கு பயிற்சி அளிப்பார். எந்தத் தொழிலில், எந்த வணிகத்தில் அவர் ஈடுபட்டிருந்தாலும் குழந்தையை அதில் அவர் அறிமுகப்படுத்துவார்.

வெளிஉலகிலும்கூட கிழக்கில் தீட்சை அறிமுகப்படுத்தல் என்பது இருந்தது. ஒவ்வொன்றிலும் அறிமுகம் வழங்கப்பட்டது. அறிந்தவர் ஒருவர் உங்களை நடத்திச் செல்வார். இது பெருமளவில் உதவியது. ஏனெனில் தீட்சையில் நீங்கள் அறிமுகமாகிறீர்கள். ஒருவர் உங்களை நடத்திச் செல்கிறார். எனவே அகத் தீட்சைக்கான காலம் வந்தபோது உங்களால் முழுமையாக நம்ப முடிந்தது.

மேலும் தொழில்நுட்ப முனைப்பில்லாத அந்த உலகத்தில் நம்பிக்கை, சிரத்தை, விசுவாசம் கொள்வது அதிக எளிதாய் இருந்தது. தொழில்நுட்ப உலகுக்கு கணிப்பு, தந்திரம், திட்டமிடல், புத்திசாலித்தனம் இவையே தேவை; அப்பாவித்தனம் அல்ல. தொழில்நுட்ப உலகில் நீங்கள் அப்பாவியாக இருந்தால் முட்டாள்போலவே தோன்றுவீர்கள். சூழ்ச்சி, தந்திரம் நிறைந்தவர்களாக இருந்தால் புத்திசாலிபோல அறிவாளிபோலத் தோன்றுவீர்கள். நமது பல்கலைக்கழகங்கள் இதைத்தவிர வேறெதையும் செய்யவில்லை. அவர்கள் உங்களை புத்தி, சூழ்ச்சி, கணக்குப் போடுதல் ஆகிய தன்மைகள் உள்ளவர்களாகவே ஆக்குகிறார்கள். கணக்கிடும் திறன், தந்திரபுத்தி அதிகமாக ஆக இந்த உலகில் நீங்கள் அதிக வெற்றிபெற்றவர்களாக ஆவீர்கள்.

கிழக்கில் கடந்தகாலத்தில் இதற்கு நேர்மாறான நிலவரமே இருந்தது. நீங்கள் சூழ்ச்சிகுணத்துடன் இருந்தால் வெளி உலகிலும்கூட உங்களால் வெற்றிபெறுவது அசாத்தியமாக இருந்தது. அப்பாவித்தன்மை மட்டுமே ஏற்கப்பட்டது. நுட்ப உத்திகள் அதிகமாக மதிக்கப்படவில்லை; அகத்தன்மையே அதிகமாய் மதிக்கப்பட்டது.

ஒரு மனிதன் சூழ்ச்சிக்காரனாக இருந்து அவன் சிறப்பாக செருப்புகள் செய்தாலும் கிழக்கில் முற்காலத்தில் அவனிடம் மக்கள் போகமாட்டார்கள். அப்பாவியான மனிதரிடமே அவர்கள் போவார்கள். அப்பேர்ப்பட்ட சிறந்த செருப்புகளை அவர் செய்யாமல் இருக்கலாம். ஆனால் அந்த அப்பாவி மனிதரிடமே மக்கள் போனார்கள். ஏனெனில் செருப்பு என்பது ஒரு பொருள் மட்டுமல்ல. அதைச் செய்த மனிதரின் தன்மையையும் அது தன்னில் கொண்டுள்ளது. எனவே தந்திரமும்

புத்திசாலித்தனமுமான ஒரு தொழில்காரன் இருந்தால் யாரும் அவனிடம் போகமாட்டார்கள். அவன் கஷ்டப்படுவான். அவன் தோற்றுப்போவான். ஆனால் அவர் நற்குணங்கள், நன்னடத்தை, யதார்த்தம் உள்ளவராக இருந்தால் அவரிடம் மக்கள் போவார்கள். மோசமான தரத்தில் இருந்தாலும் அவரது பண்டங்களை மக்கள் உயர்வாக மதித்தார்கள்.

கபீர் ஒரு நெசவாளியாக இருந்தார், கடைசிவரை ஒரு நெசவாளியாகவே வாழ்ந்தார். அவர் ஞானநிலைபேறு அடைந்தபோதும் தொடர்ந்து அவர் நெய்து வந்தார். அவர் பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் நெசவு நெய்தார்! பல பிழைகள், பல தவறுகள் அதில் இருந்தன. இருந்தாலும் அவரது சரக்குகள் மதிக்கப்பட்டன, மிகவும் மதிக்கப்பட்டன.

கபீர் எதையாவது கொண்டுவரும்போது பலரும் அதற்காகவே காத்திருப்பார்கள். அது வெறும் பொருள் அல்ல, பண்டமல்ல. அது கபீரிடமிருந்து வருகிறது! இந்த விசயமே ஒரு உள்ளார்ந்த தன்மையைப் பெற்றிருக்கிறது. அது கபீரின் கைகளில் இருந்து வந்திருக்கிறது. கபீர் அதைத் தொட்டிருக்கிறார். அதை நெய்யும்போது அதைச்சுற்றி கபீர் ஆடிக்கொண்டிருந்தார். மேலும் இடைவிடாமல் அவர் இறைவனை நினைத்துக் கொண்டிருந்தார். எனவே அந்தப் பொருள் - அது துணியோ, ஆடையோ, வேறு எதுவோ ஆயினும் - புனிதப் பொருளாக, தூயதாக ஆகி இருக்கிறது. அளவு அல்ல விஷயம். தரமே முக்கியம்! அதன் தொழில்நுட்பப் பக்கம் இரண்டாம் பட்சமானது; மனிதப்பக்கமே முதன்மையானாதாக இருந்தது.

எனவே கிழக்கில், வெளியுலகில்கூட அவர்கள் ஒரு பாங்கினைக் கையாண்டார்கள். அதன்படி நீங்கள் உள்நோக்கித் திரும்பியதும் அந்த உலகத்துடன் நீங்கள் முற்றிலும் பரிச்சயம் அற்றவர்களாக இருக்க மாட்டீர்கள். சிலவற்றையேனும் நீங்கள் அறிந்தே இருப்பீர்கள். சில வழிகாட்டுதல்கள், சில வெளிச்சங்கள் உங்கள் கைவசம் இருக்கும். முற்றான இருட்டுக்குள் நீங்கள் போக வேண்டி இராது.

வெளியுலகில் இந்த நம்பிக்கை என்பது எல்லா உறவுகளிலும் இருந்தது. தன் மனைவி தனக்கு துரோகம் செய்பவளாக இருக்க முடியும் என்பதை ஒரு கணவனால் நம்ப முடியாது. ஏறக்குறைய அது அசாத்தியம் மேலும் கணவன் இறந்தால் மனைவியும் அவனுடன் இறப்பாள். ஏனெனில் வாழ்க்கை ஒரு மாபெரும் பகிர்ந்து கொள்ளவாக இருந்தது ஒருவரின்றி மற்றவர் உயிர்வாழ்வது இப்போது அர்த்தமற்றதாகி இருக்கிறது.

பிற்காலத்தில் இது அசிங்கமாக ஆனது. ஆனால் தொடக்கத்தில் அது இப்புவியில் எப்போதும் நிலவியவற்றிலேயே மிகவும் அழகிய விஷயங்களில் ஒன்றாக இருந்தது. நீங்கள் ஒருவரை நேசித்தீர்கள். அவர் மறைந்துவிட்டார் என்றால் அவருடன் சேர்ந்து மறைந்துபோகவே நீங்கள் விரும்புவீர்கள். அவரில்லாமல் உயிரோடு இருப்பது என்பது செத்துப் போவதைவிடவும் மோசமானது. சாவே மேலானது, தேர்ந்தெடுக்கத் தகுதியானது - புறவிசயங்களிலும் காணப்பட்ட திடநம்பிக்கை அத்தகையதாக இருந்தது. மனைவி - கணவன் என்னும் உறவு ஒரு புறஉலக விவகாரம். மொத்த சமுதாயமே விசுவாசம், நம்பிக்கை, மெய்யான பகிர்வு என்பதைச் சூழ்ந்து இயங்கியது. அப்போது அது உதவிகரமாக இருந்தது. உள்ளே போவதற்கான காலம் வந்ததுமே, எளிதாகத் தீட்சைபெற - ஒருவரை முழுதாக நம்ப, சரணடைய இந்த விசயங்கள் அனைத்தும் அவர்களுக்கு உதவின.

சண்டை, போராட்டம், அத்துமீறல் என்பவை தடைகள். அவற்றை சுமந்துகொண்டிருக்காதீர்கள். உள்ளுக்குள் நீங்கள் போகும்போது அவற்றை வாசலிலேயே கழட்டி விடுங்கள். அவற்றை நீங்கள் எடுத்துச் சென்றால், உள்ளக் கோயிலை நீங்கள் தவறவிடுவீர்கள். ஒருபோதும் அதை நீங்கள் அடைய மாட்டீர்கள். அந்தக் குணங்களுடன் உங்களால் உள்ளே போக முடியாது.

**மூன்றாவது கேள்வி:**

**உலகக் கட்டுக்களில் இருந்து ஒருவர் விடுபட வைராக்கியம், பற்றின்மை, அல்லது ஆசையின்மையே போதாதா? பின் அப்பியாசம் அதாவது யோக ஒழுங்குமுறையின் பயன் என்ன?**

வைராக்கியம் போதும். ஆசையின்மை போதும். அப்போது வேறெந்த ஒழுங்குமுறையும் தேவை இல்லை. ஆனால் ஆசையின்மை எங்கே? அது அங்கு இல்லை. அதற்கு உதவ ஒழுங்குமுறை தேவைப்படுகிறது. ஆசையின்மை அதன் முழுமையில் உங்களிடம் இல்லை என்பதால் ஒழுங்குமுறை தேவைப்படுகிறது.

ஆசையின்மை இருந்தால் பின் எதையும் பயிற்சி செய்யும் கேள்விக்கு இடமில்லை. எவ்வித ஒழுங்குமுறையும் தேவையில்லை. நான் சொல்வதைக் கவனிக்க நீங்கள் வரமாட்டீர்கள்; பதஞ்சலியின் சூத்திரங்களைப் படிக்க மாட்டீர்கள். ஆசையின்மை முழுமை பெற்றதாக இருந்தால் பதஞ்சலி பயனற்றவர். ஏன் பதஞ்சலியின் சூத்திரங்களுடன் உங்கள் நேரத்தை வீணாக்குகிறீர்கள்? நானும் பயனற்றவன். ஏன் என்னிடம் வருகிறீர்கள்?

ஒரு ஒழுங்குமுறையை நீங்கள் தேடுகிறீர்கள். உங்களை முழுக்க மாற்றுவதான ஒரு ஒழுங்குமுறையை தேடி நீங்கள் போகிறீர்கள். நீங்கள் ஒரு சீடராக, இருக்கிறீர்கள். சாதகர் (டிசைப்பிள்) என்றால் ஒரு (டிசிப்ளின்) ஒழுங்குமுறையை தேடுபவர் எனப்பொருள். உங்களை நீங்களே ஏமாற்றிக்கொள்ளாதீர்கள். கிருஷ்ணமூர்த்தியிடம் நீங்கள் போனால்கூட ஒரு ஒழுங்குமுறையை தேடியே நீங்கள் போகிறீர்கள். ஏனெனில் தேவை இல்லாத ஒருவர் போகமாட்டார். யாரும் சீடராயிருக்கத் தேவையில்லை, எந்த ஒழுங்குமுறையும் தேவையில்லை என்று கிருஷ்ணமூர்த்தி கூறியும்கூட ஏன் அங்கே நீங்கள் இருக்கிறீர்கள். அந்தச் சொற்களே உங்களுக்கான ஒழுங்குமுறையாக ஆகி இருக்கும். நீங்கள் ஒரு பாணியை உருவாக்குவீர்கள். அந்த பாணியை நீங்கள் பின்பற்றத் தொடங்குவீர்கள்.

ஆசையின்மை இருப்பதில்லை. எனவே நீங்கள் துன்பத்தில் இருக்கிறீர்கள். ஆனால் யாரும் துன்பப்பட விரும்புவதில்லை. ஒவ்வொருவரும் துன்பத்தைக் கடந்து செல்லவே விரும்புகிறார். அதைக் கடப்பது எப்படி? அதை நீங்கள் சாதிப்பதற்கே ஒழுங்குமுறை உங்களுக்கு உதவும். ஒழுங்குமுறை என்றால் இதுதான் பொருள்: குதிப்பதற்கு, ஆசையின்மைக்குள் குதிப்பதற்கு உங்களைத் தயார்ப்படுத்துவதற்கே அது. ஒழுங்குமுறை என்றால் பயிற்சி.

நீங்கள் இன்னும் ஆயத்தமாகவில்லை. மிகவும் அருமையான ஒரு யந்திரத்தையே நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். உங்கள் உடல், உங்கள் மனம் இரண்டும் பருமையானவை. எனவே அவற்றால் நுண்மையானதை ஏற்றுக்கொள்ள முடியாது. நீங்கள் இசைவிக்கப்படவில்லை. நுட்பமானதை ஏற்றுக்கொள்ள அதற்கேற்ப நீங்கள் திருப்பப்பட வேண்டும். உங்கள் பருமைத்தன்மை மறைய வேண்டி இருக்கிறது. இதை நினைவில் கொள்ளுங்கள். நுட்பமானதை கிரகிக்க நீங்களே நுட்பமானவராக ஆக வேண்டும். இப்போது நீங்கள் இருக்கிற நிலையில் தெய்வீகம் உங்களைச் சூழ்ந்து இருக்கலாம். ஆனால் அதனுடன் நீங்கள் தொடர்புகொள்ள இயலாது.

இது எத்தகையதென்றால் இந்த அறைக்குள் ஒரு வானொலிப் பெட்டி இருக்கிறது. ஆனால் அது செயல்படுவதில்லை. சில இணைப்புகள் தவறாக தரப்பட்டுள்ளன; அல்லது சில கம்பிகள் அறுந்துள்ளன. ஏதாவது குமிழி இல்லாமல் உள்ளது. வானொலி இருக்கிறது. வானொலி அலைகள் இடைவிடாமல் கடந்துகொண்டிருக் கின்றன. ஆனால் வானொலி இயங்கவில்லை. எனவே அவற்றை ஏற்கக்கூடியதாக அதை ஆக்க முடியாது.

நீங்கள் ஒரு வானொலியைப் போன்றே இருக்கிறீர்கள். ஆனால் இயங்கமுடிகிற நிலையில் இல்லை. பல அம்சங்கள் விடுபட்டுள்ளன. பல விசயங்கள் தவறாக இணைக்கப்பட்டுள்ளன. ''ஒழுங்குமுறை'' என்றால் உங்கள் வானொலியை இயங்குவதாக, எடுக்கக்கூடியதாக ஆக்குவதாகும்; இசைவிப்பதாகும். தெய்வீக அலைகள் உங்களை சூழவும் உள்ளது. ஒருமுறை நீங்கள் இசையப்பெற்றதுமே அவை வெளிப்படுபவை ஆகின்றன. அவற்றை நீங்கள் அறியமுடியாது. அவை என் வாயிலாக வெளிப்பாடு பெற்றதாக ஆகலாம். கிருஷ்ணமூர்த்தி வாயிலாக அல்லது இன்னொருவர் வாயிலாக வெளிப்பாடு பெற்றதாக ஆகலாம். ஆனால் அது உங்களின் அடிப்படைமாற்றமாக ஆக முடியாது.

ஒரு கிருஷ்ணமூர்த்தியில், ஒரு குருட்ஜீப்பில் என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதை உண்மையாகவே உங்களால் அறிய முடியாது; உள்ளே என்ன நடந்து கொண்டிருக்கிறது, எந்தவிதமான இசைவிப்பு நடந்துகொண்டிருக்கிறது, பிரபஞ்சத்தின் மிக நுட்பமான சேதியையும் பெறத்தக்கதாக அவர்களின் யந்திரம் எப்படி அவ்வளவு நுட்பமாக ஆனது, இருத்தல் அதன் வாயிலாக தன்னையே வெளிப்படுத்த தொடங்கியது எப்படி என்பதை உண்மையில் உங்களால் அறியவே முடியாது.

உங்கள் யந்திரத்தை மாற்றுவதே, அதை இசைவிப்பதே, வெளிப்பாடுள்ளதாக - ஏற்கக்கூடியதாக, ஒரு தகுதியான சாதனமாக அதை ஆக்குவதே ஒழுங்குமுறை என்பதன் பொருள். சிலசமயங்களில் ஒழுங்குமுறை இல்லாமலும் இது தற்செயலாகவே நடைபெற முடியும். வானொலி மேசை மீதிருந்து கீழே விழுகிறது. கீழே விழுவதலோயே. தற்செயலாகவே சில கம்பிகள் இணைப்புற்று அல்லது இணைப்புவிட்டுப் போகலாம். கீழே விழுவதாலேயே வானொலி ஒரு நிலையத்துடன் தொடர்பு கொண்டு விடலாம். அப்போது அது ஏதோ ஒன்றை வெளிப்படுத்தத் தொடங்கும். ஆனால் அது ஒரு குழப்பமாக இருக்கும்.

பல முறை இப்படி நடந்துள்ளது. சில நேரங்களில் விபத்துமூலமாக மக்கள் இறைமையை அறியவும் வந்திருக்கிறார்கள். ஆனால் அதன்பின் அவர்கள் பைத்தியமாகிவிடுகிறார்கள். ஏனெனில் அத்தகைய பெரும் நிகழ்வை பெற்றுக்கொள்ள அவர்கள் மிகவும் சின்னதாக இருக்கிறார்கள். அவர்களுக்குள் ஒரு பெருங்கடல் கொட்டுகிறது. இது நிகழ்ந்திருக்கிறது. அத்தகையவர்களை சூபி முறயையானது ''இறை - பித்தர்கள்'' *(masts)* என்கிறது.

பலர், சிலநேரங்களில் ஒழுங்குமுறை இல்லாமலேயே - ஏதாவது விபத்தின்மூலம், யாராவது குருவின் மூலம் யாராவது குருவின்

அனுக்கிரகம்மூலம், அல்லது ஏதாவது ஒரு ஆசானின் பிரசன்னம் மூலமே கூட - இசையப் பெற்றிருக்கிறார்கள். அவர்களின் முழு யந்திரமும் இன்னும் ஆயத்தமாகவில்லை. ஆனால் ஒரு பகுதி செயல்படத் தொடங்குகிறது. பின் அவை செயல்படாமல் போகின்றன. அப்போதே அவர்கள் பைத்தியமாக இருக்கிறார்கள் என்று நீங்கள் உணர்வீர்கள். ஏனெனில் பொருத்தமற்றதாக தோன்றும் சிலவற்றை அவர்கள் கூறத் தொடங்குகிறார்கள். அவை பொருத்தமற்றவையாக - பிதற்றலாக இருப்பதை அவர்களும் உணரமுடிகிறது. ஆனால் அதற்கு அவர்களால் ஒன்றும் செய்ய முடிவதில்லை. ஏதோ ஒன்று அவர்களுக்குள் தொடங்கி இருக்கிறது. அவர்களால் அதை நிறுத்த முடிவதில்லை.

ஒருவித மகிழ்ச்சியை அவர்கள் அனுபவிக்கிறார்கள். எனவேதான் அவர்கள் *Masts* அதாவது மகிழ்ச்சியானவர்கள் எனப்படுகிறார்கள். ஆனால் அவர்கள் புத்தரைப்போல் இல்லை. அவர்கள் ஞானநிலை பெறவில்லை. மேலும் *(masts)* க்கு - இந்த மகிழ்ச்சியானவர்களுக்கு ஒரு மிகப்பெரும் குரு தேவைப்படுகிறார் என்கிறார்கள். ஏனெனில் இப்போது அவர்கள் தாமாக எதுவும் செய்ய முடியாதிருக்கிறார்கள். அவர்கள் ஒரு குழப்பத்தில் இருக்கிறார்கள், அதில் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள், இருந்தாலும் அவர்கள் குழப்பமாகவே இருக்கிறார்கள். சுயமாக அவர்களால் எதையும் செய்ய முடியாது.

முற்காலத்தில் மாபெரும் சூபி ஆசான்கள் பூமி முழுவதையும் சுற்றி வருவார்கள். எங்காவது ஒரு *Mast* ஒரு பித்தன் இருப்பதாக அவர்கள் கேள்விப்பட்டால் அங்கு அவர்கள் போவார்கள். அந்த மனிதர் சரியாக இசைவு பெற அவர்களுக்கு உதவுவார்கள்.

இந்த நூற்றாண்டில் மெகர் பாபா மட்டுமே அந்த வேலையை செய்திருக்கிறார் - தன்னளவில் ஒரு பெரிய வேலை, அபூர்வ வேலை அது. தொடர்ச்சியாக பல ஆண்டுகளாக அவர் இந்தியா முழுவதும் பயணம் செய்து வந்தார். பைத்தியக்கார விடுதிகளையே அவர் சுற்றிப் பார்த்து வந்தார். ஏனெனில் பைத்தியர் விடுதிகளில் தான் பல *Mast* வாழ்ந்து வருகிறார்கள். ஆனால் யார் பைத்தியம், யார் *mast* என்று பாகுபடுத்த உங்களால் முடியாது. இருவருமே பைத்தியங்கள்தான். ஒரு சாரார் உண்மையாகவே சித்தம் கலங்கியவர்கள். இன்னொரு சாரார், ஒரு தெய்வீக விபத்தால் - ஒரு விபத்து வாயிலாக ஏதோ ஒரு இசைவு ஏற்பட்டுவிட்ட காரணத்தால் - சித்தம் கலங்கியவர்கள்! இருவருக்குமிடையில் உங்களால் எந்த பாகுபாடும் காண முடியாது.

பல *Masts* இருக்கிறார்கள். மெகர் பாபா சுற்றி வந்தார். பைத்திய மனைகளில் தங்குவார். *Masts* க்கு, இறை - பித்தர்களுக்கு உதவுவார், ஆவன செய்வார். பலர் தம் பைத்திய நிலையை விட்டு வெளியேறி ஞானநிலை பேற்றை நோக்கிய தம் பயணத்தை தொடங்கினார்கள்.

மேற்கில் இப்படி பலர் பைத்திய விடுதிகளிலும், புகலிடங்களிலும் இருக்கிறார்கள். அவர்களில் பலருக்கு எவ்விதமான உளவியல் சிகிச்சையின் உதவியும் தேவை இல்லை. ஏனெனில் உளவியல் மருத்துவர்கள் மீண்டும் அவர்களை சாமானிய நிலைக்கு மட்டுமே கொண்டுவர முடியும்.

விழிப்படைந்த ஞானி ஒருவரின் உதவியே அவர்களுக்கு தேவை. உளவியலாளரின் உதவி அல்ல. ஏனெனில் அவர்கள் நோயாளிகள் அல்ல. அல்லது அவர்கள் நோயாளியாய் இருந்தால் அது ஒரு தெய்வீக - நோய்தான். அந்த நோய்க்கு முன் உங்கள் ஆரோக்கியம் என்பது ஒன்றுமில்லை. அந்த நோய் மேலானது - அதற்காக உங்கள் ''ஆரோக்கியத்தை'' முற்றிலும் இழக்கலாம். தேவை ஒழுங்குமுறையே.

முகமதிய நாடுகளில் இருந்திருக்கிற அளவு பெரிய அளவில் இந்தியாவில் இந்த நிகழ்வு காணப்பட்டதில்லை. எனவேதான் இந்த *Mast* மக்களுக்கு இறை - பித்தர்களுக்கு உதவ் சூபிக்கள் சிறப்பு முறைகளை வைத்திருக்கிறார்கள்.

ஆனால் எந்த விபத்தும் நேரவே அவசியமில்லாத அளவுக்கு ஒரு நுணுக்கமான அமைப்பை / முறையை உருவாக்கி இருக்கிறார் பதஞ்சலி.

அந்த ஒழுங்குமுறை மிகவும் அறிவியல் பூர்வமானது: இந்த ஒழுங்குமுறையின் ஊடாக நீங்கள் கடந்து சென்றால் நடு வழியில் பித்த நிலை பிடிக்காமலேயே நீங்கள் புத்த நிலையை அடைவீர்கள். அது ஒரு முழுமையான முறை.

சூபி முறை ஒரு முழுமையான முறை அல்ல. பல விசயங்கள் அதில் பற்றாக்குறையாக இருக்கின்றன. மேலும் முகமதியரின் இறுக்கமான அணுகுமுறையினாலேயே அவை குறைபாடுள்ளதாக இருக்கின்றன. அது அதன் சிகரத்தை உச்சத்தை நோக்கிப் பரிணமிக்க அவர்கள் அனுமதிப்பதில்லை. ஆயின் சூபி முறையாக இசுலாமிய மதத்தின் பாணியையே பின்பற்ற வேண்டி இருக்கிறது. முகமதிய மதத்தின் அந்த கட்டமைப்பின் காரணமாக சூபிமுறை அதைத் தாண்டி போக முடியவில்லை.

பதஞ்சலி எந்த மதத்தையும் பின்பற்றுவதில்லை. அவர் சத்தியத்தை மட்டுமே பின்பற்றுகிறார். இந்து மதத்துடனோ முகமதிய மதத்துடனோ வேறு எந்த மதத்துடனுமோ அவர் சமரசம் செய்துகொள்ள மாட்டார்.

அறிவியல் பூர்வமான உண்மையை மட்டுமே அவர் பின்பற்றுகிறார். சூபிக்கள் சமரசம் செய்துகொள்ள வேண்டியதாயிற்று. செய்து கொண்டார்கள். ஏனெனில் சில சூபிக்கள் எந்த சமரசமும் செய்து கொள்ளாதிருக்க முயன்றார்கள். எடுத்துக்காட்டாக பிஸ்தாமின் பாயஸித் அல்லது அல் ஹில்லாஜ் மன்சூர் ஆகியோர் எந்த சமரசத்தையும் செய்து கொள்ளவில்லை. அதனால் அவர்கள் கொல்லப்பட்டார்கள். அவர்கள் படுகொலை செய்யப்பட்டார்கள்.

எனவே சூபிக்கள் தலைமறைவானார்கள். தம் அறிவியலை முற்றிலும் ரகசியமாக்கினார்கள். அதன் சில பின்னங்களையே வெளியில் அறியப்பட அனுமதித்தார்கள். அவை, இசுலாமுடனும் அவர் பணியுடனும் பொருந்திவரும் பகுதிகள் மட்டுமே. மற்ற பகுதிகள் யாவும் மறைக்கப்பட்டன. எனவே மொத்த முறையும் அறிந்து கொள்ளச் செய்யப்படவில்லை. எனவே அது வேலை செய்யவில்லை. பகுதிகளைக் கொண்டு முயன்ற பலரும் பைத்தியமாகிப் போனார்கள்.

பதஞ்சலியின் முறையோ முழுமையானது. அதற்கு ஒழுங்குமுறை தேவைப்படுகிறது. உள்ளே இருக்கும் அறியப்படாத இந்த உலகத்துக்குள் நீங்கள் நுழைவதற்கு முன். ஒரு ஆழமான ஒழுங்குமுறை - பயிற்சி தேவைப்படுகிறது - அப்போதுதான் எந்த விபத்தும் நேராது. ஒழுங்குமுறை இல்லாமல் நீங்கள் இயங்கினால் பின் என்னென்னவோ நேரலாம்.

வைராக்கியம் போதுமானது. ஆனால் அந்த ''போதுமான'' வைராக்கியம் உங்கள் உள்ளத்தில் இல்லை. அது அங்கே இருந்தால் பின் எந்தப் பிரச்சனையும் இல்லை. அப்போது பதஞ்சலியின் நூலை மூடி எரித்து விடலாம். அது முற்றிலும் அனாவசியம். ஆனால் அந்த ''போதுமான'' வைராக்கியம் இருப்பதில்லை. எனவே ஒரு ஒழுங்கு முறையான பாதையில் படிப்படியாக போவது மேலானது. அப்போது தான் எந்த விபத்துக்கும் நீங்கள் பலியாக மாட்டீர்கள். விபத்துக்கள்... அந்த சாத்தியம் இருக்கிறது?

உலகில் பல முறைகள் வேலை செய்து கொண்டிருக்கின்றன. ஆனால் பதஞ்சலியினுடையது போன்ற மிக செம்மையான முறை வேறு இல்லை. ஏனெனில் எந்த நாடும் இதில் அவ்வளவு நீண்டகாலம் வேலை செய்ததில்லை. மேலும் இந்த முறையின் மூலவர் பதஞ்சலியும் அல்ல. அதை முறைப்படுத்தியவரே பதஞ்சலி. அவருக்குமுன் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்த முறை வளர்ந்து வந்தது. பலரும் இதில் வேலை செய்தார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நடந்த வேலையின் சாரத்தையே பதஞ்சலி தந்துள்ளார்.

ஆனால் அதை அவர் தொகுத்தளித்துள்ள விதம் நீங்கள் பாதுகாப்பாக இயங்க முடியும் வகையில் உள்ளது. உள்நோக்கி நீங்கள் இயங்குவதாலேயே பாதுகாப்பான உலகத்துக்குள் இயங்கிக் கொண்டிருக்கிறீர்கள் என்று நினைக்காதீர்கள். அது பாதுகாப்பானதாக வும் இருக்க முடியும்; அது ஆபத்தானதாகவும் இருக்கிறது. அதில் நீங்கள் தொலைந்து போக முடியும். அதில் நீங்கள் காணாமல் போனால் நீங்கள் பைத்தியம் பிடித்தவராவீர்கள். எனவேதான் ''எந்த ஆசிரியரும் தேவையில்லை'' என்று வலியுறுத்தும் கிருஷ்ணமூர்த்தி போன்ற ஆசிரியர்கள் அபாயகரமானவர்களாக இருக்கிறார்கள். ஏனெனில் அவர்களின் நிலைபாட்டை தீட்சைபெறாத மக்கள் எடுத்துக் கொள்ளலாம், தம் சொந்தவழியில் வேலை செய்யத் தொடங்கலாம்...

நினைவில் கொள்ளுங்கள் - உங்கள் கைக் கடிகாரம் பழுதானால் கூட அதைத் திறந்து பார்த்து ஏதாவது நோண்டிப்பார்க்கும் போக்கு மற்றும் தெரிந்துகொள்ளும் ஆர்வம் உங்களுக்கு இருக்கிறது.

ஏனெனில் இது குரங்குகளிடமிருந்து நமக்கு வருகிறது. இந்த ஆசையை தெரிந்து நிற்பது கடினமே. அதைப்பற்றி உங்களுக்கு எதுவும் தெரியாது என்பதை உங்களால் நம்பமுடியாது. நீங்கள் அதன் உடைமையாளர் ஆகி இருக்கலாம். ஆனால் கடிகாரத்தின் உடைமையாளர்களாக இருப்பதாலேயே உங்களுக்கு அதைப்பற்றி எல்லாமே தெரியும் என்று பொருளாகாது. அதை திறக்காதீர்கள்! இந்த காரியங்களைப்பற்றி தெரிந்த ஒரு சரியான மனிதரிடம் அதை எடுத்துச் செல்வது மேல். அடுத்து, கைக்கடிகாரம் என்பது ஒரு எளிய யந்திரம். மனம் என்பது மாபெரும் சிக்கலான யந்திரம். அதை ஒருபோதும் நீங்களாகவே திறக்காதீர்கள். ஏனெனில் நீங்கள் செய்வது எதுவும் தவறாகப்போகும்.

சிலநேரங்களில் இப்படி நடக்கலாம்: உங்கள் கடிகாரம் ஓடாமலிருக்கிறது. அதை நீங்கள் வெறுமனே.குலுக்குகிறீர்கள். உடனே அது ஓடத்தொடங்குகிறது. ஆனால் இரு ஒரு அறிவியல் அல்ல. சில நேரங்களில் இப்படி நேர்ந்துவிடுகிறது! நீங்கள் ஏதாவது செய்யப்போய் அதிர்ஷ்டவசமாக, தற்செயலாக ஏதோ நடந்துவிடுவதை நீங்கள் உணர்கிறீர்கள். ஆனால் அதன்மூலம் அதில் நீங்கள் கைதேர்ந்தவர் ஆகிவிடுவதில்லை. ஒரு முறை அது நடந்திருந்தால் மறுபடியும் அதைச் செய்து பார்க்காதீர்கள். ஏனெனில் அடுத்த தடவை உங்கள் கடிகாரத்தை நீங்கள் குலுக்கும்போது அது நின்றுவிடலாம். இது ஒரு அறிவியல் அல்ல.

தற்செயல்களின் வழியில் இயங்காதீர்கள். ஒழுங்குமுறை என்பது ஒரு பாதுகாப்பு மட்டுமே. விபத்துகளின் பாதையில் போகாதீர்கள்! தான் செய்கிறது இன்னதென அறிகிற ஒரு குருவோடு இயங்குங்கள். ஏதாவது

கோளாறாகப் போனால் அவருக்குத் தெரியும். சரியான பாதைக்கு கொண்டுவர அவரால் முடியும். உங்கள் கடந்த காலத்தை அவர் அறிந்திருக்கிறார். உங்கள் வருங்காலத்தையும் அவர் உணர்ந்திருக்கிறார். உங்கள் கடந்த காலம், வருங்காலம் இரண்டையும் அவரால் இணைக்க முடியும்.

எனவேதான் இந்திய உபதேசங்களில் ஆசான்களுக்கு அதிக முக்கியத்துவம் தரப்படுகிறது. மேலும் அவர்கள் அதை அறிந்தார்கள். அதையே அவர்கள் குறிப்பிட்டார்கள். ஏனெனில் மனித மனத்தைப்போன்ற அதிசிக்கலான யந்திர அமைப்பு வேறில்லை. மனித மனத்தைப்போல் அதிசிக்கலான கணினி வேறு இல்லை.

மனத்துக்கு சமமான ஒன்றை வளர்த்தெடுக்க மனிதரால் இதுவரை முடியவில்லை. இனியும் எப்போதேனும் அது உருவாகும் என்றும் நான் நினைக்கவில்லை. ஏனெனில் அதை வளர்த்தெடுப்பது யார்?- மனிதமனம் ஒன்றை வளர்த்தெடுக்க முடிந்தால் அதைப் படைத்த அந்த மனத்தை விட குறைந்ததாகவும் தாழ்ந்ததாகவுமே எப்போதும் அது இருக்கப்போகிறது. குறைந்தது ஒன்றுமட்டும் உறுதி: மனித மனம் எதைப் படைத்தாலும் - அந்தப் படைக்கப்பட்ட பொருள் மனித மனத்தைப் படைத்துவிட முடியாது. எனவே மனிதமனமே உச்சபட்சமானதாக, உச்சபட்ச சிக்கலான யந்திர அமைப்பாக நீடிக்கிறது.

ஆர்வக்கோளாறின் காரணமாகவோ மற்றவர்கள் அதை செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதற்காகவோ மட்டுமே எதையும் செய்துவிடாதீர்கள். அறிமுகம் ஆகிக்கொள்ளுங்கள். பாதையை நன்கு அறிந்த ஒருவருடன் சேர்ந்து இயங்குங்கள். இல்லாவிட்டால் பைத்திய நிலையே விளைவாகும். முன்பே இது நிகழ்ந்திருக்கிறது. இந்த நிமிசத்திலும் பலருக்கு அது நேர்ந்துகொண்டிருக்கிறது.

தற்செயல்களில் பதஞ்சலிக்கு நம்பிக்கை இல்லை. ஒரு அறிவியல்ரீதியான ஒழுங்கமைப்பையே அவர் நம்புகிறார். எனவே படிப்படியான முறையையே அவர் தந்துள்ளார். வைராக்கியம் அதாவது ஆசையின்மை, அப்பியாசம் அதாவது இடையறாத, உணர்வுள்ள அகப்பயிற்சி என்னும் இரண்டையும் அவர் தன் அடித்தளமாக ஆக்குகிறார். அப்பியாசமே வழிமுறை; வைராக்கியமே குறிக்கோள். ஆசையறுத்தலே இலக்கு; இடையறாத உணர்வுள்ள அகப்பயிற்சியே அதற்கு வழி.

ஆனால் மிகத் தொடக்கத்தில் இருந்தே குறிக்கோள் தொடங்கு கிறது. முடிவுகள் தொடக்கத்தில் மறைந்திருக்கின்றன. விதையில் மரம் மறைந்திருக்கிறது. அதுபோலவே தொடக்கமே முடிவை உணர்த்துகிறது.

எனவேதான் ஆசையின்மை தொடக்கத்திலும் தேவைப்படுகிறது. தொடக்கத்திற்குள் முடிவு இருக்கிறது. முடிவிற்குள்ளும் தொடக்கம் இருக்கும்.

எனவே ஒரு குருதான் முழுமை, நிறைவு பெற்றவரான பிறகும் பயிற்சியைத் தொடர்கிறார். இது உங்களுக்கு அபத்தமாகத் தோன்றும். நீங்கள் தொடக்கத்தில் இருப்பதாலும் குறிக்கோள் இன்னும் சாதிக்கப்படாததாலும் நீங்கள் பயிற்சிசெய்ய வேண்டியுள்ளது. ஆனால் குறிக்கோளைச் சாதித்த பின்பும் பயிற்சி தொடர்கிறது. இப்போது அது தன்னியல்பு ஆகிறது. ஆனால் அது தொடர்கிறது. ஒருபோதும் அது நிற்பதில்லை. அது நிற்க முடியாது. ஏனெனில் முடிவும் தொடக்கமும் இரண்டு விசயங்கள் அல்ல. விதைக்குள் மரம் இருக்கிறது என்றால் மரத்திலும் மறுபடியும் விதைகள் வரும்.

ஒருவர் - பூர்ண காசியபர் என்ற சீடர் - புத்தரிடம் கேட்டார், ''நீங்கள் இப்பவும் ஒரு ஒழுங்குமுறையைப் பின்பற்றுவதை நாங்கள் பார்க்கிறோமே.''

புத்தர் இன்னும் ஒரு குறிப்பிட்ட ஒழுங்குமுறையைப் பின்பற்றிக் கொண்டிருக்கிறார். குறிப்பிட்ட ஒரு முறையில் அவர் இயங்குகிறார். குறிப்பிட்ட ஒரு விதத்தில் அமர்கிறார். உன்னிப்புடன் இருக்கிறார். குறிப்பிட்ட உணவுகளையே உண்கிறார், குறிப்பிட்ட விதமாகவே நடக்கிறார். ஒவ்வொன்றும் ஒழுங்குமுறைப் படுத்தப்பட்டதாக தோன்றுகிறது.

எனவே பூர்ண காசியபர் கூறுகிறார்,''நீங்கள் ஞானநிலை பேறு பெற்றிருக்கிறீர்கள். ஆனாலும் இன்னும் நீங்கள் ஒரு குறிப்பிட்ட ஒழுங்குமுறையைப் பின்பற்றுவதாகவே நாங்கள் உணர்கிறோம். ''புத்தர் கூறுகிறார்,'' அது எந்த அளவுக்கு ஆழப் பதிந்துவிட்டது என்றால் இப்போது நான் அதைப் பின்பற்றவில்லை, அதுவே என்னைப் பின்பற்றுகிறது. அது ஒரு நிழல்போல் ஆகி இருக்கிறது. அதைநான் நினைக்கத்தேவை இல்லை. அது அங்கேயே இருக்கிறது. எப்போதும் இருக்கிறது. அது ஒரு நிழலாக ஆகியுள்ளது.''

எனவே முடிவு தொடக்கத்தில் உள்ளது. தொடக்கமும் முடிவில் உள்ளது. இந்த இரண்டும் இரண்டுவிசயங்கள் அல்ல; ஒரே நிகழ்வின் இரு துருவங்களே ஆகும்.

*****